# திருக்குறள்

## விரிவுரை

456

(அறத்துப்பால் - இல்வாழ்க்கை இயல்)





உரையாசிரியர் :

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தரனுர்





சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை, சென்னை

1941




விலை ரூபா 2.

1089/2

# உள்ளுறை

# முன்னுரை

முன்னே பாயிர விரிவுரை வெளிவந்தமை நேயர்கட்குத் தெரியும். இப்பகுதி, அறத்துப்பால் முதலாறு அதிகாரங்களைக் கொண்ட 'இல்வாழ்க்கை இயலி'ன் விரிவுரை. இதற்கு விரிந்த முறையில் முன்னுரை வரைய விரும்புகின்றேனில்லை. சில குறிப்புக்கள் சாலும் என்று கருதுகிறேன். பாயிர விரிவுரையின் அணிந்துரையைப் பார்க்க.

திருக்குறள் அறத்துப்பாலை 'இல்லற இயல்', 'துறவற இயல்' என்று இருகூறாகப் பழைய உரையாசிரியன்மார் சிலர் பிரித்தனர். அறத்துப்பால் பலதிற இயல்களாகப் பிரிக்கப்படுதற்கு இடந்தந்து நிற்பதென்று எனக்குத் தோன்றுகிறது. அறத்துப்பால் முதலாறு அதிகாரங்களை ஓர் இயலாக்கொண்டு, அதற்கு 'இல்வாழ்க்கை இயல்' என்னுந் தலைப்பு அணியலானேன். காரணம் எனது விரிவுரையைப் படிப்பவர்க்கு இனிது விளங்கும். ஒவ்வொரு பாலையும் பலப்பல இயல்களாகப் பிரித்துத் தொகுக்கலாம் என்பது எனது கருத்து. அதுபற்றிய விளக்கம் இங்கே வேண்டுவதில்லை.

திருவள்ளுவர் அருளிய திருக்குறள் முப்பாலுடையது. முப்பால் அறத்துப்பால், பொருட்பால், இன்பப்பால் என்பன. முப்பாலும் ஒருபாலில் அடங்கும். அவ்வொருபால் எது? அறத்துப்பால்.

திருவள்ளுவர் 'அறத்தை' அறிவுறுத்தவே திருக்குறளை யாத்தனர் என்பது அவர்தம் மொழிகளை ஆராய்வோர்க்கு நன்கு விளங்கும். பொருளும் இன்பமும் திருவள்ளுவரால் ஏன் அருளிச் செய்யப்பட்டன என்னும் ஐயம் இங்கே சிலரிடை நிகழலாம். அறத்தின் ஆக்கத்துக்குப்பொருளும் இன்ப

மும் இன்றியமையாதன வாதலால், திருவள்ளுவர் அறத் தொடு பொருளையும் இன்பத்தையும் சேர்த்து அருளலாயி னர் என்று சொல்லலாம்.

அறம் தனித்தும், பொருளிலும் இன்பத்திலும் விரவி யும் இயங்குந்தன்மை வாய்ந்தது. அறமற்ற பொருள் பொருளாகாது ; இன்பமும் இன்பமாகாது. பொருளுக்கும் இன்பத்துக்கும் அறக்கலப்புத் தேவை. அறத்தில் நின்று, அறவழியில் பொருளீட்டி, அறவழியில் இன்பம் நுகர் வோர் அறநிலை எய்தல் ஒருதலை. 'குறிக்கோள் அறநிலை' என்று வாழ்க்கையை நடாத்த வேண்டுவது மக்கள் கடமை.

திருவள்ளுவரால் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றும் தனித்தனியே ஓதப்பட்டன. அம்மூன்றையும் ஆராய்ச்சிக் கண்கொண்டு ஒருங்கே நோக்கினால், அவைகளி லெல்லாம் அறமணமே கமழ்தலை உணர்தல் கூடும். ஆகவே, திருவள்ளுவர் நூலை என்னென்று கூறலாம்? அதை அற நூல் என்று கூறுதல் மிகையாகாது.

அறம் என்றால் என்ன? "மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்" என்றும், "அழுக்கா றவாவெகுளி இன்னாச் சொல் நான்கும் - இழுக்கா இயன்ற தறம்" என்றும் திரு வள்ளுவரால் அற இயல் பேசப்பட்டுள்ளதை ஓர்க. மனமா சற்ற நிலை அறம் என்பது.

திருவள்ளுவர் "மனத்துக்கண் மாசில னாதல்" அறநிலை என்று கூறுமளவில் நின்றாரில்லை. அந்நிலையை மக்கள் எய்து தற்குரிய வழியையும் அவர் கோலிச் சென்றனர். அவ்வழி யாது?

அறத்துப்பால் முதலாறு அதிகாரங்களில் கருத்தை ஊன்றிச் செலுத்தினால் வழி புலனாகும். 'இல்வாழ்க்கை' யும், 'வாழ்க்கைத்துணை'யும், 'பிள்ளைப் பேறு'ம் 'அன் பி'ன் ஊற்றைத் திறப்பனவாகின்றன. 'அன்பு', 'விருந்

தோம்ப' உந்துவது. விருந்தோம்பலாவது எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அந்தண்மை. அந்தண்மை யுடைமையை உணர்த்துவது 'இன்சொல்'. செந்தண்மை யாம் அந்தண்மையில் மனமா சிருத்தற்கு இடம் ஏது? மனமாசற்ற அந்தண்மையே அறநிலை என்பது.

திருவள்ளுவர் உலகுக்கு அறிவுறுத்திய அறநிலை அவர் தம் நூல் முழுவதும் விளங்கா நிற்கிறது; சிறப்பாக அறத் துப்பாலில் திகழ்கிறது; மிகச் சிறப்பாக அறத்துப்பால் முத லாறு அதிகாரங்களில் பொலிகிறது. திருவள்ளுவர் உள்ளக் கிடக்கை, அறத்துப்பால் முதலாறு அதிகாரங்களில் திரண்டு நிற்கிறதென்று சுருங்கச் சொல்லலாம்.

அறத்துப்பால் முதலாறு அதிகாரங்களில் நுண்மை யாக நுழைந்துள்ள கருத்துக்களே மற்ற அதிகாரங்களாக வும் பொருட்பாலாகவும் இன்பப்பாலாகவும் விரிந்து பெருகி யுள்ளன. முதலாறும் திருக்குறளின் உயிர்; மற்றவை அதன் உடலுறுப்புக் கருவி கரணங்களாம்.

திருவள்ளுவர் உள்ளக் கிடக்கை, அறத்துப்பால் முத லாறு அதிகாரத்தில் மிகச் சிறந்து விளங்கும் நுட்பத்தை ஒல்லும் வகை உணர்த்துவது சிறியேனுடைய விரிவுரை. திருவள்ளுவர் உள்ளக்கிடக்கை இன்னதென்றும், அவர் உலகுக்கு விடுத்துள்ள நற்செய்தி இன்னதென்றும் விளக் கஞ் செய்யும் நோக்குடன் விரிவுரை வரையப்பட்டதென் பதை அன்பர்கட்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

பாயிரம் நான்கு அதிகாரங்களைக் கொண்டது; நாற் பது பாக்களாலாகியது. அறத்துப்பால் முதலாறு அதி காரங்களும் அறுபது பாக்களாலாகியவை. அவையும் இவை யுஞ் சேர்ந்த திருக்குறள் முதல் நூறு பாக்கட்கு விரிவுரை காணப்பட்டது. இனி மற்றப் பகுதிகட்கும் விரிவுரை காண எண்ணியுள்ளேன்.

இவ்வாறவுரை காணும் முயற்சியில் யான் இளமையில் தலைப்பட்டிருத்தல் வேண்டும். முதுமையில் இம்முயற்சியில் தலைப்படுமாறு திருவருள் செய்தது. எல்லாம் ஆண்டவன் திருவுள்ளப்படியே நடக்கும். அவனன்றி ஓரணுவும் அசையாது.

"நாயிற் கடையா நாயேனை நயந்து நீயே ஆட்கொண்டாய்
மாயப் பிறவி உன்வசமே வைத்திட் டிருக்கும் அதுவன்றி
ஆயக் கடவேன் நானோதான் என்னதோஇங் கதிகாரம் [லே"
காயத் திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுத

என்பது மணிவாசகர் திருவாக்கு.

எவ்விதப் பயனுங் கருதாது தமிழ் நலம் ஒன்றே கருதி அச்சுப்பிழை திருத்துவதில் துணைபுரிந்த அன்பர் - திருவாளர்-மாங்காடு-துரைசாமியார்க்கு எனது நன்றி உரியதாக.

பலதிறப் பணிகளில் உழன்று உழன்று அலுத்த வாழ்க்கையன்; மெலிந்த யாக்கையன். இவனது முயற்சியில் அறிந்தோ அறியாமலோ பிழை நிகழ்தல் கூடுமன்றோ? பிழை பொறுக்க.

சென்னை
20-5-1941

திருவாரூர் - வி. கலியாணசுந்தரன்.

# திருக்குறள்

## விரிவுரை

## அறத்துப்பால்

அறத்துப்பால் :—அறம் + அத்து + பால் ; 'அத்தை' நீக்கி அறப்பால் என்று கொள்வோருமுளர். இவர் சொற்செட்டியர் போலும்! இலக்கணக் குறிப்புக்கள்மீது கருத்துச் செலுத்தாது, இயற்கையோசை இன்பம் எதன்கண் உள்ளது என்று உன்னுக.

அறம் : விளக்கம், பாயிரத்துள் "அறன் வலியுறுத்த" லில் பார்க்க.

அத்து : சாரியை ; ஓசைப் பொருளும் இன்பமும் உடையது.

பால் : பகுதி, பாகம்.

அறத்தை அறிவுறுத்தும் பகுதி அறத்துப்பால் என்று விரிக்க.

### அறத்தின் முதன்மை

திருவள்ளுவர் அருளிய திருக்குறள் முப்பாலுடையது. அதனால் திருக்குறளுக்கு 'முப்பால்' என்றொரு பெயரும் வழங்கப்படுகிறது. முப்பால் : அறத்துப்பால், பொருட்பால், இன்பப்பால் அல்லது காமத்துப்பால்.

முப்பாலுள் முதன்மையாக மிளிர்வது அறத்துப்பால். என்னை? பொருளுக்கும் இன்பத்துக்கும் அறம் உயிர் போன்றதாகலானும், அறம் அற்ற பொருளும் இன்பமும் தொல்லை விளைத்து அமைதி குலைப்பனவாகலானும் என்க. அறம், தனித்தும் பொருளிலும் இன்பத்திலும் கலந்தும் இயங்கும் இயல்புடையது. கடவுள் தனித்தும் உலகு உயிர்களில் கலந்தும் நிற்பதுபோலவும், ஆகாயம் தனித்தும் மற்ற நான்கு பூதங்களில் கலந்தும் நிற்பதுபோலவும், அறமும் தனித்தும் ஏனைய இரண்டிலுங் கலந்தும் நிற்கும் பான்மையது. இன்னோரன்ன காரணம் பலபற்றி 'அறத்துப்பால்' முதன்மை பெற்றதென்னலாம்.

# இல்வாழ்க்கை இயல்

இல்வாழ்க்கை இயல் : இல்வாழ்க்கையைப் படிப்படியே விளக்கிக் கூறும் அதிகாரங்களைக் கொண்ட இயல்.

இல்வாழ்க்கை என்பதன் பொருள் பின்னே உரைக்கப் படும்.

இயல், பாலின் கூறுபாடு.

அதிகாரம், இயலின் கூறு.

## பிரிவு

அறத்துப்பாலைப் பழைய உரையாசிரியன்மார் சிலர் இல்லற இயலென்றும் துறவற இயலென்றும் பிரித்து, இல்லறத்துக்குரிய அதிகாரங்கள் இன்ன இன்ன என்றும், துறவறத்துக்குரிய அதிகாரங்கள் இன்ன இன்ன என்றும் வகுத்தனர். அவர் வதிந்த காலப்போக்கு, அறத்துப்பாலை அவ்வாறு பிரிக்கவும் வகுக்கவும் அவரை உந்தியிருக்கலாம். அப்பாலே, வேறுவகையில் பிரித்தற்கும் வகுத்தற்கும் அஃது இடந் தந்து நிற்கிறது. ஐயப்பாடுகள் ஆங்காங்கே தெளிவு செய்யப்படும்.

இல்வாழ்க்கை இயல்-இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை, மக்கட்பேறு, அன்புடைமை, விருந்தோம்பல், இன்சொல் ஆகிய ஆறு அதிகாரங்களைக் கொண்டது.

இல்வாழ்க்கை இயல் திருக்குறளின் உள்ளக்கிடக்கை யைப் பொதுவகையில் வெளியிடுவது. பிற இயல்கள் அவ் வுள்ளக்கிடக்கையைச் சிறப்பு வகையில் விரித்துக் கூறுவன. விளக்கம் ஆங்காங்கே பொறிக்கப்படும் விரிவுரைக் குறிப்புக் களிற் பார்க்க.

# ரு. இல்வாழ்க்கை

இல்வாழ்க்கை : இல்லில் வாழ்தல்.

இல் - வீடு, மனை ; இயற்கை உலகம். வாழ்க்கை - வாழ்தல் ; ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழ்தல் ; இயற்கை உலகினிடம் அன்புகொண்டு வாழ்தல்.

## விதம்

இல்வாழ்க்கை இருவிதம். ஒன்று மனைவி மக்களிடை அன்பு செலுத்தி வாழ்வது ; மற்றொன்று விரிந்து பரந்துள்ள இயற்கை யுலகினிடம் அன்பு செலுத்தி வாழ்வது. இரண்டும் பிரிவில்லாதன ; காய்கனி போன்றன ; ஒன்றன் வளர்ச்சியே மற்றொன்று.

## அமைப்பு

உயிர்கள், மக்கள் பிறவியிலேயே அறநிலை எய்தல் வேண்டும். அறநிலை எய்தற்கு வாழ்க்கை வேண்டற்பாலது. வாழ்க்கைக்கு அமைப்புத் தேவை. அவ்வமைப்பே, "இல்" என்பது.

மகன் இல்லிலிருந்து மனைவி மக்களுடன் வாழ வாழ, அவனது மனமாசு அகன்று அகன்று, அவனிடம் அன்பு பெருகும். அன்பு பெருகப் பெருக மற்ற உயிர்களிடத்துப் பொறாமை இகல் முதலியன தோன்றா. இவை தோன்றா நிலையே எவ்வுயிரிடத்தும் அன்பு செலுத்துவதென்பது. அந்நிலையில் இயற்கை உலகமே பெரிய இல்லாகத் தோன்றும். அப்பெரிய இல்லில் வாழும் உயிர்களெல்லாம் சோதரமாகவே பொலியும். ஆகவே, இல்வாழ்க்கை என்பது, மனைவி மக்களிடைச் செந்தண்மை பூண்டு வாழ்தலையும், அதன்வழி இயற்கை உலகினிடம் செந்தண்மை பூண்டு வாழ்தலையும் உளங்கொண்டதென்க.

## உள்ளுறையும் அமைவும்

இவ்வதிகாரம் நான்குவிதப் பொருளடக்கத்தை உடையது. க. அறமே இல்வாழ்க்கை என்பது ; உ. அறத்துக்கும் இல்வாழ்க்கைக்குமுள்ள தொடர்பு ; ௩. இல்வாழ்வான் கடமை ; ச. அவன் மாண்பு.

அறன் வலியுறுத்தலில் சொல்லப்பட்ட அறத்தின் நுண்மையைக் கூர்ந்து ஆய்ந்து உன்னினால் அறமே இல் வாழ்க்கையாகப் பருத்து முடிவில் அஃதாகவே கனிதல் விளங்கும். இவ்விளக்கம், அறத்துக்கும் இல்வாழ்க்கைக்கும் உள்ள தொடர்பை இனிது புலப்படுத்தும். தொடர்பை யுணர்ந்து ஒருத்தியும் ஒருவனும் வாழ்வை நடாத்த நடாத்த, அவர்தம் மனமாசகன்று, பிறர்க்கென வாழ்தல் என்னுங் கடமை அல்லது தொண்டு, செய்கையில் அவர்மாட்டு நிகழ்வதாகும். இல்வாழ்வோரது அறச் செய்கையால் அவர்தம் மாண்பு உலகுக்குப் புலனாகும்.

முதற் பாட்டில் அறமே இல்வாழ்க்கை என்பதும், இரண்டு மூன்று நான்கில் அறத்துக்கும் இல்வாழ்க்கைக்கும் உள்ள தொடர்பும், ஐந்தாம் பாட்டில் பொது முறையிலும் அதைத் தொடர்ந்து நிற்கும் மூன்று பாக்களில் சிறப்பு முறையிலும் இல்வாழ்வான் கடமையும், ஒன்பதிலும் பத்திலும் இல்வாழ்வான் மாண்பும் விளங்குதல் காண்க.

### (i) அறமே இல்வாழ்க்கை

### 41

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

பொருள்

அறன் எனப்பட்டதே - அறம் என்று சொல்லப்பட்டதே, இல்வாழ்க்கை - இல்வாழ்க்கை என்க, அஃதும் - அவ்

வில்வாழ்க்கையும், பிறன் பழிப்பது இல்லையாயின் - மற்றொரு வன் பழித்தல் இல்லாததாயின், நன்று - நல்லதாகும்.

கருத்து

பிறரால் பழிக்கப்படாத இல்வாழ்க்கையே அறம் என்பது.

விருத்தி

பாயிரத்தின் இறுதியிலுள்ள 'அறன் வலியுறுத்த'லுக்கும், பொதுவாக அறத்துப்பாலுக்கும், சிறப்பாக இவ்வில் வாழ்க்கை இயலுக்கும் தொடர்பு உண்டு. 'அறன் வலியுறுத்தல்' பாயிரத்துள் அமைக்கப்பட்டதன் நோக்கம் அங்கே விளக்கப்பட்டது. 'அறன் வலியுறுத்தல்' அறத்துப்பாலின் உள்ளுறை. அதனை இப்பாலின் பொருளுணர்த்தும் சிறப்புப் பாயிரம் என்றுங் கூறலாம்.

## அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை

அறன் - அறம்.

அறம் - " மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து "; " அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது."

அறன் எனப்பட்டதே - 'அறன் வலியுறுத்தல்' என்னும் அதிகாரத்தில் 'அறன்' என்று சிறப்பித்துச் சொல்லப்பெற்ற ஒன்றே.

ஏகாரம் தேற்றம்.

இல்வாழ்க்கைப் பொருள் அதிகாரத்தின் தலைப்பிலுஞ் சிறிது விளக்கப்பட்டது.

இல்வாழ்க்கை எது ? இக்குறள், " அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை " எனப் பதிலிறுக்கிறது. அறமே இல்வாழ்க்கை என்றபடி.

### அ ற ன்

*அறமாவது மனத்துக்கண் மாசிலனாகும் நிலை; அது நுண்ணியது. அதைச் செயலில் அடையச் செய்வது இல் வாழ்க்கை. ஆதலின் அறமே இல்வாழ்க்கை எனப்பட்டது.*

### எ ன ப் ப ட் ட தே

*அறம் நுண்ணிய நிலையாகலான், அதை, "அறன் எனப் பட்டதே" என்றார். "எனப்பட்டதே" என்பது, நுண் மைச் சொன்மையைக் குறிப்பது. அச்சொன்மை, ஒழுக்கத் தில் - நடையில் - செயலில் வருமிடம் "இல்வாழ்க்கை" என்பார், "அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை" என்றார். 'அறன்' என்னுஞ் சொன்மை செயலாம்போது, அஃது இல் வாழ்க்கை எனப்படுகிறது. நுண்மை அறத்தின் பருமை இல்வாழ்க்கை.*

### இ ல் வ ா ழ் க் கை

*மக்கள் மனத்தில் மாசிருத்தல் வெள்ளிடைமலை. அம் மாசு பிறவியிலேயே அமைந்து வருவது. பிறவியில் அமைந் துள்ள மாசு எப்படி நீங்கும்? தனித்து வாழ்வதால் மாசு நீங்காது. தனித்து வாழ்தல் இயற்கையுடன் இயைந்து நிற்பதாகாது. இல்வாழ்க்கை அதாவது சேர்ந்து வாழ்வது இயற்கை அறம். சேர்க்கையால் அன்பு பெருகுதற்கு இடன் நேரும். அன்பு பெருகும் இடத்தில் மாசு மறைந்து போகும். சேர்க்கை வாழ்வுக்கென்று இயற்கையுலகம் பெண் ஆண் மயமாக அமைந்திருக்கிறது. அச் சேர்க்கை வாழ்வில் தலைப் படாது, பிறந்த நாள் தொட்டு இறக்கும்வரை, தனித்து வாழும் ஒருவர் பெரிதும் தம்மையே நேசிப்பவராவர். தம் மையே நேசிப்பவர் தம் நலத்தவராகவே இருப்பர். மன மாசின் விளைவே தன்னலம் என்பது. தன்னலத்தால் மன*

மாசு அறுது. மனமாசு அற அறத் தன்னலமும் படிப்படியே அறுந்துபோகும்; அன்பும் பெருகுவதாகும். அன்பை எழாதவாறு தகைவது தன்னலம். ஆதலால், மனமாசு அறு தற்கும், தன்னலம் வீழ்தற்கும், அன்பு பெருகுதற்கும் சேர்க்கை வாழ்வு இன்றியமையாதது.

## தியாகம்

சேர்க்கை வாழ்வில் தலைப்படுவோர் தம் நலத்தவரா யிருத்தல் இயலாது. ஒருத்தியும் ஒருவனும் காதலால் ஒன்றியபோது, அவள் இவனை நேசிப்பதும் இவன் அவளை நேசிப்பதும் இயற்கையாகின்றன. பின்னே இருவர்க்கும் பிள்ளைப்பேறுண்டாகிறது. இருவரும் தம் நலங் கருதாது பிள்ளைகட்கென்று வாழ்வோராகிறார். இங்கே அவர்தம் நலம் தேய்ந்து வருதலும், தியாகம் வளர்ந்து வருதலும் கருதற்பாலன. தனித்த வாழ்க்கையில் இவையுறுமோ?

பிள்ளைப்பேறு மூன்றாவது உயிரிடத்தில் அன்பை இயல்பாகவே சுரப்பிக்கிறது. பிள்ளைப் பேற்றிற்குப் பின்னரே அன்பின் தன்மை இன்னதென்று விளங்குவதாகிறது. அன்பு மற்றவரையுந் தம்மைப்போல் கருதச் செய்யுந் தன்மையுடையது. அது விருந்தோம்ப உந்துகிறது. இன்னாரென்று தெரியாத புது மனிதரே விருந்தினரெனப்படுவர். விருந்து என்னுஞ் சொல்லுக்குப் புதிது என்பது பொருள். சேர்க்கை வாழ்வு அன்பைப் படிப்படியே வளர்த்து, தன்னலத்தைச் சாய்த்து, மனமாசகற்றி, எவ்வுயிரும் பொது என்னும் அறநிலையை உண்டுபண்ணுதலை ஓர்க.

## அதிகார வைப்பு

சேர்க்கை வாழ்வின் படிகள் திருவள்ளுவர் குறளில் முறைமுறையே அதிகார வைப்புக்களாக அமைந்துள்ளன.

அறன்வலியுறுத்தல், இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணை, மக்கட்பேறு, அன்புடைமை, விருந்தோம்பல், இன்சொல் முதலிய அதிகார வைப்பு முறைகளை நோக்குக.

**அஃதும்**

"அஃதும்" என்பதற்கு 'இல்வாழ்க்கையும்' என்று பொருள் சொல்லப்பட்டது.

"* * * * ஏனைத்துறவறமோ எனின், அதுவும் பிறனாற் பழிக்கப்படுவதில்லையாயின், அவ்வில் வாழ்க்கையோடொரு தன்மைத்தாக நன்று" என்று பொருள்கூறி, "ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது; இதனாற் பிரிக்கப்பட்டது துறவறமாதலின், அஃதென்னுஞ் சுட்டுப்பெயர் அதன்மேனின்றது" என்ற குறிப்பும் பொறித்துள்ளனர் பரிமேலழகர். இவர் தம் உரையையும் குறிப்பையுந் தழுவிப் பின் வந்த பலர் உரை கண்டனர். இங்கே, "ஏனைத் துறவறமோ எனின் அதுவும் * * *" என்று பொருள் கோடற்கு இடன் எங்கே இருக்கிறதோ தெரியவில்லை. உரையாசிரியர் தம் முள்ளத்துலவிய 'துறவறம்' என்பதை இக்குறளில் நுழைத்துப் பொருள் காண்டற்கு 'ஏகாரத்தை'ப் பிரிநிலையாகக் கொண்டனர் போலும்!

**போலித் துறவு**

திருவள்ளுவர் காலத்திலேயே தனித்து வாழும் போலித் துறவு என்னுஞ் செயற்கைத்துறவு வாழ்விடைப் புகலாயிற்று. அது 'துறவறம்' என்னும் பெயரால் வழங்கப்பட்டு வந்ததென்று தெரிகிறது. போலித்துறவு வாழ்விடை நுழைந்து கேடு விளைத்து வருவதைக் கண்ட திருவள்ளுவர், கேட்டை நீக்கவேண்டி, அத்துறவை மறுக்கலாயினர். மறுப்பைத் திருவள்ளுவர் நூலிற் பல இடங்களிற் பரக்கக் காணலாம். மறுப்பு இவ்வதிகாரத்திலும் இருக்கிறது.

## இல்வாழ்க்கையின் வளர்ச்சி

*இல்வாழ்க்கை என்பது ஒரு சிறிய வீட்டில் ஒருத்தியும் ஒருவனும் வாழ்வதைமட்டுங் குறிப்பதன்று. அது பரந்த இயற்கை உலக வாழ்க்கையையும் உளங்கொண்டது. ஒருத்தியும் ஒருவனும் கற்பனகற்றுக் கேட்பனகேட்டுக் காதலால் ஒருமைப்பட்டு மணம் புரிந்து ஒன்றி வாழ்வதுமுதல், மனமாசறுந்து அறநிலைப் பேறு எய்தும் வரை, நிலவுவது இல்வாழ்க்கை. திருவள்ளுவர் நூல் அறமெனப்படும் இல்வாழ்க்கையைக் குறிக்கொண்டதென்று கூறுதல் மிகையாகாது. ஒவ்வோர் அதிகாரமும் ஒவ்வொரு படியாக மிளிர்கிறது.*

## துறவு - தவம்

*'துறவு', 'தவம்' முதலியனவும் அறமெனப்படும் இல்வாழ்க்கையின் படிகளேயாகும். அவை, இடையில் நுழைந்த போலியைக் குறிப்பனவல்ல. அவ்வதிகாரங்கள் போலியைச் சிறப்பாக மறுப்பன என்க. 'துறவு', 'தவம்' முதலிய அதிகாரங்கள் இயற்கை வாழ்வை விடுத்தோடுமாறு யாண்டேனுங் கூறியுள்ளனவா? அவை மனத்திலுள்ள மாசுகளை விடுக்குமாறு - துறக்குமாறு - அறிவுறுத்தல் உண்மை.*

## பின்னாட்சி

*பின்னாளிலேயே அறம், இல்லறம் துறவறம் எனப் பிரிவுண்டது. இல்வாழ்க்கை என்பது பண்டையாட்சி. ஆகவே "அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை" என்று இப்பாடல் கூறுதல் கருதற்பாலது.*

## பிறன் பழிப்ப தில்லாயின் நன்று

*"அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை" யாதலின், அதனைத் தூய்மையாக நடாத்த ஒவ்வொருவருங் கடமைப்*

படுதல்வேண்டும். இல்லையாயின் வாழ்க்கை போலியாகும்; மனமாசைப் போக்குவதாகாது. இதனை விளங்கச் செய்ய ஆசிரியர், "அஃதும் பிறன்பழிப்ப தில்லாயின் நன்று" என்று அருளினர்.

## பி ற ன்

எவர் பழிப்புக்கும் இடந்தரலாகாது என்பார், "பிறன்" என்று ஒருமையாற் கூறினர். "பிறன்" என்பது 'ஒருவனுவது' என்னுங் குறிப்பையுணர்த்துவது.

அமைதியுடைய பெண் பழிதூற்ற முனையாளாகலின், பெண்பாலை நீக்கிப் 'பிறன்' என்று ஆண்பாலாற் கூறலாயினர்.

## ப ழி ப் ப து

பழிப்பது - பழித்தல், பழித்துச் சொல்லல். பழிப்பு, அறமற்ற இடத்தில் எழுவது. அறச்செயலில் பழிப்பு எழுதற்கு இடமேது?

பழிப்பற்ற ஒன்று அறனெனப்படும் இல்வாழ்க்கை என்பது கருத்து.

பழிகளாவன: ஒருத்தி ஒருவனை விடுத்தும் ஒருவன் ஒருத்தியை விடுத்தும் வாழ்தல், ஒருத்தி பல ஆடவருடனும் ஒருவன் பல மகளிருடனுஞ் சேர்ந்து காம எரிக்கு இரையாதல், பொருள் முயற்சியின்றிச் சோம்பிக்கிடத்தல், நல்வழியில் பொருளீட்டாமையும் செலவழியாமையும், பிள்ளைகளை நல்வழியில் வளர விடாமை, அடங்காமை, ஒப்புரவின்மை, விருந்தோம்ப ஒருப்படாமை முதலியன. இவைகள் சூழாதவாறு இல்வாழ்க்கை நடாத்தப்பெறல் வேண்டும். இது பற்றியே, "பிறன்பழிப்ப தில்லாயின் நன்று" என்றார்.

இ ல் லா யி ன் ந ன் று

'இல்லாயின்' என்பது, அறவழியை நினைவூட்டுவது. இது 'நன்று' என்னுஞ் சொல்லில் ஊர்ந்து கொண்டிருத்தலை உன்னிப் பார்க்க.

ஒருத்தியும் ஒருவனுங் கூடி வாழ்வது மட்டும் இல் வாழ்க்கையாகாது. பிறன் பழிப்புக்கும் இடமின்றி வாழ்தல் வேண்டும். அப்பொழுது இல்வாழ்க்கை நன்றாகும்; இல்லை யேல் இல்வாழ்க்கை நன்றாகாது என்றபடி.

அறத்தின் வேரினின்றும் எழும் இல்வாழ்க்கை பழிப் புக் கனியைத் தாராது. பழிப்புக் கனி தாராதவாறு நடாத் தப்படும் இல்வாழ்க்கையே நன்றாகும். அந்த ஆறு - வழி வரும் பாட்டில் காட்சியளிக்கிறது.

"அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை * * * *" என்பது, தனித்த செயற்கை வாழ்க்கை அறனெனப்படா தது என்பதை உணர்த்துவது. தனித்த போலி வாழ்க்கை யின் மறுப்பு, கீழே தொடர்ந்து வருஞ் சில பாக்களில் வரு தலைப் பார்க்க. (க)

(ii) அறத்துக்கும் இல்வாழ்க்கைக்குமுள்ள தொடர்பு

## 42

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்
போஒய்ப் பெறுவ தெவன்.

பொருள்

அறத்து ஆற்றின் - அற வழியிலே, இல்வாழ்க்கை ஆற்றின் - (ஒருவன்) இல்வாழ்க்கையை நடாத்தினால், புறத்து ஆற்றின் - (அவன்) புற வழியிலே, போய் - சென்று, பெறு வது எவன் - அடைவது என்ன?

## கருத்து

இல்வாழ்க்கையை விடுத்து வேறு வழியில் செல்வதால் அடையும் பயன் ஒன்றுமில்லை.

## விருத்தி

மேற்பாட்டில் பழிப்பில்லாத இல்வாழ்க்கை அற நிலையினின்றும் வளர்வது என்ற கருத்துப் பொலிகிறது. அத்தகை இல்வாழ்க்கையை நடாத்தும் ஆறு - வழி-இப்பாட்டல் குறிக்கப்படுகிறது.

**அறத்து ஆற்றின்**

அறத்து-அறத்துக்குரிய, அறத்தை அடைதற்குரிய.

ஆறு - வழி ; பலர் நடந்து நடந்து அறுபட்டுப் பண்பட்ட வழி.

ஆற்றின் - ஆற்றில், வழியில், வழியிலே.

அறத்து ஆற்றின்-அறத்துக்குரிய வழியில்,அறத்தை அடைதற்குரிய வழியில், அறவழியிலே.

**ஆறு**

எதற்கும் நிலையொன்றிருக்கும். அதை அடைதற்குரிய வழியொன்றிருக்கும். வழியே சென்றால் நிலையை அடைதல் கூடும். மலையை அடைதற்கு மலைக்குரிய வழியே செல்லுதல் வேண்டுமன்றோ ?

அறம் என்பது ஒரு நிலை. அது மனத்துக்கண் மாசின்மை பெறுவது. அந்நிலையை அடைதற்குரிய வழி, " அறத்தாறு " என்பது.

" அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை " என்பது திருவள்ளுவர் திருவாக்கு. இதனால் 'அறமே இல்வாழ்க்கை ; இல்வாழ்க்கையே அறம்' என்பது நன்கு விளங்குகிறது. இல்வாழ்க்கை என்னும் அறநிலை எய்துதற்கு எவ்வழி நடத்

தல்வேண்டும்? அறவழி நடத்தல்வேண்டும். இதுபற்றியே, "அறத்தாற்றின்" என்றார்.

## இல்வாழ்க்கை ஆற்றின்

ஆற்றின் - செய்யின், செலுத்தின், நடாத்தின், நடாத்திஞல்; 'செலுத்தவல்லவஞயின்' என்பர் மணக்குடவர்.

ஆற்றல் - செய்தல்; செலுத்தல்; நடாத்தல்.

## ஆ ற் றி ன்

இல்வாழ்க்கை என்பது வெறும் நினைவன்று; பேச்சன்று; கல்வியன்று. கற்றனவற்றையும், கேட்டனவற்றையும் அநுபவத்தில் பெறச்செய்வது இல்வாழ்க்கை. செயலை - நடக்கையை வலியுறுத்தவேண்டி, "இல்வாழ்க்கை" என்று மட்டுங் கூருது, "இல்வாழ்க்கை ஆற்றின்" என்றுங் கூறலாஞர். "ஆற்றின்" என்பது, செயலை - நடக்கையை - உணர்த்துவது வெளிப்படை.

இல்வாழ்க்கை அறமாதலின், அதை அறநெறியில் செலுத்தல் வேண்டும் என்பார், "அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின்" என்றார். அறமாகிய இல்வாழ்க்கையை அறநெறியில் செலுத்திஞல் அறநிலையெய்தல் கூடும் என்றபடி.

## புறத்தாற்றின் போஒய்ப் பெறுவதெவன்?

புறத்து ஆறு - புற வழி; புறத்துக்குரிய வழி; புறமாகிய வழி; அறத்துக்குப் புறமாகிய (புறம்பாகிய) வழி.

அளபெடையில் 'அறியாமையால் வீழ்தல்' என்னும் பொருளும், 'அந்தோ! போய்ப் பெறுவதென்ன' என்னும் இரக்கமும் ஒலித்தலை உணர்க.

எவன் - என்; என்ன.

புறத்து ஆற்றின்

அறத்தாறாவது இயற்கைநெறி; சேர்க்கை வாழ்க்கைக் குரியது. இவ்வழியல்லாதது புறவழி. புறவழியாவது அறவழிக்கு மாறுபட்டது; அதாவது இயற்கைக்கு வேறு பட்டது.

ஈண்டு ஆசிரியர் அறநெறியை, "அறத்தாறு" என்றும், அதற்கு மாறுபட்ட ஒன்றை, "புறத்தாறு" என்றும் குறித்ததை ஓர்க.

போஒய்ப் பெறுவது எவன்?

மக்கள் இல்வாழ்க்கையை ஆற்றுதல் வேண்டுமென்பதும், அவ்வாழ்க்கையை அறத்தாற்றிற் செலுத்தல் வேண்டுமென்பதும், அறத்தாற்றில் இல்வாழ்க்கையை நடத்தாது அறமென்னும் இல்வாழ்க்கைக்கு மாறுபட்ட புறத்தாற்றிற் புகுதல் கூடாதென்பதும் ஆசிரியர் உள்ளக்கிடக்கை. இதனை ஆசிரியர், "புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவதெவன்" என்று இரங்கிக் கூறி உலகுக்கு உண்மையை அறிவுறுத்தல் காண்க.

இல்வாழ்க்கையை அறத்தாற்றில் ஆற்றினால் அறநிலை எய்தல் கூடும். அதைப் புறத்தாற்றில் ஆற்றினால் என்ன எய்தல் கூடும்? அறமல்லாத பழி எய்தல் கூடும் என்பது.

பழி எய்தலை ஆசிரியர் வெளிப்படையாகக் குறியாது, "* * பெறுவதெவன்" என்று நாகரிகமாக வினவும் வழி உணர்த்தியது கருதத்தக்கது. புறத்தாறு, வாயிலுங் கூற ஒண்ணாத பழி பாவங்களைக் கூட்டுவது; கொடியது.

'உலகீர்! அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை. அதை அறநெறியில் நடாத்துக. புறநெறியில் நடாத்தினால் என் பெறப் போகிறீர்? பழியே பெறுவீர். ஆகவே புறத்தாறு செல்லற்க' என்று அறிவு கொளுத்தியவாறும்.

## தனி வாழ்க்கை

இல்வாழ்க்கையை அறநெறியில் ஆற்ருது, புறநெறியிலே ஆற்றுவோர்—தனித்த வாழ்வில் தலைப்படுவோர்—நாளடைவில் பலதிறப் பழிகளுக்கு உள்ளாகும் நிலையை அடைவர் தொடக்கத்தில் ஏதோ சில காரணம்பற்றித் தனித்த வாழ்க்கையில் அவர்க்குக் காதல் உண்டாகிறது. பின்னே பல வகைப் பழிகள் அவரைச் சூழ்ந்து அடர்கின்றன. மறைமுகமாகப் பழிகளைச் செய்யவும் அவர் முயல்கிருர். ஒரு பழியை மறைக்க ஒன்பது பழியைச் செய்யும் நிலைமை அவருக்கு ஏற்படுகிறது. இயற்கை அன்னையை வெறுத்த பாவம் அவரை வாளா விடுங்கொல்! அவரை அப்பாவம் ஒறுப்பதாகிறது. தனித்த வாழ்வு பூண்டோர் பின்னுளில் வருந்தி வருந்திச் செத்த கதைகள் பல உண்டு.

தனித்த வாழ்வினர், இயற்கையோடியைந்து, சேர்க்கை வாழ்வை நடத்தாமையான், அவர் பல வழியிலும் இடர்ப் படுவோராகிருர். தனியர்க்குப் பிறர் துணைகொண்டே வாழ்தல் இயல்பாகிறது. துணைகிடையாதபோது, அவரை வெருளி ஆள்வதாகிறது. வெருளி என்னென்ன செய்யும்? சொல்லவும் வேண்டுமோ? மேலுஞ் சேர்க்கை வாழ்வைத் துறந்தவர் மறைவில் கரவுச் செயல்களை நிகழ்த்தப் புகுகிருர்; கூடா ஒழுக்கத்திலும் புகுகிருர். அவரை நோய் பீடிக்கிறது; பசியும் பட்டினியும் வாட்டுகின்றன. இவ்வளவு துன்பங்கட்குங் காரணம் என்ன? இல்வாழ்க்கை ஏற்று அறவழியில் நின்று ஒழுகாமை. தனித்த வாழ்வின் பயனின்மை கண்டே ஆசிரியர், "புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவதெவன்" என்று கேட்கிருர்.

"பெறுவ தெவன்"? ஒன்றுமில்லை என்றபடி. நலத்தில் ஒன்றுமில்லையென்க. தீமையில் தன்னலம், பிறர்

உதவி நாட்டம், கரவு, ஏமாற்றம், கூடா ஒழுக்கம், நோய் முதலியன விளையுமென்க. (உ)

# 43

*ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை*
**நோற்றலின் நோன்மை யுடைத்து.*

பொருள்

*ஆற்றின் ஒழுக்கி - (அற) வழியில் (பிறரை) ஒழுகச் செய்து, அறன் இழுக்கா - அறத்தில் தவறாத, இல்வாழ்க்கை - (ஒருவனது) இல்வாழ்க்கை, நோற்றலின் - நோற்பதினும், நோன்மை உடைத்து - வலிமையுடையது.*

கருத்து

*இல்வாழ்க்கை, நோற்றலினும் வலிமையுடையது.*

விருத்தி

*முற்பாட்டில், "அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின்" என்று சொல்லப்பட்டது. இப்பாட்டில், "ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை" என்று சொல்லப்பட்டுள்ளது. அஃது ஒருவர் அறவழியில் இல்வாழ்க்கையை நடாத்துவதை உணர்த்துவது; இஃது அவர் தம்மளவில் அறவழியில் இல்வாழ்க்கையை நடத்துவதுடன் அமையாது பிறரையும் அவ்வழியில் செலுத்த முயலல்வேண்டுமென் பதை உணர்த்துவது. இங்கே ஒப்புரவு வளர்தலை நோக்குக.*

## ஆற்றின் ஒழுக்கி

*ஆற்றின் - வழியில்; நல்வழியில், அறவழியில். குணம் என்பது நற்குணத்தை உணர்த்துவதுபோல ஆற*

பா - ம்:—**நோற்பாரின்.*

என்பதும் நல்லாற்றை உணர்த்துவதென்க. “அறனி ழுக்கா” என்பதிலுள்ள “அறனை” “ஆற்று”டன் சேர்த் தும் பொருள் கூறலாம்.

ஒழுக்கி - பிறரை நேர்மையாக ஒழுகச் செய்து; நடத்தி; செலுத்தி.

ஒழுக்கல் - நேர்மையாக ஒழுகச் செய்தல்.

## ஆற்றின் ஒழுக்கல்

ஒருவர் இல்வாழ்க்கை ஏற்கிறார்; ஏற்று அதை அற வழியில் நடாத்துகிறார். அவர் தம்மளவில் நிற்றலாகாது. அவர் மற்றவரையும் (தாம் நடக்கும்) நல்வழியில் நடாத்த முற்படல்வேண்டும். இதுபற்றியே, “ஆற்றின் ஒழுக்கி” என்றார்.

அறவழியில் நடந்து அறநிலை எய்திய ஒருவர், தாம் மட்டும் இன்பந் துய்க்கக் கருதுவதில்லை. மற்றவரையும் தம்வழி நிறுத்தி இன்புறச் செய்வது அவர்தம் இயல்பு. அவ்வியல்பை, ‘ஆற்றின் ஒழுக்கி’ என்றார் ஆசிரியர்.

### ஒப்புரவு

அறநிலை எய்திய ஒருவரிடத்தில் அழுக்காறு அவா வெகுளி முதலிய மாசுகள் அற்றுப்போகின்றன. மாசற்ற மனத்தில் ஒப்புரவு மலர்தல் இயல்பு. ஒப்புரவாளர் எப் பொழுதும் தமக்கென்றே வாழார். அவர் பிறர்க்கென்றும் வாழ்வர். அவர் ‘நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வைய கம்’ என்னும் பெருமொழிக்கு இலக்கியராக வாழ்வர். ஒப் புரவு, “ஆற்றின் ஒழுக்கி” என்பதில் மிளிர்தலை ஊன்றிப் பார்க்க.

இல்வாழ்க்கையை அறவழியில் நடத்தாத ஒருவர், அழுக்காறு அவா வெகுளி முதலிய தீக்குணங்களினின்றும்

விடுதலையடைதல் அரிது. தீக்குணங்கள் தன்னல நாட்டத்தை வளர்க்கத் துணைநிற்குமேயன்றிப் பிறர்நல நாட்டத்தை வளர்க்கத் துணைநில்லா. தமது நலத்திலேயே நாட்டம் உடையவர் பிறர்நல நாட்டத்தைப் பெரும்பாலும் ஒழிவர். அவர் பிறவிப்பயனை இழந்து வாட்டமுறுவோராவர். இல்வாழ்க்கையை அறவழியில் நடாத்தும் ஒருவர், பிறரையும் அவ்வழியில் நடாத்தும் இயல்புடையவராதலால், "அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின்" என்றும், "ஆற்றின் ஒழுக்கி" என்றும் ஆசிரியர் அருளலானார்.

## அறனிழுக்கா இல்வாழ்க்கை

அறன் - அறனில்; அறத்தினின்றும். இழுக்கா - வழுக்காத, தவறாத.

அறத்தினின்றும் வழுக்காதஇல்வாழ்க்கை என்றபடி.

### தகுதி

தம்மை நல்வழியில் பண்படுத்திக்கொண்ட ஒருவரே பிறரையும் அவ்வழியில் நடாத்தத் தகுதி வாய்ந்தவராவர். தம்மைப் பண்படுத்திக் கொள்ளாத ஒருவர், பிறரைப் பண்படுத்தப் புகுவது குருடர்க்குக் குருடர் வழிகாட்டப் புகுந்ததை ஒக்கும். இது பற்றியே திருவள்ளுவர் முதலில், "அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின்" என்று அருளிப் பின்னைத் தொடர்ந்து, "ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை" என்று அருளினர்.

### எச்சரிக்கை

அறவழியில் பண்பட்ட ஒருவரும், பிறரை அவ்வழியில் நடாத்தும்போது, தம்மைக் காத்தே போதல்வேண்டும். 'நாம் பிறரை நடாத்தும் பெற்றிவாய்ந்து விட்டோம்'

என்று செருக்கித் தமதுநிலையை அவர் காவாதுவிடின் நிலையில் வழுக்கலும் வீழ்தலும் நேரும். அறவழியில் பண்பட்ட ஒருவர், பிறரை அவ்வழியில் நடாத்தும்போதும், அவர்தம் வழியினின்றும் வழுவுதலாகாது என்று ஆசிரியர் அறிவு கொளுத்துகிறார். "அறனிழுக்கா" என்னும் பொன்னுரையை நோக்குக. ஒருவர் பிறரை ஆற்றின் ஒழுக்கும் போதும் அவர் அறத்தினின்று வழுக்கி வீழ்தலாகாது என்று ஆசிரியர் எச்சரிக்கை செய்கிறார். "அறனிழுக்கா" என்பது எச்சரிக்கை மொழி. அது பெரிதுங் கருதற்பாலது.

"ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்காத இல்வாழ்க்கை"யே சிறப்புடையதென்றவாறும்.

அவ்வில்வாழ்க்கை எத்தகையது? அது "நோற்றலின் நோன்மையுடையது."

## நோற்றலின் நோன்மையுடைத்து

"நோற்றல்" இங்கே தனித்து வாழ்தல் என்னும் செயற்கைத் துறவின்மேலது.

நோன்மை - வலிமை; பெருமையுமாம்.

## நோற்றல்

"நோற்றல்" இடத்துக்கேற்றவாறு பொருள்படும் ஒரு சொல். நோற்றலுக்கு விரதம், தவம், பொறுத்தல், துறத்தல் முதலிய பொருள்கள் வழங்கப்படுகின்றன. இங்கே நோற்றலுக்குத் தனித்த வாழ்க்கை அல்லது செயற்கைத் துறவு என்னும் பொருள் கொள்ளப்பட்டது.

இல்வாழ்க்கை ஏற்று, அறவழியில் நின்று, உடல்நலன் காரணமாகவும், உயிர்நலன் காரணமாகவும், சிறு சிறு தவறுதலுக்குக் கழுவாய் தேடுங் காரணமாகவும் நோன்பிருப்பதுண்டு. இஃது இயற்கையின்பாற்பட்டது.

இல்வாழ்க்கை ஏலாது, பெண் ஆணையோ ஆண் பெண்ணையோ வெறுத்து, இயற்கை இன்பத்தைத் துறந்து, செயற்கை முறையில் உடலை ஒறுத்துப் புலன்களை ஒடுக்கித் திரிவதும் நோற்றல் என்று வழங்கப்படுகிறது. இந்'நோற்றலே' ஈண்டு ஆசிரியரால் குறிக்கப்பெற்றது.

## திருவள்ளுவர் கடமை

இயற்கை இன்பத்தைத் துறப்பது பெருமையாகக் கருதப்பட்ட காலமுண்டு. அக்காலத்தில் திருவள்ளுவர் வாழ்தல் நேர்ந்தது. அதனால் போலித் துறவின் புன்மை தெரிக்கும் கடமை அவர்க்கு ஏற்பட்டது. அதை "நோற்றவின் * * * *" என்று குறிப்பிட்டார்.

"நோற்றல்" இங்கே போலித் துறவைக் குறிப்பது என்று எப்படிக் கொள்வது என்று சிலர் நினைக்கலாம். "ஆற்றின் * * * * இல்வாழ்க்கை" என்பது கொண்டு, "நோற்றல்" போலித்துறவை உணர்த்துவதென்று அறையலாம்.

தனித்த வாழ்க்கை என்னும் செயற்கைப் போலித் துறவைத் திருவள்ளுவர் பல இடங்களில் மறுத்துள்ளார். மறுப்புரைகள் பல "கூடாவொழுக்கம்" என்னும் அதிகாரத்தில் திரண்டிருத்தலை நோக்குக.

## வேறு சில சான்றுகள்

அவ்வப்போது தோன்றிய பெரியோர் பலர், திருவள்ளுவர் வழிபற்றிப் போலித்துறவைப் பல முறையில் மறுத்துள்ளனர். அம்மறுப்புரைகளிற் சில வருமாறு:—

"மலர்தலை யுலகத்துப் பலப்பல மாக்கள்
மக்களை மனைவியை ஒக்கலை ஒரீஇ
மனையும் பிறவுந் துறந்து நினைவருந்

காடும் மலையும் புக்குக் கோடையில்
கைம்மேல் நிமிர்த்துக் காலொன்று முடக்கி
ஐவகை நெருப்பின் அழுவத்து நின்று
மாரி நாளிலும் வார்பனி நாளிலும்
நீரிடை மூழ்கி நெடிது கிடந்தும்
சடையைப் புனைந்துந் தலையைப் பறித்தும்
உடையைத் துறந்தும் உண்ணு துழன்றும்
காயுங் கிழங்குங் காற்றுதிர் சருகும்
வாயுவும் நீரும் வந்தன அருந்தியும்
களரிலுங் கல்லிலுங் கண்படை கொண்டும்
தளர்வுறு மியாக்கையைத் தளர்வித் தாங்கவர்
அம்மை முத்தி அடைவதற் காகத்
தம்மைத் தாமே சாலவும் ஒறுப்பர்
ஈங்கிவை செய்யா தியாங்க ளெல்லாம்
பழுதின் றுயர்ந்த எழுநிலை மாடத்தும்
செந்தா துதிர்ந்த நந்தன வனத்தும்
தென்ற லியங்கு முன்றி லகத்தும்
தண்டாச் சித்திர மண்டப மருங்கிலும்
பூவிரி தரங்க வாவிக் கரையிலும்
மயிற்பெடை யாலக் குயிற்றிய குன்றிலும்
வேண்டுழி வேண்டுழி யாண்டாண் டிட்ட
மருப்பின் இயன்ற வாளரி சுமந்த
விருப்புறு கட்டின் மீமிசைப் படுத்த
ஐவகை அமளி அணைமேற் பொங்கத்
தண்மலர் கமழும் வெண்மடி விரித்துப்
பட்டினுட் பெய்த பதநுண் பஞ்சின்
நெட்டணை அருகாக் கொட்டைகள் பரப்பிப்
பாயன் மீது பரிபுர மிழற்றச்
சாயலன் னத்தின் தளர்நடைப் பயிற்றி
* * அஞ்சொன் மடந்தைய ராகந் தோய்ந்தும்
சின்னம் பரப்பிய பொன்னின் கலத்தின்

அறுசுவை அடிசில் வறிதினி தருந்தா
தாடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்
பூசுவன பூசியும் புனைவன புனைந்தும்
தூசு நல்லன தொடையிற் சேர்த்தியும்
ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்து
மைந்தரும் ஒக்கலும் மகிழ்வன மகிழ்ந்தும்
இவ்வகை இருந்தோ மாயினும் அவ்வகை
மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது
சிந்தை நின்வழி செலுத்தலின் அந்த
முத்தியும் இழந்திலம் முதல்வ அத்திற
நின்னது பெருமை யன்றே" —பட்டினத்தார்

"காவியு டுத்துந் தாழ்சடை வைத்துங்
காடுகள் புக்குந் தடுமாறிக்
காய்கனி துய்த்துங் காயமொ றுத்துங்
காசினி முற்றுந் திரியாதே
சீவனொ டுக்கம் பூதவொ டுக்கம்
தேறவு திக்கும் பரஞான
தீபவி ளக்கங் காணவெ னக்குன்
சீதள பத்மந் தருவாயே"
—திருப்புகழ்

"துருத்தி எனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி உடம்பை ஒறுக்கில்என் ஞம்சிவ யோகம்எனுங்
குருத்தை அறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தில் இருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே"

"காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதல் மிகஎளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூ லாதார நேர்அண்ட மூச்சைஉள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே"
—கந்தர் அலங்காரம்

## நோன்மையுடைத்து

தனித்த வாழ்க்கையில் பல கேடுகள் விளைதலானும், இல்வாழ்க்கையில் அக்கேடுகள் விளைதலின்மையானும், "இல் வாழ்க்கை நோற்றலின் நோன்மை யுடைத்து" என்றார்.

தனித்த வாழ்க்கையில் தீயொழுக்கப் பெருக்குக்கு வாய்ப்பு நேர்கிறது. "ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல் வாழ்க்கை"யில் அவ்வாய்ப்புப் பெரிதும் நேர்வதில்லை. இரு வித வாழ்க்கையில் வலிமையுடையது எது? நல்லொழுக் கத்தை வளர்க்கவல்ல வாழ்க்கை எதுவோ அதுவே வலிமை யுடையதாகும். இந்நுட்பமுணர்ந்தே ஆசிரியர், "இல் வாழ்க்கை நோற்றலின் நோன்மையுடைத்து" என்றார்.

## உள்ளொளி

இல்வாழ்க்கையில் மாசில்லா அறநிலை கூடுதலால், அஃது உள்ளொளிப் பெருக்குக்குத் துணை செய்வதாகிறது. மற்ற வாழ்க்கை, அவ்வொளி எழுச்சிக்குத் துணை செய்தலும் அருமை.

இயற்கை வாழ்க்கையில் புகாது வலிந்து நோற்றலில் உள்ளொளி எழுதல் அரிது. வலிந்து நோற்றல் இயற்கை யின் பாற்பட்டதன்றாதலின், அது மனமாசுகளை அகற்றுவ தில்லை. மனமாசு உள்ள இடத்தில் உள்ளொளி எங்ஙனம் எழும்?

நோன்மையை உள்ளொளி வலிமை யெனக்கொள்க. அவ்வலிமையே சிறந்தது; பொன்றாதது.

உள்ளொளி வலிமையாவது தேகாத்ம உணர்வு கடந்த ஆத்மசக்தி.

இப்பாவில் போலித்துறவு மறுப்பிருத்தலை ஓர்க. (ரு)

## 44

*அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது.*

### பொருள்

*இல்வாழ்க்கை - இல்வாழ்க்கை, அன்பும் அறனும் உடைத்தாயின் - அன்பையும் அறத்தையும் உடையதாயின், அது - அவ்வுடைத்தாயுள்ளமை, பண்பும் பயனும் - (இல்வாழ்க்கைக்குப்) பண்பும் பயனுமாம்.*

### கருத்து

*இல்வாழ்க்கையின் பண்புக்கும் பயனுக்கும் அன்பும் அறனும் தேவை.*

### விருத்தி

*இல்வாழ்க்கை அறநெறி வழா முறையில் நடத்தப்படல் வேண்டுமென்பதும், அதனுடன் ஒப்புரவும் ஓங்கி வளரல் வேண்டுமென்பதும், அத்தகை இல்வாழ்க்கையே வலிமையுடையதென்பதும் முற்பாட்டில் சொல்லப்பட்டன. இப்பாட்டில் அவ்வில்வாழ்க்கையின் விளைவு சொல்லப்படுகிறது.*

**இல்வாழ்க்கை அன்பும் அறனும்........அது........**

*அன்பு - எவ்வுயிரிடத்துஞ் செலுத்துவது.*

*அறன் - ஈண்டுப் பொதுமையின்மேற்று; அன்பால் விளையும் பொது உணர்வால், கிடைப்பதைப் பகிர்ந்து கொடுக்குந் தன்மை; சீலமென்று கொள்ளலுமாம்.*

*பண்பு - குணம், தன்மை, இல்வாழ்க்கையின் தன்மை.*

*பயன் - அடைவு, பேறு.*

*அது - அவ்வன்பையும் அறத்தையும் உடைத்தாயுள்ளமை ; அவ்வில்வாழ்க்கை எனக் கோடலுமாம்.*

## இருவர் ' அன்பு '

" இல்வாழ்க்கையாகிய நிலை யாவர்மாட்டும் அன்பு செய்தலையும் அறஞ் செய்தலையும் உடைத்தாயின், அதற்குக் குணமாவதும் பயனாவதும் அவ்விரண்டினையும் உடைமை தானே" என்பது மணக்குடவர் உரை. " * * * இது பழியொடு வாராத உணவை நுகரவேற்பார்மாட்டு அன்பு செய்ய வேண்டுமென்பதும், சீலனாய்க் கொடுக்கவேண்டு மென்பதும் கூறிற்று " என்பது அவர்தங் குறிப்புரை.

" ஒருவன் இல்வாழ்க்கை தன் துணைவிமேற் செய்யத் தகும் அன்பினையும், பிறர்க்குப் பகுத்துண்டலாகிய அறத் தினையும் உடைத்தாயின், அவ்வுடைமை அதற்குப் பண்பும் பயனுமாம்"—இது பரிமேலழகர் உரை. " இல்லாட்குங் கணவற்கும் நெஞ்சு ஒன்றாகாவழி இல்லறங் கடைபோகாமை யான், அன்புடைமை பண்பாயிற்று; அறனுடைமை பய னாயிற்று "—இஃது அவர்தங் குறிப்பு.

மணக்குடவர் அன்பு யாவர் மாட்டுஞ் சென்றிருத் தலும், பரிமேலழகர் அன்பு துணைவிமேல் சிறந்து சென் றிருத்தலுஞ் சிந்திக்கற்பாலன.

## இல்வாழ்க்கை ?

இல்வாழ்க்கை எது ? எழுத்தா ? சொல்லா ? கட்டடமா ? மக்கள் நடமாட்டமா ? படுக்கையா ? என்ன ? இல்வாழ்க்கை என்னும் பெயரால் மட்டும் ஒன்று இல்வாழ்க்கையாகாது. பெயருக்குரிய பொருண்மை அதன்கணிருத்தல் வேண்டும். பொருண்மையற்ற இல்வாழ்க்கை இல்வாழ்க்கையாகாது.

இவ்வதிகாரத்தில் இல்வாழ்க்கையின் இயல் ஒவ்வொரு குறட்பாவில் ஒவ்வொரு விதமாக விளக்கப்பட்டுளது. இக் குறட்பாவில் அவ்வியலின் நுட்பம் சிறப்பு முறையில் விளக்

கப்பட்டிருக்கிறது. இக்குறள் இவ்வதிகாரத்தின் உயிர்நாடியெனத் திகழ்கிறது என்று கூறலாம்.

### இரண்டிரண்டு

இல்வாழ்க்கையின் கூறுபாடுகள் பலதிறம். அவைகளெல்லாவற்றையும் விரித்தோதல் இயலாது. சில கூறுபாடுகள் இவ்வதிகாரத்தில் ஆங்காங்கே ஓதப்பட்டுள்ளன. இப்பாட்டில் நான்கு சிறப்புக் கூறுகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் மற்றெல்லாம் அடங்கும். அந்நான்கும் முறைப்படக் கூறப்பட்டில்லை; இரண்டிரண்டாகக் கூறப்பட்டுள்ளன. அவை பிரித்துக் கூறப்பட்டதன் நுட்பம் ஆராய்ச்சிக்குரியது.

## அன்பும் அறனும் - பண்பும் பயனும்

முன்னிரண்டு: அன்பும் அறனும்; பின்னிரண்டு: பண்பும் பயனும். அவை காரணம்; இவை காரியம். இம்முறைபற்றிப் பரிமேலழகர் நிரல் நிறைப்பொருள் கொண்டனர் போலும்.

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை - பண்பும் பயனும் அது." அன்பும் அறனும் இல்லையாயின், இல்வாழ்க்கை பண்பும் பயனும் அற்றதாகும் என்றபடி.

இல்வாழ்க்கை பண்பும் பயனும் உடையதாயிருத்தல் வேண்டும் என்பதும், அதற்கு அன்பும் அறனுந் தேவை என்பதும் திருவள்ளுவர் கருத்து.

### கால் - நாடி

அன்பும் அறனும் இல்வாழ்க்கையின் இரண்டுகால். இவ்விரண்டையுங் கொண்டே இல்வாழ்க்கை இயங்கல் வேண்டும். இம்முறையில் இயங்கும் இல்வாழ்க்கையில் பண்பும் பயனும் இரண்டு நாடியாக ஓடி வளஞ் செய்யும். இல்

வாழ்க்கை காலற்றதாயின் அதன் நிலை என்னும்? நாடி எழுச்சிக்கே இடமிராது.

## வகைத் திறம்

அன்பு அறனில் ஒன்றுவது. அறக்கூறுகளுள் சிறந்த ஒன்று அன்பு. பண்பு பயனில் ஒன்றுவது. பயன் என்னும் பேற்றின் கூறுகளுள் சிறந்த ஒன்று பண்பு. அறனில்லாத இடத்தில் அன்பு நிகழாது. பயனில்லாத இடத்தில் பண்பு நிலவாது. இதைக் கொண்டு, அன்பை விடுத்து அறன் என்றும், பண்பை விடுத்துப் பயன் என்றும், சுருங்கிய வகையில் ஆசிரியர் அருளியிருக்கலாமே என்று கருதற்கு இடமுண்டாகலாம். ஆழ்ந்த சிந்தனையில் அமர அமர, "அன்பும் அறனும்" என்றும், "பண்பும் பயனும்" என்றும் வகைப்படுத்தி ஆசிரியர் அருளிய திறம் நன்கு விளங்கும்.

## மரம் - வேர்

மரம் பொது. அதன் உறுப்புக்கள் பல. உறுப்புக்களுள் சிறந்தது வேர். வேரின் வாயிலாகவே பெரிதும் மரத்துக்குச் சத்துச்செல்கிறது. மரத்தின் ஆக்கம் பெரிதும் வேரையே பொறுத்து நிற்கிறது. வேர் மரத்துக்கு வேறுபட்டதா? அதுவும் மரத்தின் ஒரு கூறே.

அறமும் பயனும் மரம் போன்றன. அன்பும் பண்பும் வேர் போன்றன. ஆகவே, அறமும் பயனும் முறை முறையே அன்பு வழியாகவும் பண்பு வழியாகவும் ஆக்கம் பெறுதல்வேண்டுமென்க.

## ஒரு நுட்பம்

அன்பின் வழியே அறன் ஆக்கமுறலும், பண்பின் வழியே பயன் ஆக்கமுறலும் இயற்கை. இதை உணர்தற்கு வெறும் ஏட்டுக் கல்விமட்டும் போதாது. இயற்கை வாழ்வில்

புகுதல் வேண்டும்; வாழ்வுடைய செயலில் நுழைதல்வேண்டும்; செயல்வழி மனத்திற் கலந்து ஒன்றுதல் வேண்டும். ஒன்றிய மனம் உண்மையை உணர்த்தும். இயற்கை வாழ்க்கையாகிய இல்வாழ்க்கையின் அநுபவக் கூறுகளுள் சிறந்த ஒரு நுட்பம் இக்குறட்பாவாகப் பரிணமித்துள்ளது. இஃது உன்னற்பாற்று.

## அறம் - பயன்

அறத்துக்குப் போதுமை என்று பொருள் சொல்லப்பட்டதையும், பயனுக்கு அடைவு அல்லது பேறு என்று பொருள் சொல்லப்பட்டதையும் உளங்கொண்டு இக்குறளின் விருத்தியுரையை நோக்குவது நல்லது.

## அறனும் அன்பும்

"அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை." இல்வாழ்க்கையே இயற்கை வாழ்க்கை; சேர்க்கை வாழ்க்கை. இது முன்னர் விளக்கப்பட்டது. இல்வாழ்க்கையில் அன்பு நிகழ்வது முதல் இயல்பு.

## அன்பு

அன்பு தொடக்கத்தில் சில உயிர்களிடத்தில் செல்வதாயிருக்கும். பின்னே அஃது எவ்வுயிரிடத்துஞ் செல்வதாகும். எவ்வுயிரிடத்தும் அன்பு செலுத்தும் மனமுடையார் எவ்வகைத் தியாகத்துக்கும் உரியவராவர். சமயம் நேர்ந்துழி அவர் தமது என்பையும் பிறர்க்கீய முந்துவர். அவர் தமக்குக் கிடைப்பதைப் பிறர்க்குப் பகிர்ந்து கொடுத்து வாழவே விரைவர். கிடைப்பதைப் பகிர்ந்து பிறர்க்குக் கொடுக்கத் தூண்டுவது எது? அன்பு. அன்பு இல்லையேல் அத்தூண்டுதல் நிகழாது; உள்ளதைப் பிறர்க்குப் பகிர்ந்து கொடுக்குந் தன்மை வாழ்விடை வளராது.

## அன்பும் அறனும்

அன்புடைய ஒருவர் எதையும் தம்முடையதாகக் கரு தார்; பொதுவாகவே கருதுவர். பொதுமை உணர்வை எழுப்பும் இயல்பு அன்புக்கு உண்டு. அப்பொதுமையே அறம் என்பது. அறம் எதன்வழிப் பிறக்கிறது? அன்பின் வழி. இஃது இல்வாழ்க்கையில் தலைப்பட்டு அநுபவம் பெற்றவர்க்கு நன்கு விளங்கும். இவ்வநுபவங் கொண்டே, "அன்பும் அறனும்" என்று ஆசிரியர் இரண்டையும் பிரித் துக் கூறலானார்.

## அறம்

அறம் எது? ஒருவன் எதையும் தனக்குரியதாக் கொள் ளாது அன்பால் அதைப் பொதுமையாக்கொண்டு பகிர்ந்து கொடுக்கும் இயல் அறம் என்பது. இக்காரணங்கொண்டு அறத்துக்குப் பொதுமை என்றும் பொருள் கூறப்பட்டது. அறம் என்பதும், பொதுமை என்பதும், பொது அறம் (சமதர்மம்) என்பதும் ஒன்றே.

## அறம் - அன்பு - இல்வாழ்க்கை

அறத்துக்கு அன்பு வேண்டும். அன்புவழி அறம் ஆக் கம்பெறல் வேண்டும். அன்பையும் அறத்தையும் உடைத்தா யிருத்தலே இல்வாழ்க்கைக்கு அழகு. அன்பும் அறனும் அற்றது இல்வாழ்க்கையாகாது; கனன்ற கல்வாழ்க்கை யாகும்.

'இல்வாழ்க்கை அன்பும்அறனும் உடைத்தாயின்' என்ற தனால், இல்வாழ்க்கை அவை இரண்டையும் உடைத்தாயிருத் தல்வேண்டும் என்னும் அவசியத்தை உணர்த்தியவாறும்.

## அன்பால் அறம்

அறம் என்னும் பொதுமையுணர்வு, அன்புவழி ஆக்க முறுவது. அவ்வுணர்வு அன்புவழி ஆக்கமுறுவதே நல்லது. பிறவழியில் அஃது ஆக்கம் பெறுதல் அரிது; ஒருவேளை பிறவழியில் அஃது ஆக்கம்பெறினும் அதன் போக்குக் கொலை களவாக முடியும். திருவள்ளுவர் கொலை களவு முதலிய கொடுமைகளற்ற தூய அறத்தை அறிவுறுத்தவே "அன்பும் அறனும்" என்றார்.

## அறத்தில் அன்பு

அன்பு அறன் என்பன சொல்லால் வேறுபட்டிருப்பி னும் நிகழ்ச்சியில் அவை ஒன்றுபட்டனவேயாம். அறத்தில் ஒன்றுவது அன்பு. அறமாவது, அன்பு - பொதுமை - பகிர்ந்தளித்தல் முதலியன சேர்ந்த ஒன்று. அன்பின் சிறப்பைக் குறிக்க ஆசிரியர் அதைத் தனிப்படுத்திக் கூறி னர். வேரும் மரமும் போன்றன அன்பும் அறமும்.

## பண்பும் பயனும்

அன்பும் அறனும் உடைத்தாய இல்வாழ்க்கையே பண் பும் பயனும் உடையதாகும். அன்பும் அறனும் அற்ற இல் வாழ்க்கை, பண்பும் பயனும் உடையதாகாது. இல்வாழ்க்கை யின் பண்புக்கும் பயனுக்கும் அன்பும் அறனும் இன்றியமை யாதன.

இல்வாழ்க்கை அன்பும் அறனும் உடைத்தாயிருத்தல் வேண்டும். அவ்வுடைமையினின்றும் மலர்வன பண்பும் பய னும். அன்புக்கும் அறத்துக்குந் தொடர்பு இருப்பது போலப் பண்புக்கும் பயனுக்குந் தொடர்பு உண்டு. அன்பும் அறனும் பிரிந்தும் ஒன்றியும் நிற்பதுபோலப் பண்பும் பய னும் பிரிந்தும் ஒன்றியும் நிற்பன.

பண்பு

பண்பு, அன்பினின்றும் பிறந்து, அறத்தால் வளர்ந்து, பயனில் ஒன்றுவது. அன்பார்ந்த அறப்பண்பே ஈண்டும் பண்பெனப்பட்டது.

பயன்

ஈண்டுப் பயன் என்றது விடுதலையை. கட்டற்ற நிலை விடுதலை; மனமாசற்ற நிலை அறம். முழு அறநிலையில் நேர்வது விடுதலை. "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை." இவைகளை யெல்லாம் உளங்கொண்டு ஆசிரியர் கூறிய "பயனை" உன்னுதல் வேண்டும். உன்னின் பயன் அறத்தின் கனி என்பது விளங்கும். பயன் எது? அன்பார்ந்த அறப்பண்பின் முழுத்தெளிவு என்க.

அது

"அது" என்பது, அன்பும் அறமும் உடைமையை உணர்த்துவது. அவ்வுடைமை வாழ்க்கையில் பண்பும் பயனுமாகும். அன்பும் அறமும் இல்லா வாழ்க்கையில் பண்பும் பயனும் விளைதலில்லை என்றபடி.

"அது" என்பது ஒருமை. அஃது அன்புக்கும் அறத்துக்கும் உள்ள ஒருமைப்பாட்டையும், பண்புக்கும் பயனுக்கும் உள்ள ஒருமைப்பாட்டையும், அன்பார்ந்த அறத்துக்கும், பண்பார்ந்த பயனுக்கும் உள்ள ஒருமைப்பாட்டையும், அறத்துக்கும் பயனுக்கும் உள்ள ஒருமைப்பாட்டையும் உளங்கொண்டது.

"அறம்" என்பதற்குப் 'பொதுமை யுணர்வால் பகிர்தல்' என்று பொருள் கொள்ளப்பட்டது. இதனை ஆசிரியர், "அறம்" என்றது கருதற்பாலது. பொதுவுணர்வும் பகிர்தலும் அறவழியில் நிகழ்தல் வேண்டும் என்பதும்,

பிறவழியில் நிகழ்தல் கூடாது என்பதும் அறியத்தக்கன. அறத்தில் அன்பு ஒன்றுதலால் அன்பையுஞ் சேர்த்துக் கொள்க. அறத்துடன் ஒன்றியுள்ள அன்பை வேறுபடுத்தி, அதன் இன்றியமையாமையையும் உலகம் உணரவேண்டி, "அன்பும் அறனும்" என்றருளினர். அன்பார்ந்த அற முடைய பொதுமை யுணர்வே நன்மை பயக்கும் தன்மையது. அவ்வுணர்வினின்றும் முகிழ்க்கும் பண்பார்ந்த பயனே வாழ்க்கையின் பேறாகும்.

இல்வாழ்க்கை அன்பார்ந்த அறம் உடையதாயின், அதனால் பண்பார்ந்த பயன் விளையுமென்பது திரண்ட பொருள். அறமுடைய இல்வாழ்க்கை பயனுடையது என்பது நுட்பம். (ச)

(iii) இல்வாழ்வான் கடமை

## 45

**ப**ழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல்.

பொருள்

வாழ்க்கை - இல்வாழ்க்கை, பழிஅஞ்சி - பழிக்குப் பயந்து, பாத்து ஊண் - பகிர்ந்து உண்ணுதலை, உடைத் தாயின் - உடையதாயின், வழி எஞ்சல் - அதன் வழி குறை படுதல், எஞ்ஞான்றும் - எப்பொழுதும், இல் - இல்லை.

கருத்து

பழிக்கு அஞ்சிப் பகுத்துண்ணும் இல்வாழ்க்கையின் வழி எப்பொழுதும் குறைபடாது.

விருத்தி

மேற்பாட்டிற் போந்துள்ள அறம், அன்பால் எழும் பொதுமையைக் குறித்து நிற்பது. அப்பொதுமை இப் பாட்டில் தொகை முறையில் விளக்கப்பட்டுள்ளது.

## வாழ்க்கை பழி அஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின்

வாழ்க்கை - இல்வாழ்க்கை.

பழி - அறமல்லாதது, அறத்துக்கு மாறுபட்டது, அன்பார்ந்த அறமற்ற இடத்தில் நிகழ்வது ; பாவம்.

பழி அஞ்சி - பழிக்குப்பயந்து; அறவழியில் நின்று.

பாத்து - பகிர்ந்து, பகுத்து, பங்கிட்டு ; "படுதிரை வையம் பாத்திய பண்பே"—தொல்காப்பியம்: பொருள்: உ.

ஊண் - உண்ணல் ; முதனிலைத் தொழிற்பெயர்.

"பழி அஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின்": இதற்கு மணக்குடவர் கண்ட உரை, 'பழியையும் அஞ்சிப் பாத்தூண்ணலையும் உடைத்தாயின்' என்பது.

### ப ழி அ ஞ் சி ப் பா த் தூ ண்

மேற்பாட்டில் அறம் என்பதற்குப் 'பொதுமை யுணர் வால் பகிர்ந்தளித்தல்' என்றும் பொருள் சொல்லப்பட்டது. அதை, "பழியஞ்சிப் பாத்தூண்" என்று இப்பாட்டில் ஆசிரியர் விளக்கஞ் செய்கிறுர்.

"பழியஞ்சிப் பாத்தூண்" என்பது, அன்பார்ந்த அற நெறியில் நின்று பெறுவதைப் பிறர்க்குப் பகிர்ந்து அளித்து உண்ணுதல் என்னும் பொருளைக்கொண்டது.

பழிக்கஞ்சி வாழ்தலே அறிவுடைமை.பழி பலவகையில் பிறக்கும். பழி பிறவாதவாறு வாழ்க்கை நடத்துவது சிறப்பு. அவ்வாழ்க்கை முறையை, "பழிஅஞ்சிப் பாத்தூண்" என்று ஆசிரியர் குறிப்பிடுகிறுர்.

## பழிக்கஞ்சல்

*புறத்தே பழிக்கு அஞ்சுவதுபோல் நடித்தல்கூடாது. அங்ஙனம் நடிப்போர் மறைமுகத்தில் பழியை அஞ்சாது செய்வர். அவர்தம் மனத்திலுள்ள மாசு அகலாது கிடக்கும்.*

*பழிக்கு மனம் நடுக்குறல்வேண்டும். அம்மனமே அற வளர்ச்சிக்குரியதாகும். அதுவே மாசினை அகற்ற வல்ல தாகும். பழிக்கு அஞ்சல் எற்றுக்கு? மனமாசறுதற்கு என்க.*

*பழி அஞ்சும் மனம் உள்ளதையும் பிறர்க்கீந்து மகிழ்ச்சி யுறவே எழும். பழி அஞ்சா மனம் உள்ளதையும் பிறர்க்கு ஈயாது ; பிறர் பொருளையும் தான் கவர விரையும். அதனால் பாத்துண்ணலுக்கு முன்னர்ப் "பழியஞ்சி" என்றார்.*

## பாத்துண்ணல்

*ஆசிரியர் உள்ளம் "பாத்தூண்" மீது சென்றதென்னை? அறமும் பழியும் உலகிடைப் பெரிதும் உணவையொட்டியே நேர்தலால், ஆசிரியர் உள்ளம் உணவுமீது சென்றிருக்கலாம்.*

*பாத்துண்ணலால் அறம் வளரும்; பாத்துண்ணாமை யால் பழி பெருகும். பாத்துண்ணாமையால் பிறக்கும் பழியே மற்றப் பழிகட்கு அடிப்படை என்று ஆசிரியர் கருதி, அப்பழி செய்யாமையை உலகுக்குணர்த்தப் பழியஞ் சலையும் பாத்துண்ணலையும் புணைத்து ஓதியிருப்பர். சமதர்ம நூல்களை ஆராய ஆராயப் பழியஞ்சலுக்கும் பாத்துண்ண லுக்கும் தொடர்பிருத்தல் நனிவிளங்கும். உலகம் பலதிறப் பழிபாவங்கட்கு இரையாதற்கு மூல காரணமா யிருப்பது பகுத்துண்ணாமை.*

## பசியின் கொடுமை

*"மானம் குலம்கல்வி வண்மை அறிவுடைமை*
*தானம் தவமுயற்சி தாளாண்மை - தேனின்*

கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்''

என்பது ஆன்றோர் மொழி. பசிக்கு முன்னே எதுவும் நில்லாது; எல்லாம் பறந்து போகும். பசித்துன்பம் பெரிது! பெரிது! மிகப்பெரிது! அத்துன்பம் என்னென்னவோ செய்யும். அஃது அரசுகளை அழிக்கும்; நாடுகளைத் தொலைக்கும்; சாம்ராஜ்யங்களைச் சாய்க்கும்; உலகையே உருட்டும். பெரும் பெரும் புரட்சிகளை உண்டுபண்ணுவது எது? பசியே. பசியைப் போக்குவது அறம் (பொதுமை); அதை வளர்ப்பது பழி. பசியை எப்படிப் போக்குவது? "பழியஞ்சிப் பாத்தூண்" வழிப் பசியைப் போக்குதல் கூடும்.

## அமைதிக்கு வழி

உலகில் உயிர்களெல்லாம் வயிறுர உண்டு மகிழ்ச்சியுறும் நிலை நேர்ந்தால் எங்கணும் அமைதி நிலைபெறும். உயிர்களின் எண்ணங்கள் பழி பாவங்களிற் செல்லா. அவை அறத்தை நாடிச்செல்லும். இதற்கு வேண்டற்பாலது, "பழியஞ்சிப் பாத்துண்ணல்".

உயிர்கள் பட்டினியால் வருந்தி மெலிந்து நலிந்து கிடப்பதைக் கண்டுங் கேட்டும் வாளா இருத்தல் பழி; அதைக் களையப் புகுவது அறம். பழிக்கு அஞ்சும் இடத்தில் பழி மறைந்து அறந்தோன்றும். பழியஞ்சும் பயிற்சி அறப் பயிற்சிக்குக் கால்கொள்வதாகும். இதுபற்றியே, "பழி அஞ்சி" என்பதற்கு 'அறவழியில் நின்று' என்றும் பொருள் விளக்கப்பட்டது.

பழியஞ்சலுக்கு அறிகுறி என்ன? "பாத்தூண்." "பாத்தூண்" முறை வளர வளரப் பழி தொலைந்து போகும்; அறக்கடவுள் யாண்டுந் தாண்டவம் புரியும். அதனால் அமைதி நிலவும்.

## குடும்பம் - நாடு - உலகம்

*பாத்தூண்ணும் முறை சில குடும்பங்களில் மட்டும் நிகழும் அளவில் நிற்றலாகாது. அஃது உலக முழுவதும் நிலவல்வேண்டும். ஒரு நாடு, ஒரு பெரிய குடும்பம். எல்லா வற்றினும் பெரிய குடும்பம் உலகம். உலகமாகிய குடும் பத்தில் பாத்தூண்ணும் முறை செயலில்வரின் உலகம் தெய்வ லோகமாகும். தனித் தனிக் குடும்பஞ் சேர்ந்தே உலகக் குடும்பமாதலால் எத்தத்துவமும் தனித்தனிக் குடும்பத்தில் கால்கொள்வது சிறப்பு.*

## பாத்தூண் இடத்தில்

"பாத்தூண்" *என்பது ஒருதனித் தத்துவம்.* காலத் துக்கேற்ற வகையில் *அதை வாழ்வில் புகுத்திக் கொள்ளல் வேண்டும்.*

*பாத்தூண்ணுந் தத்துவம் நிலவாத இடத்தில் பொருள் நிலை ஒருபால் பெருகலும், மற்றொருபால் அருகலும் நேரும். அதனால் போராட்டம் மிகும். "பாத்தூண்" போராட்டத்தை ஒழிக்கும்; அமைதி காக்கும்.*

## ஊண்

*"பாத்தல்" - பகிர்ந்தளித்தல்; கொடையின் சிறப்பை உணர்த்துவது. அவ்வளவில் நில்லாது "ஊண்" என்னும் உண்ணலையும் ஆசிரியர் அருளினர். ஒருவர் பிறர்க்கு மட்டும் ஈந்து தாம் உண்ணுதொழியின், தற்கொலை நிகழுமாதலானும், பிறர்க்களித்தல் என்னும் அறத்துக்குங் கேடு நிகழுமாதலா னும், எதற்கும் தமது* வாழ்க்கை *வேண்டுமாதலானும் "ஊண்" இப்பாட்டில் குறிக்கப்பட்டதென்க.*

## ஊண் விளக்கம்

*ஊண் என்பது உணவளவில் நிற்பதன்று; உடை, வீடு, நிலம், புலம் முதலியவற்றையுந் தன்னகத்தே கொண்டது;*

பொதுவாகப் பொருள் நிலையைக் குறிப்பது; வாழ்வும் பொருள்களை யெல்லாம் உணர்த்துவது.

**வாழ்க்கை**

வாழ்க்கை என்றுமிருப்பது; வளருந் தகையது. அது நன்முறையில் வளரவேண்டுமேல் அதனிடை, "பழியஞ்சிப் பாத்தூண்ணல்" நிலவுதல் வேண்டும். அது, சமயம் நேர்ந்துழி நேர்ந்துழிச் சமூகங்களிலும் நாடுகளிலும் புகுந்து மன்பதைக்கு நலஞ்செய்யும். "பழியஞ்சிப் பாத்தூண்" பயிற்சி, என்றும் வாழ்க்கையுடன் நிலவிக்கொண்டிருத்தல் வேண்டுமாதலால், "வாழ்க்கை பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின்" என்றார்.

**வழி எஞ்சல் எஞ்ஞான்றுமில்**

வழி - கால்வழி; நெறி; 'தனது ஒழுங்கு' என்பர் மணக்குடவர்.

பழியஞ்சிப் பாத்தூணும் வாழ்க்கைக்கும் அவ்வாறுண்ணு வாழ்க்கைக்கும் வேற்றுமை என்ன? அதன்வழி எஞ்சாது எஞ்ஞான்றும் இடையீடின்றி வளர்ந்தேபோகும். இதன்வழி இடைப்பட்டு இடர்ப்படும். இக்கருத்து, இக்குறளில் விளங்குதல் காண்க.

"வாழ்க்கை பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வழி எஞ்சல் எஞ்ஞான்றும் இல்." இதனால், "வாழ்க்கையில் பழியஞ்சிப் பாத்தூண்" இல்லையாயின், அதன் "வழி எஞ்சுதல் எஞ்ஞான்றும் உண்டு" என்பது விளங்குகிறதன்றோ?

**உலக வளர்ச்சி**

உயிர்கள் வழிவழியே தோன்றிக் கொண்டிருத்தல் வேண்டும். அதற்கென்று உயிர்களிடைக் காதல் இயல்பா

யமைந்துள்ளது. காதல், சேர்க்கை வாழ்க்கை என்னும் இல் வாழ்க்கையிலே நிறைவேறுவது. இல்வாழ்க்கை நன்கு நடைபெறுதற்குப் பழிஅஞ்சிப் பாத்தூண்ணும் முறை இன்றியமையாதது. இல்லையேல் பொருள் நிலையில் வேற்று மையும் போராட்டமும் உண்டாகும். அதனால் ஒருபால் வறுமை மேலிடும். வறுமை, இன்ப வாழ்க்கைக்கு இடர் செய்யும்; தனிப்பட்ட வாழ்க்கை, கொலை, கொள்ளை முத லியவற்றைப் பெருக்கும்; கருத்தடை, கருவழித்தல் முத லிய செயற்கை முறைகளையும் வளர்க்கும். இன்னோரன்ன ஏதுக்களால் இல்வாழ்க்கை வழிக்கு எஞ்சுதல் உண்டாகும். இல்வாழ்க்கை பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின், அதன் வழி எஞ்சுவதில்லை; எஞ்ஞான்றும் எஞ்சுவதில்லை.

உலக வளர்ச்சிக்கு இல்வாழ்க்கைவழி எஞ்சுதல் கூடாது. வறுமை முதலியன உறின், அவ்வழி எஞ்சுவதாகும். வறுமை முதலியன வாராதவாறு காக்கவல்லது பழியஞ்சிப் பாத்தூண் ணும் முறை. இந்நுட்பத்தை இக்குறட்பா அறிவுறுத்து கிறது. (ரு)

## 46

இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை.

### பொருள்

இல்வாழ்வான் என்பான் - இல்வாழ்வான் என்பவன், இயல்புடைய மூவர்க்கும் - குணம் நிறைந்த மூவர்க்கும், நல் ஆற்றின் - நல்ல வழியிலே, நின்றதுணை - நிலைத்ததுணை.

### கருத்து

இல்வாழ்வோன் என்பவன் மூவர்க்கும் நல்லவழியில் நிலை யாகத் துணை நிற்பவன்.

விருத்தி

முற்பாட்டில் பகுத்துண்ணல் பொதுமுறையில் சொல்லப்பட்டது. அவ்வளவில் இல்வாழ்வானது கடமை முடிந்துவிடவில்லை. அவனுக்கு வேறு சில கடமைகளும் சிறப்பு முறையில் உண்டு. அவைகளில் இன்றியமையாத சில இப்பாட்டிலும், தொடர்ந்துவரும் இரண்டு பாட்டிலும் விளக்கமாகச் சொல்லப்படுகின்றன.

## இல்வாழ்வான் என்பான்

இல்வாழ்வான் - இல்வாழ்க்கை நடாத்துவோன், அறநெறி பற்றி ஒழுகுவோன், அறநிலை எய்த நல்வழியில் முயன்று வருவோன்.

என்பான் - என்பவன் ; என்று உறுதியாய்ச் சொல்லப்படுவோன் ; போலியல்லாதவன்.

இல்வாழ்க்கை இயலும் முறையும் பிறவும் மேலே சொல்லப்பட்டன. அவைகளின்படி வாழ்பவன் "இல்வாழ்வான்" என்பவன். "என்பவன்" என்பது மேலே சொல்லப்பெற்றனவற்றையுடையவனை உணர்த்துவது.

## இயல்புடைய மூவர்க்கும்

இயல்பு உடைய - குணம் நிறைந்த, பண்புவாய்ந்த.

மூவர்க்கும் - ஊர்மன்றத் தலைவராகிய மூவர்க்கும்.

## மூ வ ர் க் கு ம்

இங்கே ஒரு சிக்கு உளது. அது "மூவர்க்கும்" என்னுஞ் சொல்லைப் பற்றியது. "மூவர்க்கும்" என்பதுபற்றிப் பலவிதக் கருத்துக்கள் வெளிவந்துள்ளன. உண்மை காண அறிஞர் முயலல்வேண்டும். பாடபேதமிருக்குமோ என்றும் யான் ஐயுறுவதுண்டு.

## உரையாசிரியர் மயக்கம்

பழைய உரைகளுள் இப்பொழுது அச்சு ஏறியுள்ளவை இரண்டு. ஒன்று மணக்குடவருடையது; மற்றொன்று பரிமேலழகருடையது. "மூவர்க்கும்" என்னுஞ் சொற்குப் பொருள் காண்பதில் இரண்டு உரையாசிரியர்க்குஞ் சிறிது மயக்கம் தோன்றி யிருக்கும் என்பது அவரவர் உரைக் குறிப்புக்களால் தெரிகிறது.

"மூவர்க்கும்" என்பதற்குப் பிரமசாரிக்கும், வானப் பிரஸ்தனுக்கும், சந்நியாசிக்கும் என்று மணக்குடவர் பொருள் கண்டனர். இவர்வழி நின்றே பரிமேலழகரும் பொருள் விரித்துள்ளனர். இவ்விருவரும் இல்வாழ்வானை வெறுங் கிருகஸ்தனுக் கொண்டு, அவனை ஏனையவர்க்குத் துணைசெய்வோன் என்று விளம்பலாயினர்.

## வேறு பொருள்

"மூவர்க்கும்" என்பதற்குத் தாய் தந்தை மனைவி ஆகிய மூவர்க்கும் என்றும், பெற்றோர் மனைவி மக்கள் என்னும் மூவர்க்கும் என்றும் பொருள் கூறுவோருமுளர். இன்னும் வெவ்வேறு வழியில் பொருள் சொல்வோரும் இருப்பர்.

## வரும் பாட்டு

எவர் எப்பொருள் கூறினுங் கூறுக. அது தொடர்ந்து வரும் இரண்டு பாக்களின் கருத்துடன் முரண்படலாகாது. பழைய உரையாசிரியர் கூறும் பொருளில் 'சந்நியாசி' ஒருவர் விளங்குகிறார். தொடர்ந்துவரும் பாட்டின் தொடக்கத்திலேயே "துறந்தார்" வீற்றிருக்கிறார். அச்சந்நியாசி யார்? இத்துறந்தார் யார்? இங்கே வடமொழி தென்மொழி வேற்றுமையன்றி வேறு வேற்றுமை உண்டோ?

மூவருள் சந்நியாசி ஒருவரைச் சேர்த்துப் பொருள் கண்ட பழைய உரையாசிரியன்மார், தொடர்ந்துவரும் பாட்டிலுள்ள "துறந்தாரை"க் கண்டு, மயக்குற்று, "துறந்தாரை" மூவருள் ஒருவராகவுள்ள சந்நியாசியினின்றும் வேறுபடுத்த முயன்றுள்ளனர். அம்முயற்சி மயக்கத்தினின்றும் எழுந்த தென்று கோடற்கு இடனுண்டு.

மணக்குடவர், வரும் பாட்டிலுள்ள "துறந்தார்க்கும்" என்பதற்கு, 'வருணத்தினையும், நாமத்தினையும் துறந்தார்க்கும்' என்று பொருள்கூறி, 'மேற்கூறிய மூவரும் வருண நாமங்களைத் துறவாமையான், ஈண்டுத் "துறந்தார்" என்று கூறினார்' என்று குறிப்புரை வரைந்ததும், பரிமேலழகர், '(ஆசிரியர்) பிறர்மதமேற்கொண்டு கூறினார்' என்று இப் பாட்டுக்குக் குறிப்புப் பொறித்து, வரும் பாட்டிலுள்ள 'துறந்தார்க்கும்' என்பதற்குக் 'களைகணானவரால் துறக்கப் பட்டார்க்கும்' என்று பொருள்கூறியதும் ஈண்டு உன்னற் பாலன. இப்பாட்டிற் போந்துள்ள மூவரையும் பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி என்று இரண்டு உரையாசிரிய ருங் கொண்டமையால், அவர், அடுத்த பாட்டிற் போந்துள்ள "துறந்தா"ரைச் சந்நியாசியினின்றும் பிரித்துரைக்கலாயினர். இதனால் அவர்க்கு ஏதோ ஒருவித மயக்கை இப்பாட்டிலுள்ள "மூவர்" தோற்றுவித்தனர் என்பது, அவர்தம் உரையாலும் குறிப்பாலும் புலனாகிறது.

## வேறு பொருள்களும் ?

"மூவரை"த் 'தாய் தந்தை மனைவி' என்றும், 'பெற் றோர் மனைவி மக்கள்' என்றும் கொள்வதும் பொருத்தமாகத் தோன்றவில்லை. என்னை? மேலே "தென்புலத்தார்......" என வரூஉங் குறட்பாவில் "ஒக்கல்" இருத்தலான் என்க. "ஒக்க"

ளுள் பெற்றோர் முதலியோர் அடங்குதலை ஓர்க. "ஒக்க" லுக்கு வேறு பொருள் காணமுயல்வது வீண்.

**ஒன்று**

ஆசிரியர் உள்ளத்தைக் காண்டல் அருமையாகவே தோன்றுகிறது. எவரை உளங்கொண்டு ஆசிரியர், "மூவர்க்கும்" என்று அருளினரோ தெரியவில்லை. இதுபற்றி யான் பலமுறை நினைந்ததுண்டு. என் உள்ளத்தில் எத்துணையோ பொருள்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. திருவள்ளுவர் கூறிய "மூவர்" என்னை எங்கெங்கோ ஈர்த்து ஈர்த்து அலைத்தனர். அவர் வழங்கிய காட்சிகளோ பலப்பல. அக்காட்சிகளுள் ஒன்று என்னை ஆழ்ந்த சிந்தனையில் அமர்த்தியது. அதை ஈண்டுக் குறிக்கலாம் என்று எண்ணுகிறேன்.

'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை'. இது திருவள்ளுவர் கொள்கை. அவர் நான்கு ஆச்சிரமங்களையும் உளங்கொண்டு, 'இல்வாழ்க்கை' என்னும் அதிகாரத்தை அருளப் புகுந்தாரில்லை. நான்கு ஆச்சிரமமும் திருவள்ளுவர் இல்வாழ்க்கையில் அடங்கிவிடும்.

யான் மனிதநிலை கடந்தவனல்லன்; குறையுடையவன். எனது சிற்றறிவு கொண்டு, "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை" என்னும் ஆசிரியர் மொழியையொட்டி, ஆசிரியர் உளங்காண முயன்று, "இல்வாழ்க்கை"க்கு யான் கண்ட பொருள் விளக்கங்கள் மேற்பாக்களில் உள்ளன. எனது ஆராய்ச்சியில் திருவள்ளுவர் நான்கு ஆச்சிரமங்களை உளங்கொண்டு இத்திருக்குறளை அருளவில்லை என்பது விளங்குகிறது.

**மூவர்**

பழம் பெருந்தமிழ் நாட்டைப் புரந்தவர் மூவேந்தர். அவர்தம் ஆட்சி வீழ்ந்துபட்டு நீண்ட காலமாயிற்று. ஆனு

லும் இந்நாளிலும் தமிழ்மக்கள் தங்கள் மூவேந்தரை மறப்ப தில்லை. தமிழ்க் கழகங்கள் சிலவற்றிலும் வேறிடங்களிலும் இற்றைஞான்றும் தமிழ் மூவேந்தரின் கொடிகள் நாட்டப் படுதல் காண்கிறோம்.

தமிழ் வேந்தரின் நினைவு தமிழ் மக்கள் நெஞ்சில் என் றும் படிந்தே கிடக்கிறது. அந்நினைவு ஊர் மன்றங்களில் *மூவரைத் தலைவராக அமர்த்திப் பார்க்கவுஞ் செய்த கால முண்டு. திருவள்ளுவர் காலத்தில் மூவேந்தரிருந்தனர். அந்நாளில் ஊர் மன்றங்களில் மூவேந்தரென மூன்றறவோர் வீற்றிருந்து கடனாற்றியிருப்பர். அவரைத் திருவள்ளுவர் மூவேந்தர் நினைவுடன் "மூவர்க்கும்" என்று குறித்திருக் கலாமென்று எண்ணுகிறேன்.

## தற்காலம்

சாம்ராஜ்ய ஆட்சிகள் பெருகப்பெருக ஊர் மன்றங்கள் மறையலாயின. சாம்ராஜ்ய ஆட்சிகள் அருகினால் மீண்டும் ஊர் மன்றங்கள் உயிர்த்தெழும். தற்கால உலகில் சாம்ராஜ்ய ஆட்சி அற்ற நாடு ஒன்றே. அங்கே ஊர் மன்றங்களில் மூவர் தலைமை பூண்டு அறப்பணி செய்தல் ஈண்டுக் குறிக்கத்தக்கது.

ஒருவர் தலைமை தாங்கும் மன்றங்களில் நடுநிலை பிறழி னும் பிறழும். அவைகளில் மூவர் வீற்றிருப்பின் நடுநிலைக் குக் கேடு நேர்தல் அரிது. இது நிற்க.

---

* "......Curtius describes them as 'a powerful Indian people, whose form of Government was democratic and not regal, who had no Kings, but were led by three Generals' ......"—*Annie Besant* ('Lectures on political science'; பக்கம் : 59). இதன்கண் 'மூவர்' தொனி வேறு முறையில் இருத்தல் காண்க.

**இயல்புடைய**

ஊர் மன்றங்களை நடாத்தும் தலைவர் எத்தகையினரா யிருத்தல் வேண்டும்? அவர் இயல்புடையவரா யிருத்தல் வேண்டுமென்று சொல்லத் தேவையில்லை. அவர்மாட்டு இயல் பில்லையேல் மன்றமும் கெடும்; ஊரும் பாழாகும். அதுபற் றியே, “இயல்புடைய மூவர்க்கும்” என்றார்.

**நல்லாற்றினின்ற துணை**

நல்லாற்றின் - நல்ல வழியிலே, செல்லும் நல்ல வழி யிலே, நல்ல வழிக்கு என்றபடி.

நின்ற - நிலைத்த, நிலைபேறான, அசையாத, நடுக்கில் லாத.

துணை - உதவி, உதவி புரிவோன்; “துணை” என் றது ‘இடையூறு வாராமல் உய்த்து விடுவோரை’ என்பர் மணக்குடவர்.

**நல்லாற்றின்**

“நல்லாற்றின்” என்பதற்கு, ‘மூவர் செல்லும் நல்ல வழியிலே’ என்று பொருள் விளக்கஞ் செய்வோரும் உளர். இவர், மூவர் நல்லாற்றிலே நடவாதொழியின் அவர்க்கு இல் வாழ்வோன் துணை செய்யலாகாது என்னுங் கருத்துடைய வர். இவ்வாறு பொருள் கொள்வதில் தவறுதல் இல்லை. ஆனால் இங்கே “நல்லாற்றின்” என்பது, மூவரைமட்டுங் குறிக்கொண்டு நிற்கவில்லை என்று தெரிகிறது. மூவர் நல் லாற்றில் நிற்பவராயிருத்தல் வேண்டுமென்னும் உண்மை, “இயல்புடைய” என்பதில் வெளிப்படையாக விளங்குதல் காண்க. ஆதலின் “நல்லாற்றின்” என்பது மூவரை மட்டும் உளங்கொண்டு நிற்கவில்லை என்றும், அஃது இல்வாழ்வானை

யும் உளங்கொண்டு நிற்கிறது என்றுங் கொள்வது பொருத்த மென்று தோன்றுகிறது.

## மூவர் ஒழுக்கம்

ஊர் மன்றத் தலைவராகிய மூவரும் நன்னெறியில் நடப்பவரா யிருத்தல் வேண்டும். இல்லையேல் அவர் வாயிலாக நீதி பிறத்தல் அரிதாகும். பண்டை ஊர் மன்றங்களை நடாத்திய பெருமக்கள் ஒழுக்கமுடையவர்களாகவே இருந்தார்கள் என்பதற்குச் சான்றுகள் பல உள்ளன. *" நல்லொழுக்கந் தலைநின்றார் நான்மறையின் துறைபோனார் - தில்லைவாழ் அந்தணர்கள் வந்திருந்த திருந்தவையில் " என வரூஉஞ் சேக்கிழார் திருவாக்கை நோக்குக.

## இருசார்பிலும்

ஊர் மன்றங்களில் நீதிவழங்குவோர்மட்டும் நல்லொழுக்கமுடையவராயிருத்தல் போதாது. நல்லொழுக்கம் குடிமக்களிடத்திலும் இருத்தல்வேண்டும். குடிமக்களிடம் தீயொழுக்கம் புகுமாயின், அது நீதி வழங்கும் மன்றத்தாரின் நல்லொழுக்கத்தைச் சில சமயமாதல் பிறழச் செய்யும். தீயொழுக்கமுடைய குடிமக்களிடை நீதியாட்சி மலர்தல் அரிது. குடிமக்களின் நல்லொழுக்கம் மன்றத்தாரது நல்லொழுக்கத்தையுங் காத்துவரும். ஆதலால் நல்லொழுக்கம் இருசார்பிலும் வேண்டற்பாலது.

" (நல்லாற்றின் நின்ற) இல்வாழ்வான் என்பான் (நல்லாற்றின் நின்ற) இயல்புடைய மூவர்க்கும் - நல்லாற்றின் நின்ற துணை " என்றுகொண்டு பாட்டை நோக்கினால், இருசார்பிலும் ஒழுக்கம் வேண்டற்பாலதென்பது விளங்கும்.

---

* பெரியபுராணம் - திருநீலகண்டர் - ௩௧.

**நின்ற துணை**

இல்வாழ்வானது பலதிற உதவிகளுடன் நன்னடையும் மன்றத்தார்க்குத் துணை போதலால், "துணை" என்றார். அத்துணை, அசையாத - நிலைத்த - ஒன்றாதலின், "நின்ற துணை" என்றார். இல்வாழ்வான் தனது நன்னடையாலும் மூவர்க்குந் துணைபோதல் வேண்டும் என்பது கருத்து. "நின்ற" என்பதில் நீண்டகால ஒலி இருத்தலை ஓர்க.

**தானும் பிறரும்**

இல்வாழ்வோன் என்பவன் அறவழியில் நின்று, அறத்தை ஓம்பி, அறநிலை எய்த முயல்வோன். அவன் தன்னளவில் அறநிலை எய்த முயலலாகாது. அம்முயற்சி வெற்றியளியாது. ஓர் ஊரில் ஒருவன் மட்டும் சுகாதார நெறியில் நின்றொழுகினால் என்ன பயன்? மற்றவரும் அவனைப்போல ஒழுகல்வேண்டும். இல்லையேல் ஊர் முழுவதும் வீசும் தீ நாற்றம் சுகாதாரத்தில் நிற்கும் ஒருவனையும் தாக்கு மன்றோ? ஆகவே, ஒருவர்மட்டும் நன்னெறியில் நின்று உலகிடை உய்தல் இயலாதென்க. இல்வாழ்வோன் தன்னைச் சூழ்ந்துள்ள மற்றவரும் அற நிலை எய்துவதில் குறியுடையனாய் வாழ முயலல்வேண்டும். அவன் தன்னுடன் மற்றவரும் நன்னெறியில் ஒழுகுதற்குத் துணை நிற்றல் அறம். அப்பொழுதே இல்வாழ்வான் முயற்சி வெற்றியளிப்பதாகும்.

**பொறுப்பு இருசார்பிலும்**

பழியஞ்சிப் பாத்துண்ணும் அறத்தில் ஒருவர் இருவர் ஈடுபடுவதால் மட்டும் பயன் விளையாது. அவ்வறம் ஊர் முழுவதும் நிலவுதல் வேண்டும்; நிலவாதொழியின் ஊரில் அமைதி நிலவாது.

பாத்துண்ணும் அறங்காத்து ஊரிடை அமைதி நிலை பெறுத்தும் பொறுப்பு மூவருடையது. அம்மூவர்க்குத்

துணைபுரியும் பொறுப்பு இல்வாழ்வோனுடையது. இல்வாழ்வோன் மூவர்க்குச் செய்யுந் துணை ஊருக்குஞ் செய்வதாகும். எனவே, ஈண்டு மூவர்க்கும் என்றது ஊரையும் உளங்கொண்டதென்க.

## இருசார்பிலும் தொடர்பு

இல்வாழ்வானுக்கும் ஊர் மன்றத்தை நடாத்துவோர்க்கும் என்ன தொடர்பு என்னும் ஐயம் எழலாம். இல்வாழ்வான் என்பவன் எவன்? அறநிலை எய்தற்கு முயல்வோன். அவன் பழியஞ்சிப் பாத்துண்பவனா யிருத்தல்வேண்டும். பாத்துண்ணாதவன் அறநிலை எய்தல் அரிது. குடும்பத்திலோ ஊரிலோ பகிர்ந்துண்ணும் முறை, அறவழியில் நடவாதொழியின், அதைப் பண்புடன் ஒழுங்கு செய்வது ஊர்மன்றம். அம்மன்றத்தை நடாத்துவோர் மூவர். மூவர்க்குத் துணை செய்வோன் இல்வாழ்வான். இதனால் இல்வாழ்வானுக்கும் மன்றத்தை நடாத்தும் மூவர்க்கும் தொடர்பிருத்தலை உணர்க.

## இல்வாழ்வும் அரசியலும்

உலகியலுக்கு அரசியல் இன்றியமையாதது. பண்டை அரசியல் ஊர்மன்றங்களினின்றும் எழும்பி ஓர் அமைப்பாக நிலவியது. சிற்றூர்கள் அறவழியில் நடைபெற்றால் பேரூர்களும் அவ்வழியே நடைபெறும். நாடுகள் அறவண்ணமா யிலங்கும். நாட்டின் நலத்துக்கு அடிப்படையாயுள்ள ஊர் மன்றத் தலைவர் மூவர்க்கும் இல்வாழ்வான் துணை வேண்டற்பாலது என்று குறிக்கும் முகத்தான் அரசியலுக்கும் இல்வாழ்வானுக்கும் உள்ள தொடர்பை ஆசிரியர் உணர்த்திய வாறு காண்க. இத்தொடர்பு குடியாட்சியின் பெற்றியை விளக்குவதென்க. இதனால் விளங்குவதென்னை? பழியஞ்சிப் பாத்துண்ணுங் குடியாட்சிமுறை இயற்கையின் பாற்பட்டதென்பது. இக்குறள் இல்வாழ்வானது அரசியற் கடமையை அறிவுறுத்துவது. (௫)

## 47

*துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்*
*இல்வாழ்வான் என்பான் துணை.*

### பொருள்

*துறந்தார்க்கும் - நீத்தார்க்கும், துவ்வாதவர்க்கும் - உலக இன்பம் நுகர இயலாதவர்க்கும், இறந்தார்க்கும் - இறந்தவர்க்கும், இல்வாழ்வான் என்பான் - இல்வாழ்வான் என்பவன், துணை - துணை.*

### கருத்து

*நீத்தார்க்கும், உலக இன்பம் நுகர இயலாதார்க்கும், இறந்தார்க்கும் இல்வாழ்வான் என்பவன் துணையாவன்.*

### விருத்தி

*இல்வாழ்வான் என்பவன் முயன்று உழைத்துப் பழியஞ்சிப் பாத்துண்பவன். அவனைப்போல உழைத்து உண்ண இயலாதவர் சிலர் உளர். அவர்க்கு இல்வாழ்வான் துணை தேவை. துணை மேற்பாட்டில் ஒருவிதமாகச் சொல்லப் பட்டது; இப்பாட்டில் வேறுவிதமாகக் கூறப்பட்டுளது.*

### துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்

*துறந்தார் - நீத்தார்; மனமாசகலப் பெற்றார்; அறவோர்; அந்தணர்; எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகுவோர். (விளக்கத்துக்கு "நீத்தார் பெருமை"யையும் உரையையும் பார்க்க).*

*துவ்வாதவர் - நுகராதவர்; இன்பம் நுகராதவர்; உலக இன்பம் நுகராதவர்; உலக இன்பம் நுகர இயலாதவர்; தாமே முயன்று உழைத்து உலக இன்பத்தை அநுபவிக்க இயலாதவர்; குருடர், நொண்டி, தீராப்பிணியாளர்; இவரனையார். "தொடர்கூரத் துவ்வாமை வந்தக்*

கடை"—கலித்தோகை: ௨௨: ௨௧-௨. (துவ்வாமை நுகராமை).

இறந்தார் - பருவுடலை நீத்தவர்; பருவுடலைக் கடந்தவர்.

## துறந்தார்

துறந்தார், எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகுந் தொண்டேற்றுள்ளவராதலின், அவர்வழி உலகம் நடைபெறுகிறது என்னலாம். அறத்தொண்டேற்றுள்ள அவர் வேறு தொழின் முறைகளில் ஈடுபடுதல் கூடாது; ஈடுபடின் அவர் ஏற்றுள்ள தொண்டுக்கு இடையூறு நேரும்.

துறந்தார், உயிர்கட்குச் செந்தண்மை பூண்டொழுகுந் தொண்டொன்றிலேயே ஈடுபட்டு நிற்பது ஒழுங்கு. அவ்வற வோர் தொகை சுருங்கும்போது உலகில் குழப்பங்களும் போராட்டங்களும் எழும். உலகை ஓம்புதற்கென்று அறவோர் என்பவர் இருந்தே தீர்தல்வேண்டும். அவர் உலகில் வாழ்வதற்கு இல்வாழ்வான் துணை தேவையாகிறது. அறவோர்க்குத் துணை செய்யாதவன் இல்வாழ்வானுகான். அவன் வாழ்வு கேடுறும். இல்வாழ்வான் நலத்துக்கென்று துறந்தார் வாழ்கின்றனர். அவர்க்கு இடம் உணவு உடை முதலியன எவர் உதவல் வேண்டும்? இல்வாழ்வான் என்று சொல்லவும் வேண்டுமோ?

துறந்தார் என்பவர் நாட்டை விடுத்தோடிக் காடுகளில் வாழ்வோரல்லர். அவ்வாழ்வு தன்னலமுடையதாகும். திருவள்ளுவர் கூறுந் துறவோர் உலகிடை வாழ்ந்து, மனமாசகலப் பெற்ற அறவோரென்னும் அந்தணர். அவர் உயிர்கட்குத் தொண்டு செய்வதிலே கருத்திருத்தி வாழ்வோர்.

இது பற்றித் தொல்காப்பியனார் அருளிய "காமஞ் சான்ற கடைக்கோட் காலை-ஏமஞ் சான்ற மக்களோடு துவன்றி-

அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும் - சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே" என்னுஞ் சூத்திரம் ஈண்டு நினைவுக்கு வருகிறது. இச்சூத்திரத்துக்கு நச்சினார்க்கினியர் கூறியுள்ள பொருள் இடைக்காலத்தில் தோன்றிய 'இயற்கையை வெறுத்தல்' என்னும் போலித்துறவைக் குறிக்கொண்டது; இளம்பூரணர் பொறித்த குறிப்புரை பொருத்தமுடையது. அது, 'சிறந்தது பயிற்றலாவது - அறத்தின்மேல் மன நிகழ்ச்சி (Social Service)' என்பது. அக்குறிப்புப் பண்டைக் கொள்கைக்கு அரண் செய்வது. (மனமாசற்ற துறவு இருபாலார்க்கும் பொதுவாயிருப்பது. அஃது ஒரு பாலார்க்கே உண்டு என்னும் நியதியில்லை. சூத்திரத்துள் கிழவன் மட்டுமில்லை; கிழத்தியும் இருக்கிறாள்).

## துவ்வாதவர்

துவ்வாதவர் யார்? உலகில் உழைத்து வாழ்க்கை நடாத்தி இன்பம் நுகர இயலாத குருடர் நொண்டி முதலியோர் என்க. அவர்க்கும் இல்வாழ்வான் துணை தேவை. துவ்வாதார் பட்டினி கிடந்து வருந்துவதை இல்வாழ்வான் என்பான் பார்த்துக்கொண்டிருத்தல் பாத்துண்பதாகாது. அது பழியே யாகும். எவரும் பட்டினியால் வாடாதவாறு துணை புரிந்து காக்கும் பொறுப்பு இல்வாழ்வானுடையது.

துவ்வாதார் என்பதற்கு வறியர் என்னும் பொருளுமுண்டு. அதனை ஈண்டுக் கோடலாகாது. பழியஞ்சிப் பாத்துண்ணும் இடத்தில் வறுமை எப்படி நுழையும்?

"வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்"

" தெள்வார் மழையுந் திரையாழியு முட்க நாளும்
வள்வார் முரசம்மதிர் மாநகர் வாழு மாக்கள்
கள்வா ரிலாமைப் பொருள்கவலு மில்லை யாதும்
கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களு மில்லை மாதோ "

" கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்விமுற்ற
எல்லாரு மில்லையவை வல்லாரு மில்லை
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு மெய்தலாலே
இல்லாரு மில்லை யுடையார்களு மில்லை மாதோ "

என வரூஉம் கம்பர் மொழிகளை நோக்குக.

## இறந்தார்

" இவ்வுலகில் வாழுந் துறந்தார்க்கும் துவ்வாதார்க்கும் இல்வாழ்வான் துணைசெய்தல் கூடும். இவ்வுலகில் பருவுடலுடன் வாழாத 'இறந்தார்க்கு' அவன் எங்ஙனம் துணை புரிதல் கூடும் ?" என்று சிலர் ஐயுறலாம். இறந்தவர்க்கும் இவ்வுலகில் வாழ்வோர்க்கும் உள்ள தொடர்பைப் பற்றிப் பலர் பலவாறு கூறுப. ஸர் ஆலிவர் லாட்ஜ் உள்ளிட்ட பேரறிஞர் சிலர் அத்தொடர்பை நன்கு ஆராய்ந்து சில உண்மைகளை வெளியிட்டனர். அதுபற்றி இவ்வுரைக்கண் நீண்ட ஆராய்ச்சி நிகழ்த்த வேண்டுவதில்லை.

### பழைய உரைகள்

பழைய உரையாசிரியர் கருத்துக்கள் வருமாறு :—

" ............பிறராய் வந்து செத்தார்க்கும் இல்வாழ்வான் என்று சொல்லப்படுமவன் துணையாவன் "—இது மணக்குடவர் உரை ; " செத்தார்க்கு இவன் (இல்வாழ்வான்) செய்ய வேண்டுவன புறங்காட்டுய்த்தல் முதலாயின "—இஃது அவர்தங் குறிப்பு.

" ஒருவருமின்றித் தன்பால் வந்து இறந்தார்க்கும் இல்வாழ்வான் என்று சொல்லப்படுவான் துணை "—இது பரிமே

லழகர் உரை. "இறந்தார்க்கு நீர்க்கடன் முதலிய செய்து நல்லுலகின்கட் செலுத்தலானும் 'துணை' என்றார்"—இஃது அவரது விளக்கம்.

## பருவுடல் நீத்தல்

முதலாவது இறந்தார் எவர் என்பதைத் தெளிந்து கொள்ளல் வேண்டும். பருவுடல் நீத்தார் அனைவரும் இறந்தவரா? அறவோரது பருவுடலும் நீங்குகிறது; மற்றவரது பருவுடலும் நீங்குகிறது. பருவுடல் நீப்பதில் இருவர்க்கும் வேற்றுமையில்லை. இவ்விருவருள் இறந்தார் யார்?

பருவுடல் நீப்பவர் அனைவரும் இறந்தவராகார். பின்னை இறந்தவர் எவர்? அறவோர் மீண்டும் பருவுடல் தாங்காது விடுதலை எய்துவோர். மற்றவர் மீண்டும் பருவுடல் தாங்குவோர். மீண்டும் பருவுடல் தாங்காதவர் பிறவாநிலை எய்தினவர். மற்றவர் மீண்டும் பிறக்கும் நிலையிலிருப்பவர். மீண்டும் பிறக்கும் நிலையிலிருப்பவரே "இறந்தார்" என்று சொல்லப்படுவோர்.

ஒரே பிறவியில் அறநிலை எய்தினோர் பருவுடல் நீத்த பின்னர் மீண்டும் பிறவார். ஒரே பிறவியில் அந்நிலை எய்தாதவர் மீண்டும் பிறப்பர். இவர் உலகில் அறநெறி நின்று ஒழுகாதவர்.

## தென்புலம்

அறநெறி நின்று ஒழுகாது பருவுடல் நீத்தவர் - இறந்தவர் - மீண்டும் பருவுடல் தாங்காமலே விடுதலை பெறுதற்கும் ஒருவித வாய்ப்பு இறைவனால் அருளப்பட்டுள்ளது. பருவுடல் நீத்து இறந்தவர் என்று சொல்லப்படுவோர் நுண்ணுடல் தாங்கி ஓர் உலகில் சில நாள் வாழும் பேறு பெறுகிறார். இவ்வுலகைச் சிலர் சுவர்க்கம் என்பர்; சிலர் நடுவுலகம்

என்பர்; சிலர் தென்புலம் என்பர்; இன்னும் வெவ்வேறு வகையில் கூறுவோருமுளர்.

தென்புலம் என்பது தமிழ்நாட்டு வழக்கு. பின்னே இது பிதிர்லோகம் என்று வழங்கப்பட்டது. இவ்வழக்கு வடநாட்டினுடையது. இடைக்கால உரையாசிரியர் பலர் இரண்டு வழக்கையும் ஒரு பொருள்படுத்தி வந்தனர். சிற்சிலர் இரண்டுக்கும் வேற்றுமை கற்பித்தனர். வேற்றுமைகளை ஒற்றுமையாகக் காணுங் காலத்தில் நாம் வாழ்கிறோம்.

முன்னாளில் குறிப்பிட்ட ஒரு கொள்கை, குறிப்பிட்ட ஓரிடத்திலேயே கட்டுப்பட்டுக் கிடக்கும். இந்நாளில் அக்கட்டுக் குலைந்து வருகிறது. ஒரே இடத்தில் பல கொள்கை உலவுங் காலம் இது. இக்காலத்தில் பிடிவாதப் பேய் தலைவிரித்து ஆட இடங்காணாது வருந்துகிறது; கண்மூடி வழக்கங்களும் மண்மூடிப் போதல் கண்கூடு.

இந்நாளில் பல்வேறு நாட்டுக் கொள்கைகளிலுள்ள ஒருமைப்பாடு மன்பதையைக் கவர்ந்து வருகிறது. இச்சமயத்தில் வடநாட்டார் தென்னாட்டார் - மேல்நாட்டார் கீழ்நாட்டார் - பூசலைக் கிளப்புவது அறியாமை. பொதுமையை மன்பதை விரும்பும் இவ்வேளையில் தமிழ் நாட்டவர் தமது தென்புலக் கொள்கையை, மற்ற நாட்டவர் கொள்கைகளுடன் வைத்துச் சிந்தித்துப் பார்த்தால், அஃது இவ்வுலக நிலைக்கும் வீட்டு நிலைக்கும் இடையிலுள்ள ஒரு நிலை (Purgatory) என்பது நன்கு புலனாகும். இதுபற்றியே அவ்வுலகம் நடுவணது என்று வழங்கப்படுகிறது.

"ஆவும் ஆனியல் * * * தென்புல வாழ்நர்க் கருங்கடனிறுக்கும் - பொன்போற் புதல்வர்ப் பெறாஅதீரும் * * *" என வரூஉம் புறநானூற்றுச் செய்யுளை நோக்குக. பருவுடல் நீத்து இறந்துபட்டவர் வாழுமிடம் தென்புலம் என்பது.

## கழுவாய்

இறந்தவர் நுண்ணுடலுடன் நடுவுலகில் வாழுங்கால், அவர் தாம் மண்ணுலகில் நிகழ்த்திய பாவச்செயல்களை நினைந்து கழுவாய்தேட முயலலாம். அதற்கென்று நடுவுலகம் அமைந்துள்ளது.

நடுவுலகிலுள்ளவர்க்குப் பருவுடலின்மையால் அவரால் பேசுதல் இயலாது; நினைத்தல் இயலும். ஆண்டிருப்போர் தமது பழைய பாவச்செயல்களை நினைந்து நினைந்து உருகி உருகி ஆண்டவனை முன்னின்றால் கழுவாய் கிடைக்கும். உருகுதல் உண்மையுடையதாயின் பாவம் கழுவப்படுதல் உறுதி.

## வாய்ப்பைப் பயன்படுத்தல்

இறந்தவருட் சிலர் தமக்கு நடுவுலகில் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்துவர். அவ்விடத்திலும் தமக்குக் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்தா தொழிவோரின் அறியாமையை என்னென்று கூறுவது?

இறந்தவர் தாம் மீண்டும் பிறவாது நடுவுலகினின்றும் விடுதலை பெறுதற்குத் தாமே கழுவாய் தேடலாம். அவர்தம் முயற்சிக்கு இல்வாழ்வானும் துணை செய்யலாம். இவ்வுலகோர் செய்யுந் துணை நடுவுலகிலுள்ளோர்க்குச் செல்லுதல் உண்டு. இக்கொள்கை மனத்தத்துவரால் இந்நாளில் உறுதி செய்யப்பட்டு வருகிறது. இல்வாழ்வான் இறந்தவர்க்கு எப்படித் துணை செய்தல் கூடும்? பலவழியில் துணை செய்யலாம். இறந்தவர் பொருட்டு நாடோறும் சிறிது நேரம் ஆண்டவனை நினைத்தல், அவர் விடுத்துச் சென்ற அறத்துறைகளை ஓம்பல், அவர்தம் நலம் நாடி அறவினையாற்றல் முதலியவாற்றான் இல்வாழ்வான் துணை புரிதல்கூடும். இல்வாழ்வானது நல்லெண்ணமும் நற்செயலும் இறந்தவர்க்குத் துணை போதலால், "இறந்தார்க்கும் இல்வாழ்வான் துணை" என்றார்.

பருவுடல் நீத்ததும் விடுதலை பெற்றோர்க்கு இல்வாழ்வான் துணை வேண்டுவதில்லை யாதலின், " இறந்தார்க்கும் இல்வாழ்வான் துணை " என்றருளினர். " இறந்தார்க்கு இல்வாழ்வான் துணை " என்பதே, இறவாது விடுதலை எய்திய வரை விலக்கி நிற்றல் காண்க.

இல்வாழ்வான் துணை பருவுடலுடையார்க்கன்றி அவ்வுடல் கடந்த மற்றவர்க்கும் செல்வது கருதத்தக்கது.

## இல்வாழ்வான் துணை

துறந்தார்க்கும் துவ்வாதார்க்கும் இறந்தார்க்கும் இல்வாழ்வான் துணை செய்வது, அவனது பயன் கருதாமையை உணர்த்துவதாகும். துறந்தார், துவ்வாதார், இறந்தார் ஆகிய மூவரும் எவ்விதப் பற்றுக்கோடுமில்லாதவர். அவர்க்குத் துணைபுரிவது பயன்கருதாப் பேரறத்தின்பாற் படுவதாகும்.

பயன் கருதாமை இல்வாழ்க்கையில் வளர்வது கருதத்தக்கது. பயன் கருதாமை பெரும் பேற்றிற்கு அடிப்படை. அது வளருமிடம் இல்வாழ்க்கை. துணை, கடமைப்பாட்டை உணர்த்துவது.

இல்வாழ்வான் கடமை இக்குறட்பாவிலுங் குறிக்கப்பட்டது. (எ)

## 48

தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்
*ஐம்புலத்தா றோம்பல் தலை. [றுங்கு

பொருள்

தென்புலத்தார் - குருமார், தெய்வம் - தெய்வம், விருந்து - விருந்தினர், ஒக்கல் - சுற்றத்தார், தான் - தான், என்ற ஆங்கு - என்ற முறையில், ஐம்புலத்து - ஐந்திடத்தி

பா - ம் :—* ஐம்புலத்தார் ஓம்பல்.

லும், ஆறு - அறநெறியை, ஓம்பல் - வளர்த்தல், தலை - சிறப்பு.

## கருத்து

இல்வாழ்வான் என்பவன், தென்புலத்தார் - தெய்வம் - விருந்தினர் - சுற்றத்தார் - தான் - என்னும் ஐவர் வாயிலாக அறத்தை வளர்த்தல் சிறப்பு.

## விருத்தி

'இல்வாழ்வான் * *' என்ற பாட்டில் அரசியற் கடமையும், 'துறந்தார்க்கும் * *' என்ற பாட்டில் பற்றுக் கோடில்லார்க்குச் செலுத்துங் கடமையும், இப்பாட்டில் ஐவர்க்குரிய கடமையும் இல்வாழ்வானுக்குக் குறிக்கப் பெற்றன.

### தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான்

தென் - அழகு; "தென்னிசை வனப்பும் தெற்கு மோர் பாடலும்"—பிங்கலந்தை: ௩௯௱௫; "தென் பர வாயுத கலைகள் பயில்வோர் தம்முள்"—கடம்பவன புராணம்: ௩௫.

புலத்தார் - புலவர்; அறிவுடையோர்; இங்கே குரு மார்; "நின்னொடு புரையுநர் இல்லாப் புலமையோய்" —திருமுருகாற்றுப்படை: 279-280 (புலமையோய் - அறிவினையுடையோய்); "பொருளன் புனிதன் புராணன் புலவன்"—சிலப்பதிகாரம்: ௧௦: ௱௬. "புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்"—மணிமேகலை: ௫: ௬௮. (புலவன் - அருகன், புத்தன், குரு).

விருந்து - விருந்தினர்: ஆகுபெயர்.

விருந்து-புதுமை; விருந்தினர்-புதியராய் வருவோர்

ஒக்கல் - சுற்றத்தார் : ஆகுபெயர். ஒக்கல் ஒரு சேர்தல் ; ஈண்டு ஒருங்கு சேர்ந்த சுற்றத்தாரை உணர்த்துவது.

## தென்புலத்தார்

தென்புலத்தார் - அழகிய அறிவுடையார்.

அழகிய அறிவுடையாரே அந்தணராவர் ; அவர் அறவோர் எனவும் படுவர். "அந்தண ரென்போர் அறவோர் மற் றெவ்வுயிர்க்குஞ் - செந்தண்மை பூண்டொழுக லான்" என்பது ஆசிரியர் திருவாக்கு. இத்திருவாக்கு யாண்டுள்ளது ? "நீத்தார் பெருமை"யிலுள்ளது.

நீத்தார் பலவகையினர். அவருள் தத்துவ ஞானிகளும் இருப்பர் ; குருமாரும் இருப்பர். பலர் தத்துவ ஞானிகளாகலாம். பலர் குருமாராதல் இயலாது. விளக்கம் "நீத்தார் பெருமை" உரைக்கண் பார்க்க.

ஆசிரியர், புலத்தார் என்னும் அளவில் நில்லாது, தென் புலத்தார் என்று அடைதந்து அருளியதைக் கூர்ந்து நோக்குக.

## அறிவு - அழகிய அறிவு ?

புலத்தார் - அறிவுடையார். தென் புலத்தார் - அழகிய அறிவுடையார். அறிவுடையார்க்கும் அழகிய அறிவுடையார்க்கும் என்ன வேற்றுமை ? ஒருவர்க்கு அறிவுமட்டும் விளங்குதல் போதாது. அவ்வறிவுக்குரிய குணமுஞ் செயலும் அவர்பால் முகிழ்த்தல் வேண்டும். குணமுஞ் செயலும் முகிழ்க்கும் இயல்பு வாய்ந்த அறிவு அழகுடையதாகும்.

அறிவு விளக்கத்தில் அன்பு கலந்ததும் உண்டு ; கலவாததும் உண்டு. அன்பு கலவாத அறிவால் பயனென்ன ? அன்பு கலந்த அறிவு பிறர்க்குப் பயன்படுவது. அவ்வறிவே அழகுடையது. அழகிய அறிவு வாய்ந்தவரே அந்தணர்.

அந்தணராவார் எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகு வோர். ஆகவே, உயிர்கட்குச் செந்தண்மை பூண்டொழு காத அறிஞர் வாழ்வில் வெற்றி யடையாரென்றும், உயிர்கட்குச் செந்தண்மை பூண்டொழுகுவோரே வாழ்வில் வெற்றி யடைவரென்றும், இவரே அழகிய அறிவுடையா ரென்றுங் கொள்க. எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழு கும் அறவோரென்னும் அந்தணரே தென்புலத்தாரென்க.

## இருவகையினர்

எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகுந் தென் புலத்தார் இருவகையினர் என்பது முன்னே சொல்லப்பட் டது. ஒருவகையினர் தத்துவ ஞானியர்; மற்றொரு வகையி னர் குருமார். ஈண்டுத் "தென்புலத்தார்" என்றது குரு மாரை. என்னை? தொடர்ந்து "தெய்வம்" நிற்றலான் என்க.

குருவாயிலாகத் தெய்வ உண்மையை உணரும் பேற்றை உயிர்கள் பெறுதலால், முதலில் குருமாரென்னும் "தென் புலத்தார்" வைக்கப்பட்டனர்.

"தென்புலத்தார்" என்பதற்கு மணக்குடவரும் பரிமே லழகரும் 'பிதிரர்' என்று பொருள் கொண்டனர். "பிதிர ராவார் படைப்புக் காலத்து அயனாற் படைக்கப் பட்டதோர் கடவுட் சாதி; அவர்க்கு இடம் தென்திசையாதலின், 'தென் புலத்தார்' என்றார்"—இது பரிமேலழகரது விளக்கவுரை.

முற்பாட்டிலுள்ள "இறந்தார்" தென்புலத்தாரென்று எனக்குத் தோன்றியது. அதைக் கடைப்பிடித்தே ஆங்குக் குறிப்புப் பொறித்தேன். விளக்கம் ஆண்டுக் காண்க. அப் பாட்டிலுள்ள "இறந்தாரை"த் தென்புலத்தார் என்று கொண் டமையான், இப்பாட்டிலுள்ள "தென்புலத்தார்"க்கு வேறு பொருள் கொள்ளப்பட்டது. இதற்குத் துணை நிற்பது,

"தென்புலத்தாரை"த் தொடர்ந்து நிற்கும் "தெய்வம்" என்க.

ஒருபொருள் குறிக்கும் பல சொல்லும், பல பொருள் குறிக்கும் ஒரு சொல்லும் வழக்கிலுண்டு. "தென்புலத்தார்" என்பது பல பொருள் குறிக்கும் ஒன்று. முற்பாட்டில் "இறந்தார்" என்றது தென்புலத்தாரை; இப்பாட்டில் "தென்புலத்தார்" என்றது குருமாரை.

## தெய்வம்

தெய்வம் : கடவுளுக்கு வழங்கப்படும் பொதுப் பெயர்களுள் ஒன்று; பல சமயத்தவரால் பல பெயர்களால் அழைக்கப்படுவது; எல்லாவற்றையுங் கடந்தும், எல்லாவற்றிலுங் கலந்தும் நிற்பது; குருவினுள்ளும் நின்று உயிர்கட்குத் தன் உண்மையை உணர்த்துவது.

## மூன்று நிலை

எல்லாவற்றையுங் கடந்த தெய்வநிலை வாக்குமனங்கட்கு எட்டாததாதலின் அது வழிபாட்டுக்கு உதவாதது. எல்லாவற்றிலுங் கலந்த தெய்வ நிலை என்பது தெய்வம் இயற்கையை உடலாக் கொண்டது. இது வழிபாட்டுக்குரியது. குருவினுள் நிற்கும் தெய்வ நிலையும் வழிபாட்டுக்குரியதே.

மூன்று நிலையுங் கொண்ட தெய்வமே ஈண்டுக் குறிக்கப்பெற்றது. மூன்றில் குருநிலை தெய்வ உண்மையை எளிதில் விளக்குவதாதலின், அச்சிறப்புத் தோன்ற, 'தென்புலத்தார்' என்று முதலில் அருளிப், பின்னே "தெய்வம்" என்றருளினர். தெய்வம் எல்லாவற்றிலுங் கலந்துள்ள நிலையும், அஃது எல்லாவற்றையுங் கடந்துள்ள நிலையும் குருவருளால் விளங்குவன. அதனால் "தென்புலத்தார்" "தெய்வத்து"க்கு முன் நிற்கிறதென்க.

## தெய்வமும் குரு நிலையும்

தெய்வத்துக்குரிய மூன்று நிலைகளுள் குருநிலையும் ஒன்று என்பது பாயிர உரைக்கண் பல இடங்களில் விளக்கப் பட்டது. விரிவு ஆண்டுப் பார்க்க.

தெய்வம், குருவைக் கோயில்கொண்டு, பக்குவர்க்கு அறி வுறுத்திய பின்னரே அதன் உண்மை செவ்விதில் விளங்கும். அதுவரை, தெய்வ உண்மை நம்பிக்கையை ஒட்டியே நிற் கும். தெய்வம் குருவினுள்ளும் நின்று அருள் புரிதலை, *"அரு பரத் தொருவன் அவனியில் வந்து - குருபர னாகி அருளிய பெருமையை" என்றும்; †"குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்றும் வரூஉம் மெய்ம்மொழிகளை நோக்குக.

## விருந்து

தெய்வ வழிபாடு பலதிறத்தது. அவைகளுள் சிறந் தது உயிர்களை வழிபடுவது. உயிர்களுள் சுற்றத்தவராயிருப் பவர் சிலர்; மற்றவராயிருப்பவர் பலர். தெய்வ உண்மையை உணர்ந்தோர்க்கு இருசாராரிடத்தும் வேற்றுமை தோன்றாது. நெருங்கிச் சுற்றமாய்ப் பழகுவோரிடத்து மட்டும் அன்பு காட்டுவது சிறந்த தெய்வ வழிபாடாகாது. நெருங்கிப் பழகாதவரிடத்தும் அன்பு செலுத்துவது உண்மைத் தெய்வ வழிபாட்டுக்கு அறிகுறி. அதுபற்றியே ஆசிரியர் தெய்வத் தின் பின்னர் விருந்தை அமைத்தனர் போலும். தெய்வத் தின் பின்னுள்ள "விருந்து" என்பது, உயிர்களுள் வேற் றுமை பாராட்டாது நிகழ்த்தும் வழிபாடே தெய்வத்தினிடஞ் செல்வதென்னும் நுட்பத்தை அறிவுறுத்துவது. "விருந்

* திருவாசகம் : போற்றித் திருவகவல் : எ௫ - எசு.

† கந்தரநுபூதி : ௫௧.

தோம்பல்" என்றொரு தனியதிகாரம் நூற்கண் வகுக்கப் பட்டதையும் உன்னுக.

ஒக்கல்

'சுற்றத்தைப் பற்றெனக்கொண்டு, அதை விடுத்து நீங் கின் மெய்ஞ்ஞானம் பிறக்கும்' என்ற கொள்கை இடைக் காலத்தில் உலகிடை நுழைந்தது. இக்கொள்கை திருவள்ளு வர்க்கு உடன்பாடில்லை. இதுபற்றி இவ்வதிகாரத்திலும் பிற இடங்களிலும் ஆசிரியரால் வெளிப்படையாகவும் குறிப் பாகவும் பெய்யப்பெற்றுள்ள மறுப்புரைகள் ஆங்காங்கு எடுத்துக் காட்டப்பட்டு வருகின்றன. ஈண்டும் ஆசிரியர் "ஒக்கல்" என்பதால் போலித்துறவைக் குறிப்பாக மறுத் திருத்தலை ஓர்க.

எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகலை வலியுறுத் தும் ஆசிரியர், "ஒக்கலை" மட்டும் அவ்வுயிரினின்றும் நீக்க ஒருப்படுவரோ? எங்குமுள்ள தெய்வம் ஒக்கலிடை இல்லா தொழியுமோ? தெய்வத்தை யாண்டுங் காண்டலன்றோ உண்மை ஞானம்? ஆகவே, ஒக்கலை விடுத்து நீங்குவதுந் தவறு என்பது ஆசிரியர் உள்ளக்கிடக்கை என்று உணர்க.

விருந்தினரிடந் தெய்வக்காட்சி காணும் பேறு பெற் றோர்க்கு ஒக்கலிடத்துள்ள அக்காட்சி தானே புலனாகும். இந்நிலையில் பற்றேது? பந்தமேது? பாசமேது? எல்லாந் தெய்வ மயமாகவே பொலியும்.

நெருங்கிப் பழகாத விருந்தினரை முன்னர்க் குறித்து, நெருங்கிப் பழகியவரைப் பின்னே குறித்தது தன்னலப் பற்றற்ற நிலையை உணர்த்துவதாகும்.

தான்

எதற்குந் "தான்" தேவை. சுவரை வைத்தே சித்தி ரம் எழுதல் வேண்டும். யாண்டுமுள்ள தெய்வம் தன்னி

டத்தும் உண்டு. தன் பொருட்டுத் தன்னை ஓம்புதல் கூடாது. பிறர்பொருட்டுத் தன்னை ஓம்புதல் வேண்டும். அது தெய்வ வழிபாட்டின் பாலதாகும். இன்னோரன்ன காரணம்பற்றி, "தான்" என்றார். "தான்" இறுதியில் குறிக்கப்பெற்றமையால் அத்"தான்", "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்" ஆகியவர்க்கு அறத்தொண்டு செய்து செய்து தன்னலமற்று நிற்பதாகும். தன்னலமற்ற "தானே" முனைப்பற்றது; தொண்டுக்குரியது; தெய்வக் கோயில்.

## தெய்வ விளக்கம்

குருவருளால் முதலில் தன்னிலுள்ள தெய்வம் புலனாகும்; பின்னை தன்னைச் சூழ்ந்துள்ளவரிடத்தில் அத் தெய்வக்காட்சி புலனாகும்; பின்னை தொடர்ந்து மற்ற உயிரிடத்தில் அக்காட்சி புலனாகும். இம்முறையில் "தான் - சுற்றம் - விருந்து" என்று குறியாது, மாற்றிக் குறித்தமை முனைப்பின்மையையும் தன்னலமின்மையையும் உணர்த்துமா றென்க. *"ஈசனுக் கன்பில்லார் அடியவர்க் கன்பில்லார், எவ் வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில்லார்."

## என்றாங்கு

என்று - என்ற: அகரம் விகாரமாயிற்று.

ஆங்கு - அப்படி; அத்தன்மை; ஈண்டு முறைமையின் மேலது.

என்றாங்கு - என்ற முறைப்படி.

## ஐம்புலத்தாறு ஓம்பல் தலை

ஐம்புலத்து - ஐம்புலத்தும்; ஐந்திடத்திலும்: உம்மை தொக்கது. புலம் - இடம்; தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்னும் ஐந்திடம்.

---

* சித்தியார்: கஉ - உ.

ஆறு - நெறி; நன்னெறி; அறநெறி.

ஓம்பல் - வளர்த்தல்; (இல்வாழ்வான்) வளர்த்தல்.

தலை - சிறப்பு.

இப்பாட்டிற்கு உரை கண்ட பழைய ஆசிரியன்மார் இருவரும் அரசனுக்குச் செலுத்தும் இறைப்பொருள் என்றொன்றை வருவித்துக் குறிப்புரை பொறித்துள்ளனர். 'தனக்குண்டான பொருளை ஆறு கூறாக்கி ஒரு கூறு அரசற்குக் கொடுத்து ஒழிந்த ஐந்து கூறினும் தான் கொள்வது ஒரு கூறென்றற்குத் தன்னையும் எண்ணினார். * * * * மேற்கூறிய அறுவரும் விருந்தினது வகையினரென்று கொள்ளப்படுவர்'—இது மணக்குடவர் மனத்தினின்றும் எழுந்தது. 'அரசனுக்கு இறைப்பொருள் ஆறில் ஒன்றாயிற்று. இவ்வைம்புலத்திற்கும் ஐந்துகூறு வேண்டுதலான் என்பது அறிக'—இது பரிமேலழகர் மனத்தில் தோன்றியது. (அ)

(iv) இல்வாழ்வான் மாண்பு

## 49

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாரு ளெல்லாம் தலை.

### பொருள்

இயல்பினான் - இயற்கைப்படி, இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையில், வாழ்பவன் என்பான் - வாழ்வோன் என்று சொல்லப்படுவோன், முயல்வாருள் எல்லாம் - (விடுதலைக் கென்று) முயல்வோர் எல்லாரினும், தலை - தலையாயவன்.

### கருத்து

இல்வாழ்க்கையில் வாழ்வது தலையாய முயற்சி.

## விருத்தி

இல்வாழ்வான் அறநெறி நிற்றலும் உரியகடனாற்ற லும் மேற்பாக்களில் சொல்லப்பட்டன. அவ்வாறொழுகுதல் முயற்சிகளுள் தலைசிறந்ததென்று இப்பாட்டு அறிவுறுத்து கிறது.

**இயல்பினான் * * * * என்பான்**

இயல்பினான் - இயற்கைப்படி; இயற்கை உந்தும் வழி; இயல்பினால்; இயல்பினொடு; மேற்பாக்களில் கூறப் பட்டுள்ள கடமைகளைச் செலுத்தும் இயல்பினான் எனினு மாம்.

இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையிலே.

வாழ்பவன் - முறைப்படி வாழ்வோன்.

**இ ய ல் பி னா ன்**

இல்வாழ்க்கை என்பது இயற்கைவழி நின்றொழுகுவது. மற்ற வாழ்க்கை அவ்வழி நின்று ஒழுகுவதன்று. இல் வாழ்க்கை இயற்கையின் பாற்பட்டதாதலின் "இயல்பினான்" என்றார்.

**இ ல் வா ழ் க் கை**

பெண்ணொருத்தியும் ஆணொருவனும் இயற்கை வழியே வளர்ந்து வருகின்றனர். உற்ற வயதில் இருவரிடத்திலுங் காதல் எழுகிறது. காதலெழுச்சி இயற்கையா? செயற் கையா? இயற்கையென்று எவருங் கூறுவர். காதல் உயிர்க ளிடத்து இயற்கையாக அமைந்து உற்ற காலத்தில் எழுவது. பாம்பு புலி முதலிய கொடிய உயிர்களிடத்தும் காதல் உண்டு. காதல் எல்லா உயிர்களிடத்தும் பொதுவா யிருத்தலான், அதைக் 'காதற் கடவுள்' என்றும் உலகம் சொல்கிறது.

30

இயற்கையில் இயல்பாக அமைந்துள்ள காதலின் எழு சியை ஒடுக்குவது இயற்கை வாழ்வுக்கு அரண்செய்வதாகும என்பதை உன்னிப்பார்க்க; பார்த்தால் காதல்வழி ஒழுகு வது இயற்கை வாழ்வாம் என்னும் உண்மை விளங்கும்.

இருவர்பாலும் இயல்பாக எழுங் காதல் பலதிற இயற்கை நுட்பங்களை அறிவுறுத்துந் தன்மையது. அவை களுள் இரண்டு இங்கே சிறப்பாகக் குறிக்கத்தக்கன. ஒன்று உயிர்கள் கூடி வாழுந் தகையன என்பது; மற்றொன்று, உயிர் கள் தனித்து வாழுந் தகையனவல்ல என்பது. உயிர்கள் கூடி வாழ்தலே இயற்கை வாழ்வு. அதுவே இல்வாழ்க்கை என் பது. இல்வாழ்க்கை இயற்கைப்படி நிகழ்வதாதலின், "இயல்பி ணன் இல்வாழ்க்கை * * * * *" என்றார்.

## வாழ்பவன்

இல்வாழ்க்கை இயற்கை வாழ்வுக்கு அரண் செய்வது என்று உணர்தல்மட்டும் போதாது. உணர்வைச் செய்கை யில் கொணரல்வேண்டும். உணர்வைச் செயலில் நிகழ்த்து வது வாழ்வாகும். 'இல்வாழ்க்கை இயற்கை வாழ்வு' என்று உணரும் அளவில் நில்லாது, அவ்வுணர்வை நடக்கை யில் கொணரல் வேண்டுமென்பது ஆசிரியர் கொள்கை. அதனால் அவர், "இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன்" என்றும் அருளினர். "வாழ்பவன்" என்பது இல்வாழ்க்கை யைச் செயலில் நடாத்துவதை உணர்த்துவது.

## என்பான்

"என்பான்" என்னுஞ் சொல் ஒன்று நிற்கிறது. அது வெற்றுரையா? திருக்குறளில் வெற்றுரை காண்டல் அரி தன்றோ? திருக்குறளில் ஆழ்ந்து செல்லச் செல்ல ஒவ் வொரு சொல்லும் பொருளுடையதாகவே விளங்கும். ஈண்டு 'என்பா"னுள் என்ன உறைந்து நிற்கிறது? இயல்பினால்

இல்வாழ்க்கையில் வாழ்தல் நேரியதாய், உள்ளும் புறமும் ஒத்ததாய், உலகைக் கவர்வதாய்ப் பரிணமித்து உறைந்து நிற்கிறது. "என்பான்" என்பது, உண்மையாக இல்வாழ்க்கையில் வாழ்வோன் என்று உலகம் அறுதியிட்டுக் கூறுவதை உணர்த்தி நிற்கிறதென்க.

## முயல்வாருள் எல்லாந் தலை

*முயல்வாருள் எல்லாம் - முயல்வார் எல்லாருள்ளும்; முயல்வார் எல்லாரினும்.*

*தலை - தலையாயவன்; சிறந்தவன் : ஆகுபெயர்.*

### முயல்வாருள் எல்லாம்

துன்பம் பலவகை. ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு விதத் துன்பம் உண்டு. முழு விடுதலை நேரும்வரை ஏதாவது ஒவ்வொரு விதத் துன்பம் அடர்ந்துகொண்டேயிருக்கும். அவ்வத் துன்பம் அடரும்போது அதனதனின்றும் விடுதலைபெற அததற்குரிய முயற்சியில் உயிர்கள் தலைப்படுவது வழக்கம். உலகிடைத் துன்பமுண்மையால் முயற்சி நிகழ்கிறது; துன்ப மில்லையேல் முயற்சி எழுச்சிக்கே இடமிராது. முயற்சியாவது துன்பத்தை நீக்கி விடுதலையடையச் செய்யப் படுவது. மக்கள் பலதிற முயற்சிகளில் தலைப்படுதலால், " முயல்வாருள் எல்லாம் " என்றார்.

### தலை

உலகில் பலதிற முயற்சிகள் நிகழ்கின்றன. அவைகளுள் தலையாயது எது?

முயற்சி நல்வழியிலும் நிகழ்வதுண்டு; தீ வழியிலும் நிகழ்வதுண்டு. நன்முயற்சி விடுதலை நல்குவது; தீ முயற்சி மேலும் மேலும் கட்டில் அழுத்துவது. பொதுவாக முயற்சி என்னும்போது, அது 'நன்முயற்சி'யைக் குறிப்பதாகும்.

விடுதலைக்கென்று செய்யப்படும் முயற்சிகளுள் பெண் ஆணை வெறுத்தும் ஆண் பெண்ணை வெறுத்தும் தனித்து வாழ்தல், காடோ மலையோ புகுந்து உடலை ஒறுத்தல், புலன்களைச் சிதைத்தல், வலிந்து மூக்கைப் பிடித்துக் காற்றை அடக்கல் முதலியன சிறந்தன என்று இடைக்கால உலகம் கருதலாயிற்று. அவ்வுலகம் இன்னும் வீழ்ந்துபடவில்லை. அது வீழ்ந்தாலன்றி உயிர்கள் நலம் பெறா. இயற்கைப் போக்கை வலிந்து ஒடுக்குவது நன்முயற்சியாகாது.

தனித்த வாழ்க்கை, உடலை ஒறுத்தல், புலனைச் சிதைத்தல், வலிந்து மூக்கைப் பிடித்துக் காற்றை அடக்கல் முதலியன செயற்கை முறைகள். இம்முறைகள் இழிந்தன ; வாழ்வைப் பாழ்படுத்துவன; மன மாசுகளை வளர்ப்பன ; அன்பை அழிப்பன ; தன்னலத்தைப் பெருக்குவன ; கூடா ஒழுக்கத்தைக் கூட்டுவன. இக்கொடுமைகளால் வாழ்வைக் கெடுக்க வல்ல செயற்கை முறைகள் எங்ஙனம் விடுதலை நல்கவல்லன வாகும் ?

## உயிர்களின் இயல்பு

உயிர்களின் இயல்பை நோக்குவோம் ; படைப்பு வகைகளை நோக்குவோம். உயிர்கள் கூடிவாழும் இயல்புடையனவாயிருத்தல் கண்கூடு. படைப்பு வகைகள் யாவும் கூடிவாழும் முறையிலே அமைந்திருத்தலுங் கண்கூடு. 'உயிர்கள் தனித்தே வாழ்தல் வேண்டும்' என்பது இயற்கை அன்னையின் நோக்கமாயின் படைப்பு வகைகள் வேறுவிதமா யமைந்திருக்கும். ஆதலால் உயிர்களின் இயல்பு கூடிவாழ்தல் என்க.

கூடிவாழ்தல் இல்வாழ்க்கை என்பது. இல்வாழ்க்கையில் மனமாசு படிப்படியே அற்று அற்று, அன்பு பெருகிப் பெருகி, அறம் வளர்ந்து வளர்ந்து விடுதலை நிகழுந் தன்மை,

"நீத்தார் பெருமை", "அறன் வலியுறுத்தல்" என்னும் அதிகாரங்களிலும், இவ்வதிகாரத்திலும் விளக்கப்பட்டுளது. விளக்கத்தை ஆண்டாண்டுக் காண்க.

செயற்கை வாழ்க்கை, தீமை பயத்தலால், அதற்குரிய முயற்சி தலையாயதாகாது. இயற்கை வாழ்க்கை, நலம் பயந்து விடுதலை நல்கலால், அதற்குரிய முயற்சி தலையாயதாகும். இதுபற்றியே "தலை" என்றார்.

உலகிலுள்ள முயற்சிகளுள் தலையாயதில் தலைப்படுவோன் எவன்? "இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பவன்." முயற்சியில் தலைப்பட்டோருள் தலையாயவன் அவனே. அவனே "முயல்வாருள் எல்லாந்தலை" (கூ)

## 50

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

### பொருள்

வையத்துள் - உலகத்திலே, வாழ்வாங்கு வாழ்பவன் - வாழும் முறைப்படி வாழ்பவன், வான் உறையும் - அழகு தங்கும், தெய்வத்துள் - தெய்வத் தன்மையிலே, வைக்கப் படும் - வைத்து எண்ணப்படுவன்.

### கருத்து

உலகத்தில் இல்வாழ்க்கையில் முறைப்படி வாழ்பவனிடம் தெய்வத்தன்மை பொலியும்.

### விருத்தி

மேற்பாட்டில் இயல்பினால் இல்வாழ்க்கையில் வாழும் முயற்சி தலையாயதென்பது சொல்லப்பட்டது. இப்பாட்டில் அதனால் விளையும் பயன் இன்னதென்பது சொல்லப்படுகிறது.

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்**

*வையம் - உலகம்; வாழ்வுக்குரியனவெல்லாம் வைக்கப்பட்டுள்ள இடம்.*

*அத்து - சாரியை; ஏழனுருபின் தொனியை உளங்கொண்டது.*

*உள் - ஏழனுருபு.*

*வையத்துள் - வையத்தினிடத்திலே.*

*வாழ்வாங்கு-வாழும் முறைப்படி; "(இல்வாழ்க்கை) வாழும்படியிலே" என்பர் மணக்குடவர்; "(இல்லறத்தோடு கூடி) வாழும் இயல்பினால்" என்பர் பரிமேலழகர்.*

**வையத்துள்**

*உலகங்கள் பல. எல்லாம் ஐம்பெரும் பூதத்தால் ஆக்கப்பட்டன. ஒவ்வோருலகில் ஒவ்வொரு பூதம் மிகுந்து விளங்கும். நாம் வாழும் இவ்வுலகில் மண் தத்துவம் அதிகம்.*

*இம்மண்ணுலகுக்கும் மற்ற உலகங்கட்கும் உள்ள வேற்றுமை என்னை? உயிர்களின் கட்டை அறுத்தற்கு மண் மிகுந்த இவ்வுலகம் உறுகருவியாகத் துணைசெய்யும். மற்ற உலகங்கள் இத்துணை செய்யா. இது சிறந்த வேற்றுமை.*

*தேவரும் தம் கட்டையறுத்து விடுதலை பெறுதற்கு இம்மண்ணுலகம் போந்து கடவுளை வழிபடுவது வழக்கம். "வானிடத்தவரும் மண்மேல் வந்தரன்தனை அர்ச்சிப்பர்" என்று சிவஞானசித்தியார் செப்புதல் காண்க.*

*கட்டறுத்துப் பிறவி நீக்கி விடுதலை அளிக்கும் இயல்பு இவ்வுலகினிடம் இருத்தலால், இதன் வாழ்வை உயிர்கள் பெற்றே தீர்தல் வேண்டும். இவ்வுலகில் உயிர்கள், புல் செடி கொடி மரம் மீன் புழு பாம்பு பறவை விலங்கு முதலிய உடலங்களைத் தாங்கித் தாங்கிப் பின்னே மானுட உடல் தாங்கி விடுதலை யடைகின்றன. விடுதலைக்கு மண்ணுலக வாழ்வும்*

மானுடப் பிறவியும் இன்றியமையாதன. இவ்வின்றியமை யாமையை உன்னி, "வையத்துள்" என்றார்.

## வாழ்வாங்கு வாழ்பவன்

இவ்வையத்தில் மனிதப்பிறவி தாங்கிய அளவில் விடுதலை கிடைத்துவிடும் என்று நினைப்பது தவறு. மனிதப் பிறவி தாங்குதல் மட்டும் போதாது. பின்னை என்ன வேண்டும்? இவ்வையத்தில் மனிதப்பிறவி தாங்கி, 'வாழும் முறையில் வாழ்தல்' வேண்டும். வாழும் முறையில் வாழ்ந்தால் விடுதலை பெறுதல் ஒருதலை. அதுபற்றியே, "வாழ்வாங்கு வாழ்பவன்" என்றார். வழுக்கல் ஆண்பாலிடம் பெரிதும் நிகழ்தலால் "வாழ்பவன்" என்று கூறினார். பிறண்டும் இவ்வாறே கொள்க.

வையம் உயிர்களின் கட்டையறுத்தற்குரிய கருவியாகப் பயன்படுவது. அதற்கு இல்வாழ்க்கை பெருஞ் சாதகமாக உள்ளது. அதனால் இவ்வையத்தில் இல்வாழ்க்கையை முறைப்படி நடாத்தல் வேண்டுமென்று இங்கே வலியுறுத்தப் படுகிறது.

ஒரு நிலையத்தில் ஒருத்தியும் ஒருவனுங் கூடித் தின்று கழித்தல் மட்டும் இல்வாழ்க்கையாகாது. அங்கே இல் வாழ்க்கைக்குரிய உயிர்நாடியும், உயிர்நாடி நிலவுதற்குரிய உறுப்புக்களும் நன்முறையில் இயங்குதல் வேண்டும். இவ் வியக்கமுடைய அறப்பொறியே இல்வாழ்க்கையாகும்.

ஒரு பள்ளிக்கென்று ஓர் அழகிய நிலையம் எழுப்பப்பட்டிருக்கிறது. அந்நிலையத்தில் பிள்ளைகளும் இருக்கிறார்கள்; ஆசிரியன்மாரும் வீற்றிருக்கின்றனர். அங்கே முறையான போதனை கிடையாது. வீண் பேச்சிலும் ஆட்டத்திலுங் காலங் கழிகிறது. அது பள்ளிக்கூடமாகுமா? அது வெறுங் கட்டிடமேயாகும். அதேபோல இல்வாழ்க்கையின்

நோக்கமற்ற வாழ்வு, ' இல்வாழ்க்கை'யாகாதென்க. இல் வாழ்க்கை என்னும் வெற்றுச்சொல் " இல்வாழ்க்கை"யை உடையதாகுமா ? இல்வாழ்க்கைப் பொருளிருப்பதே அவ் வாழ்க்கையாகும்.

இல்வாழ்க்கையின் நோக்கமென்னை ? மன மாசற்ற அற நிலையுற்று விடுதலை எய்தல். இந்நன்னோக்கம் நிறைவேறு தற்குரிய முறைப்படி வாழ்வது இல்வாழ்க்கையாகும். அதுவே " வாழ்வாங்கு வாழ்தல் " என்பது.

முறைகள் பலபட்டன. அவைகளிற் சிறந்தனவற்றை அறிவுறுத்துவது திருவள்ளுவர் நூல். ஒருத்தியும் ஒருவ னும் கற்பனகற்று, கேட்பன கேட்டு, மணம் புரிந்து, இல் வாழ்க்கையில் தலைப்பட்டு, மனமாசற்று, விடுதலை பெறுதற் குப், பிள்ளைப் பேறுண்டாகவும், அன்பு பெருகவும், விருந்து நிகழவும், அடக்கம் அமையவும், ஒழுக்கம் ஊடுருவவும், பொறை பொருந்தவும், ஒப்புரவு உயரவும், ஈகை எழவும், அருள் வளரவும், தவம் ஓங்கவும், வாய்மை சிறக்கவும், அவா அறவும், துறவு நிலைக்கவும், மெய்யுணர்வு மேம்படவும் வாழ்வு நடாத்தல் வேண்டும். இவ்வாறு வாழ்தல் முறைப்படி இல் வாழ்க்கையில் ஒழுகுவதாகும். இதை, " வாழ்வாங்கு வாழ்ப வன் " என்று சுருங்கச் சொற்றனர் ஆசிரியர்.

இல்வாழ்க்கையின் உயிர்நாடி அறம் ; அதன் உறுப்புக் கள் பிள்ளைப்பேறு அன்பு முதலியன. இவை யாவும் சேர்ந்த ஒன்று இல்வாழ்க்கை.

## வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்

வான் - அழகு ; " மீன்பூத் தவிர்வரும் அந்திவான் விசும்புபோல் - வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையும் "
—கலித்தொகை : கOரு : கரு - ச.

இங்கு வானுக்குத் தூய்மை, நன்மை, பெருமை முதலிய பொருளும் கூறலாம். இவையெல்லாம் அழகில் அடங்குவன. அழகுள்ள இடத்தில் இவையெல்லாம் இருக்கும்.

உறையும் - தங்கும்; ஒழுகும் எனினுமாம். "வருந்தி நொந் துறைய இருந்திரோ"—குறுந்தொகை : கூரு : ரு.

தெய்வம் - தெய்வத்தன்மை; "தெய்வமே கமழும் மேனித் திருவொளி கலந்த மார்பின்-ஐய நீ"—சிந்தாமணி: 1718.

## வானுறையும்

முறைப்படி இல்வாழ்க்கை நடாத்துவோரிடம் பல இயல்புகள் அமைவதுண்டு. அவைகளுள் இங்கே குறிக்கத் தக்கது தேய்வத்தன்மை. தெய்வத்தன்மை அழகுள்ள இடத்தில் மலர்ந்து நிற்பது. அழகு எல்லா நல்லியல்புகளும் விளங்குமிடத்தில் பொலிதருவது.

## அழகு

அழகின் பருப்பொருள் ஒருவிதமாகவும், நுண்பொருள் ஒருவிதமாகவும் உலகவரால் சொல்லப்படுகின்றன. அழகின் பொருளைத் துருவி ஆராய்ந்தால் அஃது எங்கும் நீக்கமற நிறைந்துள்ள இறையென்றே விளங்கும். அழகே இறை; இறையே அழகு. இதுபற்றி, "முருகன் அல்லது அழகு" என்னும் நூலில் விரித்துக் கூறியுள்ளேன். விளக்கத்தை அந்நூலிற் காண்க.

அழகு எங்கும் என்றும் நிலவினும் அஃது எல்லா இடங்களிலும் விளங்கித் தோன்றுவதில்லை. மின்சாரம் எங்குமிருப்பினும், பொறி அமைத்து முயற்சி செய்யுமிடத்திலேயே அது தன் விளக்கத்தைப் புலப்படுத்துகிறது. அது போல அழகும், "வாழ்வாங்கு வாழ்பவரிடமே" விளங்கித் தோன்றும்.

## அழகும் இல்வாழ்க்கையும்

அழகு இயற்கையைப் போர்வையாக் கொண்டது; இயற்கையின் வாயிலாகத் தன் காட்சியை வழங்குவது. அதன் விளக்கத்துக்கு இயற்கையோடியைந்த இல்வாழ்க்கை தேவை. இல்வாழ்க்கையை முறைப்படி நடாத்துவோரிடம் அழகு பொலிதரல் ஒருதலை. மற்றவரிடத்தில் அது பொலி தருவதில்லை. இயற்கை வாழ்வினரிடம் அழகுத் தெய்வம் கோயில் கொள்கிறதென்று சுருங்கச் சொல்லலாம்.

காதல் உந்தும் வழி வாழ்பவரின் உள்ளத்திலும் உடலிலும் இயற்கை அழகு எழுந்து காட்சியளிக்கும். அழகு பெரிதும் இளமையில் தவழ்வது கண்கூடு. அது மேலும் மேலும் பொலிந்து எழுதற்குப் போகப் புணர்ச்சிவேண்டும். போகப் புணர்ச்சியற்ற இளமையின் வளமை குன்றிப் போகும். இஃதியற்கை. வளமை குன்றும் இளமையில் அழகுத் தெய்வம் காட்சியளித்தல் அரிது.

போகத்திலும் அளவா யிருத்தல் வேண்டும். இல்லையேல் அழகு மறைந்து அவலட்சணம் பெருகும். அளவான போகம் அழகை விளங்கச் செய்யும் தன்மை வாய்ந்தது.

அழகின் எழுச்சிக்கு அளவான போகம் ஒரு கூறு; வேறு பல கூறுகளும் உள்ளன. விரிவு ஈண்டைக்கு வேண்டுவதில்லை. அளவான போகம் நிகழ்த்திக்கொண்டு, உள்ளத்தில் அழுக்காறு அவா வெகுளி முதலிய மாசுகளை நிலைக்க வைத்திருப்பின், அழகெழுந்து காட்சி வழங்காது. அழகு விளக்கத்துக்கு அளவான போகத்துடன் அகத் தூய்மையும் வேண்டும்.

## அன்பும் அழகும்

அகத்திலுள்ள மாசுகளைக் கழுவும் ஆற்றல் அன்பு நீருக்கு உண்டு. அன்பு நீர் எழுச்சிக்கும் இல்வாழ்க்கை

தேவை. ஒருத்தியும் ஒருவனும் அன்பால் விழுங்கப்பட்டு ஓருயிர் ஈருடல் என்று வாழ்ந்தால், அவர்தம் உள்ளத்துள்ள மாசுகள் அகலும். அவ்வுள்ளத்தினின்றும் அழகுத் தெய்வம் எழுந்து, கரணங்களையும், ஊனையும், உடலையும் தன் வண்ணமாக்கும். அன்பு பெருகப் பெருக அழகுத் தெய்வத்தின் நடமும் பெருகும். இப்படி, "வாழ்வாங்கு வாழ்பவ" ரிடத்தில் அழகு நிலைபேறுகத் தங்கிப் பொலிதலால் "* * * * * வானுறையும் * * *" என்றார்.

## தெய்வத்துள்

தெய்வமுள்ள இடத்தில் தெய்வத்தன்மை தானே பொலிதரும். அழகு தெய்வமாதலால் அது விளங்குமிடத்தில் தெய்வத்தன்மையும் தானே ஒளிரும். ஒருத்தியும் ஒருவனும் அன்பால் ஒன்றி வாழ்வாங்கு வாழுங்கால் அவர் அழகுடையவராகிறார்; அழகுவண்ணராகிறார். அவர்பால் அழகு பொலிகிறது. அப்பொலிவு உலகோர்க்கு எங்ஙனம் தோன்றும்? தெய்வத்தன்மை நடம்புரிவதெனத் தோன்றும். உலகோர் அவ்வழகரைக் காணுந்தோறும் காணுந்தோறும், 'இவர் தெய்வத் தன்மையர்' என்று வியப்பர்; அவரை, 'தெய்வத் தன்மையிலே வைத்து'ப் போற்றுவர். இதை ஆசிரியர், "......வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்றார். ஒழுங்குபட்ட இல்வாழ்க்கையில் "தெய்வத் தன்மை" மிளிரும் என்றபடி.

அழகுறையுந் தெய்வத் தன்மை பெறுதற்கு எவ்வளவோ நெறிகள் உலகில் சொல்லப்படுகின்றன. அவைகளில் தலையாயதும், இயற்கைக்கு அரண்செய்வதுமா யிருப்பது இல்வாழ்க்கை. இல்வாழ்க்கை மட்டும் முறைப்படி நடைபெறுவதா யிருத்தல் வேண்டும். இல்வாழ்க்கையில் மனமாசகன்று அன்பு பெருகுதற்கு ஏது இருத்தலால்,

அதன்கண் தெய்வத்தன்மை பொலிவதாகிறது. மாசற்ற அன்பில் தெய்வத் தன்மை விளங்காது வேறு என்ன விளங்கும் ?

## வைக்கப்படும்

இல்வாழ்க்கையை முறைப்படி நடாத்துவோர் தெய்வத் தன்மையிலே வைத்து எண்ணப்படுதல் எங்கே? மறு உலகிலா? இல்லை. இங்கே - இவ்வுலகில் என்க. இது, "வைக் கப்படும்" என்பதால் நன்கு விளங்குகிறது.

## இவ்வுலகிலேயே

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் (வையத்துள்) வானுறையுந்-தெய்வத்துள் வைக்கப் படும்" என்று கொள்க. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் தெய்வத் தன்மை பெறுதற்கு வேறு உலகம் புக வேண்டுவதில்லை. அவனுக்குத் தெய்வத் தன்மை இவ்வுலகிலேயே உண்டாகு மென்பதும், அஃது இவ்வுலகிலேயே போற்றப்படுமென் பதும் ஆசிரியர் கருத்து.

## விளம்பரம் !

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவனிடம் விளங்குந் தெய் வத் தன்மையை அவன் தானே விளம்பரஞ்செய்ய வேண்டுவ தில்லை. தானே வலிந்து விளம்பரஞ் செய்வோனிடம் தெய் வத் தன்மை இராது. அது பற்றியே ஆசிரியர், "வைக்கப் படும்" என்றார். வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் தெய் வத்துள் மற்றவரால் வைக்கப்படுவன் என்று கொள்ளும் முறையில் பாட்டு அமைந்துள்ள தன்மையை நோக்குக.

## தேவர்

"வானுறையுந் தெய்வத்துள்" என்பதற்கு, "தேவ ருள் ஒருவனாக * * *" என்று மணக்குடவரும், "வையத்

தானே எனினும் வானின்கண் உறையும் தேவருள் ஒருவ னாக * * *" என்று பரிமேலழகரும் பொருள் கூறியுள்ள னர். இவர்தங் கூற்றுப்படி இவ்வுலகில் வாழும் மனிதரினும் தேவர் உயர்ந்தவராகிறார். தேவரும் விடுதலைக்கு இம்மண் ணின்மீது மனிதராக வருகின்றனர் என்பது மேலே காட் டப்பட்டது. மனிதனாகப் பிறந்து வையத்தில் வாழ்வாங்கு வாழ்வோன் இவ்வையத்திலேயே அழகுறையும் தெய்வத் தன்மை பெறுதலால், அவனைத் தேவருள் ஒருவனாக மதிப் பது இழிவேயாகும்.

இப்பாட்டால் வையத்தைத் துறத்தல் வேண்டுவதில்லை என்பதும், வையத்திலே முறைப்படி வாழ்வை நடாத்தல் வேண்டும் என்பதும், அதனால் வானுறையுந் தெய்வத்தன்மை இவ்வையத்திலேயே கூடுகிறது என்பதும், முறைப்படி இல் லில் வாழ்வோன் தெய்வத் தன்மையிலேயே வைத்து மற்றவ ரால் எண்ணப்படுவன் என்பதும் விளங்குகின்றன. (௫0)

# ௬. வாழ்க்கைத் துணை

அதிகாரத் தலைப்பு, 'வாழ்க்கைத் துணை' என்றிருத்தலே சாலும். இவ்வதிகார முதற்பாட்டில், "மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்-வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" என்று ஆசிரியர் அருளியுள்ளனர். உரையாசிரியன்மாராகிய மணக்குடவரும் பரிமேலழகரும் 'வாழ்க்கைத் துணை நலம்' என்ற தலைப்புக்கொண்டு பொருள் விரித்துள்ளனர். மூலத்தின் உண்மை விளங்கவில்லை.

## தலைப்பு விளக்கம்

தலைப்பு, 'வாழ்க்கைத் துணை' என்பதாயின், இல்வாழ்க்கைக்குத் துணை என்றும், 'வாழ்க்கைத் துணை நலம்' என்பதாயின், இல்வாழ்க்கைக்குத் துணைசெய்யும் நலம் என்றும் கொள்க. முன்னையதில் 'துணை' என்பது மனைவியைக் குறிப்பதாகும்; பின்னையதில் 'நலம்' என்பது மனைவியை உணர்த்துவதாகும். அதில் 'துணை' ஆகுபெயர்; இதில் 'நலம்' ஆகுபெயர்.

'வாழ்க்கைத் துணை நலமாவது வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது பெண்மை இலக்கணங் கூறுதல்' —மணக்குடவர்.

'வாழ்க்கைத் துணை நலம்: அஃதாவது - அவ்வில் வாழ்க்கைக்குத் துணையாகிய இல்லாளது நன்மை' —பரிமேலழகர்.

## தொடர்பு

முன்னைய அதிகாரம் இல்வாழ்க்கையைப் பற்றியது. இல்வாழ்க்கை, பெண் ஆண் சேர்ந்த ஒன்று. பெண் ஆண் சேர்ந்து வளர்க்கும் அறவொழுக்கத்தினின்றும் எழும்பும் இன்ப அன்பு நிலையம் இல்வாழ்க்கை என்க.

இல்வாழ்க்கையைத் தொடர்ந்து விளங்கும் இவ்வதிகாரத்தில் பெண்ணின் பெருமை பேசப்படுகிறது. ஆணின் பெருமையும் இலைமறை காயென ஆங்காங்கே சிறிது சிறிது பேசப்பட்டிருக்கிறது. இல்வாழ்க்கையின் உயிர் பெண்ணாதலின், அவள் மாண்பு, 'வாழ்க்கைத் துணை' என்று இவ்வதிகாரத்தில் சிறப்பிக்கப்படுகிறது.

திருவள்ளுவர் காலத்திலேயே பெண்ணை இழிவாகக் கருதும் புன்மை வாழ்விடை நுழைந்து கொண்டது. அதைப் போக்கத் திருவள்ளுவர் பெரிதும் முயன்றனர். அம்முயற்சி இவ்வதிகாரத்தில் வெள்ளிடைமலையென விளங்குதல் காண்க.

## உள்ளுறையும் அமைவும்

இவ்வதிகாரம் மூன்று பொருளைக் கொண்டது. ஒன்று மனைமாண்பு; மற்றொன்று கற்பு; இன்னொன்று மக்கட்பேறு.

வாழ்க்கை இயற்கை. அஃது இயற்கைவழி நடைபெறத் துணைபுரிவது இல்வாழ்க்கை. இல்வாழ்க்கையை நடாத்தப் புகுவோருள் சிறந்து விளங்கும் பெண்மணி வாழ்க்கைத் துணை என்று போற்றப்படுகிறாள். வாழ்க்கை நன்முறையில் நடைபெறின் அது மாண்புடையதாகும்; இல்லையேல் பழியுடையதாகும். வாழ்க்கையை மாண்புடையதாக்கும் பொறுப்பு வாழ்க்கைத் துணைக்கு உண்டு. இதற்கு விளக்க உரை வேண்டுவதில்லை. வாழ்க்கைத் துணையின் மாண்புக்கு ஊற்றாயிருப்பது எது? பலப் பல நெஞ்சில் தோன்றித் தோன்றிக் குலைந்துபோகும். ஒன்று குலையாமல் நிலைத்து நிற்கும். அஃது எது? அது கற்பு. வாழ்க்கைத் துணையின் கற்பொழுக்கத்தால் விளையும் பயன் என்னை? நன்மக்கட்பேறு. பிறவாற்றால் நன்மக்கட்பேறு உண்டாதல் அரிது. கற்பொழுக்கத்தால் வளரும் உலகமே வேண்டற்பாலது. அதனால் உலகம் இயற்கை அறத்தின் வழி வளர்ந்தோங்கும்.

பிறவாற்றால் பெருகும் உலகம் அமைதி குலைந்து இடர்ப் படுவதாகும். ஆதலின், நன்மக்கட் பேற்றிற்குக் கற்பொழுக்கம் இன்றியமையாததென்க.

முதல் மூன்று பாட்டில் மனை மாண்பும், அவைகளைத் தொடர்ந்து நிற்கும் ஆறு பாட்டில் கற்பும், இறுதிப் பாட்டில் மக்கட்பேறும் ஒளிர்தல் காண்க.

(i) மனை மாண்பு

## 51

*மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்*
*வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.*

### பொருள்

மனை தக்க - மனை அறத்துக்கேற்ற, மாண்பு உடையள் ஆகி - மாட்சிமையுடையவளாய், தன்கொண்டான் - தன்னைக் கொண்டவனது, வளம் தக்காள் - செல்வத்துக்குத் தக்கவாறு தன் வாழ்வைத் தகுதி செய்து கொள்பவள், வாழ்க்கைத் துணை - இல்வாழ்க்கைக்குத் துணையாவள்.

### கருத்து

மனையறத்துக்குத் தக்க மாண்பும், கொண்டவனது செல்வ அளவுக்கேற்ற வாழ்வை நடாத்தும் தகுதியும் உடையவள் மனைவியாவள்.

### விருத்தி

**மனைத்தக்க மாண்புடைய ளாகி**

மனை - இல்லம், வீடு. ஈண்டு மனை என்றது வெறும் கட்டிடத்தையன்று. இரண்டு உருவங்கள் ஒரு கட்டிடத்தி லிருந்து உண்டு கழிப்பது மட்டும் மனையாகாது. மனையாவது, ஈருயிர் அன்பால் ஒன்றி, மனமாசகலப் பெற்று,

அந்தண்மை எய்தி, உயிர்கட்குத் தொண்டுசெய்ய அறம் வளர்த்துப் பண்படுதற்குரிய ஓர் அமைதி நிலையம்.

மனை - அறம்; மனையறம்; மனையில் நடத்தப்படும் அறம்; அறம் வளர்தற்குரிய நிலைக்களன். மனை: ஆகு பெயர்.

தக்க - தகுந்த, பொருந்திய, ஏற்ற.

மனைத்தக்க - அறம் வளர்தற்குத் தக்க.

மாண்பு - மாட்சிமை, பெருமை; இங்கே மாண்பு ஒழுக்கத்தை உணர்த்துவது; மாண்பை 'ஒழுக்கம்' என்பர் மணக்குடவர்; 'நற்குண நற்செய்கை' என்பர் பரிமேலழகர். (ஒழுக்கம் - நற்குண நற்செய்கை).

உடையள் ஆகி - (மாண்பில்) இரண்டறப் பெற்றவளாகி; உடைமை ஈண்டுத் தற்கிழமையின் மேலது.

"மனைத்தக்க மாண்பு உடையளாகி" - 'தான் பிறந்த குடிக்குத் தக்க ஒழுக்கத்தை யுடையவளாய்'—இது மணக்குடவர் உரை; 'மனையறத்துக்குத் தக்க நற்குண நற்செய்கைகளை உடையவளாய்'—இது பரிமேலழகர் உரை.

## மனைத்தக்க மாண்பு

ஈருயிர் ஒன்றி மனமாசகல வாழ்தற்கு ஒரு நிலையம் தேவை. அஃது இங்கே 'மனை' என்னப்பட்டது. மனையாவது அறவளர்ச்சிக்கு அறிகுறியாக நிற்கும் நிலையம். அறம் நுண்மை; அதன் பருமை மனை.

மனையில் வாழ்ந்து அறம் வளர்க்கக் குணநலம் வேண்டும். குணநலங்களையெல்லாம் நிரலே கிளர்ந்துகூறின் சொற்கள் பெருக்கெடுக்கும். அதனால் குணநலமெல்லாம் விளங்கும் முறையில் "தக்க மாண்பு" என்றார். "தக்க மாண்பி"ல் குணநலமெல்லாம் அடங்கும்.

"மாண்பு" பலவகை. தக்க மாண்பும் பலதிறம். இங்கே மனையறத்துக்குத் "தக்க மாண்பு" என்றபடி.

"மாண்பு"க்கு ஒழுக்கம் என்று பொருள் சொல்லப் பட்டது. (ஒழுக்கம் - நற்குண நற்செய்கை.)

கல்வி அறிவு ஒழுக்கம் என்னும் ஆட்சியை நோக்குக. கல்வியால் அறிவுவிளங்கும். வெறும் அறிவுமட்டும் போதாது. அறிவுடன் ஒழுக்கம் வேண்டும். ஏட்டுக்கல்வியால் விளங்கப் பெறும் அறிவு மனமாசினை அகற்றுது. ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவுமோ? கல்வியால் விளங்கிய அறிவு நல்வழியில் பயன்படுதற்கு ஒழுக்கந் தேவை. ஒழுக்கம் இல்லாத இடத் தில், கல்வியால் விளங்கிய அறிவுமட்டும் மனமாசகலுதற்குத் துணை செய்யாது. ஒழுக்கத்தில் கல்வியும் அறிவும் அடங்கும். கல்வி அறிவு ஒழுக்கஞ் சேர்ந்த ஒன்று, மனமாசினை அகற்ற வல்லதாகும். அஃது, ஈண்டுத் "தக்க மாண்பு" என்னப் பட்டது.

உடையளாகி

ஆசிரியர் "உடையள்" என்று கூறும் அளவில் நில் லாது, "உடையள் ஆகி" என்று கூறியிருத்தல் சிந்தனைக்கு உரியது.

உடைமை இருவிதம். ஒன்று புற உடைமை; மற் றொன்று அக உடைமை. இங்கே குறிக்கப்பெற்றது அக உடைமை. புறவுடைமை பிரிதன்மாலையது; அகவுடைமை பிரிதன் மாலையதன்று. "ஆகி" என்பது அகவுடைமையை உணர்த்துவது.

மனை அறத்தை வளர்க்கத்தக்க மாண்பை அகத்தில் உடையவளாகி என்று கொள்க. அகத்தே தக்க மாண்பு ஊறி ஊறிக் குருதி, ஊன், நாடி, நரம்பு, என்பு, தோல் முதலிய வற்றில் ஒன்றுதல், ஈண்டு "உடையளாகி" என்பதால்

உணர்த்தப்பட்டது. "மனைத்தக்க மாண்பு" பெண்ணின் வா வாகப் பரிணமித்தல் வேண்டுமென்பது கருத்து. இத்தகை ஒருத்தி அறத்தை ஓம்ப வல்லவள் என்னும் நுட்பத்தை தெளிவு செய்ய, "மனைத்தக்க மாண்புடைய ளாகி" என்றார்

## தற்கொண்டான் வளத்தக்காள்

தற்கொண்டான் - தன்னைக் கொண்டவன்; தன்னைக் காதலால் அகங்கொண்டவன்; தன்னையன்றிப் பிறரை மனைவியாகக் கொள்ளாதவன் என்பது குறிப்பு. (கொள் ளல் - அகங்கொள்ளல்.)

வளம் - செல்வம்; 'வருவாய்' என்பர் பழைய உரை யாசிரியன்மார். கருத்தில் இரண்டும் ஒன்றே; செம்மை, நலம் என்போரும் உளர்.

தக்காள் - தன் வாழ்வைப் பண்படுத்தித் தகுதி செய்துகொள்பவள்; கொண்டவனது செல்வத்துக்கு அல் லது வருவாய்க்கு ஏற்றவண்ணம் தன் வாழ்வைப் பண்படுத் தித் தகுதி செய்துகொள்பவள்; கொண்டவனது வளத் துக்குத் தக்க வளமுடையவள் என்று கொள்வோருமுளர் (ஒத்த திருவுடையாள் என்பது கருத்து); 'கொண்டவ னது வருவாய்க்குத் தக்க செலவினையுடையாள்' என்று மணக்குடவரும், 'கொண்டவனது வருவாய்க்குத் தக்க வாழ்க்கையை யுடையாள்' என்று பரிமேலழகரும் உரை கண்டுள்ளனர்.

## தற்கொண்டான்

ஆசிரியர் 'கொண்டான்' என்று அருளி நிற்க விரும் பாது, 'தற்கொண்டான்' என்று அருளி உள்ளநிறைவு கொண்டனர் போலும். இப்பாட்டில் மனை மாண்பைப் பேசப் புகுந்த ஆசிரியர், அதனுடன் 'கொண்டான்' மாண்

பும் கரந்து விளங்குமாறு குறிப்பாக உணர்த்தப் புகுந்தமை போற்றற்குரியது. பாட்டிடைக் கொண்டான் மாண்பு எங்கே திகழ்கிறது? 'தன்' என்பதில் திகழ்தல் காண்க. அதுபற்றியே, 'கொண்டான்' என்று கூருது, 'தற்கொண்டான்' என்று கூறலாயினர். 'தற்கொண்டான்' என்பதற்கு மேலே பொறிக்கப் பெற்றுள்ள குறிப்பை நோக்குக. 'தன்னையன்றி (கொண்டவளை யன்றி) வேறு ஒருத்தியை மனைவியாக அகத்தில் கொள்ளாதவன்' என்பதில் ஆண்மகனது தக்க மாண்பு கரந்து மருவுதலை உணர்க. தக்க மாண்பு இருபக்கமும் இருத்தலே அழகு. அதை ஆசிரியர் குறிப்பால் உணர்த்தும் திறத்தை நினைந்து உன்னி முன்னிப் பார்க்க.

வளத்தக்காள்

இல்வாழ்க்கையை நன்முறையில் நடாத்தப் பெண்மணிக்குப் பலதுறை ஞானம் வேண்டும். அவைகளுள் இன்றியமையாதது பொருள் ஞானம். வாழ்க்கைக்கு உயிர் போன்றது பொருண்மை.

"முனிவரு மன்னரு முன்னுவ பொன்னால் முடியுமன்றே" என்ருர் மணிவாசகனாரும். பொருள் ஞானம் பெண்மணியினிடம் இல்லையெனில் வாழ்க்கை வற்றிப் போகும். இல்வாழ்க்கையை நடாத்தப்புகும் பெண்ணினல்லாள், பொருள் ஞானம் உடையவளா யிருத்தல் வேண்டுமென்பதை வலியுறுத்த, "வளத்தக்காள்" என்ருர்.

பொருள்ஞானம் உடையவள் வளத்துக்குத் தக்கபடி செலவு செய்பவளாவள்; மற்றவள் வரவுக்கு மேல் செலவு செய்து வாழ்க்கையைக் குலைப்பவளாவள்.

## வாழ்க்கைத் துணை

வாழ்க்கைத் துணை : இஃது இவ்வதிகாரத்தின் தலைப்பு. தலைப்பிலுள்ள விளக்கம் பார்க்க.

### இரண்டியல்

இல்வாழ்க்கை என்பது படிப்படியே வளர்ந்து மனமாசகற்றி எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அந்தண்மை என்னும் அற நிலையைக் கூட்டுவது. இந்நிலையைக் கூட்டும் வாழ்க்கைக்குத் துணை செய்பவள் பெண்ணினல்லாள். தியாகமும் அன்பும் பெண்பிறவியாக அமைந்திருத்தல் வெள்ளிடைமலை. விரிவு "பெண்ணின் பெருமை"யில் பார்க்க. ஈண்டு வாழ்க்கைத் துணை என்றது தலைவன், சேய், உற்றார், உறவினர் அளவில் நிற்கும் முறையில் துணைசெய்தலை மட்டுங் குறிக்கொண்டதன்று; எல்லா உயிர்களின் வாழ்க்கைக்குத் துணை புரிதலைக் குறிக்கொண்டது. இத்துணை புரியும் அன்பு, பெண்ணி னல்லாளிடம் பொலிதலால், அவள் 'வாழ்க்கைத் துணை' என்று சிறப்பிக்கப்படுகிறாள்.

வாழ்க்கைத் துணைக்கு இப்பாட்டில் இரண்டு சிறப்பியல்புகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒன்று மனைத்தக்க மாண்புடையளாதல்; மற்றொன்று தற்கொண்டான் வளத் தக்காளாதல். இவ்விரண்டும் உடையாள் வாழ்க்கைத் துணை யாதற்கு உரியவள் என்றபடி.

இரண்டும் ஒன்றா? வேறா? இரண்டும் ஒன்றே. ஒன்று முதல்; மற்றொன்று சினை. முதலாவதாகிய மனைத்தக்க மாண்புடைமையிலே இரண்டாவதாகிய தற்கொண்டானது வளத்தக்காளாதல் அடங்குவதாகும்.

**விளக்கம்**

மாண்பு என்பதற்கு ஒழுக்கம் என்று பொருள் சொல்லப்பட்டது. ஒழுக்கத்தில் ஒன்றி நிற்பது செய்கை. வாழ்க்கைத் துணைக்குரிய செய்கைகள் பல. அவற்றுள் ஒன்று "தற்கொண்டான் வளத்தக்கா"ளாதல். இது பல செய்கைகளையும் உளங்கொண்ட "மாண்புடைமையில்" விரவியுள்ள ஒன்றேயாகும். அங்ஙனமாக, "மனைத்தக்க மாண்புடையளாகி" என்று கூறி, மேலும் "தற்கொண்டான் வளத்தக்காள்" என்று கூறியதன் நுட்பம் என்னை ?

மாண்பு - ஒழுக்கம். ஒழுக்கம் - நற்குண நற்செய்கை. நற்குணத்தினின்றும் பரிணமிப்பது நற்செய்கை. குணமும் செய்கையுமுடையது ஒழுக்கம். ஒழுக்கம் ஈண்டு மாண்பு என்னப்பட்டது. மாண்பில் நற்குணமும் நற்செயலும் ஒன்றியிருத்தலைப் பற்றி விரித்துக் கூறவேண்டுவதில்லை.

நற்செய்கைகள் பல. அவைகளுள் ஒன்று விளக்கத்தின் பொருட்டு இங்கே தனித்த முறையில் பிரிக்கப்பட்டது. தனிமையில் சிறப்பாகக் கருத்தைப் பதியவைத்தல் உலக இயல்பு. இவ்வியல்பை நன்குணர்ந்த ஆசிரியர், "மனைத்தக்க மாண்புடையள்" என்று பொது வகையில் ஓதி, மீண்டும் அதன்கண் ஒன்றிநிற்கும் ஒன்றாகிய "தற்கொண்டான் வளத்தக்காள்" என்பதைச் சிறப்பு வகையில் தனியே பிரித்தோதினர். இதனால் பெண்மக்களிடம் பொருள் ஞானம் சிறந்து திகழ்தல் வேண்டும் என்னும் உண்மை விளங்குதல் காண்க. 'பெண்மக்கள் எத்துறைக் கல்வியைப் பயிலாமல் விடுத்தாலும் விடுக்கலாம்; ஆனால் பொருட்டுறைக் கல்வியைப் பயிலாது விடுத்தலாகாது' என்னும் உண்மை வலியுறுத்தப்

பட்டதென்க. ஒவ்வொரு பெண்மணியும் பொருட்டுறைக் கல்வியைப் பயின்றே தீரல் வேண்டும் என்பது கருத்து. பொருண்மை இயலைப் பயிலாத பெண் எத்தகைய மாண்பு உடையளாயினும் அவள் வாழ்க்கைத் துணையாதற்கு உரியவ ளல்லள் என்று தெளிவு செய்துகொள்க.

## பொருண்மையும் ஒழுக்கமும்

பொருண்மை சிறப்புடையதென்று அதன் அளவில் நின்று, மற்ற ஒழுக்க முறைகளை விடுத்தலாகாது என்பார் முதலில் "மனைத்தக்க மாண்புடைய ளாகி" என்று அருளிப், பின்னர் "தற்கொண்டான் வளத்தக்காள்" என்று அருளினர். பொருண்மையுடன் மற்ற ஒழுக்க வகைகளும் வேண்டற்பாலன என்பது ஆசிரியரது உள்ளக் கிடக்கை.

ஒருத்தி நற்குணமுடையவளாயிருப்பள். அவள் தனது செல்வ நிலையின் வரம்பு கடந்து செலவு செய்பவளாயின், அவளது நற்குணத்தால் வாழ்விலே விளையும் பயன் என்னை? வரவுக்குமேல் செலவு செய்பவளது நற்குணமும் நாளுக்கு நாள் குன்றிவிடும்.

மற்றொருத்தி நற்குணமுடையவளல்லள். ஆனால் அவள் தனது செல்வ நிலைக்கேற்ற அளவில் செலவு செய்ப வள். இதனாலும் வாழ்விலே விளையத்தக்க பயன் விளையாது. ஆகவே நற்குணமும், நற்செய்கையும், நற்செய்கைகளுள் சிறந்த கூறாகிய தற்கொண்டான் வளத்தக்கவளாதலும் இல் வாழ்க்கைக்கு வேண்டற்பாலன. இந்நுட்பத்தை விளக்கு வது இப்பாட்டு. (௧)

## 52

*மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை*
*எனைமாட்சித் தாயினும் இல்.*

### பொருள்

*மனை மாட்சி*-மனையறத்துக்குரிய இயல்பு, *இல்லாள்கண்*-மனையாளிடத்து, *இல் ஆயின்* - இல்லையானால், *வாழ்க்கை* - வாழ்க்கை, *எனை மாட்சித்து ஆயினும்* - எவ்வளவு பெருமை யுடையதாயினும், *இல்* - (அங்கே வாழ்க்கை) இல்லையாகும்.

### கருத்து

மனையாளிடத்து நல்லியல்பு இல்லையானல், அவள் வாழ்க்கை எவ்வளவு பெருமையுடையதாயினும், அது பயன் படாத ஒன்ருகும்

### விருத்தி

முற்பாட்டில் மனைவி தக்க மாண்புடையவளா யிருத்தல் வேண்டுமென்றும், அம்மாண்பின் விதம் இன்னதென்றும் சொல்லப்பட்டன. இப்பாட்டில் அம் மனைமாண்பு இல்லையாயின், பிற மாண்புகளால் பயனில்லை என்று விளக்கப்படுகிறது.

### மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின்

*மனை* - முற்பாட்டின் குறிப்புப் பார்க்க.

*மாட்சி* - இயல்பு; "மரபுநிலை திரியா மாட்சிய வாகி......"—தொல்காப்பியம் : பொருள் : மரபு : கூரு. ('மரபுநிலை திரியாமை தமக்குக் குணமாக உடையவாகி' —பேராசிரியர் உரை).

*கண்* - ஏழாம் வேற்றுமை உருபு; தற்கிழமைப் பொருளின் மேலது.

இல்லாயின் - இல்லையானால்; முற்றும் இன்மை யானால்.

## மனைமாட்சி

மனை மாட்சி - மனையறத்துக்குரிய இயல்பு; அவ்வியல்புகள் நல்லொழுக்கம், வரவுக்கேற்ற செலவு செய்தல், தியாகம், அன்புடைமை, தனக்கென வாழாமை, பிறர்க்கென வாழ்தல், இன்சொல், ஒப்புரவு, விருந்தோம்பல் முதலியன.

## இல்லாள்கண் இல்லாயின்

இல்லாள் - மனையாள்; இல்லுக்குடையாள்; இல்லை ஆள்பவள்; இல்லில் அறத்தொண்டு செய்பவள்; அறிவால் இல்லினை ஆண்டு அன்பால் தொண்டு செய்பவள். தொண்டாவது பயன்கருதாப் பணி. இது தெய்வப்பணி. தொண்டென்பது அடிமை வேலையன்று. இடைக்காலத்தில் சிலரது இருண்ட மனத்தினின்றும் இல்லில் அடிமை வேலை செய்யும் ஆள் இல்லாள் என்னும் புன்மைப்பொருள் எழுந்தது. அஃதழிக.

முற்பாட்டில் மாண்புடைய மனைவி வாழ்க்கைத்துணை என்னப்பட்டாள். இப்பாட்டில் அவள் இல்லாள் என்னப்பட்டாள். வாழ்க்கைத்துணை இயல்பு அப்பாட்டில் ஒல்லும் வகை விளக்கப்பட்டது. அவ்வியல்புடைய வாழ்க்கைத் துணை இல்லையாளும் பெற்றிமை வாய்ந்தவளாதலின், அவள் "இல்லாள்" என்னப்பட்டாள். வாழ்க்கைத் துணையாகாத ஒருத்தி இல்லாளாகமாட்டாளென்க.

விளம்பரத்துக்கோ புறப் புகழ்ச்சிக்கோ மனைமாட்சி பெயரளவில் நிலவுதல் கூடாது. அது மாட்சியும் ஆகாது. அது போலியின்பாற்படும். மனைமாட்சி இல்லாளிடம்

ஒன்றி மணஞ் செய்வதாயிருத்தல்வேண்டும். இதுபற்றியே "இல்லாள்கண்" என்றார்.

"இல்லாயின்" என்பது முற்றும் இன்மையை உணர்த்துவது.

## வாழ்க்கை எனைமாட்சித் தாயினு மில்

வாழ்க்கை - இல்வாழ்க்கை; மனமாசகற்றும் அறநிலையைக் கூட்டுவது; மாண்புடைய இல்லாள் நடாத்தும் இல்வாழ்க்கை.

எனை - எத்தனை, எத்துணை, எவ்வளவு; எல்லாம் என்னலுமாம்.

மாட்சித்து - பெருமையுடையது.

ஆயினும்: உம்மை உயர்வு சிறப்பு.

இல் - இல்லை; எது இல்லை? வாழ்க்கை இல்லை; எனை மாட்சித்தாயினும் அம்மாட்சியில் வாழ்க்கை இல்லை என்றபடி.

"வாழ்க்கை எனைமாட்சித் தாயினும் இல்" - 'அவ்வாழ்க்கை எத்துணை நன்மையுடையதாயினும் ஒரு நன்மையும் இன்றாம்' என்பது மணக்குடவர் உரை; 'அவ்வில்வாழ்க்கை செல்வத்தான் எத்துணை மாட்சியுடையதாயினும் அஃதுடைத்தன்று' என்பது பரிமேலழகர் உரை. "'இல்' என்றார் பயன்படாமையின்" என்பது பரிமேலழகர் குறிப்பு.

### உடன்பாடு - எதிர்மறை

முற்பாட்டில் மனைவியின் மாட்சி உடன்பாட்டு முறையால் விளக்கப்பட்டது. இப்பாட்டிலும் வரும்பாட்டிலும் அம்மாட்சி எதிர்மறை முகத்தான் விளக்கப்பட்டுளது. உண்

மைகளை உடன்பாட்டான் கூறுவதுடன் எதிர்மறையானும் வலியுறுத்துவது ஆசிரியர் மரபு. இது முன்னரும் சில இடங்களில் எடுத்துக் காட்டப்பட்டது.

"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின்" என்பதிலுள்ள "இல்லாயின்" என்பதை நோக்குக. அஃது உணர்த்துவதென்னை? மனைமாட்சி இல்லாள்கண் இருத்தல்வேண்டும் என்னும் உண்மையை உணர்த்தல் காண்க. எதிர்மறைக் கூற்று, கருத்துக்களை நெஞ்சில் பசுமரத் தாணிபோல் பதிவிக்கும் இயல்பினது.

"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின்" என்னாகும்? இதற்கு ஆசிரியர் அளிக்கும் விடையினைக் கூர்ந்து உன்னுக. "வாழ்க்கை எனைமாட்சித் தாயினும் இல்" என்கிறார். வாழ்க்கைக்குரிய மாட்சிகளுள் சிறந்தது மனைமாட்சி என்பதையும், அவ்வொன்றில்லையேல் மற்றவை எல்லாம் பயனிலவாம் என்பதையும் விளக்கியவாறும்.

## மனைமாட்சி ஞாயிறு

மனைமாட்சி ஞாயிறுபோன்றது. மற்ற மாட்சிகள் கோள்கள் போன்றன. ஞாயிறு இல்லாவிடத்துக் கோள்களுக்கு ஒளி ஏது? அவைகள் இருந்தும் இல்லாதனபோலவாகுமல்லவோ? வாழ்க்கையில் எல்லா மாட்சிகளிருந்தும், அதன்கண் மனைமாட்சி ஒன்றில்லையாயின், அம்மாட்சிகளான் விளையும் பயன் என்னை? அவைகள் பிணங்களையொத்தே கிடக்கும்.

இருவித மனைகள் இருக்கின்றன. ஒன்றில் நிலபுலன்கள், கன்று காலிகள், கொடுக்கல் வாங்கல், உண்ணல் உறங்கல், கல்வி கேள்வி ஆராய்ச்சி முதலிய சிறப்புக்களெல்லாம் அமைந்திருக்கின்றன. மற்றொன்றில் இச்சிறப்புக்கள் அமைந்திருக்கவில்லை. இரண்டில் முன்னையதில் மனைமாட்சி இல்லை; பின்னையதில் அம்மாட்சி உண்டு. உலகம் எதை மனையாக்

கொள்ளும்? ஆகவே மாண்புகளிற் சிறந்தது மனைமான பாகும். அம்மாண்பற்ற இடத்திலுள்ள சிறப்புக்களெல்லாட உருவெளியே யாகும்.

வாழ்க்கையில் சிறப்பாக வேண்டற்பாலது ஒன்று அது மனைமாட்சி. (உ

## 53

இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்
இல்லவள் மாணுக் கடை.

### பொருள்

இல்லவள் - மனையாள், மாண்பு ஆனல் - மாட்சிமை யுடைவளானல், இல்லது என் - (அவள் வாழ்க்கையில்) இல்லாதது என்ன? (எல்லாம் உண்டு), இல்லவள் - மனையாள், மாணு கடை (ஆனல்) - மாட்சிமையில்லாத கடையவளானல், உள்ளது என் - (அவள் வாழ்க்கையில்) உள்ளது என்ன? (ஒன்றுமில்லை.)

### கருத்து

மனையாள் மாண்பே வாழ்க்கையின் நிறைவு.

### விருத்தி

முற்பாட்டின் கருத்தே இப்பாட்டில் அநுவதித்துக் கூறப்பட்டது.

'ஒருவனுக்கு மனையாள் மாட்சிமை யுடையாளானல், எல்லாம் இலனேயாயினும் இல்லாதது யாது? மனையாள் மாட்சிமை இல்லாளானல், எல்லாம் உடையனுயினும் உண்டானது யாது?'—மணக்குடவர்.

'ஒருவனுக்கு இல்லாள் நற்குண நற்செய்கையளா யினக்கால் இல்லாதது யாது? அவள் அன்னள் அல்லாக் கால் உள்ளது யாது?'—பரிமேலழகர்.

**இல்லதென்...............கடை**

இல்லவள் - இல்லையுடையவள் ; இல்லினுக்கரசி.

மாண்பு - மாண்பு உடையவள் : ஆகுபெயர்.

மாண்பு - குணம் ; இங்கே குணிமேல் நின்றது. மாண்மைபற்றிய குறிப்புக்களை முற்பாக்களிற் பார்க்க.

"இல்லவள் மாண்பானல்" என்பதற்கு இல்லாள்கண் மாண்பு உளதாமாகுல் என்று பொருள் கூறுவோருமுளர்.

இல்லதென் - வாழ்க்கையில் இல்லாதது யாது? எல்லாம் உண்டு என்றபடி.

மாணுக்கடை - மாணுத கடை ; மாணு : ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

மாணு - மாட்சியில்லாத ; மாட்சிமைப்படாத.

கடை - கடையவள் ; கீழ்மைப்பட்டவள் : ஆகு பெயர்.

ஆனுல் என்பதை வருவித்து, மாணுக்கடையானுல் என்று கொண்டு பொருள் கூறுக.

"கடை"யை வினையெச்ச விகுதியாக் கொண்டு பொருள் கூறலுமாம்.

உள்ளது என் - வாழ்க்கையில் உள்ளது யாது? ஒன்றுமில்லை என்றபடி.

## இருவித இல்லவள்

முதல் "இல்லவள்" மாண்புடையவள். இரண்டாம் "இல்லவள்" மாண்பில்லாக் கடையவள். இவ்வேற்றுமை யுணர்த்த ஒரு சொல்லே இருமுறை பெய்யப்பட்டது. வெறும் "இல்லவள்" என்னுஞ் சொல்லைக் கண்டு ஏமாறலாகாது என்பதையும், மாண்புப்பொருளுடையவளே இல்லவளாவள் என்பதையும் விளங்கச் செய்தவாறும். முன்னைய 'இல்லவள்'

என்னுஞ்சொல் மாண்புப் பொருளுடையது; பின்னையது வெறுஞ் சொல் வழக்குடையது.

"இல்லவள் மாண்பானல் இல்லதென்"? இதையே "இல்லவள் மாணுக்கடையானல் உள்ளதென்" என்று வேறு முறையில் கூறியுள்ளனர். பின்னையது முன்னையதில் அடங்கி நிற்கிறது. பிரித்துக் கூறியதன் நோக்கம் இல்லவளின் மாண்பைச் சிறப்பிக்கவேண்டி என்க.

## இல்லவள் மாண்பு

முற்பாக்கள் இரண்டையும் இப்பாட்டையும் ஒருமைப் படுத்திப் பார்த்தல் வேண்டும். பார்த்தால் இல்லாளது மாண்பே மாண்பு என்பதும், மற்ற மாண்புகள் மாண்புக ளல்ல என்பதும் நனிவிளங்கும்.

ஒரு மனையில் இல்லவள் மாண்புடையவளா யிருக் கிறாள். அம்மனையில் மற்ற மாண்புகள் இருத்தலும் ஒன்றே; இல்லாததும் ஒன்றே. மாண்புடைய இல்லாளிடம் எல்லா மாண்புகளும் இயல்பாகவே விளங்கும். இதுபற்றியே, "இல்ல வள் மாண்பானல் இல்லாததென்" என்றார்.

மற்றொரு மனையில் எல்லா மாண்புகளும் இருக்கின்றன; ஆனல் இல்லாளிடத்தில் மட்டும் மாண்பில்லை. அம்மனை, மாண்பற்றதொன்றாகும். இதுபற்றியே "இல்லவள் மாணுக் கடை(யானல்) உள்ளதென்" என்றார்.

## மாண்புண்மை இன்மை

மாண்புடைய இல்லவளிடம் அறப்பொலிவு அரும்பி மலர்ந்து நிற்கும். அப்பொலிவு மணம் அவள் அளவில் நில் லாது எங்கணுங் கமழும். அவள் தோற்றமே மனையாக விளங்கும். மனைநிறைந்த மனைவியாக அவள் திகழ்வள். அவள்பால் தாய்மை தவழும். தாய்மை எல்லா மாண்புகளையும்

ஈனும். எல்லாவற்றிற்கும் அடிப்படை இல்லவளிடம் மாண் புண்மை. மாண்புடைய இல்லவள் வதியுமிடத்தில் எல்லா மாண்புகளும் இருக்கும். அங்கு இல்லாத தொன்றில்லை. "இல்லவள் மாண்பானால் இல்லாததென்?"

மாண்பில்லா இல்லவளை இருள் சூழ்ந்து நெருக்கும். அவ்விருள் அவள் வதியும் மனையிலும் படரும். இருளிலே தாய்மைக்கு இடமேது? மாண்புகள் சுரவா. உள்ள மாண்பு களும் ஒழியும். மனை பாழாகும். "இல்லவள் மாணக்கடை யானால்) உள்ளதென்".

மாண்புடைய மனையாள் கற்பகப் பூம்பொழில்; மற்ற வள் வற்றல் மரம். அவள் சீதேவி; இவள் மூதேவி. அவள் ஒளி; இவள் இருள். ஒளியில் தோற்றத் தாய்மை யுண்டு; இருளில் அஃதேது? அவள் உள்ள இடத்தில் மாண்பெலாம் சுரக்கும். இவள் உள்ள இடத்தில் உள்ளதும் போகும். ஆதலின் இல்லவள் மாண்புடையளாதல் சிறப்பு.

மாண்புடை இல்லவள் தொகை பெருகப்பெருக மனை யும், ஊரும், உலகமும் நலனுறும். மற்றவள் தொகை பெருகப் பெருக மனையும், ஊரும், உலகமும் பாழ்படும். இன்னோரன்ன காரணம் பல கொண்டு ஆசிரியர் இல்லவள் மாண்புடைமையை வலியுறுத்திப் பேசினரென்க. (௩)

ii) கற்பு

## 54

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

போருள்

பெண்ணின் - பெண்மையினும், பெருந்தக்க - பெருந் தகையன, யா உள - எவை இருக்கின்றன? கற்பு என்னும்

திண்மை - கற்பு என்னும் உறுதி, உண்டாக பெறின் - உண்டாகப் பெற்றால்.

கருத்து

கற்புடைப் பெண்மையினுஞ் சிறந்ததொன்றில்லை.

விருத்தி

மேற்பாக்களில் பெண்ணின் மாண்பு விளக்கப்பட்டது. அம்மாண்பின் உயிர் நாடி கற்பு. இப்பாட்டும் தொடர்ந்து வரும் பாட்டுக்களும் கற்புத் திறங்களைச் சிறப்பிப்பவை.

## பெண்ணிற் பெருந்தக்க யாவுள ?

பெண்ணின் - பெண்ணினும்; பெண்மையைப் பார்க்கினும்; இன் : ஐந்தனுருபு; உறழ்பொரு.

பெண்ணின் - பெண்ணைப்போல என்று பொருள் கூறுவோரும் உளர்; இங்கே இன் : உவமப்பொரு.

பெருந்தக்க - பெருந்தக்கன; பெருந்தகையன; பெருந்தகைமையன; பெருந்தன்மையன; பெருந் தகைமை - பெருந்தன்மை - உடையன; 'மேம்பட்டன' என்பர் மணக்குடவர்; 'மேம்பட்ட பொருள்கள்' என்பர் பரிமேலழகர்.

தக்க: தகு முன்னிலை.

தக்க - தகுதியுடையன; தகைமையுடையன.

தக்க: வினையாலணையும் பெயர்.

யா உள - எவை இருக்கின்றன - வேறு எவை இருக்கின்றன? ஒன்றுமில்லை என்றபடி.

யா : வினப்பெயர், பன்மை.

யா உள : அஃறிணை முடிபு; இம்முடிவு கொண்டே பெண்ணுக்குப் பெண்மைப் பொருள் கூறப்பட்டது. 'பெண் பிறப்பு' என்று மணக்குடவரும், 'இல்லாள்'

என்று பரிமேலழகரும் பொருள் கொண்டமை ஈண்டுக் கருதற்பாலது.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள" - 'பெண் பிறப்புப்போல மேம்பட்டன யா உள'—மணக்குடவர்; 'ஒருவன் எய்தும் பொருள்களுள் இல்லாளின் மேம்பட்ட பொருள்கள் யாவை உள'—பரிமேலழகர்.

## பெண்ணின்

பெண் - பெண்மை; பெண் தன்மை; 'கண்ணோர்ந்த நலத்தாரைக் கதுமெனக் கண்டவர்க்கு - உண்ணின்று நோய்மிக உயிரெஞ்சு துயர்செய்தல் - பெண்ணன்று புனையிழா யெனக்கூறித் தொழூஉம்...'; '........தன் கண்ணினும் முகத்தினும் நகுபவள் பெண்ணின்றி யாவரும் தண்குரல் கேட்ப...'—கலித்தொகை : ௬௦ : ௩ - ௭; ௧௪௨ : ௭ - ௬. (பெண் அன்று - பெண்தன்மை அன்று; பெண் இன்றி - பெண்தன்மை இன்றி—நச்சினார்க்கினியர்.)

பெண்மை - அமைதித் தன்மை; 'கட்டில் நாயகோர் அமைதித் தன்மை' என்பர் நக்கீரனார் (களவியலுரை).

பெண்மையைப் பற்றிப் "பெண்ணின் பெருமை" என்னும் நூலில், 'பெண்ணின் முதன்மை' என்னும் பகுதியில் விரித்துக் கூறியுள்ளேன். விரிவு ஆண்டுக் காண்க.

பெண்மை - பெண் : கடைக்குறை. பெண், பெண் வடிவங்கொண்ட ஒருத்தியைக் குறிக்கும்போது அஃது ஆகு பெயராய் நின்று பொருளுணர்த்தும். தமிழ் மொழியில் பெண்ணுக்குரிய பல பெயர்கள் ஆகு பெயர்களே. மாதர் முதலிய பெயர்களை ஆய்க. (மாதர் - அழகு; ஆகுபெயராய் மகளிரை உணர்த்தும்). ஈண்டுப் பாட்டிலுள்ள பெண், பெண்மையை உணர்த்தலால் ஆகுபெயரன்று; இயற் பெயர்.

## பெண்மை ஆண்மை

இயற்கை உலகில் இருவிதத் தன்மைகள் இருக்கின்றன. ஒன்று பெண்மை; மற்றொன்று ஆண்மை. பெண்மை அமைதியுடையது. ஆண்மை அமைதியில்லாதது. ஆண்மை பெண்மையால் அமைதியுற்றுப் பண்படுதல் இயல்பு. அமைதி விளைவுக்கென்று பெண்மை இயற்கையில் அமைந்திருக்கிறது. இதுபற்றியே, பெண் ஆண் சேர்க்கை இயற்கையின் பாலதென்றும், வாழ்வுக்கு அது வேண்டற்பாலதென்றும் சான்றோர் பலரும் அறிவுறுத்திச் சென்றனர்.

## பெண்மைப் பொதுமை

பெண்மைக் குணம் பொது. அது படியுமிடத்தில் அமைதி நிலவி அறிவு விளங்கும். அமைதியில் அறிவு விளக்கமுறல் அநுபவத்தில் அறியத்தக்கது. இவ்வுண்மையையுணர்ந்த தெய்வப் புலவோர் அமைதிப் பெண்ணை அறிவுத் தெய்வமாக - கலைக்கடவுளாக - கொள்ளுமாறு உலகுக்கு உணர்த்தலாயினர். உலகில் அன்பரென்றும், அடியவரென்றும், ஞானியரென்றும், வீரரென்றும், பாவலரென்றும், ஓவியரென்றும் போற்றப்பெறும் ஆடவரனைவரும் அமைதித் தன்மை என்னும் பெண்மை விளங்கப்பெற்ற பெரியவரேயாவர். இவர்தம் முகங்களை உற்று நோக்கினால் அவைகளில் பெண்மை தவழ்தல் காணலாம். 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்'; 'அகமே புறம்' என்பன பழமொழிகள். பெண்மை விளங்கப் பெறாதவர் எத்துறையிலும் பெரியவராகார். அவர் இரக்கமற்ற அரக்கராகவும், கொலைஞராகவும் உலகிடை வதிந்து மாள்வர்.

## பெண்மையும் மகளிரும்

பெண்மை, பொதுமைக் குணமாயினும் அஃது இயல்பாக மகளிருலகிலேயே பெரிதும் சிறந்து விளங்கும். இத

ணுல் மகளிருலகம் பெண் - பெண்மை உலகம் என்று வழங்கப்படுகிறது. பெண்மை, மகளிருலகில் இயல்பாகவே சிறந்து விளங்குதற்குக் காரணமென்னை? இதற்கு உயிர்களின் தோற்ற வளர்ச்சியை ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். பார்த்தால் காடு முரடான ஆணுலகைக் கடந்து மலர்வது பெண்ணுலகம் என்னும் நுட்பம் இனிது விளங்கும். ஈண்டு ஆண் - பெண் உலகு என்றது உயர்திணையைப் பற்றிய தென்க; அஃறிணையைப் பற்றியதன்றென்க.

## புறனடை

எதற்கும் புறனடையுண்டன்றோ? மகளிருலகிலும் புறனடையுண்டு. மகளிர் வடிவம் மட்டும் தாங்கி, அகத்தே பெண்மை தாங்கும் பேறு பெறாதாரும் உளர். இவர் பெண்ணாகார். இவர் பேயர். இவர் பெண்ணுலகுக்குப் புறம்பானவர். மகளிரிடமும் பெண்மை வேண்டுமென்பதைக் கீழ்வரும் தமிழ்ப் பாக்களிற் பார்க்க.

"பெண்மையும் இலளாகி அழுதலும் அழூஉம்"

—கலித்தொகை : ௧௪௭ : ௧௦

"சீர்நலங் கடந்த கேம சரியெனத் திசைக ளெல்லாம்
பேர்நலம் பொறித்த பெண்மைப் பெருவிளக் காகி நின்றாள்"

—சிந்தாமணி : 1450

"பிறையெனு நுதலவள் பெண்மை யென்படும்"

—கம்பர் : மிதிலை : ௪௦

## அமைதி

உயிர்கள் வாழ்வில் அடையத் தக்க பேறுகள் பல. அவைகளுள் சிறந்தது அமைதி. முழு அமைதியே இறுதிப் பேறு என்று அநுபூதிமான்கள் அருளியுள்ளார்கள். முழு அமைதிக்குத் துணை செய்யும் முறையில், அமைதித் தன்மை

அதாவது பெண்மை ஒரு வடிவங் கொள்கிறது. இறுதிப் பேறாகிய அமைதியை வழங்கும் பெண்மைக்கு ஒப்பாகவோ உயர்வாகவோ எதைக் கூறுதல் கூடும்?

எவ்வுயிரும் அமைதியை நாடுகிறது. அமைதியை நாடாத உயிர் இல்லை. அமைதி நாட்டங் கொள்வதில் உயிர் வகைக்குள் வேற்றுமை கிடையாது. அமைதி நாட்டம் உயிரின் இயல்பென்றே தோன்றுகிறது. இதனால் விளங்குவ தென்னை? ஒவ்வோருயிரும் பெண்மைபெற அறிந்தோ அறியாமலோ முயல்கிறது என்பது விளங்குகிறது. இப் பெற்றி வாய்ந்த பெண்மையினும் சிறந்த ஒன்று என்று எதைக் கொள்வது?

## இறைமையில் பெண்மை

இயற்கை வடிவான இறையினிடத்தில் இரு கூறுகளிருக் கின்றன, ஒன்று வெம்மை; மற்றொன்று தண்மை. வெம் மையை ஆணென்றும், தண்மையைப் பெண்ணென்றும் கூறு தல் மரபு. இறையினிடம் தண்மைப் பெண்மை இருத்தலால் அது கருணையுடையதாய், உயிர்கட்கு நலஞ் செய்வதாகிறது. தண்மைப் பெண்மை இறையினிடம் இல்லையேல் அஃது என் செய்ய வல்லதாகும்?

"சிவமெனும் பொருளும் ஆதி சத்தியொடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம்
அவள் பிரிந்திடின் இயங்குதற்கும்
அரிதெனுமறை இயம்புமால்"—சௌந்தரியலகரி

"சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலகை மெல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண குணியு மாகி
வைத்தனன் அவளால் வந்த ஆக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்"
—சித்தியார்

" பைங்கொடி யாளும் பரம னிருந்திடத்
திண்கொடி யாகத் திகழ்தரு சோதியாம்
விண்கொடி யாகி விளங்கி வருதலால்
பெண்கொடி யாக நடந்த துலகே"—திருமந்திரம்

இப்பெரு மொழிகளை நோக்குக. சக்தி யென்னும் பெண்ணின் பெருமை புலனாகும்.

'பெருந்தக்க யா உள?

இவ்வினாவிற்கு என்ன விடை இறுப்பது? ஒன்று மில்லை என்றே கூறுதல் வேண்டும். இங்கே திருஞான சம்பந்தர் பாட்டொன்று நினைவுக்கு வருகிறது.

திருஞானசம்பந்தர் கடவுளை அம்மையப்பராகக் கண்டவர். அவர் தாங்கண்ட காட்சியைப் பெரிதும் பாடல்களில் அமைத்துச் சிறப்பிப்பது வழக்கம். அப்பாடல்கள் பல. இங்கே ஒன்றை எடுத்துக் காட்டுவது நலம்.

" மண்ணினல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல்ல கதிக்கி யாதுமோர் குறைவிலை
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே"

இத்திருப்பாட்டில் பலதிற நுட்பங்கள் உண்டு. அவைகளை இங்கே விரித்துக் கூறவேண்டுவதில்லை. பாட்டின் இறுதி அடியை ஊன்றிப் பார்க்க. அதன் பொருளை உன்னுக. அதன்கண் செறியும் நுட்பம் விளங்கும்.

திருஞானசம்பந்தர் இறைவனைப் பெருந்தகை என்கிறார். அப்பெருந்தகையை அவர் எப்படி விளக்குகிறார்? 'பெண்ணினல் லாளொடும் பெருந்தகை இருந்ததே' என்று விளக்குகிறார். பெண்ணி னல்லாளொடும் இறைவன் ஒன்றி நிற்றலால் அவன் பெருந்தகைமை யுடையவனாகிறான் என்பது நுட்பம். பெருந்தகைமைக்கு மூலம் எது? பெண்மை

யன்றோ ? தன்னை அடைந்தவரைப் பெருந்தகையராக்கும் பெருந்தகைமை பெண்மையெனில், அதன் பெருந்தகைமைக்குமேல் எப்பெருந்தகைமையைக் கூறுவது ?

## இயற்கைப் புலவர்

திருவள்ளுவர் ஏட்டுப் புலவரல்லர். அவர் இயற்கைப் புலவர். திருவள்ளுவர் இயற்கையிற்படிந்து இயற்கைப்புலம் பெற்றவர். அதனால் அவருக்குப் பெண்மையின் பெருந்தகைமை நன்கு புலனாயிருக்கும். அதை உலகுக்குப் 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள' என்று உணர்த்துகிறார். ஏட்டுக் கல்வியளவில் நில்லாது, இயற்கை வாழ்வில் ஈடுபட்டோர்க்குத் திருவள்ளுவர் உள்ளம் தெள்ளிதில் விளங்கும்.

## கற்பென்னுந் திண்மை உண்டாகப் பெறின்

கற்பாவது பெண்மையின் உயிர்ப்பு.

கற்பு : கல் - பகுதி ; பு - விகுதி ; கல்வி - கற்றல் - என்பது பொருள்.

“ தொலையாக் கற்ப நின்னிலை கண்டிகுமே”, “உலகந் தாங்கிய மேம்படு கற்பின் வில்லோர் ”—பதிற்றுப்பத்து : சங : நக ; ருக : அ. (கற்ப - கல்வியுடையாய்); “கற்பினை யழிக்கத் திருவுள்ளமோ ”—ஞானசம்பந்தர் (கற்பினை - கல்வியை ; கலையை) ; “ கற்றாரைக் கற்றாரே காமுறுவர் கற்பில்லா - மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் ”—ஔவையார்.

திண்மை-உறுதி; கலங்கா நிலை என்பர் பரிமேலழகர்.

உண்டாகப் பெறின்-விளையப் பெற்றால் ; பெண்மை நிலத்தில் கற்புப் பயிர் விளையப்பெற்றால்.

## கற்பென்னுந் திண்மை

கல்வி - கற்றல் - என்னும் பொருளுடைய கற்பு என்பது பெண்மக்களின் நிறையொழுக்கத்துக்குப் பெரிதும் வழங்

கப்படுகிறது. இவ்வழக்குக் கொண்டு பின் வந்தவர் கற்பு என்னுஞ் சொற்குப் பலவிதப் பொருள் கூறிப் பெண்ணடிமையும் கற்பித்தனர். கற்பின் முதல்நிலை கொண்டு அதற்குப் பொருள் கூறுவது பொருத்தம்.

கற்பு, கல்வி - கற்றல் - என்னும் பொருளுணர்த்தும் போது அதை இயற்பெயராக் கொள்க; அது நிறை யொழுக்கத்தைக் குறிக்கும்போது அதை ஆகுபெயராக் கொள்க.

கல்வியின் நோக்கம் என்ன ? ஒழுக்கத்தை உண்டு பண்ணுவது. ஒழுக்கத்தை உண்டுபண்ணாதது கல்வியாகாது. கல்வியே ஒழுக்கமாகி வாழ்க்கைக்கு நலஞ்செய்கிறது. ஒழுக்கத்தை உண்டுபண்ணுங் கல்வி கற்பென்று வழங்கலாயிற்று. (சில வழக்காறுகள் இலக்கிய இலக்கண வரம்புகளை மீறிப் போவதுண்டு. நாளடைவில் அவைகள் இலக்கிய இலக்கண உலகில் புகுந்து பண்பு பெறுவதுமுண்டு.)

"கற்பென்னுந் திண்மை" என்கிறார் ஆசிரியர். இது கற்புக்கும் திண்மைக்கும் ஏதாயினும் தொடர்பிருக்குமா என்னும் ஐயத்தை எழுப்புகிறது. கல்லென உறுதியாகக் கலங்காமல் இருப்பது திண்மை. கற்புக்கு முதல் நிலை கல். கற்றிண்மை போன்றது கற்பு என்று ஒருபோது மக்களால் கொள்ளப்பட்டுமிருக்கலாம். இப்பொருள் இலக்கண வரம்புடையதன்று. இதைத் தொனிக்குறிப்புக் கண்கொண்டு பார்ப்பது நலம். திருமணத்தின்போது பெண்மணியின் கால்விரலை ஆண்மகன்பற்றி எடுத்துக் கல்லின்மீது வைக்கும் இடைக்கால வழக்கும் ஈண்டுக் கருதற்பாலது. "கல்லூர்ப் பெருமணம்" என்றார் ஞானசம்பந்தர். "அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழி" என்பது ஆண்டாள் திருவாக்கு.

"கற்பென்னுந் திண்மை" என்பது, உயிர்க்கிறுதி நேரும் இடர்வரினும் கற்பினின்றுங் கலங்காமையை உணர்த்துவது.

## உண்டாகப் பெறின்

கற்பு, தானே இயல்பாக உண்டாவது. அது பிறர் முயற்சியால் உண்டாக்கப்படுவதன்று. இதுபற்றியே, "உண்டாகப் பெறின்" என்றார்.

கற்பென்னுந் திண்மை உண்டாகப் பெறின், பெண் பெருந்தகைமை யுடையவளாவள்; இல்லையேல் பெண் பெருந்தகைமையுடையவளாகாள். இதை உணர்த்துவது, "பெறின்" என்பது. "பெறின்" என்பது, பெண்மைப் பேற்றிற்குக் கற்பென்னுந் திண்மை உண்டாதல் வேண்டும் என்னும் இன்றியமையாமையை வலியுறுத்துவது. இங்கே பெண்மைக்கும் கற்புக்கும் உள்ள தொடர்பை உன்னுக. பெண்ணுக்குப் பெருந்தகைமை வழங்குவது கற்பென்க.

### பெண்மையும் திண்மையும்

பெண்ணிற் பெருந்தக்க யாவுள? ஒன்றுமில்லை. எப்பொழுது? இதற்கு விடையெனக் "கற்பென்னுந் திண்மை யுண்டாகப் பெறின்" என்பது திகழ்தல் காண்க.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள"? ஒன்றுமில்லை. இவ்வளவில் ஆசிரியர் நின்றுவிடுகிறாரா? இல்லை. அவர் நெஞ்சம் மேலுஞ் செல்கிறது; சென்று அறிவை எழுப்புகிறது. பெண்ணினும் பெருந்தகைமையுடையன வேறின்மைக்கு அப்பெண்ணிடம் ஏதேனுஞ் சிறப்புண்டா என்று ஆராய அறிவு விரைகிறது; விரைந்து உண்மை காண்கிறது; கண்டு நெஞ்சுக்கு விருந்தமுதம் நல்குகிறது. ஆசிரியர் நெஞ்சில், "கற்பென்னுந் திண்மை யுண்டாகப் பெறின்" என்பது முகிழ்த்தெழுந்தது.

"கற்பென்னுந் திண்மை யுண்டாகப் பெறின்" என்பதில்லையேல், "பெண்ணிற் பெருந்தக்க யாவுள" என்பது மணம் பெறாது. "பெண்ணிற் பெருந்தக்க யாவுள" என்பது

குறையாக நிற்கும். குறையை நிறைவு செய்வது, "கற்பென்னுந் திண்மை யுண்டாகப் பெறின்" என்பது.

## கொண்டு கூட்டு

"கற்பென்னுந் திண்மை யுண்டாகப் பெறின், பெண்ணிற் பெருந்தக்க யாவுள" என்று கொண்டு கூட்டிப் பொருள் உரைக்கவில்லை. ஏன்? கொண்டு கூட்டிப் பொருள் உரைத்தால் பாட்டின் உள்ளமும் உணர்வும் கெட்டுப்போகும்; 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள; ஒன்றுமில்லை' என்ற அளவில் சிந்தனை சிறைப்பட்டுவிடும். கொண்டு கூட்டாமை, மேலும் மேலும் சிந்தனை சக்தியை எழுப்புவதாகிறது. சிந்தனை சென்று சென்று, "கற்பென்னும் திண்மை யுண்டாகப் பெறின்" என்னும் விருந்தமுதைக் கொணர்ந்து ஊட்டுகிறது. கொண்டு கூட்டிப் பொருளுரைத்தால் சிந்தனையும் எழாது; "கற்பென்னுந் திண்மை யுண்டாகப் பெறின்" என்பதும் விருந்தமுதாகத் தோன்றாது. பிறவற்றை ஊகித்துக்கொள்க.

## கற்பு

இப்பாட்டை நோக்குழி இரண்டு மாண்புக்கூறுகள் காட்சி அளிக்கின்றன. ஒன்று பெண்மை; மற்றொன்று கற்பு. இவ்விரண்டில் எதைப் பொருளாக்கொண்டு இப்பாட்டு எழுந்தது? கற்பைப் பொருளாக்கொண்டு இப்பாட்டு எழுந்ததென்று அறுதியிட்டுக் கூறலாம். பாட்டிற் படிந்து பாட்டின் உள்ளக்கிடக்கையில் ஒன்றிப் பார்த்தால், பெண்ணின் பெருந்தகைமை விளங்கும் முறையில் கற்பின் திறத்தை இப்பாட்டுச் சிறப்பித்துக் கூறுகிறது என்னும் நுட்பம் இனிது புலப்படும். கற்பென்னுந் திண்மையே இப்பாட்டின் பொருண்மை. கற்பென்னுந் திண்மை இல்லாவிடத்துப் பெண்ணுக்குப் பெருந்தகைமை ஏது? ஆதலின் கற்பைப் பொருளாக் கொண்டெழுந்தது இப்பாட்டென்க.

பெண்மைக்குப் பிறப்பிடம் எது ? கற்பு. கற்பினின்றும் முகிழ்ப்பது பெண்மை. பெண்மைக்கு உயிர்ப்பாயிருப்பது கற்பு. நாடி நரம்பு எலும்பு தோல்களால் கட்டப்பட்ட ஒன்று மட்டும் பெண்மையுடையதாகாது. கற்பாகிய உயிர்ப்பு, நாடி நரம்புகளிற் கலந்து, எலும்பு தோல்களிற் புகுந்து, மலர்ந்து பெண்மையாகிறது. இக்கற்புப் பெண்மையுடையவளே மகளாவள். கற்பென்னுந் திண்மையினின்றும் பெண்மை பிறத்தலால், அப் "பெண்ணிற் பெருந்தக்கயாவுள" என்று ஆசிரியர் வினவுகிறார்.

இவ்வதிகாரத்தில் முதல் மூன்று பாக்களில் பெண்ணின் மாண்பு கூறப்பட்டது. மாண்பு பொது. மாண்பின் சிறந்த ஒன்றும், சிறந்த ஒன்றன் உயிர்ப்பும் இப்பாட்டில் சொல்லப்பட்டுள்ளன. சிறந்த ஒன்று பெண்மை ; பெண்மையின் உயிர்ப்பு கற்பு. கற்பு, பெண்மையாகி, பெண்மை மாண்பாதல் வேண்டும். இம்மூன்றுமுடையவள் வாழ்க்கைத் துணைக்குரிய இல்லாளாவள். இல்லாளின் உயிர்நாடி கற்பாதலின், இப்பாவிலும், வரும் பாக்களிலும் கற்பு, பலபல வழிகளில் வலியுறுத்தப்படுகிறது. இப்பாட்டில் கற்பு, தொகை முறையில் சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற பாக்களில் அது வகை முறையில் விளக்கப்பட்டிருக்கிறது. (ச)

## 55

சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

### பொருள்

மகளிர் - பெண்மக்களை, சிறை காக்கும் காப்பு-(பிறரால் இடப்படும்) சிறை காக்குங் காவல், எவன் செய்யும் என்ன செய்யும் ? மகளிர் - அப்பெண்மக்களது, நிறை

காக்கும் காப்பே - கற்பு (அவர்களைக்) காக்குங் காவலே,. தலை - தலையாயது.

### கருத்து

பிறரிடுஞ் சிறை மகளிரின் கற்பைக் காப்பதாகாது; மகளிரின் நிறையே அவரைக் காப்பதாகும்.

### விருத்தி

முன் பாட்டில் ஆசிரியர் பெண்ணின் பெருந்தகைமை கற்பிலுண்டு என்றார். இப்பாட்டில் அக்கற்பு, பிறர் கட்டுப் பாட்டால் வளர்வது அன்று என்றும், அஃது இயற்கையாக மகளிர் நிறையில் வளர்வது என்றும் கூறுகிறார்.

'மகளிரைச் சிறைசெய்து காக்கும் காவல் யாதினைச் செய்யும்? அவரது கற்புக் காக்குங் காவலே தலையான காவல்'—மணக்குடவர்.

'மகளிரைத் தலைவர் சிறையாற் காக்கும் காவல் என்ன பயனைச் செய்யும்? அவர் தமது நிறையால் காக்குங் காவலே தலையாய காவல்'—பரிமேலழகர்.

## சிறை காக்குங்காப் பெவன் செய்யும் ?

சிறை - பிறரிடுஞ் செயற்கைச் சிறை.

சிறை - தடை, கட்டு, காவல், உரிமையைக் கட்டுப் படுத்தல்.

சிறை பலவகை. 'மதிலும் வாயற் காவலும் முதலாயின' என்பர் பரிமேலழகர்.

காக்கும் - பாதுகாக்கும்.

"சிறை காக்கும்" என்பதற்குச் சிறை செய்து காக்கும் என்றும், சிறையால் காக்கும் என்றும் பொருள் கூறலாம்.

காப்பு - காத்தல், காவல்; தொழிற்பெயர்.

எவன் - என், யாது; இச்சொல் ஆசிரியரால் பல இடங்களில் பெய்யப்படுவது.

எவன் செய்யும் - என்ன செய்யும்? ஒன்றுஞ் செய்யா தென்றபடி.

## சிறை

பெண் மக்களும் ஆண்மக்கள் போன்றவர்களே. இரு பாலார்க்கும் அறிவு உண்டு; நெஞ்சம் உண்டு. கற்பு என்பது இருவர்க்கும் பொதுவாயிருப்பது. அறிவால் நெஞ்சை நிறுத்திக் கற்பைக் காக்கும் பொறுப்பு இருசாரார்க்கும் உண்டு. இங்ஙனமாக ஆண்பாலார், பெண்பாலார் கற்பின்மீது மட்டும் பெருங் கவலை செலுத்தி அவரைச் சிறை செய்யப் புகுவது நாகரிகமாகாது.

சிறை, பெண் மக்களின் உடலைக் கட்டுப்படுத்துவதாகலாம். அஃது அவர்களின் மனத்தைக் கட்டுப்படுத்துவதாகுமா? கற்பு என்பது, மன உறுதியைப் பொறுத்து நிற்பது. மன உறுதி குலைந்தால் கற்பு நெகிழ்ந்துவிடும்.

> 'மனுஷனுக்குள்ளிருந்து வெளிப்படுகிறதே மனுஷனைத் தீட்டுப்படுத்தும். எப்படியென்னில், மனுஷருடைய இருதயத்திலிருந்து பொல்லாத சிந்தனைகள் வெளிப்படுகின்றன. வேசித்தனம் களவு கொலை விபசாரம் பொருளாசை பொல்லாப்பு கபடு காமவிகாரம் வன்கண் நிந்தனை பெருமை மதிகேடுகள் என்கிறவைகளே. பொல்லாங்கான இவையெல்லாம் உள்ளத்திலிருந்து வெளிப்பட்டு மனுஷனைத் தீட்டுப்படுத்தும் என்றார்'
>
> —மார்க்கு : 8 ; 20 - 23

## காக்குங் காப்பு

எது காக்குங் காப்பு? சிறை காக்குங் காப்பு; பிறரிடுஞ் சிறை காக்குங் காப்பு; செயற்கைச் சிறை காக்குங் காப்பு.

சிறையால் பெண்மக்களின் கற்பைக் காக்க முயல்வது, சிறப்பு முறையில் அதைக் காப்பதாகாது. அவநம்பிக்கையால்

மகளைச் சிறைப்படுத்திப் பூட்டிடுவது சில சமயம் அவளது நன்மனத்துக்கும் கேடு சூழத் துணைசெய்வதாகும்.

ஒருத்தி சிறைக்காவலில் வைக்கப்பட்டாள்; மற்றொருத்தி அக்காவலில் வைக்கப்படவில்லை. இவ்விருவருள் முன்னவள் மனம் பல வழியில் ஓடி ஓடி உழல்வதற்கு இடம் பெறுவதாயினும் ஆகும். பின்னவள் மனம் அவ்வாறு ஓடி உழல்வதற்கு இடம் பெறல் அரிது. ஆகவே, நிறை எவள் பால் நிலவும்? உன்னுக.

## எவன் செய்யும்?

நிறை காத்தலும் காவாமையும் பெண்மக்களின் மனோநிலையைப் பொறுத்து நிற்பன. அவை சிறைகாக்குங் காவலில் இல்லை. இதுபற்றியே, "சிறைகாக்குங் காப்பு எவன் செய்யும்" என்றார். இயற்கைச் சிறைக்காவல் என்ன செய்யும் என்றபடி.

## மறுப்பு

திருவள்ளுவர் பழந்தமிழர். பழந்தமிழர் நாகரிகம் களவு மணத்தை அடிப்படையாகக் கொண்டது. அவர்தம் நாகரிகத்தில் பெண்மணிகளைச் சிறைசெய்து காக்கும் முறைமை கிடையாது. பின்னைத் திருவள்ளுவர் கருத்துச் சிறை காக்குங் காப்பின்மீது சென்றதென்னை?

திருவள்ளுவர் பெண்மக்களைச் சிறைசெய்து காக்கும் முறைமையைப் பிறர் வாயிலாகக் கேட்டிருத்தல் வேண்டும்; அல்லது அம்முறைமை பிற நாட்டினின்றுந் தமிழ்நாட்டில் குடிபுகுந்ததைக் கண்டிருத்தல் வேண்டும். திருவள்ளுவர் காலத்திலே பிற நாட்டார் தமிழ்நாடு புகுந்ததைச் சரிதங்களிற் காண்க.

பெண்களைச் சிறைசெய்து காக்கும் முறை இயற்கைக்கு மாறுபட்ட தொன்றாதலின், அதைச் "சிறைகாக்கும் காப்பெவன் செய்யும்" என்று வினவு முகத்தான் ஆசிரியர் மறுத்தரு

னினர். பெண்ணுரிமை காக்கப்படவேண்டுமென்பது அவர்தங் கருத்து.

### தாய்மை

பெண்மக்களை இயற்கை வெளியில் உலவச் செய்யாது, செயற்கை அறை இருளில் சிறை செய்வதனால், அவர்களது மனோ நிலை கேடுறுவதோடு, உடல் நிலையுங் கேடுறும். பெண் மக்கள் பிள்ளைப்பேறு என்னும் நலத்துக்குரிய தாய்மையுடையவர்கள். தாய்மை யுடையவர்களைச் சிறைப்படுத்துவது உலக வளர்ச்சிக்கு நலஞ் செய்வதாகாதென்க.

## மகளிர் நிறைகாக்குங் காப்பே தலை

*நிறை - நிறுத்தல், மனத்தை நிறுத்தல், மனத்தை உறுதியில் நிறுத்தல்; ஒழுக்கம்; கற்பு.*

'*நிறை*'க்குப் பழந் தமிழ்ப் பெரியார்கள் கொண்ட பொருள்களுள் சில வருமாறு :—

'*காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம்*'—நக்கீரர்.

'*நிறை யெனப்படுவது மறை பிறரறியாமை*'—நல்லந்துவனார்.

'*நிறை என்பது மறை பிறரறியாமை நெஞ்சினை நிறுத்தல்*'—பேராசிரியர்.

*காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம் கற்பு*'—பரிப்பெருமாள்.

'*நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்தல்*'—பரிமேலழகர்.

'*மனத்தை நிறுத்தல்*'—நச்சினார்க்கினியர்.

*தலை - தலையாயது, தலையாய காவல்; சிறந்தது, சிறந்த காவல்.*

### ம க ளி ர்

மகளிர் சிங்க நோக்காக நிற்பது; "(மகளிர்) சிறை...... செய்யும் - மகளிர் நிறை... தலை" என்று கொள்க. மகளிர் நிறை, ஆடவரையும் காப்பதாகலின் "மகளிர்" என்றார்.

### நி றை கா க் கு ங் கா ப் பே

நிறையைச் சிறையால் காத்தல் இயலாது. அதைக் காக்கும் பொறுப்பு பெண்மணிகளிடத்ததே யாகும். இதை, "மகளிர் நிறைகாக்கும் காப்பே" என்றார். இதனால் பெண்மணிகளின் நிறைக்குச் சிறைக் காப்பு வேண்டுவதில்லை யென்றும், மனக்காப்பே வேண்டற் பாலதென்றும் விளக்கியவாறும். மனக்காப்பு இயற்கையின்பாலது.

### த லை

நிறைக்காப்புக்குச் சிறைக்காப்புக் கூடாதென்பது ஆசிரியர் கருத்து. எதற்கும் புறனடை உண்டன்றோ? சிறைக் காப்பால் நலன் விளையாது. ஒருவேளை நலன் விளையினும் அது மிகச் சிறிதாகவே இருக்கும். அந்நலன் தலையாயதாகாது. இதை விளக்கவேண்டி, "தலை" என்றார். தலையாய காவல் பெண்மணிகளின் நெஞ்சுறுதியில் நிற்பது. 'தலை' என்பது சிறைக்காப்பின் சிறுமையை உணர்த்துவது.

### தமிழ்க் கற்பு

கற்புத்திறன் உலகில் பலவாறு கொள்ளப்பட்டு வருகிறது. பழந்தமிழ் நாட்டில் அஃது எம்முறையில் கொள்ளப் பட்டு வந்தது? மகளிர் பிறர் நெஞ்சம் புகுதலும் கற்பாகாது என்பது தமிழர்கொண்ட முறை. 'பிறர் நெஞ்சம் புகாமை' நிறை என்பது. இக்காலத்தவர்க்கு இஃது அருமையாகவே தோன்றும். காலதேச வர்த்தமானங்கள் புரியும் திருவிளையாடல்களுக்கோர் அளவில்லை. ஒழுக்க வாழ்வே மலரும்

வழியில் பண்டை மக்கள் வாழ்வுத்துறைகள் அமைந்திருந்தன. அவ்வமைவுக்கு வித்தாயிருந்தது நல்லரசாகும்.

"பெண்டி ராயின் பிறர்நெஞ்சு புகார்" என்று மணிமேகலை என்னும் மாபெரும் நூல் பகர்கிறது. இப்பெருமொழி அந்நாளைய பெண்மக்களின் வாழ்வாம் இலக்கியத்தினின்றும் பிறந்ததொன்றாகும். அவ்வக்கால மக்கள் வாழ்வின் படங்களல்லவோ நல்லிலக்கியங்கள்? பிறர் நெஞ்சம் புகாத கற்பைச் சிறையோ காக்கவல்லதாகும்? கற்பைக் காக்க வல்லது மன நிறுத்தமென்னும் நிறையே.

## எங்கே? எப்போழுது?

பெண்மக்களைச் சிறை செய்து காக்கும் முறை முதல் முதல் எங்கே தோன்றிற்றோ தெரியவில்லை. அவ்விடத்தை அறுதியிட்டுக் கூறுதல் இயலவில்லை. அக்கொடுமை எப்பொழுது தோன்றி யிருக்கும்? ஆணுலகில் பொல்லாங்கு நுழைந்த காலத்தில் அக்கொடிய முறை தோன்றியிருக்கும். ஆணுலகக் கேட்டுக்குக் காரணமா யிருப்பது அரசு என்பதை ஈண்டு விரித்துக்காட்ட வேண்டுவதில்லை.

"அருந்திறல் அரசர் முறைசெயி னல்லது - பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது"—சிலப்பதிகாரம்: உஅ : நாடுகாண் : உ०எ - அ.

"மாதவர் நோன்பும் மடவார் கற்பும் - காவலன் காவல் இன்றெனின் இன்றால்"—மணிமேகலை : உஉ : சிறைசெய் : உ०அ - கூ.

## கற்புச் செல்வங்கள்

எக்காரணம் பற்றியும் பெண்மக்களைச் சிறைசெய்வது, காத்தலாகா தென்பார், "மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை" என்றார். பெண்கள் நிறையால் ஆடவர் கொடுமையையும், அதற்குத் துணையாகவுள்ள அரசின் கொடுமையையும்

சாய்த்தல் கூடும். இதற்குக் கண்ணகி, மணிமேகலை, சீதை, பாஞ்சாலி முதலியோர் வரலாறுகள் சான்றாக நிற்றல் காண்க. (பாஞ்சாலி ஐவர் தேவி என்று வியாச பாரதங் கூறுகிறது. அவள் அருச்சுனன் ஒருவனுக்கே தேவி என்று ஜைன பாரதங் கூறுகிறது.)

"நிறையான் மிகுகால நேரிழை யாரைச்
சிறையா லகப்படுத்த லாகா—அறையோ
வருந்த வலிதினின் யாப்பினும் நாய்வால்
திருந்துத லென்றுமோ வில்"—பழமொழி

"உண்டியுட் காப்புண் டுறுபொருட் காப்புண்டு
கண்ட விழுப்பொருள் கல்விக்குக் காப்புண்டு
பெண்டிரைக் காப்ப திலமென்று ஞாலத்துக்
கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே"—வளையாபதி (ரு)

## 56

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

### பொருள்

தன்காத்து - தன்னைக்காத்து, தன் கொண்டான் பேணி- தன்னைக் கொண்டவனையும் பாதுகாத்து, தகை சான்ற சொல் காத்து - பெருமை அமைந்த வாய்மையையும் உடன் காத்து, சோர்வு இலாள் - சோர்வு இல்லாதவள், பெண் - பெண்ணாவள்.

### கருத்து

தன்னையும் தன்னைக் கொண்டவனையும் வாய்மையையும் காத்துச் சோர்வின்றி வாழ்பவள் பெண்ணாவள்.

## விருத்தி

முற்பாட்டில் பெண்ணின் கற்புக் காக்கப்படும் முறை பேசப்பட்டது. இப்பாட்டில் பெண்மணி தன் கற்பைக் காப்பதுடன் தன்னைக் கொண்டான் கற்பையும் அதற்குரிய வாய்மையையும் காத்தல்வேண்டும் என்பது பேசப்படுகிறது.

இவ்வதிகாரத்தில் வாழ்க்கைத் துணையாகிய பெண்ணின் இயல்புகள் பலவாறு சொல்லப்படுகின்றன. இப்பாட்டில் மூன்று இயல்புகள் சிறந்து திகழ்கின்றன. ஒன்று தற்காத்தல்; மற்றொன்று கொண்டவனைப் பேணல்; இன்னொன்று சொற்காத்தல். சோர்வின்மையைத் தனிப்படுத்தி அதை நான்காவது இயல்பாகக் கொள்ளினும் கொள்ளலாம்.

### தற்காத்துத் தற்கொண்டாற் பேணி

தன் - தன்னை.

தன்னை + காத்து = தற்காத்து; உயர்திணையில் இரண்டனுருபு தொக்கிவரும்.

தற்காத்து - தன்னைக்காத்து; தன்னைக் கற்பால் காத்து.

தற்கொண்டான் - தன்னைக்கொண்டவனை; தன்னைக் காதலால் கொண்டவனை; கணவனை.

தற்கொண்டாற் பேணி - தன்னைக் கொண்டவனைப் பேணி; தன்னைக் கொண்டவன் கற்பினின்றும் வழுக்கி வீழாதவாறு அவனைப்பேணி.

பேணி - பாதுகாத்து; '......பேணித் - தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும் - பொன்போற் புதல்வர்ப் பெறுஅதீரும்.........'—புறநானூறு : ௯ : ௨ - ௩.

## தற்காத்து

முதலிலுள்ளது "தற்காத்தல்". எவ்வகைத் தொண்டுக்கும் முதலில் வேண்டப்படுவது தன்னைப் பண்படுத்தல். தன்னைப் பண்படுத்தாது பிறரைப் பண்படுத்தப் புகுதலாகாது. அதனால் நலன் விளைதல் அரிது. ஆதலின் முதலில், 'தற்காத்து' என்றார் ஆசிரியர்.

'தற்காத்தல்' என்பதை நோக்கும்போது பலவிதக் காப்புக்கள் நெஞ்சில் தோன்றும். காப்புக்களுக்குள் தலையாயது எது? நிறைக்காப்பு. இக்காப்புள்ள இடத்தில் பிற காப்புக்கள் தாமே அமையும்.

'தற்காத்தல்' சிறப்பாகக் கற்புக் காத்தலையே குறிக்கொண்டு நிற்கிறது. இங்கே "தற்காத்து" என்பதற்கு, "கற்பினின்றும் தன்னை வழுவாமற் காத்து" என்று பரிமேலழகர் பொருள் கண்டதையும் உன்னிப் பார்க்க.

## தற்கொண்டாற் பேணி

இரண்டாவது "தற்கொண்டாற் பேணல்". தற்கொண்டாற் பேணும் முறைகளைப் பலபடக் கூறலாம். 'உண்டி முதலியவற்றாற் பேணி' என்றார் பரிமேலழகர்.

தற்காத்தலுக்கும் தற்கொண்டாற் பேணலுக்கும் தொடர்பிருக்கும் முறையில் பொருள் கூறுவது பொருத்தம். தற்காத்தலுக்குத் தன்னைக் கற்பால் காத்தல் என்று பொருள் விரிக்கப்பட்டது. இதைக்கொண்டு தற்கொண்டாற் பேணலை நோக்கினால் தொடர்பு விளங்கும்.

கற்பு என்பது இருபாலார்க்கும் பொதுவாயிருப்பது. கற்பைப் பெண்பாலார் அளவில் திருவள்ளுவர் கட்டுப்படுத்திப் பேசினாரில்லை. கற்பு ஆண்பாலார்க்கும் வேண்டும் என்று திருவள்ளுவர் பேசியுள்ளார். "நலக்குரியார் யாரெ

னில் நாமநீர் வைப்பில் - பிறர்க்குரியாள் தோள்தோயா தார்" என்பது அவர்தம் திருவாக்கு.

கற்பு, பெண்பாலரால் மட்டுங் காக்கப்படல் வேண்டு மென்றும், அஃது ஆண்பாலரால் காக்கப்படல் வேண்டுவ தில்லை யென்றும் உணர்த்தும் நியதி இயற்கையில் உண்டா? இயற்கையை ஆய்ந்து பல உண்மை கண்ட புலவோர் எவராயினும் அங்ஙனங் கூறி இருக்கின்றனரா? இல்லை. உண்மை இவ்வாறிருப்ப, இப்பொல்லாத உலகம் பெண் கற்பின்மீது மட்டும் ஏன் பெருங்கவலை செலுத்திவரு கிறது? ஆண் கற்புமீது ஏன் அக்கவலை செலுத்துவ தில்லை? கற்பை ஒருபால் காத்து, இன்னொருபால் காவாது விடின் வாழ்க்கை என்னவாகும்? மன்பதையில் ஒழுக்கம் நன்முறையில் நிலவுமா? நடுநிலை பிறழாது உண்மை நிலையை ஆராய்ந்து பார்க்க. எவ்வழியில் நின்று கற்பை ஆராய்ந்து பார்ப்பினும், அஃது இருபாலார்க்கும் வேண்டற்பாலதென் பது விளங்கும்.

கற்பினின்றும் வழுக்கி வீழ்தல் பெரிதும் பெண் ணுலகில் நிகழ்வதில்லை. அஃது ஆணுலகில் பெரிதும் நிகழ்ந்து வருகிறது. காரணம் என்னை? பெண்மக்களுக் குள்ள நெஞ்சுறுதி ஆண்மக்கட்கின்மையாகும். நெஞ் சுறுதி போதிய அளவு பெறாத ஆண்மக்கள் கற்பினின்றும் வழுக்கி வீழாதவாறு அவர்களைப் பேணும் ஆற்றலும் அறி வும் பெண்மக்களுக்குண்டு. இதுபற்றியே, "தற்காத்துத் தற்கொண்டாற் பேணி" என்றார் ஆசிரியர். "தற்கொண் டாற் பேணி" என்பதில் ஆண்மகன் நிலையும், பெண்மகள் பொறுப்பும் விளங்குதல் காண்க.

பெண்மகள் மட்டும் கற்புக் காப்பதால் நற்பயன் விளை யாது. அவளைக் கொண்ட ஒருவனும் கற்புக் காப்பவனு யிருத்தல் வேண்டும். அவன் வழுக்கி வீழ்வானாயின்,

அவனைப் பேணும் பொறுப்பை வாழ்க்கைத்துணை ஏற்றுக் கொள்ளல் வேண்டும். இல்லையேல் இல்வாழ்க்கை நன்கு நடைபெறாது. ஆதலால், பெண்மகள் தன்னைக் காத்துவருவதுடன் தன்னைக் கொண்டவனையும் பேணி வருதல் வேண்டுமென்று ஆசிரியர் அறிவுறுத்துகிறார்.

*கண்ணகி தன் கணவன் வழுக்கியபோது அவனைப் பேணியதும், திருநீலகண்ட நாயனாரை அவர்தம் மனைவி பேணியதும் ஈண்டுக் குறிக்கத்தக்கன.

## தகைசான்ற சொற்காத்து

தகை - பெருமை ; குணம் - இயல்பு - பண்பு - எனினுமாம் ; 'நன்மை' என்பர் மணக்குடவரும் பரிமேலழகரும்.

"அழகும் பண்பும் பெருமையுந் தகைமை"—பிங்கலந்தை : ௩௫ கூ௭.

சான்ற - அமைந்த ; நிறைந்த எனினுமாம் ; 'நலஞ்சான்ற கலஞ்சிதறும் - பல்குட்டுவர் வெல்கோவே'—மதுரைக்காஞ்சி : 104 - 5.

சொல் - மொழி, வாக்கு, வாய்மை, சத்தியம் ; 'புகழ்' என்பர் மணக்குடவரும் பரிமேலழகரும்.

சொல் காத்தல் - மொழி காத்தல், வாய்மை காத்தல், சொன்ன சொல் தவறாது காத்தல்.

### சொற்காத்தல்

மூன்றாவதாக நிற்பது "சொற்காத்தல்". சொற்காத்தலுக்கு வாய்மை காத்தல் என்று பொருளுரைக்கப்பட்டது. பரிமேலழகர் 'புகழ் காத்தல்' என்று பொருள்கொண்டு, 'தன்மாட்டுப் புகழாவது, வாழும் ஊர் கற்பால் தன்னைப் புகழ்வது' என்று விரிவுரையுங் கூறினர்.

---

* இவள் சிலப்பதிகாரக் கண்ணகியல்லள்.

தன்னைக் காத்தல், தன்னைக் கொண்டானைப் பேணல் ஆகிய இரண்டு வழியான் விளையும் புகழைக்காத்தலென்று, சொற்காத்தலை முதலிரண்டின் விளைவாகக்கொண்டனர் பரிமேலழகர். மணக்குடவரும் இவ்வாறே கொண்டனர். இப் பொருள் கோளும் பொருந்தியதொன்றே.

'சொற்காத்தலை'த் தற்காத்தலினதும் தற்கொண்டாற் பேணலினதும் விளைவாகக் கொள்ளாது, அவைகளுடன் தொடர்புடைய ஒன்றாக்கி, அதைத் தனியே கோடல் வேண்டு மென்பது என் கருத்து. இதனால் "சொற்காத்து" என்பதற் குப் 'புகழ் காத்து' என்று பொருள் கூறாது, 'வாய்மை காத்து' என்று பொருள் கூறலானேன்.

தற்காப்புடன் - தற்கொண்டாற் பேணலுடன் - வாய் மையும் காக்கப்படல் வேண்டும். என்னை? வாய்மை இல்லாத இடத்து நிறைகாத்தலுக்கு நெகிழ்ச்சி நேருமாதலின் என்க.

வாயினின்றும் வருவது வாய்மை - வாக்கு - மொழி. வாய்மை உள்ளத்தினின்று முகிழ்க்கும் உண்மைக்கும், மெய்யினின்று முகிழ்க்கும் மெய்மைக்கும் நடுவண் அரிமா நோக்குக்கொண்டு நிற்றலான், அது சிறப்பாகக் கொள்ளப் பட்டது. அதன்கண் உண்மையும் மெய்ம்மையும் அடங்கும். கருத்தில் உண்மையும் வாய்மையும் மெய்ம்மையும் ஒன்றே.

வாய்மைக்கு ஆதி பிறப்பிடம் மனம். அம்மனம் உறுதி யுடையதாயின் வாய்மை குலையாது. மனவுறுதியுள்ள இடத் தில் வாய்மை மருவியே தீரும். மனவுறுதியில் நிலவுவது கற்பு. கற்புக் காக்கப்படுமிடத்தில் வாய்மையும் தொடர்ந்து விரவி நிற்கும். ஆகவே, தற்காத்தலினின்றும் தற்கொண் டாற் பேணலினின்றும் சொற்காத்தலை ஏன் தனிமைப்படுத் திக் கூறல் வேண்டும் என்று ஐயுறுவோர் இருக்கலாம். மன வுறுதி யுடையாரும் சில சமயம் வாய்மையினின்றும் வழுக்கி வீழ்வதுண்டு. அதனால் நாளடைவில் மனவுறுதிக்கே கேடு

நேரும். இந்நுட்பம் உணர்ந்த சான்றோர், வாய்மைக் காப்பைத் தனிப்படுத்திக் கூறுவது மரபு. "யாகாவா ராயினும் நாகாக்க" என்றார் ஆசிரியரும்.

மனவுறுதியைப் போலவே சொல்லுறுதியும் இருத்தல் வேண்டும். எக்காரணம் பற்றியும் சொன்ன சொல் தவறுதல் கூடாது. சொல் தவறினால் வாழ்வில் பொய்மை (அசத்தியம்) நுழையும். வாழ்விடைப் பொய்மைப்பேய் நுழைந்தால் ஒழுக்கத்தெய்வம் ஓடிவிடும். ஒழுக்கமற்ற இல்வாழ்க்கையால் வாழ்க்கையின் நோக்கம் நிறைவேறாது. இன்னோரன்ன பல காரணங்களால் வாய்மை, வாழ்வுக்கு இன்றியமையாததென்பது விளங்குதல் காண்க.

கற்பின் ஆக்கத்துக்கு மனவுறுதி தேவை. மனவுறுதி ஆக்கத்துக்கு வாய்மை தேவை. வாக்குறுதி காத்தல் ஈண்டுச் "சொற்காத்தல்" என்னப்பட்டது. வாக்குறுதி வாய்மை என்பது. இவ்வாய்மை, தற்காத்தலுக்கும் தற்கொண்டாற் பேணலுக்கும் இன்றியமையாததென்க.

## தகைசான்ற

ஆசிரியர் "சொற்காத்து" என்னாது, "தகைசான்ற சொற்காத்து" என்றார். தற்காத்தலினும், தற்கொண்டாற் பேணலினும் பண்பட்ட ஒருத்தியின் சொல் "தகைசான்ற"தாகவே யிருக்கும். அதனால் "தகைசான்ற" என்றார்.

தற்காத்தலாலும், தற்கொண்டாற் பேணலாலும் பெற்ற தகைசான்ற சொல்லை என்றுங் காத்து வருதல் வேண்டுமென்பது ஆசிரியரின் வேட்கை.

சொற்காப்பில் மறதி ஏற்படின், அதன் "தகைசான்ற" தன்மை மாறும். "தகைசான்ற" தன்மை மாறின், தற்காத்தலும் தற்கொண்டாற் பேணலும் மாறும். இக்காரணம் பற்றித் "தகைசான்ற சொற்காத்து" என்றார்.

சொற்காத்தலிலுள்ள தகைமை நோக்கியும், அது தற்காத்தலிலும் தற்கொண்டாற் பேணலிலும் கொண்டுள்ள தொடர்பு நோக்கியும் அதைத் தனிப்படுத்திக் கூறத் துணிந்தேன்.

## சோர்விலாள் பெண்

சோர்விலாள் - சோர்வு இல்லாதவள்; சோர்வின்மையுடையவள்; 'கடைப்பிடியுடையவள்' என்பர் பரிமேலழகர். சோர்வு என்பதற்கு 'மறவி' என்று அவர் பொருள் கூறியுள்ளார். (மறவி - மறதி; கடைப்பிடி யுடையாள் - மறவாது உறுதியாகப் பற்றி நிற்பவள்.)

பெண் - பெண்மையுடையவள்.

சோர்வின்மையைத் தற்காத்தல், தற்கொண்டாற் பேணல், தகைசான்ற சொற்காத்தல் ஆகிய மூன்றளவில் புணர்த்தியோ, தனித்த இயல்பாகவோ கொள்ளலாம்.

தற்காத்தலில் - தற்கொண்டாற் பேணலில்-தகைசான்ற சொற்காத்தலில் - சோர்வில்லாதவள் பெண் என்று கொள்க; அல்லது தற்காத்தலுடன் - தற்கொண்டாற் பேணலுடன் - தகைசான்ற சொற்காத்தலுடன் - சோர்வும் இல்லாதவள் பெண் என்று கொள்க.

தற்காத்தல் முதலியவற்றில் சோர்வு ஏற்படின் வாழ்க்கையே குலைந்து போகும். ஆதலின் தற்காத்தல் முதலியவற்றில் பெண் சோர்வடைதல் கூடாதென்க.

பொதுவாகப் பெண்ணுக்குச் சோர்விருத்தலாகாது. ஏன்? பெண்ணினின்றும் பிறப்பது வருங்கால உலகம் ஆதலின். அவ்வுலகை நன்முறையில் ஓம்பிப் பண்படுத்தும் பொறுப்பு எவருடையது? பெண்ணினுடையதன்றோ? இப்பெண்

ணுலகில் சோர்வு ஏற்படின் உலகம் என்னாகும்? பாழாகும்..
ஆதலின், பெண்ணின்பால் சோர்விருத்தலாகாதென்க.

இன்னோரன்ன பல காரணங்கொண்டு, "சோர்விலாள் பெண்" என்று அருளினர் ஆசிரியர். (சு)

## 57

*தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்*
*பெய்யெனப் பெய்யு மழை.*

### பொருள்

தெய்வம் தொழாஅள் - தெய்வத்தை வணங்காதவளாய், கொழுநன் தொழுது எழுவாள் - கணவனைத் தொழுது கொண்டு எழுபவள், பெய் என மழை பெய்யும் - 'பெய்' என்று சொல்ல மழை பெய்யும்.

### கருத்து

கணவனைத் தெய்வமாகக் கொண்டவளால் எல்லாஞ் செய்தல் இயலும்.

### விருத்தி

மேற்பாட்டில் கற்புக்காத்தல் சொல்லப்பட்டது. இப் பாட்டில் கற்புக்காத்தலின் ஆற்றல் சொல்லப்படுகிறது.

## தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்

தொழாஅள் - வணங்காதவளாய்; முற்றெச்சம்.
அளபெடையில் மாட்டாமை தொனிக்கிறது.

கொழுநன் - கொழுநனை; கொழுகொம்பு போன்றவனை; கணவனை.

கணவன் கொழுகொம்பு; அதில் சுற்றிக்கொள்ளும் பூங்கொடி மனைவி.

தொழுது - வணங்கி; மனத்தால் நினைந்து வாயால் வாழ்த்திக் கையால் தொழுது; மனமொழி மெய்களால் தொழுது; 'தொழாநின்று' என்பர் பரிமேலழகர். 'தொழா நின்று என்பது தொழுது எனத் திரிந்து நின்றது' என்பது அவர்தங் குறிப்பு.

தொழுகை மனத்தில் நினைப்பாய் உயிர்த்து, வாயில் வாழ்த்தாய் அரும்பி, மெய்யில் வணக்கமாய் மலர்வது.

எழுவாள் - எழுமவள், எழுபவள்; 'உறங்கி எழுவாள்' என்பது மணக்குடவர் குறிப்பு, 'துயிலெழுவாள்' என்பது பரிமேலழகர் உரை.

"தொழுதெழுவாள்" - 'தொழா நின்று எழுவாள் என்பது பரிமேலழகர் உரை.

"தினைவளங் காத்துச் சிலம்பெதிர் கூஉய்ச்சிற்றின் முற்றிழைத்துச்
சுனைவளம் பாய்ந்து துணைமலர் கொய்து தொழுதெழுவார்
வினைவள நீறெழ நீறணி யம்பலவன் றன்வெற்பிற்
புனைவளர் கொம்பரன் னையன்ன காண்டும் புனமயிலே"

என வரூஉந் திருக்கோவைப் பாட்டிற் போந்துள்ள "தொழுது எழுவார்" என்பதற்குப் பேராசிரியர், 'தொழா நின்று துயிலெழுவாருடைய' என்று பொருள்பகர்ந்து, 'தொழுதெழுவாரென்றது துயிலெழுங் காலத்தல்லது முன்னுணர்வின்மையான் உணர்வுள்ள காலத்து மறவாது நினைவார் என்றவாறு' என்று விளக்கங்கூறியுள்ளதும் ஈண்டு உன்னற்பாலது.

பிரயோக விவேக நூலார் இவ்வுரைகளை மறுத்துக் கூறுகிறார். அவர்தங் கூற்று வருமாறு :—" 'கொழுநற் றொழு தெழுவாள்'; தொழுதெழுவார் வினைவள நீறெழ' என்னும் திருவள்ளுவரினும், திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியரும் 'தொழாநின்றெழுவாள்'

'தொழாநின்றெழுவார்' என எச்சத் திரிபாய் உரைப்பர். எழுதல் - துயிலொழிதலாதலின், 'எழுந்து தொழுவாள்' 'எழுந்து தொழுவார்' என முன்பின்னாகப் பொருள்படுத லின்றி, 'நகுபு வந்தான்' 'ஓடி வந்தான்' என்பன போலத் தொழாநின்று துயிலெழுதல் கூடாதென்க."

பாடம்!

இப்பாட்டைப் பற்றி வெளிவந்துள்ள கருத்துக்கள் பல. இப்பாட்டைக்கொண்டு ஆசிரியரையே தாக்குவோரும் உளர். பன்னெடுநாள் என்னெஞ்சில் குடிகொண்ட பாக்கள் சிலவற்றுள் இதுவும் ஒன்று. பாடபேதமிருக்குமோ என்று ஐயுற்ற நாளும் உண்டு; பண்டையாசிரியர் சிலர் இக்குறளை உள்ளவாறே ஆண்டுள்ளமையால் பாடபேத ஐயப்பாட்டுக்கு இடமில்லை என்ற தெளிவும் ஏற்படுவதுண்டு.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத், தெய் வந் தொழுந்தகை திண்ணிதால் - தெய்வமாய், மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி, விண்ணக மாதர்க்கு விருந்து" —இது சிலப்பதிகாரக் கட்டுரைக் காதையிலுள்ள வெண்பா.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள் - பெய்யெனப் பெய்யு மழை என்ற அப் - பொய்யில் புலவன் பொருளுரை தேராய்"—இது மணிமேகலையிலே சிறை செய்த காதையிலுள்ளது. இதன்கண் ஆசிரியர் பெயரொடு "தெய்வந் தொழாஅள்......" என்னுங் குறள் உள்ளவாறே காட்சியளித்தலை முன்னுக. 'பொய்யில் புலவன்' என்பது திருவள்ளுவர் பெயர்களுள் ஒன்று.

இத்திருக்குறளை உள்ளவாறு கொண்டு பொருள் கூறு வது அறம். காலதேச வர்த்தமானத்துக் கேற்றவாறு மூலத்தை மாற்றப் புகுவது அறமாகாது.

## பழைய உரை

" தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள் ' என்பதற்கு, ' தெய்வத்தைத் தெய்வமென்று தொழாளாய் எல்லாத் தெய்வமும் தன் கணவன் என்றே கருதி, அவனை நாடோறுந் தொழுதெழுமவள் ' என்பது மணக்குடவர் உரை; ' பிறதெய்வந் தொழாது, தன் தெய்வமாகிய கொழுநனைத் தொழாநின்று துயிலெழுவாள் " என்பது பரிமேலழகர் உரை.

முதலில் தெய்வத்தை வணங்காளாய்த் தன் கணவனையே வணங்கிக்கொண்டு எழுபவள் என்று பொருள் கூறுவோருமுளர். இன்னும் பலவாறு பொருள் கோடற்கும் இடனுண்டு.

## சில குறிப்புக்கள்

இப்பாட்டுக்கு உரை காணும் முயற்சிக்குத் துணை செய்யுங் குறிப்புக்கள் சில தேவை. அவை: தெய்வ இயல், தெய்வம் வழிபாட்டை ஏற்கும் திறன், காதல் தன்மை, காதலர் ஒருமைப்பாடு முதலியன. இவைகளைக்கொண்டு இப்பாட்டின் உள்ளங் காண முயல்வோமாக.

## தெய்வம்

தெய்வம், ஊர் பேர் முதலியன இல்லாதது; வாக்கு மனங்கட்கு எட்டாதது; எல்லாவற்றையுங் கடந்து நிற்பது. இத்தகைத் தெய்வம் தன்னை உயிர்கள் வழிபட்டு உய்யும் பொருட்டு இயற்கையையும் பெரியோர் உள்ளத்தையும் கோயில் கொண்டுள்ளது. எவரெவர் எவ்வெவ் வழியில் தன்னைக் கருதி அன்பால் வழிபடினும் அவரவர்க்கு அவ்வவ் வழியில் நின்று அருள்புரியும் தன்மையும் வாய்ந்தது தெய்வம். இயற்கையிலும் பிற இடங்களிலும் தெய்வம் எவ்வண்

ணம் வீற்றிருக்கிறது? அன்பு வண்ணம் வீற்றிருக்கிறது. அன்பே தெய்வம்; தெய்வமே அன்பு.

## காதல்

தெய்வமாகிய அன்பு நிலைகள் பலவிதம். அன்பு நிலைகளாவன: ஆர்வம், விருப்பம், காமம், நட்பு, வேட்கை, காதல் முதலியன. இவைகளுள் சிறந்தது காதல். காதல், தெய்வ அன்பெனும் முழுமையைக் கூட்டவல்லது.

காதலற்ற உயிர்கள் உலகிலில்லை. அஃது அஃறிணை உலகிலும் உண்டு; உயர்திணை உலகிலும் உண்டு. (இது பொது; சிறப்பில் வேற்றுமையுண்டு.) காதல், உயிர்களிடத்தில் இயல்பாய் அமைந்திருப்பது. அது செயற்கையால் உயிர்களிடத்தில் எவராலும் சேர்க்கப்படுவதன்று. காதலர்க்கே காதலின் பெற்றி இனிது விளங்கும். அவர்க்குச் சிறந்த ஒன்று காதலே: காதலினும் விழுமியதொன்றிருப்பதாக அவர்க்குத் தோன்றாது.

## காதலால் இருமையறல்

விழுமிய காதல் ஒருவரிடத்தில் மட்டும் நிகழ்வதன்று. அஃது இருவரிடத்தும் எழுந்து நிகழ்வது. காதல் இருவரிடம் நிகழ்வதாயினும் அஃது இருவர் என்னும் உணர்ச்சியை அறுப்பது.

காதலால் விழுங்கப்பட்டவர் இருவராயினும் அவர் ஒருவரே ஆவர். உடல் மட்டும் இரண்டாகக் காட்சி அளிக்கும். உயிரிடை இருமை அற்றுப்போகும். இது பற்றியே 'ஈருடல் ஓருயிர்' என்னும் வழக்காறும் பிறந்ததுபோலும்.

"ஆனந்த வெள்ளத் தழுந்துமோ ராருயி ரீருருக்கொண்
டானந்த வெள்ளத் திடைத்திளைத் தாலொக்கு மம்பலஞ்சேர்

ஆனந்த வெள்ளத் தறைகழ லோனருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம்வற் றாதமுற் றாதிவ் வணிநலமே"

எனவரூஉந் திருக்கோவைப் பாடலை நோக்குக.

## காதற் கடவுள்

ஒருத்தியையும் ஒருவனையும் ஒன்றுபடுத்துவது காதல். தம்மை ஒன்றுபடுத்துங் காதலினும் மேலானதொன்று அவருக்குத் தோன்றுவதில்லை. அவளுக்கு இவனே எல்லாம்; இவனுக்கு அவளே எல்லாம்.

காதலியுங் காதலனும் பிரிந்து வெவ்வேறிடஞ் செல்கின்றரென வைத்துக் கொள்வோம். பிரிவு உடலளவினதாகவே யிருக்கும். உள்ளத்திற் பிரிவு நேர்வதில்லை.

ஒரு காதலி ஒரு தனியிடத்தமர்ந்து பரந்தவெளியை உற்று நோக்கியவண்ணம் இருக்கிறாள். அதுபோழ்து அவள் தன் உள்ளத்துள்ள காதலனை உருவெளியாகத் தோற்றுவள். அங்ஙனே ஒரு காதலன் ஒரு வெளியிடை அமர்ந்து நோக்கும் போதும் அவனது உள்ளத்துள்ள காதலியே அவன்றன் கண்ணுக்கு விருந்தாவள். இந்நுட்பங்களை அகநூல்களிற் காண்க.

காதலியின் உள்ளத்தில் கடந்த பொருளாக நிற்பவன் காதலனே. காதலன் உள்ளத்தில் கடந்த பொருளாக நிற்பவள் காதலியே. மேற்பட்டு வேறொன்றும் விளங்காது. விளங்குமேல் அவரிடம் மருவுவது காதலாகாது; அது காமமாகும். காதலிக்குக் கடவுள் காதலனென்றும், காதலனுக்குக் கடவுள் காதலி யென்றும் சுருங்கச் சொல்லலாம். எல்லாவற்றையுங் கடந்தொளிரும் கடவுள் காதலிக்குக் காதலனாகவும் காதலனுக்குக் காதலியாகவும் காட்சியளிக்குமென்க. இன்னோரன்ன கருத்துக்களை உளங்கொண்டு இக்குறட்பாட்டில் ஒன்றித் திளைப்போமாக.

## தெய்வந் தொழாள்

இவ்வதிகாரம் பெண்ணின் பெருமை பேச எழுந்தது. அதற்கிணங்க இப்பாட்டில் பெண்ணின் செயல் சொல்லப் படுகிறது. இதைக் கொண்டு ஆணின் செயலையும் வருவித்துக் கொள்ளல் வேண்டும்.

"தெய்வம் தொழாஅள்" ஏன்? காதலிக்குத் தெய்வம் காதலனாதலின். தெய்வம் காதலிக்குக் காதலனாகவே காட்சி யளிக்கிறது. தெய்வம் ஒன்றே. அது காதலிக்குக் காதல னாய்த் திகழ்கிறது. காதலி எற்றுக்கு இரண்டாவது தெய் வத்தைக் கொள்ளல் வேண்டும்? இதுபற்றியே, "தெய்வம் தொழாஅள்" என்றார்.

காதலனுக்கும் இவ்வாறே கொள்க. காதலனுக்குத் தெய்வம் காதலி. இவனுக்கு வேறு தெய்வம் எற்றுக்கு? இவன் சார்பில் "தெய்வம் தொழாஅன்" என்று கொள்க.

## கொழுநற் றொழுதெழுவாள்

"தெய்வம் தொழாஅள்" என்று கூறிய ஆசிரியர், "கொழுநற் றொழுதெழுவாள்" என்று காதல்தெய்வத்தைக் குறித்தல் காண்க. இத்தெய்வமே காதலியால் தொழுந் தகையதாதலின், "தொழுதெழுவாள்" என்றார்.

அதிகாரம் வாழ்க்கைத் துணையைப்பற்றி ஓதுவதாதலின், பெண்தொழுந் தெய்வம் கொழுநன் என்று சொல்லப்பட்டது. அதிகாரத் தலைப்பை நோக்காது, கொழுநனைத் தொழுதெழல் பெண்ணுக்குரியதென்றும், கொழுநன் மனைவியைத் தொழும் வழக்கு இல்லையென்றும் வாதப்போர் நிகழ்த்துவது அறமா காது. பெண் சார்பில் சொல்லப்பட்ட இப்பாட்டைக் கொண்டு, ஆண்சார்பிலும், "துணைவி தொழுதெழுவான்" என்று கோடலே அறம்.

## ஆண் தொழுகை

முருகன் வள்ளியை வணங்கிய கதை முதலியவற்றை ஈண்டு நினைவூட்டிக் கொள்க. இன்பப் புணர்ச்சிக்கு முன்னர்த் தலைவி தலைவனையும் தலைவன் தலைவியையும் நெஞ்சில் நிலைபெற உன்னி ஒருவரை ஒருவர் தொழுது கொள்ளும் பழைய முறையும் ஈண்டுக் கருதற்பாலது.

ஒருபால் தொழுதலும் மற்றொருபால் தொழுதலின்மையும் ஒத்த அன்பைக் காட்டுவனவாகா. ஒத்த அன்பு இல்லாவிடத்து ஆன்ற இன்பம் ஏது? காதலர்க்குள் உயர்வு தாழ்வு குறிப்போர் காதலின் பெற்றியை உணராதாரென்க. காதலன்பில் உயர்வு தாழ்வுக்கு இடமே இல்லை.

தெய்வத்தைப்பற்றி மேலே பொறிக்கப் பெற்றுள்ள குறிப்புக்களை ஈண்டுக் கருதிக்கொள்க.

மன்பதையில் பெண்ணடிமையுணர்வு நுழைந்த காலத்தில் வாழ்ந்த புலவோர் இக்குறளுக்குத் தங் காலத்திற் கண்ட காட்சிக்கு ஏற்றமுறையில் பொருள் கூறிப்போந்தனர். அப்பொருள் ஆசிரியர் உள்ளக்கிடக்கைக்குத் துணை போவதாகாது. ஆசிரியர் பெண்ணின் பெருமை யுணர்ந்த பெருந்தகையாளர். அவர் பெண்ணை இழிவுபடுத்தி ஒரு போதுங் கூறார். விரிவை, யான் யாத்துள்ள "பெண்ணின் பெருமை" என்னும் நூலிற் காண்க.

## தொழுகை

விழிப்பில் மக்கள் மனம் பெரிதும் எதன்கண் படிந்து கிடக்கிறதோ அதுவே உறக்கத்தினின்று எழும்போதும் நினைவிலுறும். இஃது இயல்பு. இவ்வியல்பு, "தொழுதெழுவாள்" என்பதில் மிளிர்கிறது. விழிப்பிலே காதலியின் எண்ணமெலாம் பெரிதும் காதலன் மீதே கிடக்கும். அவள் துயிலெழுந்து உணர்வு பெற்றதும், அவ்வுணர்வில் காதலனே

நிற்பன். அவனைத் தொழுத வண்ணம் காதலி எழுவள்; காதலனும் அவ்வாறே எழுவன். "தொழுதெழல்" என்பது காதலிக்கும் காதலனுக்கும் உள்ள இடையறாத அன்புத் தொடர்பை உணர்த்துவது.

"தொழுகை" என்பது ஈண்டு வெறுங் கருவிகரண வணக்கத்தை மட்டுங் குறிப்பதன்று. அஃது அன்புப் பணியையும் உளங்கொண்டது. தொழுகையின் பரிணாமம் அன்புப் பணி.

## பணி

பணிக்கு அமைதி வேண்டும். அமைதியை உணர்த்துவது தொழுகை. பிறவி எற்றுக்கு? விடுதலைக்கு. விடுதலைக்குப் பணிவேண்டும்; பயன் கருதாப் பணி வேண்டும். பணியின் விளைவே விடுதலை. பயன் கருதா அன்புப் பணிக்கு நிலைக்களனா யிருப்பது இல்வாழ்க்கை. இஃது இல்வாழ்க்கை அதிகாரத்தில் விளக்கப்பட்டது.

இல்வாழ்க்கை, காதலை அடிப்படையாக் கொண்டது. காதல் தன்னலமற்ற தூய்மை வாய்ந்தது. தன்னலமற்ற இடத்தில் எழுவதே பணி. பயன் கருதாப் பணியின் எழுச்சிக்கென்று இயற்கையில் காதல் அமைந்து கிடக்கிறதென்று அகவியலுணர்ந்தார் கூறுவர்.

காதலி தன்னலன் கருதாது காதலனுக்குப் பணியாற்றுகிறாள். காதலனும் அங்ஙனே காதலிக்குப் பணியாற்றுகிறான். இருவரும் ஒன்றிப் பெறும் பிள்ளைகளுக்கு அவர் ஆற்றும் பணியில் தன்னலமிருக்குமோ? தன்னலமற்ற பணி இல்வாழ்க்கையில் பலவழியில் பெருகிப் பெருகி அந்தண்மையைக் கூட்டும். அந்தண்மை விடுதலையளிக்கும். ஆகவே காதல்வழி நிகழும் இல்வாழ்க்கையில் எழுந் தொழுகை, பணியைக் குறிக்கொண்டு நிற்பதென்க.

தொழுகை நுண்மை; பணி அதன் பருமை. விழிப்பில் பணியாய் நிகழ்வது உறக்கத்தில் படிப்படியே ஒடுங்கும். துயிலெழும்போது நிகழும் பணி, மனத்தில் நினைவாகி, வாயில் வாழ்த்தாகி, மெய்யில் தொழுகையாகும். பின்னே தொழுகை படிப்படியே பணியாய் வாழ்க்கையை நடாத்துவதாகும்.

## பெய்யெனப் பெய்யும் மழை

"பெய்யெனப் பெய்யும் மழை"—இஃது எல்லாஞ் செய்யும் வல்லமையை உணர்த்துவது.

"பெய்யெனப் பெய்யுமழை" என்பது தொன்று தொட்டு வரூஉம் ஒரு வழக்காறு. இது தமிழ்நாடு கற்பு வண்ணமாக இருந்ததைத் தெரிவிப்பது.

"பெய்யெனப் பெய்யுமழை" என்பது எல்லாஞ்செய்யும் வல்லமையை உணர்த்துவது. கற்பில் - நிறையில் - மன ஒருமைப்பாட்டில் - உறுதியில் - நிற்பவர் வழி இயற்கையும் ஏவல் செய்யும். மன உறுதியால் எல்லாஞ் செய்தல்கூடும். மன உறுதிக்குள்ள ஆற்றல் அளப்பரிது. "எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார் - திண்ணிய ராகப் பெறின்" என வரூஉம் ஆசிரியர் திருமொழியும்,

> "கடுகு விதையளவு விசுவாசம் உங்களுக்கிருந்தால் நீங்கள் இந்த மலையைப் பார்த்து இவ்விடம்விட்டு அப்புறம் போ என்று சொல்ல அது அப்புறம்போம்"—(மத்தேயு 18 : 20.)

என வரூஉங் கிறிஸ்து பெருமான் பெருமொழியும் உறுதியின் பெற்றியை விளக்குவனவாம்.

### மன உறுதி

காதலால் விழுங்கப்பட்டு இருமையற்றவர் மன உறுதியில் சிறந்து நிற்பாராதலின், அவரால் என்ன செய்தல்

கூடாது? அவர் 'பெய்' என்றால் மழை பெய்யும்; 'வா' என்றால் மலை வரும். அவர்தம் ஆணைக்குப் பூதங்களும் அடங்கும்; தெய்வமும் அடங்கும் என்று கூறல் மிகை யாகாது.

"அருமழை தரல் வேண்டிற் றருகிற்கும் பெருமை யளே"—கலித்தொகை : ௩௯ : ௬.

"வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது - நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது - பத்தினிப் பெண்டி ரிருந்தநா டென்னும் - அத்தகு நல்லுரை அறியா யோநீ"—சிலப்பதி காரம் : ௧௫. அடைக்கலம் : ௧௪௫ - ௮.

"மண்டிணி ஞாலத்து மழைவளந் தரூஉம் - பெண்டி ராயிற் பிறர்நெஞ்சு புகார்", "ஆங்கவை யொழிகுவை யாயின் ஆயிழை - ஓங்கிரு வானத்து மழையுநின் மொழியது"—மணிமேகலை : ௨௨. சிறைசெய் : ௫௯-௬ ; ௬௮-௯.

"நாடு மூரும் நனிபுகழ்ந் தேத்தலும் - பீடு றும்மழை பெய்கெனப் பெய்தலும்-கூட லாற்றவர் நல்லது கூறுங்கால்- பாடு சான்மிகு பத்தினிக் காவதே"—வளையாபதி. (௭)

## 58

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

### பொருள்

(பெருஞ் சிறப்புப்) பெண்டிர் - கற்புடைய மகளிர், (பெருஞ் சிறப்புப்) பெற்றார் - கற்புக்கொண்ட ஆடவரை, பெறின் - அடைவராயின், பெருஞ் சிறப்பு புத்தேளிர் வாழும் உலகு - பெரும்போகத்தையுடைய வானவர் வாழும் உலகப் பேற்றை, பெறுவர் - (இவ்வுலகிலேயே) அடைவர்.

## கருத்து

கற்புடைய மகளிர் கற்புடைய ஆடவரைப் பெற்ருல் அவர் தேவலோக போகத்தை இங்கேயே பெறுவர்.

## விருத்தி

முற்பாட்டில் கற்புத்திறன் கூறப்பட்டது. இப்பாட்டில் அத்திறனுல் விளையும் பயன் சொல்லப்படுகிறது.

பழைய உரையாசிரியன்மார் சில ஸ்மிருதி மொழிகளை உளங்கொண்டு இப்பாட்டுக்கு உரை கண்டுள்ளனரென்று தெரிகிறது. அவ்வுரைகளை அறிஞர் ஆய்ந்து பார்க்க.

மணக்குடவர் உரை வருமாறு :—'பெண்டிரானவர் தம்மை மனைவியராகப் பெற்றவரையே தமக்குத் தலைவராகப் பெறின், தேவர் வாழும் பெரிய சிறப்பினையுடைய உலகத்தைப் பெறுவர்' ("பெற்ருர்ப் பெறின்" என்பது இவர் கொண்ட பாடம்.)

பரிமேலழகர் உரை வருமாறு :—"பெண்டிர் தம்மை எய்திய கணவனை வழிபடுதல் பெறுவராயின், புத்தேளிர் வாழும் உலகின்கண் அவரால் பெருஞ் சிறப்பினைப் பெறுவர்' ("பெற்ருற் பெறின்" என்பது இவர் கொண்ட பாடம்.)

"பெற்ருர்ப்பே ணிற்பெறுவர்" என்று பாடங்கொண்டு பொருளுரைப்போருமுளர்.

கற்பு இருபாலார்க்குந் தேவை என்பது திருவள்ளுவர் கருத்து. இது மேலே விளக்கப்பட்டது. ஆசிரியர் கருத்துக்கு அரண் செய்யும் முறையில் பொருள் கூற ஒல்லும் வகை முயல்வது நலன்.

## பெண்டிர் பெற்றார்ப் பெறிற் பெறுவர்

பெண்டு - பெண், மகள், மனைவி.

பெண்டிர் - பெண் மக்கள், மகளிர், மனைவியர். 'வினைநல முடையளோ மகிழ்நநின் பெண்டே'—ஐங்குறு நூறு : 57; 'பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டு கொல்......'—சிலப்பதிகாரம் : கக. ஊர்சூழ் : ருக.

பெற்றார் - பெற்றாரை ; ஆடவரை ; கணவரை.

பெற்றார் + பெறுவர் = பெற்றார்ப் பெறுவர் ; பெற்றாரைப் பெறுவர் என்று விரிக்க ; உயர்திணையில் இரண்டனுருபு தொக்கது.

(பெருஞ்சிறப்புப்) பெண்டிர் - கற்பென்னும் பெருஞ் சிறப்புடைய மகளிர் ; கற்புடைய மகளிர்.

(பெருஞ் சிறப்புப்) பெற்றார் - கற்பென்னும் பெருஞ் சிறப்புப் பெற்றவரை - கொண்டவரை ; ஆடவரை ; கற்புடைய கணவரை.

## பெருஞ் சிறப்பு

"பெருஞ் சிறப்பு" என்பது "பெற்றார்" முன்னும், "பெண்டிர்" முன்னும் சேர்த்துப் பொருளுரைக்கப்பட்டது. வேறு சொற்களை வருவித்துச் சொல்லெச்சங் கூறுவதினும் பாட்டிலுள்ள சொற்களை வருவித்துப் பொருள் கூறுவது சிறப்பு.

## பெண்டிர் - பெற்றார்ப் பெறின்

பெண்டிரினதும் பெற்றாரினதும் பெருஞ் சிறப்பென்னை? ஒழுக்கமென்றே அறிஞர் கூறுவர். மேலே கற்புத்திறனும், பெற்றியும், பிறவும் பேசப்பட்டுண்மையான், இங்கே பெருஞ் சிறப்பென்பதற்குக் கற்பென்றே பொருள் கொள்ளப்பட்டது.

ஒருவரிடைப் பலதிறச் சிறப்புக்களிருக்கின்றன. ஆனால் அவரிடைக் கற்புச் சிறப்பில்லை. அவரை உலகம் பழிக்குமா? பழியாதா? பழித்தே தீரும். மற்றச் சிறப்புக்கள் அவர்தம் பழியை மறைக்கும் ஆற்றலுடையனவாகுமா? ஆகா. அத்தகைச் சிறப்புக்களைப் பெருமையுடையன என்று எப்படிக் கூறுவது?

வேறு ஒருவரிடம் பல சிறப்புக்களில்லை. அவர்பால் கற்பொழுக்கச் சிறப்பு மிகுந்து விளங்குகிறது. அவர் உலகவரால் போற்றப்படுகிறார். இங்கே சிறப்புக்களுள் பெருமையுடையது எது? கற்பே. இதுபற்றி, 'பெருஞ் சிறப்பு' என்றார் ஆசிரியர். ஆகவே "பெருஞ் சிறப்புப் பெண்டிர் - பெருஞ் சிறப்புப் பெற்றார்" என்பனவற்றிற்குக் கற்புடைய பெண்டிர் என்றும், கற்புடைய ஆடவர் என்றும் பொருள் விளக்கஞ் செய்யப்பட்டது.

## பெருஞ் சிறப்புப் புத்தேளிர் வாழுமுலகு பெறுவர்

பெருஞ் சிறப்பு ஈண்டுப் போகத்தின் - இன்பத்தின் - மேலது.

புத்தேள் - வானம்.

புத்தேளிர் - வானவர்; தேவர்.

புத்தேளிர் வாழும் உலகு - வானவர் வாழும் உலகு; போக பூமி.

## பெருஞ் சிறப்புப் புத்.........உலகு

புத்தேளிருலகில் பல சிறப்புக்களுண்டு. அவைகளுள் தலையாயது போகம். சிறந்த போகத்துக்கென்றே அவ்வுலகம் அமைந்தது. ஆசிரியரும், 'சிறப்புப் புத்தேளிர் வாழும் உலகு' என்று அருளாது, "பெருஞ் சிறப்புப் புத்தேளிர் வாழும் உலகு" என்று அருளினர். ஆகவே, புத்தேளி

ருலகைச் சார்ந்த பெருஞ்சிறப்பு, போகத்தை - இன்பத்தை - உளங்கொண்டதென்க.

உலகங்கள் பலவகை. ஒவ்வொன்று ஒவ்வொருவிதச் சிறப்புடையதாக அமைந்துள்ளது. புத்தேளிருலகில் போகம் சிறந்து விளங்குகிறது. இப்போகம் நுகர மண்ணுலகில், தானம் தவம் முதலியன செய்வதுண்டு. தான தவஞ்செய்து புத்தேளிருலகம் போந்து போகந் துய்க்க எவ்வளவு காலமாகும்? அஃது எவ்வளவு அருமைப்பாடு? உன்னுக.

## பெறுவர்

திருவள்ளுவர் குறித்துள்ள நெறிபற்றி யொழுகினால் இம்மண்ணுலகிலேயே - இப் பிறவியிலேயே - புத்தேளிருலகப் போகத்தை இனிது நுகர்ந்து வாழ்தல்கூடும். திருவள்ளுவர் குறித்துள்ளதென்னை? இருபாலாரும் கற்புக்கடம் பூண்டொழுகுவதென்பது. இது "(கற்புப்) பெண்டிர், (கற்புப்) பெற்றார்ப் பெறின்..." என்னும் இக்குறளில் விளங்குதல் காண்க.

இருபாலாரிடத்தும் கற்பொழுக்கம் நிலவுமாயின், அவர் போக நுகர்ச்சிக்குப் புத்தேளிருலகம் புகவேண்டுவதில்லை. அப்போகத்தை இப்பூமியிலேயே நுகர்தல் கூடுமென்பது.

## இருசார்பிலுங் கற்பு

கற்பு இருபாலாரிடத்தும் விளங்கல் வேண்டுமென்பது ஈண்டுச் சிறப்பாகக் கருதத்தக்கது. ஒருபாலாரிடத்துமட்டுங் கற்பொழுக்கம் நிலவுமாயின் புத்தேளிருலகப் போகத்தை இங்கே துய்த்தல் இயலாது.

## காதல் - கற்பு - போகம்

கற்பொழுக்கம் எங்கே நிலைத்து நிற்கும்? காதலிலே கற்பொழுக்கம் நிலைத்து நிற்கும். கற்பைக் காக்கவல்லது

காதலே. காதலற்றவர் காமுகராய்ப் பலவிடஞ்சென்று உழல்வோராவர். பலவிடந் திரியுந் தூர்த்தர் போகம் நுகர்தல் அரிது. அவர் நுகர்வது போகமன்று; அது போலி.

காதலால் விழுங்கப்பட்டவர் நெஞ்சம் பலவிடங்களில் உழன்று திரிவதில்லை. அவர்தம் உயிரே இருமையற்ற ஒன்றாகிறதெனில், அவர்தம் நெஞ்சம் எங்ஙனம் பல இடங்களில் உழல்வதாகும்? ஈருடலும் ஓருயிரும் ஒருமை நெஞ்சும் உடையவர் துய்ப்பதே போகம் போகமாகும்.

பெண்டிரும் ஆடவரும் கற்புடையராயின், அவர் போகத்துக்குப் புத்தேளிருலகம்புக முயலவேண்டுவதில்லை என்பதும், அப்போகத்தை இவ்வுலகிலேயே துய்த்தல் கூடுமென்பதும் இக்குறட்பாவின் உட்கிடக்கை.

## போக பூமி

போகபூமியின் இயல்பு வருமாறு :—

"பதினறுட்டைக் குமரனும் விதிவழிப் - பன்னீராட்டைக் குமரியு மாகி - ஒத்த அன்பினும் ஒத்த நலத்தினும் - கற்பக நன்மரம் நற்பயன் உதவ - ஆகிய செய்தவத் தளவும் அவ்வழிப் - போக நுகர்வது போக பூமி"—திவாகரம்.

கற்புடைப் பெண்டிரும் ஆடவரும் துய்க்கும் போகத்தால் இளமைமீக் கூர்ந்து பொலிவுறுதல் இயல்பு. அவரை விரைவில் முதுமை அடர்தல் அரிது.

கற்புடையார், போகபூமி நாட்டங் கொள்வதில்லை என்பதற்குப் பழந்தமிழ் நூல்களிற் சான்றுகள் பலவுண்டு. அவைகளில் இரண்டொன்று வருமாறு :—

"விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமும்
அரிதுபெறு சிறப்பிற் புத்தே ணாடும்
இரண்டுந் தூக்கிற் சீர்சா லாவே
பூப்போ லுண்கட் பொன்போன் மேனி

*மாண்வரி அல்குற் குறுமகள்*
*தோண்மாறு படூஉம் வைகலொ டெமக்கே"*
—குறுந்தொகை : ௧0௧

*"பொற்றொடீஇ*
*கைத்தாயு மல்லை கணவற் கொருநோன்பு*
*பொய்த்தாய் பழம்பிறப்பிற் போய்க்கெடுக வுய்த்துக்*
*கடலொடு காவிரி சென்றலைக்கு முன்றின்*
*மடலவிழ் நெய்தலங் கானற் றடமுள*
*சோமகுண்டஞ் சூரியகுண்டந் துறைமூழ்கிக்*
*காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு*
*தாமின் புறுவ ருலகத்துத் தையலார்*
*போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர் யாமொருநாள்*
*ஆடுது மென்ற அணியிழைக் கவ்வா யிழையாள்*
*பீடன் றெனவிருந்த பின்னரே"*
—சிலப்பதிகாரம் : க. கனாத்திறம் : ௫௪ - ௬௪

*(மறுமையில் போக பூமியெய்தி இன்பம் நுகரக் காமனைத் தொழுமாறு தேவந்தி கண்ணகிக்கு அறிவுறுத்திய போது, கண்ணகி, 'அங்ஙனஞ் செய்தல் எங்கட்கு இயல்பன்று' என்று மறுத்தமை யோர்க).*

## களவு மணம்

*"பெண்டிர் பெற்றார்ப் பெறின்" என்பதை நோக்குவோம். என்ன விளங்குகிறது? இன்பவாழ்விற்குக் கற்புடைய பெண்டிர் கற்புடைய ஆடவரைத் தெரிந்தெடுக்கும் பயிற்சியில் தேர்ச்சி பெறுதல் வேண்டுமென்பது விளங்குகிறது. இப்பயிற்சி இல்லாதாரது வாழ்வில் இடரே படரும். ஒருத்தி தன்னொடு ஒத்த நலன் ஒத்த குணன் ஒத்த கல்வி முதலியனவுடைய ஒருவனைத் தெரிந்தெடுக்கும் களவு முறையே பழந்தமிழரால் அறிவுறுத்தப் பெற்றது.*

அம்முறை நாளடைவில் வீழ்ந்துபட்டது. அதனால் இன்ப வாழ்வு பெரிதும் அற்றொழிந்தது. மீண்டும் களவு மணம் உயிர்ப்புறு முறையில் அரசு நடப்பதாக. (அ)

## 59

*புகழ்புரிந்த இல்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.

### பொருள்

புகழ் புரிந்த - புகழ் மாது விரும்பிய, இல்இலோர்க்கு - இல்லாளைப் பெறாதார்க்கு, இகழ்வார் முன் - தம்மை இகழ்வார் முன்னர், ஏறுபோல் பீடு நடை - ஆண் சிங்கம் போல் நடக்கும் பெருமித நடை, இல்லை - இல்லையாகும்.

### கருத்து

நல்ல மனையாளைப் பெறாதார்க்கு வீறுகொண்ட நடையிராது.

### விருத்தி

மேற்பாக்களில் கற்புத்திறனும் பயனும் பேசப்பட்டன. இப்பாட்டில் அவைகளின் அறிகுறி அறையப்படுகிறது.

### புகழ்புரிந்த இல்லிலோர்க்கு

புகழ் - புகழ் மாது; புகழை மாதாகக் கொள்வது மரபு. பூ மாது, கலை மாது, சய மாது, புவி மாது, புகழ் மாது என வரூஉம் வழக்காறுகளை நோக்குக.

புரிந்த - விரும்பிய; மிக்க; ஈன்ற - பெற்ற - எனினுமாம். 'களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ் - நயம்

---

* பா - ம் :—"புகழ்புரிந் தில்லிலோர்க்கு" 'புரிந்த என்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது.'

புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி'—புறநானூறு : கசரு : ரு - க. (புரிந்து-விரும்பி). 'புரிந்த தகையினுன்'–பரிபாடல்: 7 : 51. (புரிந்த-மிக்க). 'பொன்போல் தார்கொன்றை புரிந் தன'—திணைமாலை : 109. (புரிந்தன-ஈன்றன, பெற்றன).

புகழ் புரிந்த - புகழ் விரும்பிய, புகழ் மாது விரும்பிய; புகழ் மிக்க, புகழை ஈன்ற - பெற்ற - எனினுமாம்.

'புகழ் பொருந்தின' என்பர் மணக்குடவர்; 'புகழை விரும்பிய' என்பர் பரிமேலழகர்.

ஒருவர் புகழைத் தாமே விரும்பி அதற்கேற்றவாறு நடப்பது அறமாகாது. புகழ் விரும்பாது அதாவது பயன் கருதாது நடப்பதே அறம். இந்நடையினரைப் புகழ் தானே அணையும். இதுபற்றியே "புகழ் புரிந்த" என்பதற்குப் புகழை விரும்பிய என்று பொருள் கொள்ளாது, புகழ் விரும் பிய என்று பொருள் கொள்ளப்பட்டது.

"புரிந்த" என்பதற்கு, ஈன்ற-பெற்ற என்று பொருள் கொள்ளும்போது, புகழை ஈன்ற - பெற்ற - என்று பொருள் கூறலாம்.

வீரம் விரும்பும் வீரன் - அழகு விரும்பும் அழகன் - என்று சொல்வது கவிமரபு. இம்மரபுபற்றி, "புகழ் புரிந்த (விரும்பிய) இல்" என்று சொல்லப்பட்டது போலும்.

இல் - இல்லாளை, மனையாளை ; ஆகுபெயர்.

இகழ்வார் - இகழ்ந்துரைப்பர் ; 'இகழ்ந்துரைக்கும் பகைவர்' என்பர் பரிமேலழகர். பகைமை யில்லாரிடத்தும் இகழ்தல் நிகழ்வதுண்டு.

## புகழ்புரிந்த இல்

கற்புடைய இல்லாள் தானே புகழை விரும்பமாட்டாள். புகழ் தானே விரும்பி அவளை அணைந்து சிறப்புறும். இந் நுட்பம், 'புகழ் புரிந்த இல்' என்பதில் விளங்குதல்காண்க.

புகழ் மாது விரும்பிய இல்லாளைப் பெறுவோரே புகழுடையவராவர் ; மற்றவர் புகழுடையவராகார். தலைவன் புகழ் தலைவியின் புகழைப் பொறுத்தே நிற்கும்.

ஒருவன் கல்வி, செல்வம், பதவி முதலியவற்றில் புகழ் பெற்றவனுயிருப்பன். அவன் மனைவி கற்புடையவளானல் அவனது புகழ் மணக்கும் ; மனைவி கற்பற்ற தீயவளானல் அவன் புகழ் மணக்குங்கொல் ? ஒருவனது புகழுக்கு உயிர் நாடியாயிருப்பது அவன்றன் மனைவியின் மாண்பேயாகும்.

## இலோர்க்கு

இப்பாட்டில் கற்புடைய மனையாளைப் பெருதானது நிலைமை குறிக்கப்பட்டுளது. புகழ்புரிந்த இல் இலாதார் நிலை என்னும் ?

நன்மனையாள் வாய்க்கப் பெருதார் மனம் நரகவேதனை பட்டுக்கொண்டிருக்கும். அவர் வேறு ஒரு நரகம் அடைய வேண்டுவதில்லை. வேதனை அவரது நாடி நரப்புக் கட்டுக்களையெல்லாம் குலுக்கும் ; தளர்த்தும். அவர் பலவழியினுந் துன்புறுவர் என்று சுருங்கச் சொல்லலாம்.

## இகழ்வார்முன் ஏறுபோல் பீடுநடை இல்லை

ஏறு - ஆண்மைப்பெயர் ; ஆண்சிங்கம் ; எருது - காளையுமாம்.

பீடு - பெருமிதம் ; கம்பீரம்.

## பீ டு ந டை யி ல் லை

ஆசிரியர் புகழ்புரிந்த இல்லிலாதார் துன்பங்களையெல்லாம் நிரலே விளந்து கூறினரில்லை. அவர்தம் நிலைகளையெல்லாம் ஒரு குறட்பாவில் ஒரு பகுதியில் எங்ஙனம் புகுத்தி விளந்து கூறுதல் கூடும் ? அவர்தம் நிலைகளெல்லாம் சில

சொற்களில் புலனுகுமாறு ஆசிரியர் சுருங்கச் சொல்கிறார்; "பீடுநடை இல்லை" என்கிறார். இதன்கண் "புகழ்புரிந்த இல் இலாதார்" நிலைமைகளெல்லாம் அடங்குதல் காண்க.

நன்மனைவியைப் பெற்றார்க்குப் பலவழியிலும் மகிழ்ச்சி யுண்டு. அவர்தம் மகிழ்ச்சி எப்படிப் புலனுகும்? மகிழ்ச்சி பொதுவாக முகப்பொலிவு, உடல் நலன் முதலியவாற்றான் புலனுகும்; அதைச் சிறப்புமுறையில் வெளிப்படையாகப் புலப்படுத்துவ தொன்றுளது. அஃதென்னை? அதுவே நடை.

மகிழ்ச்சியுடையார் நடையில் பீடு பிறங்கும். மகிழ்ச்சி யின் எழுச்சியே - பொங்கலே - பீடு நடையாக வெளிவரும்.

மகிழ்ச்சியால் உண்டாகும் பீடுநடைக்கு மூலம் எது? என்று எண்ணுவோமாக; உன்னுவோமாக; முன்னுவோமாக. மிகச்சில தோன்றும். அச்சிலவற்றுள் நுழைந்து ஆய்ந்தால் சிறந்த ஒன்று விளங்கும். அது நன் மனைவியைப் பெறுதல்.

## இகழ்வார்முன்

பீடுநடைக்குப் புகழ்புரிந்த இல்லாள் அமைதல் வேண் டும். புகழ்புரிந்த இல்லாளைப் பெற்றவர் பீடுநடையுடையவ ராவர். அவர்தம் பீடுநடை சில வேளைகளில் ஏறுநடை போலவும் பெருகும். எவ்வெவ்வேளையில்? விரிவு ஈண் டைக்கு வேண்டுவதில்லை. ஈண்டைக்கு வேண்டப்படுவது ஒன்று. அது சிறந்தது. அவ்வொன்று பகைவர் கண்ணிற் படும் வேளையில் என்க.

பகைவர் தம்மைப் பார்க்கும் வேளையில் புகழ்புரிந்த இல்லுடையார் நடைதளராது. அது பீடு நடையதாகும்; ஏறு நடையதாகும். அவ்வேளையில் புகழ்புரிந்த இல் இலோர் நடை எத்தன்மையதாகும்? அதைச் சொல்லவும் வேண்

டுமோ? அந்தோ! அவர் மனம் உடைகிறது; நடையும் உடைகிறது; கால் எழவில்லை; பூமியில் பாவவில்லை; நடை தள்ளாடுகிறது; பீடுநடை எங்கே? ஏறுநடை எங்கே? பாவம்!

புகழ்புரிந்த இல் இலாதார் நிலைமை எவர் முன்னே எவ்வாறு - காணுமாறு - ஆசிரியர் அறைகிறார்? பாருங்கள். அவரை "இகழ்வார்முன்" அவர்தம் நடையில் காணுமாறு ஆசிரியர் அறைகிறார். ஆசிரியர் மொழி அநுபவம் வாய்ந்தது. நிலைமையை ஆசிரியர் விளக்கும் முறையை நோக்குக. "இகழ்வார்முன் ஏறுபோல் பீடுநடை இல்லை" என்பதை உன்னுக.

புகழ்புரிந்த இல்இலார் நிலைமை இக்குறட்பாவில் குறிக்கப்பட்டது. இதைக் கொண்டு புகழ்புரிந்த இல் உடையார் நிலைமையை ஊகித்து உணர்ந்துகொள்க.

'புகழ்புரிந்த இல் இலாதார் நடை இகழ்வார் முன் பீடு பெறாது குன்றுமெனில், இகழாதார் முன் அந்நடை பீடுடையதாகுமோ' என்னும் ஐயம் பிறக்கலாம். இகழாதார் முன்னும் நடை சிறிது குன்றும்; ஆனால் அது நன்கு புலனாகாது. இகழ்வார் முன் பீடு நடை இன்மை நன்கு புலனாகும். புலனாவதை உணர்த்தவே "இகழ்வார் முன்" என்றார்.

மனவேதனை பெரிதும் பிறர்க்குத் தெரிவதில்லை. வேதனையுடையார் நாடி நரம்புக் கட்டின் குலைவுக்கு நண்பரிடம் வேறு வேறு காரணம் சொல்லிக்கொள்ளுதல் கூடும்; ஆதலின் நண்பரை நீக்கி "இகழ்வார் முன்" என்றார்.

## ஏறுபோல்

"ஏறுபோல் பீடுநடை" என்பது வீறுகொண்ட நடையை உணர்த்துவது.

'ஏறுநடை - அசைவும் தலையெடுப்பும் பொருந்திய நடை' என்பது மணக்குடவர் குறிப்பு.

"புகழ்புரிந்த இல் இலோர்க்கு" என்பதற்குப் 'புகழ் விரும்பிய மனையாளைப் பெறாதார்க்கு' என்று பொருள் கொள்ளப்பட்டது. இப்பொருள் அதிகாரத்தின் உள்ளுறை நோக்கியே கொள்ளப்பட்டது. 'புகழ்விரும்பிய இல்வாழ்க்கையைப் பெறாத தலைவர் தலைவியர்க்கு' என்று பொருள் கூறுதற்கும் இடந்தருவதாகவே பாட்டு அமைந்திருக்கிறது. இம்முறையில் பாட்டு அமைக்கப்பட்டதன் நோக்கம் ஏதாயினும் இருக்குமா என்று சிந்திப்போமாக. அதிகாரம் வாழ்க்கைத் துணையாகிய பெண்மகளைப் பற்றியதாயினும், அதன் ஊடே ஊடே ஆண் மகனைப்பற்றிய குறிப்புக்களும் இலைமறை காயெனக் கரந்து விளங்குதலைக் காண்கிறோம். நல்ல மனையாளைப் பெறாதவனுக்குத் தன்னை இகழ்வார் முன் ஏறுபோன்ற பீடுநடை எங்ஙனம் அற்றுப்போகிறதோ, அங்ஙனமே நல்ல கணவனைப் பெறாதவளுக்கும் தன்னை இகழ்வார்முன் ஏறுபோன்ற பீடுநடை அற்றே போகுமெனக் கொள்க. இருபாலாரும் நல்லொழுக்கம் உடையராயிருத்தல் வேண்டுமென்பது குறிப்பு.

ஏறுநடை போன்ற பீடுநடை பெண்ணுக்கு உண்டா என்றும், ஏறு ஆண்மைப் பெயரைக் குறிப்பதன்றோ என்றும் வினவுவோர் இருக்கலாம். ஈண்டு ஏறுநடை என்றது வீறு நடையைக் குறிப்பது. ஏறுநடை இங்கே உவமை; பொருளன்று. ஏறுநடை என்னும் வீறுநடை பெண்ணுக்கும் உண்டு.

ஆடவர் மாண்புக்கும் பெண்டிரே - கற்புடைப் பெண்டிரே - காரணர் என்பது விளக்கப்பட்டது. இதனாலும் பெண்ணின் பெருமை பேசியவாறும். (௯)

## 60

*மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்*
*நன்கலன் நன்மக்கட் பேறு.*

### பொருள்

*மனைமாட்சி - இல்லக்கிழத்தியை, மங்கலம் என்ப அழகு என்று (அறிஞர்) சொல்வர், மற்று அதன் - மேலுட அதற்கு, நன் மக்கள் பேறு - நல்ல மக்கட்பேற்றை, நன் கலன் (என்ப) - மணிப்பூண் என்று சொல்வர்.*

### கருத்து

*பெண்ணினல்லாள் அழகுத் தெய்வம். அத்தெய்வத்துக்கு அணி மக்கட்பேறு.*

### விருத்தி

*மேற்போந்த பாட்டுக்களின் கருத்துக்களெல்லாம் இப் பாட்டில் பொதுளி நிற்கின்றன. இப்பாட்டில் வாழ்க்கைத் துணையின் பொலிவும் அணியும் திகழ்தல் காண்க.*

*'ஒருவனுக்கு அழகு என்று சொல்லுப, மனையாள் ஒழுக்க முடையாளாதலை; அவ்வழகின் மேலே நல்ல அணிகலன் என்று சொல்லுப, நல்ல புதல்வரைப் பெறுதலை'*—மணக்குடவர்.

*'ஒருவற்கு நன்மை என்று சொல்லுவர் (அறிந்தோர்) மனையாளது நற்குண நற்செயல்களை; அவை தமக்கு நல்ல அணிகலமென்று சொல்லுவர் நல்ல புதல்வரைப் பெறுதலை'* —பரிமேலழகர்.

**மனைமாட்சி மங்கலமென்ப**

*மனை - இல்லம்; மனையறம்.*

*மாட்சி - மாட்சியுடையவளை, மாட்சி தருபவளை கிழத்தியை, மனைவியை; ஆகுபெயர்.*

மனைமாட்சி - மனையில், மனையறத்தில், மனையறத்தை 5டாத்துவதில் மாட்சிமை வாய்ந்தவளை; மனைவியை; இல்லக்கிழத்தியை.

மங்கலம் - அழகு, பொலிவு; அழகுத் தெய்வம்; 'மங்கலத் தாசியர் தங்கல னொலிப்ப'—சிலப்பதிகாரம்: சு. கடலாடு: கஉரு.

என்ப - என்று சொல்வர்; என் - பகுதி; ப-விகுதி.

## பாட்டுச் சிறப்பு

இப்பாட்டு இவ்வதிகாரத்தின் முடிவுரை போன்றது. 'வாழ்க்கைத்துணை'யைப் பற்றி ஆசிரியர் எவ்வளவு கூற வேண்டுமோ அவ்வளவும் கூறி விட்டனர் என்றே சொல்ல லாம். இவ்வதிகாரத்தில் பெண்ணுலகம் பலப்பல காட்சி யளித்துப் பொலிகிறது என்று கூறல் மிகையாகாது. வல்லார் தமது உரையால் இவ்வதிகாரத்தின் உள்ளுறையை மலையாக்கலாம்; கடலாக்கலாம்.

## மங்கலம் மனைமாட்சி

வாழ்க்கைத் துணையைப் பற்றிப் பலப்பல பேசிய ஆசிரியர், அப்பலவற்றை இப்பாட்டில் சில சொல்லால் தொகுத்துச் சொல்லியுள்ள பெற்றிமை போற்றற்குரியது. "மங்கலம் என்ப மனைமாட்சி" என்கிறார் நந்தமிழ்ப் பெரியார். இதில் அடங்காத தென்னை? எல்லாம் அடங்கு கின்றன.

ஆசிரியர் பெண்ணை, 'மனைமாட்சி' என்கிறார். இதை மனத்தால் நோக்குவோமாக. "மனைமாட்சி" கருத்தைக் கவர்கிறது; கண்ணைக் கவர்கிறது; மற்றப் புலன்களையுங் கவர்கிறது. பெண்ணினல்லாளைப் பெரியார், "மனைமாட்சி" என்று கூறிப் பெருமைப்படுத்தியிருப்பர். அதனால் "மனை

மாட்சி"யைப் பார்ப்போருக்கும் அளவிலா மகிழ்ச்சியுறு கிறது போலும்!

நற்குண நற்செய்கை பொருந்திய ஒன்று மாட்சி என்பது. நற்குண நற்செய்கையே மாட்சிப்பெண்ணாக உருக்கொண்டு இக்குறளில் காட்சியளிக்கிறாள். இம்மாட்சிமையினுஞ் சிறந்ததொன்றுளதோ? மற்ற மாட்சிகட்கெல்லாம் மாட்சி அளிப்பவள் வாழ்க்கைத்துணை யாதலின், அவள், "மாட்சி - மனைமாட்சி" என்னப்பட்டாள். மனைக்கு மாட்சி பெண்ணே.

பெண்ணை "மாட்சி" என்று அருளிய ஆசிரியர், அம்மாட்சியை 'மங்கலம்' என்றுஞ் சிறப்பிக்கிறார். பெண்ணை ஆசிரியர் 'மாட்சி' என்கிறார்; 'மங்கலம்' என்கிறார். எவ்வெவ்வகையில் ஆசிரியர் பெண்ணுலகைச் சிறப்பித்து மகிழ்வெய்துகிறார் பாருங்கள்.

மனை - மாட்சி - மங்கலம் - இம்மூன்றையும் உன்னுக. "மாட்சி" ஞாயிறெனவும், "மங்கலம்" அதன் அழகொளி எனவும், "மனை" ஞாயிற்றின் அழகொளியால் உவப்புறும் உலகமெனவும் தோன்றுகின்றன.

மனை இருக்கிறது; மற்ற உயிர்களும் பொருள்களும் இருக்கின்றன. இவைகள் மங்கலம் பெற்றுப் பொலிவுறல் வேண்டும். இதற்கு வேண்டப்படுபவளே மாட்சிமைப்பெண். இம்மாட்சியால் மனை மங்கலம் பெறுகிறது. மாட்சியினின்றெழும் மங்கல அழகொளி மனைக்கு உயிர்ப்பளித்து அதை ஓம்புகிறது. ஒரு மனையில் எல்லாமிருந்தும் அதில் வாழ்க்கைத்துணை யென்னும் மாட்சி யில்லையாயின், அம்மனையில் மங்கலம் பொலியுமோ? மங்கலமற்ற இடம் வெறுங் கட்டடமேயாகும். அது மனையாகாது; அது பாழ்.

**மற்றதன் நன்மக்கட்பேறு நன்கலன்**

மற்று - பின்னும்; மேலும்.
அதன்-அவ்வழகுக்கு; அவ்வழகுத் தெய்வத்துக்கு.
மக்கள் - பிள்ளைகளே.
பேறு - பெறுதலே.
பெறு - பேறு; முதனிலே திரிந்த தொழிற்பெயர்.
கலன் - பூண், ஆபரணம்.

நன்கலன் - மணிப்பூண்; இரத்தினுபரணம்; 'பொன் செய் கொல்லரும் நன்கலந் தருநரும்'—சிலப்பதிகாரம்: ரு. இந்திர : ௩௧ (நன்கலந் தருநர் - இரத்தினப் பணித்தட்டார்) 'அவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம்'—புறநானூறு: 6 : 15.

**மக்கட்பேறு நன்கலன்**

மனைமாட்சி மங்கலம். அதாவது, மனையின் அழகு பெண்ணினல்லாள். இவ்வழகை இன்னும் அழகு செய்து பார்க்க ஆசிரியர் விழைகிருர். மனை அழகை மேலும் அழகு செய்ய ஆசிரியர் ஓர் அணி அமைக்கிருர். அவ்வணி எது? அது "நன்மக்கட்பேறு" என்பது. மனை மாட்சியை மங்கலம் என்றருளிய ஆசிரியர், நன்மக்கட்பேற்றை அம்மங்கலத்தின் "நன்கலன்" என்று அருளியிருத்தலே உன்னுக.

'மனையில் கிழத்திமட்டும் இருத்தல் சாலாது. அதன் கண் நன்மக்களும் இருத்தல் வேண்டும்' என்பது கருத்து.

நிலவற்ற திங்கள் எற்றுக்கு? அரும்பு மலர் காய் கனி யற்ற சோலையால் என்ன பயன்?

"தொக்கின மலர்துதை விலாத சோலையும், புக்கிளந் தாமரை நகாத பொய்கையும், மிக்கிளம் பிறைவிரி விலாத வந்தியும், மக்களை யிலாததோர் மனையு மொக்குமே"—சூளாமணி: மந்திர: 175.

*வாழ்க்கைத்துணையின் மாண்பு கூறப்புகுந்த ஆசிரியர் இறுதியில் மக்கட்பேற்றைக் குறித்ததென்னை ? வாழ்க்கைத் துணைக்கு மக்கட்பேற்றின் இன்றியமையாமையை விளக்க என்க.*

## வாழ்க்கையின் நோக்கம்

*இல்வாழ்க்கையின் நோக்கமென்ன? மனமாசற்ற அறநிலை பெறுதற்கு அன்பை வளர்த்தல் வேண்டுமென்பது. பெண்ணினல்லாள் வாழ்க்கைத் துணையாக மட்டும் அமர்ந்து கடனாற்றுவதால் இல்வாழ்க்கையின் நோக்கம் நிறைவேறாது. அன்பு, காதலி காதலன் அளவில் நின்று சிறைப்படும். மக்கட் பேற்றால் அன்பு வளர்தற்கு ஏது உண்டாகும். இதுபற்றியே ஆசிரியர் 'வாழ்க்கைத் துணையில்' நன்மக்கட் பேற்றையும் புணர்த்திக் கூறினரென்று தெளிக. வாழ்க்கைத் துணை நலம் மக்கட்பேற்றைப் பொறுத்து நிற்றலை உணர்த்தியவாறும்.*

*பெண் ஆண் சேர்க்கை மக்கட்பேற்றைக் குறிக்கொண்டதாயிருத்தல் வேண்டும். இக்குறியற்ற சேர்க்கை வெறுங் காமவெறியின் பாற்படுவதாகும்.*

## செயற்கை முறை

*மக்கட்பேற்றைக் கெடுத்துக்கொள்ளுஞ் செயற்கை முறைகள் இந்நாளில் சிலவிடங்களில் கையாளப்படுகின்றன. செயற்கை முறைகள் அன்பு வளர்ச்சிக்குக் கேடு சூழ்வதுடன் பெண் ஆண் உடல் நலத்துக்குங் கேடு சூழ்வனவாம். திருவள்ளுவர் திருவாக்குச் செயற்கை முறைகட்கு மறுப்பெனவுந் திகழ்தல் காண்க.*

*இல்வாழ்க்கை உலக வளர்ச்சிக்குத் துணைபுரிவது. அதற்கென்றே உறுப்புக்களும் இயற்கையில் அமைந்திருக்*

கின்றன. இத்தகை இல்வாழ்க்கையில் மக்கட் பேறு அற்றொழிந்தால் உலகநிலை என்னாகும்? இஃதும் ஈண்டுக் கருதற்பாலது.

## நன்மக்கட்பேறு

ஆசிரியர் "மக்கட் பேறு" என்று கூறாமல் "நன்மக்கட்பேறு" என்றனர். இதனால் தீயமக்கட் பேற்றை விலக்கிய வாறாம். தீயமக்களைப் பெற்று உலகுக்கு இன்னல் விளைப்பதினும் மக்களைப் பெறாதிருத்தலே நன்றாம்.

"நன்மக்கட் பேறு" என்றது, இல்வாழ்க்கையைப் பெண்ணும் ஆணும் நன்முறையில் நடத்தல் வேண்டுமென்பதை அறிவுறுத்துவதாகும். இதுபற்றியே இவ்வதிகாரத்தில் கற்பொழுக்கம் பெரிதும் வலியுறுத்தப்பட்டது.

## வரும் அதிகாரம்

'வாழ்க்கைத் துணை'க்கும் 'மக்கட் பேற்'றிற்கும் உள்ள தொடர்பை இவ்வதிகாரமும் வரும் அதிகாரமும் விளக்கி நிற்கின்றன. இத்தொடர்பின் சிறப்பை உலகம் உணரவேண்டி இவ்வதிகாரத்திலேயே "நன்மக்கட் பேறு" என்று ஆசிரியர் தோற்றுவாய் செய்தனர் போலும். தாயினிடந் தோன்றுவது சேயன்றோ? 'வாழ்க்கைத் துணையி'னின்றும் 'மக்கட்பேறு' பிறக்கிறது. (௬௦)



# எ. மக்கட்பேறு

மக்கள் - பிள்ளைகள்; மகளும் மகனும்.

பேறு - பெறுதல்; பெறுகை.

மக்கட்பேறு - மக்களைப் பெறுதல்; பிள்ளைகளைப் பெறுகை.

## தலைப்பு

தலைப்பு "மக்கட் பேறு" என்று அணியப்பட்டது. முன்னதிகார இறுதிப் பாட்டிலும், இவ்வதிகார முதற் பாட்டிலும் மக்கட் பேறு திகழ்தல் காண்க. தலைப்புப் பெரிதும் ஒவ்வோர் அதிகார முதற் பாட்டிலேயே தோற்றஞ் செய்வது ஆசிரியர் வழக்கம்.

## மணக்குடவரும் பரிமேலழகரும்

மணக்குடவரும் பரிமேலழகரும் "புதல்வரைப் பெறுதல்" என்ற தலைப்புக்கொண்டு குறிப்பு வரைந்துள்ளனர். அதிகாரத்துள் 'புதல்வர்' என்னுஞ் சொல் யாண்டுங் காணப்படவில்லை.

'புதல்வரைப் பெறுதலாவது புதல்வரைப் பெற்றதனுலாய பயன் கூறுதல்'—இது மணக்குடவர் குறிப்புரை.

'புதல்வரைப் பெறுதல்: அஃதாவது இருபிறப்பாளர் மூவரானும், இயல்பாக இறுக்கப்படுங் கடன் மூன்றனுள் முனிவர் கடன் கேள்வியானும், தேவர் கடன் வேள்வியானும், தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலானும் அல்லது இறுக்கப்படாமையின் அக்கடனிறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறுதல்'—இது பரிமேலழகரது விளக்கம்.

## தொடர்பு

மேல் அதிகாரத்துக்கும் இவ்வதிகாரத்துக்கும் உள்ள தொடர்பு முதலியன அவ்வதிகார இறுதிப் பாட்டிற் போந்துள்ள "மக்கட்பேறு" என்பதன் குறிப்புரையில் விளக்கப்பட்டன.

## உள்ளுறையும் அமைவும்

இவ்வதிகாரத்தின் உள்ளுறையை ஐந்து கூறிடலாம். அவை மக்கட்பேற்றின் விழுப்பம், அப்பேற்றால் விளையும் பயன், மக்களே சிறந்த செல்வம் என்பது, மக்களால் இன்பமுண்மை, பெற்றோர்க்கும் மக்கட்குமுள்ள இயைபு என்பன.

உலகில் பலதிறப் பேறுகள் உண்டு. அவைகளுள் விழுமியது மக்கட்பேறு. மக்கட்பேறு விழுமியதென்பதற்குச் சான்றுகள் வேண்டுமல்லவோ? எவைகளைச் சான்றுகளாகக் கொள்ளலாம்? பயன், செல்வம், இன்பம், கல்வி, சான்றாண்மை, ஈன்றோர்க்குவப்பூட்டல், உலக நலன் முதலியவற்றைச் சான்றுகளாகக் கொள்ளலாம். இவைகள் திருவள்ளுவர் மக்கட் பேற்றில் விளங்குதல் வெள்ளிடைமலை. இவை யாவும் வாழ்வில் பிறங்கு முறையில் பெற்றோரும் மக்களும் வாழ்வு நடாத்தல் வேண்டும். நல்ல பெற்றோர் வழியும் நல்ல மக்கள் வழியும் முகிழ்க்கும் உலகமே நலஞ்செய்வதாகும்.

முதற்பாட்டில் மக்கட்பேற்றின் விழுப்பமும், இரண்டாவது பாட்டில் மக்கட்பேற்றால் விளை பயனும், மூன்றாவதில் மக்களே செல்வம் என்பதும், நான்கு ஐந்து ஆறில் மக்களால் இன்பமுண்மையும், மற்றவைகளில் பெற்றோர்க்கும் மக்கட்குமுள்ள இயைபும் சொல்லப்பட்டுள்ளன.

(i) மக்கட்பேற்றின் விழுப்பம்

## 61

*பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த*
*மக்கட்பே றல்ல பிற.*

### பொருள்

*பெறுமவற்றுள்* - (*வாழ்க்கையில்*) *பெறுவனவற்றுள*, *அறிவு அறிந்த மக்கள் பேறு அல்ல* - *அறிவை யுணரும் பிள்ளைகளைப் பெறுதல் அல்லது*, *பிற* - *பிறவற்றை*, *யாம் அறிவது இல்லை* - *யாம் கண்டறிதல் இல்லை*.

### கருத்து

*வாழ்வில் அடையத்தக்க பேறுகளுள் சிறந்தது மக்கட் பேறு.*

### விருத்தி

*'ஒருவன் பெறும் பொருள்கள் அறிவுடைய மக்களைப் பெறுதல்; பயன்படுவ தொழிந்த பொருள்களெல்லாம் அவற்றினும் சிறந்தனவாக யாம் கண்டறிவதில்லை'*—இது மணக்குடவர் உரை. ("*அறிவுடைய மக்கட்பேறு*" என்பது இவர் கொண்ட பாடம்).

*'ஒருவன் பெறும் பேறுகளுள் அறிய வேண்டுவன வற்றை அறிதற்குரிய மக்களைப் பெறுதல் அல்லது பிற பேறுகளை யாம் மதிப்பதில்லை'*—இது பரிமேலழகர் உரை.

இவ்விரண்டுக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை நோக்குக.

**பெறுமவற்றுள் அறிவறிந்த மக்கட்பே றல்ல**

*பெறுமவற்றுள்* - (*வாழ்க்கையில்*) *பெறுவனவற்றுள்*; *பெறும் பேறுகளுள்*.

அறிவு - சித் ; சடமல்லாதது ; அறிவன அதாவது அறிய வேண்டுவன என்று பொருள் கூறுவோரும் உளர். (இப்பொருளில் ' அறிவு ' ஆகுபெயர்).

அறிந்த - உணரும், தெளியும் ; அறிதற்குரிய.

அறிந்த : கால வழுவமைதி ; துணிவுபற்றி இறந்த காலத்தாற் சொன்னதென்க.

அறிவறிந்த மக்கள் - அறிவை யுணரும் மக்கள் ; அறிய வேண்டுவனவற்றை அறிதற்குரிய மக்கள் என்னலுமாம். அறிய வேண்டுவனவற்றை அறிவால் அறிந்த - அறியும் - அறிதற்குரிய - மக்கள் என்று கொள்வோரும் உளர்.

அல்ல - அல்லது ; அல்லனவாகிய என்னலுமொன்று.

## பெறுமவற்றுள்

வாழ்க்கையில் பெறும் பேறுகள் எவ்வளவோ உண்டு. அவைகள் இவ்வளவின என்று அறுதியிட்டுக் கூறுதல் இயலாது. பேறுகளைப் பதினாறென்று அளவு படுத்திக் கூறுவோருளர். திருவள்ளுவர் பொதுவாக, " பெறுமவற்றுள் " என்றே அருளினர். இஃது ஓர் அளவைக் குறிப்பதன்று. பேறுகளைக் கல்வி . செல்வம் நாவன்மை அஞ்சாமை நோயின்மை அழகு புகழ் என்று பலபட அடுக்கிக்கொண்டே போகலாம். திருவள்ளுவர் பலவற்றை உளங்கொண்டே, " பெறுமவற்றுள் " என்று அருளினர்.

வாழ்க்கையில் பெறுவனவற்றுள் விழுமியது எது என்பதைக் கூறுவது இப்பாட்டு. வாழ்க்கைப் பேறுகளுள் விழுமியது எது என்னும் வினாவிற்கு விடையிறுத்தல் எளிதன்று. விடை பலர்க்குப் பலவிதமாகத் தோன்றும்.

அவரவர் தத்தம் அநுபவத்தையொட்டி ஒவ்வொன்றைக் கூறுவர்.

## மக்கட்பேறல்ல

திருவள்ளுவர் கூறுவதென்னை? திருவள்ளுவர் இயற்கை வாழ்வு நடாத்திப் பலதிற உண்மைகளைக் கண்டவர். அவர் தங் கருத்து விழுப்ப முடையதா யிருக்கும் என்பதில் ஐய மில்லை. இக்குறட்பாவில் திருவள்ளுவர் கருத்து வெள்ளிடை மலையென விளங்குகிறது. வாழ்க்கைப் பேறுகளுள் விழுமியது, "மக்கட்பேறு" என்பது அவர்தங் கருத்து. இக் கருத்தை அவர் நேரே வெளியிடுகிறாரில்லை. திருவள்ளுவர் வெளியிட்டுள்ள முறையைப் பார்ப்போம்.

"பெறுமவற்றுள்...........மக்கட் பேறல்ல பிற யாம் அறிவதில்லை" என்று ஆசிரியர் அருளியுள்ளனர். இது சிந்தனைக்கு விருந்தளிக்கும் முறையாகும். எற்றுக்கு ஆசிரியர் இவ்வாறு அருளலாயினர் என்று உன்ன உன்ன அவர்தம் உள்ளம் நன்கு விளங்கும்.

திருவள்ளுவர், 'பெறுமவற்றுள் விழுமியது எது' என்று எண்ணி எண்ணிச் சிந்தனையில் அமர்ந்திருப்பர். அவர்தம் வாழ்க்கையில் பெற்ற அடைவுகள் ஒவ்வொன்றாய்ச் சிந்தனையில் தோன்றித்தோன்றி ஒடுங்கியிருக்கும். சிந்தனை ஆழச் சென்று சென்று தன் அடிவரைப் போயிருக்கும். அங்குஞ் சில தோன்றி மறைந்திருக்கும். இறுதியாக 'மக்கட்பேறு" என்பது முகிழ்த்து நின்றிருக்கும். "மக்கட் பேற்றிற்கு" மேல் வேறொன்றும் முகிழ்த்திராது. இவை கட்குப் பாட்டிலேயே "பிற யாம் அறிவதில்லை" என்பதில் குறிப்புக்கள் உள்ளன.

## அறிவறிந்த (மக்கட்பேறல்ல)

முன்னைய அதிகார இறுதியில் "நன்மக்கட்பேறு" என்றார்; இங்கே "அறிவறிந்த மக்கட்பேறு" என்கிறார்.

'அறிவுடைய மக்கட்பேறு' என்பது மணக்குடவர் கொண்ட பாடம். 'அறிவுடைய' என்பதன் பொருள் வெளிப்படை. "அறிவறிந்த" என்பதற்கு, 'அறிவை உணரும்' என்றோ, 'அறியவேண்டுவனவற்றை அறிதற்குரிய' என்றோ, இன்னும் பொருந்திய முறையில் வேறுவிதமாகவோ பொருள் கொள்ளினும், அப்பொருள்களின் உட்கிடக்கையில் வேற்றுமை யிராது என்று பொதுப்படக் கூறலாம்.

## துணிவும் நுட்பமும்

"அறிவறிந்த" என்ற பாடத்தில் ஒருவிதச் சிறப்புளது. அது மக்கட்கும் அறிவுக்குமுள்ள தொடர்பின் இயற்கையை உணர்த்துவது. இத்தொடர்பின் இயற்கையைத் தெளிவு செய்யவே ஆசிரியர், 'அறிவறியும்' என்று கூறாது, "அறிவறிந்த" என்று கூறினர். இதற்குத் துணிவுபற்றி வந்த காலவழுவமைதி என்று இலக்கணப் புலவோர் கூறுப. "அறிந்த" என்பதிலுள்ள துணிவு, மக்கட்கும் அறிவுக்கும் உள்ள தொடர்பின் இயற்கையைத் தெளிவு செய்ய எழுந்ததாகும். அறிவை அறிதற்கு மக்கள் உரியவர்கள் என்னும் நுட்பமும், "அறிவறிந்த" என்பதில் பொலிதல் காண்க.

## அறிவு

அறிவு எது? இதைப்பற்றிய ஆராய்ச்சி இன்னும் முற்றுப்பெறவில்லை. அறிவு பூதங்களின் கூட்டுறவால் பிறப்பதென்றும், அது தனித்த பொருள் அன்றென்றும் சொல்வோருளர்; அறிவு தனித்த பொருளென்றும், அது பூதங்களில் இரண்டறக் கலந்து நிற்பதென்றும், அதைப் பூதங்களினின்றும் தனியே பிரித்துக் காட்டல் இயலாதென்றும் சொல்வோருளர்; எல்லாம் அறிவே யென்றும், பூதங்களென்

பன பேய்த்தேரென்றும் சொல்வோருளர். இன்னும் பல வாறு சொல்வோருமுளர். இவ்வறிவுத் திறங்களுள் ஈண்டுக் கூறப்பட்ட அறிவு எது? இங்கே சமய தத்துவ மனங் கொண்டு ஒரு சார்புபற்றிக் கூறுதல் நியாயமன்று. எவ ரெவர்க்கு எது எது அறிவென்று தோன்றுகிறதோ அதை அதை அறிவெனக் கொள்வது நியாயம். இக்கொள்கையில் உண்மை அறிவு விளங்காமற் போகாது.

"அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே"
—அருணகிரியார்

"வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை
வசமெனவே அத்துவா மார்க்க நோக்கி
ஐந்துபுலன் ஐம்பூதங் கரண மாதி
அடுத்தகுணம் அத்தனையும் அல்ல அல்ல
இந்தவுடல் அறிவறியா மையுநீ யல்ல
யாதொன்று பற்றின்அதன் இயல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீஉன்
பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம்"
—தாயுமானவர்

அறிவை எதைக்கொண்டு அறிவது? அறிவைக் கொண்டே அறிவை அறிதல் வேண்டும். ஆதலால் "அறிவை (அறிவால்) அறிந்த" என்று பொருள் கொள்க.

## ஆறறி வுயிர்

அறிவில்லா உயிர்களில்லை. எல்லா உயிர்கட்கும் அறிவு உண்டு. அறிவு உடல்நிலைக் கேற்றவண்ணம் விளங்கிக் கொண்டே போகும். இதுபற்றியே நம்முன்னோர் உயிர்களை ஓரறிவு உயிர்முதல் ஆறறிவு உயிர்வரைப் பிரிவுசெய்தனர். அறிவை அறியும் அறிவு, ஆறறிவுடைய உயிர்களிடத்தே யுண்டு. ஆறறி வுயிர்களே மக்கள்.

மக்கட்கு அடுத்தபடியி லிருப்பவை விலங்குகள். விலங்கு கட்கு ஐந்தறிவு உண்டு. மக்கட்கு ஐந்தறிவுடன் ஆறுவதறிவு உண்டு. இவ்வாறுவதறிவு கொண்டு அறிவையுணர்தல் வேண்டும். "அறிவறிந்த" என்பதற்கு அறிவை ஆறுவ தறிவால் அறிந்த என்று பொருள் கொள்ளலாம்.

ஆறுவதறிவு விளங்கும் கரண அமைப்பு மக்கட் பிற விக்கே உண்டு. மற்றப் பிறவிகட்கு அவ்வமைப்பில்லை. வெறும் அமைப்பளவில் ஆறுவதறிவு தானே விளக்கமுறாது. அமைப்பாம் வாய்ப்பை, இயற்கை அளிக்கிறது. அதைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டுவது மக்கள் பிறவி தாங்கி னோர் கடமை.

## மக்கள்

வாய்ப்பைப் பயன்படுத்தி ஆறுவதறிவை உணர்வோரே மக்களாவர். மற்றவர் மக்களாகார்; அவர் மாக்கள். (மக்கள் - ஆறறிவினர்; மாக்கள் - ஐயறிவினர்.) இவ்வேற்றுமை பாயிர உரையில் பலவிடங்களில் விளக்கப்பட்டது.

ஈண்டு 'மக்கள்' என்றது பிள்ளைகளின் மேற்று. பிள்ளைகள் வளர்ந்து பின்னே அறிவறியும் மக்களாதல் வேண்டுமன்றோ? இதுபற்றி, "பிள்ளைகள்" என்று பொருள் படுமாறும், பின்னே அவர்கள் மக்களாதல் வேண்டும் என் னும் குறிப்பு உள்ளுறைந்து நிற்குமாறும் "மக்கள்" என்றார்.

## இருபாலார்

ஈண்டு மக்கள் என்றது இருபாலாரையும் உணர்த்து வது; "மக்கள்" என்பதற்கு ஆண்மக்கள் என்றோ பெண் மக்கள் என்றோ பிரித்துக் கூறுவது அறமாகாது. பரிமேலழ கர், "'அறிவறிந்த' என்ற அதனன், 'மக்கள்' என்னும்

பெயர் பெண்ணெழித்து நின்றது" என்றொரு குறிப்புப் பொறித்துள்ளனர். ஸ்மிருதிகள் பெரிதும் ஆட்சி பெற்றிருந்த காலத்தில் பரிமேலழகர் வதிய நேர்ந்தமை அவரை இக்குறிப்புப் பொறிக்கச் செய்திருக்கும். பேரறிஞரும் சில சமயம் காலதேவதையின் தளையால் கட்டப்படுதல் இயற்கை போலும்!

## பெண் மூளை

அறிவு பெண்ணுக்கும் ஆணுக்கும் பொதுவாயிருப்பது. படைப்பின் அமைப்பை நோக்குழி ஆணினும் பெண்ணுக்குக் கூர்த்த மதியுண்டு என்னும் நுட்பம் இனிது விளங்கும். ஆண் மூளையினும் பெண் மூளை மென்மையது. மென்மை மூளைக்கே அறிவாக்கம் அதிகம். இஃது உடற்கூற்று நூலார் கண்ட உண்மை. இவ்வுண்மை தெளிந்து மெய்யுணர்வு பெற்ற நம் முன்னோர் கல்விக் கடவுளைக் 'கலைமகன்' என்று அழையாது, 'கலைமகள்' என்றே அழைத்தனர். கலையைப் பெண்ணாகச் சொல்வது உலக வழக்கு.

## பெண்ணின் பெருமை

வேத காலத்திலும் சங்க காலத்திலும் வாழ்ந்த பெண் மணிகள் உபநிடதம் எழுதியும், இனிய இயற்கைப் பாட்டோவியம் வரைந்தும் புலவர்களாய்த் திகழ்ந்தமையை விரித்துக்கூற வேண்டுவதில்லை. கட்டுப்பாடுகள் மலிந்த இடைக் காலத்திலும் ஆண்டாளம்மையார், காரைக்காலம்மையார் முதலியோர் திருவருட் புலவராகவல்லவோ விளங்கினர்? கம்பர் தாங்கண்ட பெண்புலமைக் காட்சியை, "பெருந் தடங்கண் பிறைநுத லார்க்கெலாம் - திருந்து கல்வியுஞ் செல்வமும் பூத்தலால்" என்று உலகுக்கு உணர்த்தியிருப்பதும் ஈண்டுக் கருதற்பாற்று. பெண் புலமையைப்பற்றி,

"பெண்ணின் பெருமை" என்னும் நூலில் விளக்கஞ் செய்துள்ளேன். விரிவை அந்நூலிற் காண்க.

## இக்காலப் பெண்மணிகள்

இக்காலப் பெண்ணுலகைச் சிறிது நோக்குவோம். பிளவட்ஸ்கி அம்மையார், அன்னிபெஸண்ட் அம்மையார், சரோஜினி தேவியார் முதலியோர் அறிவுத் திறத்தை என்னென்று கூறுவது? தற்காலத்துத் துருக்கிப் பெண்மணிகள் எப்படி இருக்கிறார்கள்? அறிவுக் களஞ்சியங்களாக ஒளிர்தல் கண்கூடு. இன்னும் பல எடுத்துக் காட்டுகள் வேண்டுவதில்லை.

## பெண் - ஆண்

ஆண்களுக்கே அறிவு உடைமையாயின், பெண்கள் அறிவற்ற பிண்டங்களாகவல்லவோ இருத்தல் வேண்டும்? பெண்கள் அப்படியா இருக்கிறார்கள்? பெண்கள் படிக்கிறார்கள்; புலவராகிறார்கள்; வீரர்களாகிறார்கள். அறிவில் எவ்வழியில் பெண் மக்கள் ஆண் மக்களைவிடப் பின்னிட்டு நிற்கிறார்கள் என்பது விளங்கவில்லை. ஆகவே ஈண்டு "அறிவறிந்த மக்கள்" என்பது பெண் மக்களையும் ஆண் மக்களையும் கொண்டதென்க.

## பிற யாம் அறிவதில்லை

பிற - பிறவற்றை; பிற பேறுகளை.

அறிவது - அறிதல்: தொழிற் பெயர்.

அறிவது இல்லை - அறிதல் இல்லை; கண்டறிதல் இல்லை.

## பி ற அ றி வ தி ல் லை

"பிற" "அறிவதில்லை" என்பன வெற்றுரைகளாக நிற்கவில்லை. அவை பொருளுடையனவாகவே நிற்கின்றன.

"பிற" என்பது ஆசிரியர் சிந்தனையில் தோன்றிய பல வற்றை உணர்த்துவது. "அறிவதில்லை" என்பது ஒவ் வொன்றுந் தோன்றித் தோன்றி மறைந்ததை உணர்த்துவது.

ஒவ்வொன்றும் சிந்தனையில் தோன்றித் தோன்றி நின்றபோது, அதை அதை ஆசிரியர் ஆராய்ந்து ஆராய்ந்து, 'உன்னை விழுமிய பேறாக அறிதல் கூடவில்லை; உன்னை விழுமிய பேறாக அறிதல் கூடவில்லை' என்று என்று தள்ளித் தள்ளிப் பார்த்த பின்னை, "மக்கட்பே"றொன்றே தோன்றி நின்றமையாலும், அதற்குமேல் ஒன்றுந் தோன் றாமையாலும் "மக்கட்பே றல்லது பிறவற்றை யாம் அறி வது இல்லை" என்று தமது அநுபவத்தை உலகுக்கு உணர்த்தினர் போலும்!

எடுத்ததும் "மக்கட்பேறே" விழுமியது என்று சொல் லாது, "மக்கட்பே றல்லது பிறவற்றை அதற்கொப்பாகவோ உயர்வாகவோ யாம் கண்டறிதல் இல்லை" என்று விளக்கிச் சொல்லியது சிறப்பு முறையாகும். இம்முறையில் வாழ்க்கை அநுபவத்தின் தெளிவு திகழ்கிறது.

## யாம்

"யாம்" என்பது ஆசிரியரைமட்டுங் கொண்டதன்று; ஆசிரியரைப்போலச் சிந்தனையில் அமர்ந்து உண்மை கண்ட அறிஞர் பலரையுங் கொண்டது.

ஓர் அறிஞர் ஒன்றைப்பற்றிச் சிந்தனையில் அமர்ந்து அதை ஆழ முன்னும்போது, அதைப்பற்றி முன்னரே ஆழச் சிந்தித்து நின்ற பல அறிஞர் கருத்துக்களெல்லாம், அவ்வறிஞர் சிந்தனையில் முகிழ்ப்பது இயற்கை. சிந்தனையில் ஆழ்ந்து அதன் அடிவரைச் சென்ற அறிஞர் கருத்துக்கள் பெரிதும் ஒருமைப்பாடுடையனவாகவே யிருக்கும். மற்றவர் கருத்துக்களில் ஒருமைப்பாடிருத்தல் அரிது.

## பாட்டின் நுட்பங்கள்

இப்பாட்டு மக்கட்பேறே விழுமியது என்று சொல்கிறது. இதன்கண் பல நுட்பமிருக்கும். அவரவர் அறிவாற்றல் அநுபவம் முதலியவற்றிற்கு ஏற்ற அளவில் நுட்பங்கள் விளங்கிக்கொண்டே போகும்.

என் அநுபவத்தில் விளங்கியன சில. அவைகளுள் இரண்டொன்றைக் குறிக்க விரும்புகிறேன்.

மக்கட்பேறு வாழ்வைச் செயலில் செலுத்துவது; உலக வளர்ச்சியை அகத்தே கொண்டது; இருளிலுள்ள உயிர்களைத் தனு கரண புவன போகங்கள் பெறச்செய்வது; மன மாசைக் கழுவவல்ல அன்பை வளர்ப்பது. இன்னுஞ் சில நுட்பங்கள் கீழ்வரும் பாக்களில் பொலிதல் காண்க. (க)

(ii) மக்கட்பேற்றின் பயன்

## 62

எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

### பொருள்

பழி பிறங்கா - பழி மலியாத, பண்பு உடை - குணமுடைய, மக்கள் பெறின் - மக்களைப் பெற்றால், எழுபிறப்பும் - வரும் பிறப்பிலும், தீயவை தீண்டா - (பெற்றோரைத்) தீமைகள் பற்றமாட்டா.

### கருத்து

நன்மக்களைப் பெறுவோரைப் பின்னே எப்பிறவியிலும் தீமைகள் அணுகா.

## விருத்தி

முன்னைப் பாட்டில் மக்களின் அறிவுடைமை சிறப்பிக்கப்பட்டது. இப்பாட்டில் அறிவுடைமைக்கு இன்றியமையாத அவர்களின் பண்புடைமை பேசப்படுகிறது.

## பழி பிறங்காப் பண்புடை மக்கட் பெறின்

பிறங்கா - பிறங்காத, மலியாத, செறியாத, உயராத, மிகாத.

"பழிபிறங்கா" என்பதற்கு, 'பழிமிகாத' என்று மணக்குடவரும், 'பழிக்கப்படாத' என்று பரிமேலழகரும் பொருள் கொண்டனர்.

## பழி........பெறின்

முற்பாட்டில், "அறிவறிந்த மக்கள்" என்றார்; இப்பாட்டில், "பழி பிறங்காப் பண்புடை மக்கள்" என்கிறார். அறிவுடன் குணமும் வேண்டுமென்பது கருத்து. சிலரிடை அறிவு விளக்கமிருக்கும்; ஆனால் குணமிராது. குணமில்லாத அறிவு, நலத்துக்குப் பயன்படாது.

"பண்புடை மக்கள்" என்னும் அளவில் ஆசிரியர் நில்லாது, "பழி பிறங்காப் பண்புடை மக்கள்" என்று அருளியுள்ளது கருதற்பாலது.

பண்பு தூயது; பழிபிறங்காப் பண்பு மிகத்தூயது.

"பழி பிறங்கா" என்பதை மக்களுடன் சேர்த்துப் பொருள்கொள்ளினும் பொருந்தும். பழிபிறங்காமையும் பண்பும் உடைய மக்கள் என்று கொள்க.

"பழி பிறங்கா" என்பதைச் செயலுக்கு அறிகுறியாகவுங் கொள்ளலாம். நற்செயலுக்கு ஏதுவாகவுள்ள பண்பு என்பது குறிப்பு.

## எழுபிறப்பும் தீயவை தீண்டா

எழுபிறப்பும் - வரும் பிறப்பிலும், வரும் பிறவி தோறும் எனினுமாம்; ஏழு பிறப்பிலும் என்னலுமாம். (ஏழு பிறப்பு - எழுவகைப் பிறப்பு. அவை: தாவரம், ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, நடப்பன, மக்கள், தேவர் ஆகிய பிறப்புக்கள்.) எழுவகைப் பிறப்பில் ஆசிரியர்க்கு உறுதியுண்டு; "ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற் - கெழுமையும் ஏமாப் புடைத்து", "ஒருமைச் செயலாற் றும் பேதை எழுமையும் - தான்புக் கழுந்தும் அளறு" எனவரூஉங் குறட்பாக்களை நோக்குக.

ஈண்டு "எழுபிறப்பு" என்பதற்கு 'ஏழு பிறப் பிலும்' என்று கொள்வதினும் 'வரும் பிறப்பிலும்' என்று கொள்வது சிறப்பெனத் தோன்றுகிறது.

தீயவை - தீயன, தீமைகள், துன்பங்கள்.

தீண்டா - பற்றா, தொடா, தொடரா, அணுகா, சாரா, சென்றடையா.

**எ ழு.........தீ ண் டா**

பிறப்புக்களில் திருவள்ளுவர்க்கு உறுதியுண்மையான், "எழுபிறப்பும்" என்றார்.

"எழுபிறப்பும் தீயவை தீண்டா" என்பது, தற்போது எடுத்துள்ள பிறவியிலேயே தீயவை தீண்டாமையையும் உணர்த்துவ தென்க. நன்மக்களைப் பெற்றோரது எழுபிறப் பிலும் தீயவை தீண்டாவெனின், எடுத்துள்ள பிறவியில் எங் ஙனம் தீயவை தீண்டுதல் கூடும்? தீயவை தீண்டுவோரிடத் தில் எங்ஙனம் நன்மக்கள் உதித்தல்கூடும்? ஆதலின், நன்மக் களைப் பெற்றோரை அப்பிறவியிலேயே தீயவை தீண்டா வெனக் கொள்க.

'தீயவை நன்மக்களைப் பெற்ருேரை ஒரு பிறவியில் மட்டும் தீண்டா; மற்றப் பிறவியில் தீண்டும்' என்னுங் கொள்கை இடம் பெருதவாறு அதை மறுக்க வேண்டி ஆசிரியர், "எழு பிறப்புந் தீயவை தீண்டா" என்ருர்.

## மறுபிறப்பு

'நன்மக்களைப் பெற்ருேர் தீயவை தீண்டப் பெருராதலின், அவர் பிறவி நீங்கப் பெறுவோராகிருர். அவர்க்கு மறுபிறப்பு ஏன் குறித்தல் வேண்டும்' என்று ஐயுறுவோரிருக்கலாம்.

தீயவை தீண்டல் ஊழால் வருவது. நன்மக்கட்பேறு தீயவை தீண்டாதவாறு காப்பதென்பது திருவள்ளுவர் கருத்து. ஊழால் விளையும் தீயவை தீண்டல் ஒழிந்தால் மேற்பிறவிக்கு இடமில்லை. இங்ஙனமாக, ஆசிரியர் வரும் பிறப்பை உளங்கொண்டு, "எழுபிறப்பும்" என்று கூறி, "தீயவை தீண்டா" என்றுங் கூறியதென்னை?

## பிறவி நோக்கம்

பிறவி பெரிதும் ஊழ்காரணமாக வருவது. ஊழ்காரணமின்றியும் பிறவி வருவதுண்டு. இஃது உலக நலன் கருதி உடல் தாங்குவது. இதைக் கொண்டு, "எழுபிறப்பும் தீயவை தீண்டா" என்பதை உன்னிப் பார்க்க; பார்த்தால் தீயவை தீண்டப்பெருத எழுபிறப்பு உலக நலன்கருதித் தாங்குவதென்பது நனி விளங்கும்.

பழி பிறங்காப் பண்புடை மக்களைப் பெறுவோர் மீண்டும் உடல் தாங்குதல் அரிது. ஒரு வேளை அவர் உலக நலத்தின் பொருட்டு மீண்டும் உடல் தாங்க நேர்ந்தால், அப் பிறவியிலும் அவரைத் தீயவை தீண்டா என்றபடி. ஆதலின், தீயவை தீண்டாமையைப் பழிபிறங்காப் பண்புடை மக்களைப் பெற்ற பிறவியில் வைத்தோதாது எழுபிறப்பில் வைத்து

ஓதினரென்க. "எழு பிறப்பும்", என்பதிலுள்ள 'உம்'மை யின் நோக்கை உன்னுக.

தொண்டர் கூட்டம்

தீயவை தீண்டப் பெறாத மக்களே தொண்டிற்கு உரிய வர்கள். இம்மக்கள் கூட்டம் பெருகப் பெருக உலகில் பழி பாவம் பெருகமாட்டா; உலகில் பண்பே பெருகும். "பழி பிறங்காப் பண்புடை மக்கள்" என்பதும், "எழுபிறப்பும் தீயவை தீண்டா" என்பதும் பண்புலக முகிழ்த்தலைக் குறிக் கொண்டனவாம்.

உலகில் நன்மக்கட்பேறே பெருகுதல் வேண்டும்; தீய மக்கட் கூட்டம் பெருகின் உலக நிலை என்னும்? இதனால் நன் மக்கட்பேற்றின் பெற்றிமை விளங்குதல் காண்க.

பழிபிறங்காப் பண்புடை மக்கட்பெறின், எழுபிறப் பும் தீயவை தீண்டா. பழிபிறங்கும் பண்பிலா மக்கட் பெறின், எழுபிறப்பும் என்னும்? தீயவை தீண்டிக் கொண்டே யிருக்கும். நல்லுலகே வளர்ந்துவர ஆசிரியர் நன்மக்கட் பேற்றைக் குறிக்கிறார். நன்மக்கட்பேற்றில் எல்லா நலங்களும் அடங்கும். (உ)

(iii) மக்களே செல்வம்

63

தம்பொரு ளென்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையால் வரும்.

பொருள்

தம்மக்கள் - தம்மக்களே, தம்பொருள் என்ப - தம் செல்வம் என்று சொல்வர் (பெற்றோர்), அவர் பொருள் - அப் பெற்றோரது செல்வமாகிய மக்கட்பேறு, தம்தம் வினையால் வரும் - அவரவர் செயலால் உண்டாகும்.

கருத்து

மக்களே செல்வம்; அச்செல்வம் அவரவர் செயலால் உண்டாகும்.

விருத்தி

பழிபிறங்காப் பண்புடை மக்கட் பேறும் அதன் பயனும் சென்ற பாட்டிற் சொல்லப்பட்டன. இப்பாட்டில் பண்புடை மக்களே பெற்றோரின் செல்வம் என்றும், அச் செல்வம் பெற்றோரது நல்வினையால் உண்டாகுமென்றுஞ் சொல்லப்படுகின்றன.

## தம் பொருள்........வரும்

தம் என்பது இங்கே பெற்றோரை உணர்த்துவது.

பொருள் - செல்வம்; பொன்.

என்ப - என்று சொல்வர்; (யார்? பெற்றோர்; தம் மக்கள் என்றிருத்தலால் பெற்றோர் என்று கொள்ளப் பட்டது.)

அவர்: இச்சொல் இங்கே ஐயத்துக்கிடந்தந்து நிற் கிறது. மணக்குடவரும் பரிமேலழகரும் 'அம்மக்கள்' என்பர். 'அப்பெற்றோர்' என்று எனக்குத் தோன்று கிறது.

பொருள் - செல்வம்; ஈண்டு மக்கட்பேறு.

தம்தம் - அவரவருடைய.

வினை - நல்வினை, தீவினை.

நல்வினை - பழி பிறங்காதது; பண்புடையது.

தீவினை - பழி பிறங்குவது; பண்பில்லாதது.

பாடபேதம்

இப்பாட்டில் பாடபேத மிருத்தல் வேண்டும். யான் பார்த்த பிரதிகளில் பாடபேதங் கிடைக்கவில்லை.

தேசபக்தர் சிதம்பரம் பிள்ளை, "தம்பொரு ளென்பவே தம்மக்கள் அப்பொருள் - தம்தம் வினையால் வரும்" என்று திருத்தஞ் செய்துள்ளனர். தேசபக்தர் தாஞ்செய்த திருத்தத்தைப்பற்றி, "'அவர் பொருள் தந்தம் வினையால்வரும்' என்பது பொருத்தமான பொருள் ஒன்றையுந் தாராமையான், 'அப்பொருள்' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க" என்றொரு குறிப்பும் பொறித்துள்ளனர். அவர் செய்துள்ள திருத்தத்தில் வெண்பா இலக்கணம் பிறழ்ந்தில்லை. ஆனால் அத்திருத்தத்துடன் பாட்டை ஓதிப்பார்த்தால், 'என்பவே தம்மக்கள் அப்பொருள்' என்பதில் வெண்பா ஓசை சிறிது நெகிழ்ந்து செல்வது காணப்படுகிறது. ஏகாரத்தை நீக்கிவிட்டாலோ வெண்பாத் தளை தட்டுகிறது.

இப்பாட்டில் ஐயமூட்டுவது "அவர் பொருள்" என்பது. இதை "அப் பொருள்" என்று மாற்றினால் பொருள் பொருந்தி வருகிறது. ஆனால் வெண்பா இலக்கணம் முட்டுப் படுகிறது. இதை யுன்னியே சிதம்பரம் பிள்ளை, "என்ப" என்பதை, "என்பவே" என்று திருத்தலாயினர்.

யான் பார்த்த பிரதிகளிலெல்லாம், "அவர் பொருள்" என்றே காணப்படுகிறது. வலிந்து பாடபேதஞ்செய்ய மனமெழவில்லை. உள்ள மூலத்தையொட்டியே ஒருவாறு பொருள் கூறலானேன்; வேறுவழி புலனாகவில்லை. என் செய்வன்!

மணக்குடவரும் பரிமேலழகரும் "அவர் பொருள்" என்றுள்ள பாடத்தைக் கொண்டே பொருள் கண்டனர். உள்ள மாவைக் கொண்டு தானே ஒருவிதப் பண்ணியஞ் செய்தல் வேண்டும்.

## இருவர் உரை

மணக்குடவர் உரை வருமாறு:

'தம்முடைய பொருளென்று சொல்லுவர் உலகத்தவர் தம்மக்களை; அம்மக்களுடைய பொருள் தத்தம்முடைய வினையோடே கூட வருதலான்

பரிமேலழகருடையது வருமாறு :

'தம்புதல்வரைத் தம்பொருளென்று சொல்லுவர் அறிந்தோர் ; அப்புதல்வர் செய்தபொருள் தம்மைநோக்கி அவர் செய்யும் நல்வினையானே தம்பால்வரும் ஆதலான்'.

இவர்தம் உரைப்படி "தம்பொருளென்ப தம்மக்கள்" என்பதற்கும், "அவர் பொருளென்ப தம்தம் வினையால் வரும்" என்பதற்கும் ஏதேனும் பொருந்திய தொடர்புளதா என்பது ஆராயத்தக்கது.

## மக்களே செல்வம்

பெற்றோர்க்குத் தம்மக்களே செல்வம் என்று இப்பாட்டில் சொல்லப்பட்டுளது. இதை நிறுவிக்காட்டுதற்குப் பல சான்றுகள் வேண்டுவதில்லை. எங்கணும் நாடோறும் நிகழ்ந்து வரும் ஒன்று சாலும். பெற்றோர் தங்குழந்தையின் ஆடல் பாடல்களைக் காணுந்தோறும் காணுந்தோறும் அவர்பால் அன்பு பொங்கி எழுகிறது. அவ்வன்பால் அவர் தங்குழந்தையைக் கட்டியணைத்து, 'எங்கண்ணே, எஞ் செல்வமே, எம்பொன்னே' என்று முத்தமிடுகிறார். இது நிகழாத இடம் உண்டோ ? இஃது உலகெங்கும் நிகழ்வது. உலகியல் வழக்குகளே இலக்கியங்களில் புகுந்து நிற்கின்றன.

"பொன்போல் புதல்வனோ டென்னீத் தோனே"— ஐங்குறு நூறு : உகூரு : ச.

"பொன்போற் புதல்வர்ப் பெறுதீரும்"—புறநானூறு : கூ : ச.

## பெற்றோர் உயிரினும் பெரியது பிள்ளைமை

அன்புடைய பெற்றோரை ஏழ்மை வந்து அடர்த்தகாலை, அவர் எப்பொருளையும் விற்றுண்ணத் துணிவர் ; ஆனால் பிள்ளையை விற்கத் துணிவதில்லை. அவர் பெரும் பசித்

தீக்கு இரையாகும் வேளையில், சிற்றுண்டி சிறிது கிடைப் பினும், அதைத் தாம் உண்ணாது, குழந்தைக் களித்தே மகிழ்வர். உணவே யின்றிப் பிள்ளை கொடும் பசியால் மெலிந்து வாடி வாடி வதங்குமேல், அக்காட்சி காண மனஞ் சகியாது, உயிர் நீக்கும் பெற்றோரும் உளர். பெற்றோர் பிள்ளையைத் தம் உயிரினும் பெரிதாகவே மதிப்பர். அத் தகைப் பிள்ளையினும் வேறு செல்வம் இவ்வுலகில் உண்டோ?

பெற்றோர்க்குப் பொருள் எது? அவர் தம் பிள்ளையே. பெற்றோரை நோக்கி, 'நும்பொருள் (செல்வம் - பொன்) எது' என்று கேட்டால், அவர் என்ன சொல்வர்? 'எம் பொருள் எம்மக்களே' என்று சொல்வர். இது பற்றியே ஆசிரியர், 'தம் பொருள் தம் மக்கள் என்ப' என்றார்.

## பண்பினின்றும் பண்பேதோன்றும்

தாய் தந்தையர் எத்தகை மக்களைப் பெற விரும்புவர்? பழி பிறங்காப் பண்புடை மக்களைப் பெறவே விரும்புவர். வெறும் விருப்பம் போதுமா? நடக்கை வேண்டும் - செயல் வேண்டும். பழிபிறங்காப் பண்புடையாரிடம், பழிபிறங்காப் பண்புடைப் பிள்ளையே தோன்றும். நன்மக்கட்பேறு தாய் தந்தையரின் நன்னடக்கையைப் பொறுத்து நிற்றலான், "அவர் பொருள் தந்தம் வினையால் வரும்" என்றார்.

## வினை - செயல் - நடக்கை

செயலை - கர்மத்தை - ஈண்டு ஆசிரியர் வினை என்றார். நற்பிள்ளைப் பேற்றுக்குத் தாய் தந்தையரிடை நல்வினை நிகழ்தல்வேண்டும். நல்வினையாவது தானம் முதலியவற்றைக் கொண்டது. "நல்லது வெஃகி வினைசெய்வார்"—பரி பாடல்: ௧௦: அஅ. (வினை - தானம்)

உலகம் நலம்பெற வேண்டின், உலகில் நன்மக்கள் தோன்றுதல் வேண்டும். நன்மக்கள் தோற்றத்துக்குத் தாய் தந்தையர் நல்லொழுக்க முடையவராதல் வேண்டும். (ந)

(iv) மக்களால் இன்பம்

## 64

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

### பொருள்

தம் மக்கள் சிறுகை அளாவிய கூழ் - தம் மக்களின் சிறியகை அளாவிய கூழ், அமிழ்தினும் ஆற்ற இனிதே- அமிழ்தைக் காட்டினும் மிக இனியதே.

### கருத்து

தம் மக்கள் அளாவிய கூழ் அமிழ்தினும் மிக இனிமை யுடையது.

### விருத்தி

மக்கள் செல்வமென்று மேற்பாட்டில் சொல்லப்பட்டது. அச்செல்வத்தால் விளையும் இன்பம் இப்பாட்டிலும் இதைத் தொடர்ந்து வரும் இரண்டு பாட்டிலும் விளக்கப் பட்டுளது.

## தம்மக்கள் சிறுகை அளாவிய கூழ்

தம் மக்கள் - தாம் ஈன்ற மக்கள்.

அளாவிய - துழாவிய என்று ஒருவகையில் பொருள் கொள்ளலாம்; "அளாவிய" என்பது பல நிகழ்ச்சிகளைக் கொண்டது.

அளாவுதல் - அளவுதல்; கலத்தலை யுணர்த்துவது. ஒருவரோ டொருவர் கலந்து உறவாடுதல் அளவளாவல் என்று வழங்கப்படுகிறது. அளவுதல் - அளாவுதல் - அளவளாவல் - எல்லாம் ஒன்றே. இங்கே குழந்தையின் சிறுகை கூழுடன் அளவளாவல் "அளாவிய" என்று சொல்லப்பட்டது.

குழந்தையின் சிறுகை ஒருவழியிலா அளவளாவும்? பல வழியிலும் அளவளாவும். சிறுகை கூழைத் தொடும்; எடுக்கும்; எறியும்; இறைக்கும்; தரையில் தேய்க்கும்; உடம்பில் பூசும்; தலையில் அப்பும்; கவ்வும்; இன்ன பிறவும் செய்யும். இவை யெல்லாங் கொண்டது "அளாவிய" என்பது.

"சிறு கையால் அளாவலாவது: 'இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும் - நெய்யுடன் அடிசில் மெய்பட விதிர்த்தல்'" என்று ஒரு புறநானூற்றுச் செய்யுளின் ஒரு பகுதியை எடுத்துக் காட்டிப் பரிமேலழகர் 'அளாவுதலை' விளக்கியிருத்தல் காண்க.

கூழ் - உணவுப் பொது; குழைந்த உணவு; இழிந்த உணவு; இங்கே இழிந்த உணவென்று கொள்வது சிறப்பு. "கூழ் பயிர் உணவு சோறும்"—நாநார்த்த தீபிகை: 970.

## தம் மக்கள்

ஆசிரியர் "மக்கள்" என்னாது, "தம் மக்கள்" என்றார். தாம் ஈன்ற மக்களின் ஆடல் பாடல்களிலேயே பெற்றோர்க்கு ஆன்ற இன்பம் உண்டாதல் இயற்கை. இயற்கை நிகழ்ச்சியை ஆசிரியர் உள்ளவாறே வெளியிட்டனர்.

---

* 'பாடற்பாணி அளைஇ'—சிலப்பதிகாரம்: கூ: கக௯.

"காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்பது பழமொழி. தாம் ஈன்ற குழந்தை எத்தகையதாயினும் அதன் செயலிலேயே பெற்றோர் மனம் ஒன்றித் திளைத்து மகிழ்ச்சியுறுதல் இயல்பு. காரணம் என்னை ?

குழந்தை எது ? அதன் விளைவு என்ன ? இருவர் காதலின் விளைவு குழந்தை. இதைத் தெளியத் தெளியக் காரணம் விளங்கும்.

ஒருத்தியையும் ஒருவனையும் ஒன்றுபடுத்திப் பிணித் திருப்பது காதல். இருவர்க்கும் காதலினும் மேம்பட்ட தொன்று தோன்றாது. அவர்தம் உள்ளத்தில் எல்லாவற்றை யுங் கடந்து மாசற்ற காதலே நிற்கும். இது 'வாழ்க்கைத் துணையில்' "தெய்வந் தொழாஅள்" என்னும் பாட்டில் விளக்கப்பட்டது.

காதல் உருவுடையதன்று. உருவற்ற காதல் இருவ ரிடம் ஒன்றி நிகழ்ந்து வருகிறது. காதல் இன்பம் சொல்லுந் தகையதன்று. அது சொல்லுக் கடங்காதது.

இருவர் உயிரை ஒன்றுபடுத்தி ஆட்கொண்ட உருவற்ற காதல் பெருகிப் பெருகிக் குழந்தையாய்த் திரண்டு உருப் பெற்றுக் காட்சி யளிக்கிறது. எல்லாவற்றையுங் கடந்து தம் உள்ளத்தில் ஊறி நின்ற காதல் குழந்தையாய்த் தோன் றிக் காட்சியளித்தால் அக்காட்சி பெற்றோர்க்கு எத்தகை இன்பூட்டும் என்று சொல்லவும் வேண்டுமோ ? தாய்தந்தை யர் காதல்வழிப் பிறந்த குழந்தையே அவர்க்கு இன்பூட்டுவ தாதலின் "தம்மக்கள்" என்றார்.

## இன்ப வீடு

இல்வாழ்க்கையில் இன்ப வீடளிப்பது குழந்தையே. அங்கிருந்தே மற்ற உயிர்களிடத்துச் செலுத்தத் தக்க அன்பு ஊற்றெடுக்கும். அந்தண்மைக்கு அடிகோலுவது மக்கட்

பேறு என்று சுருங்கச் சொல்லலாம். தாய் தந்தையர் தம் மக்களின் காட்சியிலும், செயலிலும், பிறவற்றிலும் பெறும் இன்பமே பின்னர் எங்கணும் விளங்குவதாகும். இதுபற்றியே ஆசிரியர் இது முதல் மூன்று பாக்களில் குழந்தைகளின் இன்பத்தைப் பெய்து காட்டுகிருர்.

## சிறுகை

"தம் மக்கள் சிறுகை". பிள்ளை இன்பத்தை ஆற நுகர்ந்தவர் ஆசிரியர். இல்லையேல் "சிறுகை" அவர்தம் பாட்டில் திகழாது. "சிறுகையை" எத்துணைமுறை ஆசிரியர் உற்று உற்று நோக்கினரோ தெரியவில்லை. எத்துணையோ முறை "சிறுகை" ஆசிரியர் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாகியிருக்கும். அவ் விருந்தமிழ்தை ஆசிரியர் உண்டு உண்டு இன்பத்தில் தேங்கித் திளைத்திருப்பர். இன்பத் தேக்கத்தினின்று உவகை பூத்திருக்கும். அவ்வுவகை - கழிபேருவகை - பொங்கி எழுந்து, அவர் வாயிலாக "சிறுகை" என்று எழுத்தோவியமாகி நிற்கிறது. 'சிறுகை' ஓவியம் நெஞ்சைக் கவர்கிறது. சிறுகையின் மாண்பு என்னே! அது காதலின் திரட்சி யுறுப்புக்களுள் ஒன்றன்றே?

## அளாவிய கூழ்

சிறுகை என்ன செய்கிறது? திருவிளையாடல் செய்கிறது. சிறுகை எத்துணையோ ஆடல்புரியும்! சிறுகை அளாவும் ஆடல்மீது ஆசிரியர் நெஞ்சம் படிகிறது. அதை எழுத்தால் வரைகிருர் ஆசிரியர். "சிறுகை அளாவிய" என்கிருர்.

சிறுகை அற்புதஞ் செய்கிறது என்ன அற்புதம்! பார்ப்போம்! சிறுகை அளாவுகிறது. எதனுடன்? கூழுடன்; "சிறுகை அளாவிய கூழ்" மீது ஆசிரியர் எண்ணஞ் சென்றதை உன்னுக.

ஓர் எளிய அழகிய சிறு குடில். கூழ்ப்பானையொன்று. கூழைத் தாய் கலத்தில் இடுகிறாள்; தந்தை உண்கிறான். காதல் குழந்தை குறுகுறு நடந்து வீழ்ந்து தவழ்ந்து எழுந்து ஓடிச் சிறு கையை நீட்டுகிறது; விரைந்து கலத்தில் இடுகிறது. இனிய கை கூழை எடுக்கிறது; தரையில் சிந்துகிறது; தேய்க்கிறது; இறைக்கிறது; தலையில் பூசுகிறது; தந்தைமீது எறிகிறது; தாய்மீது துடைக்கிறது. இவ்வாறு அழகிய சிறுகை ஆடல் புரிகிறது; என்னென்னவோ செய்கிறது. இக்காட்சிகள் பொலியப் பாண்டியன் அறிவுடை நம்பி,

*"படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழு நாளே"

என்று பாடி மகிழ்ச்சியுறுவதையும் எண்ணிப் பார்க்க.

## அமிழ்தினும் ஆற்ற இனிதே

அமிழ்து - அம்ருதம்; மரணமில்லாமற் செய்வது; மிக இனிமையுடையது; தனக்குமேல் இனிமையுடையதொன்றில்லாதது.

ஆற்ற - மிக; "அவனறி வாற்ற வறியு மாகலின்" தொல்காப்பியம் : பொருள் : 147.

---

* புறநானூறு : கஅஅ.

## அமிழ்தினும் ஆற்ற இனிதே

செல்வச் சிறுகை அளாவிய கூழ் பெற்றோர்க்கு எப்படியாகிறது? இனிதாகிறது; ஆற்ற இனிதாகிறது; அமிழ்தினும் ஆற்ற இனிதாகிறது. வெறுங்கூழ் அமிழ்தினும் ஆற்ற இனிதாகிவிட்டது. என்ன வியப்பு! இஃதோர் அற்புத மன்றோ? கூழை அமிழ்தினும் ஆற்ற இனிதாக்கியது எது? சிறுகை! சிறுகையின் மாண்பு என்னே! சிறுகையில் அமிழ்தினும் ஆற்ற இனிய சத்திருக்கிறது. அது கூழில் இறங்கியது. கூழ் அமிழ்தினும் ஆற்ற இனிதாகி விட்டது.

குழந்தையின் சிறுகை அளாவியகூழ் அமிழ்தினும் ஆற்ற இனிதாயிற்று. எங்கே? பெற்றோர் மனத்தில்.

குழந்தை காதல் அமிழ்த மன்றோ? பெற்றோர் உள்ளத் தூறிய காதல் அமிழ்தம் குழந்தையாய்த் திரண்டு சிறுகை நீட்டிக் கூழை அளாவ அஃது அமிழ்தினும் ஆற்ற இனியதாயிற்று. இவ்வற்புதத்தை ஆசிரியர், "சிறுகையளாவியகூழ் அமிழ்தினும் ஆற்ற இனிதே" என்கிறார்.

அமிழ்தினும் இனிய தொன்றில்லை. திருவள்ளுவர் அமிழ்தினும் இனிய தொன்று காட்டுகிறார். அஃது எது? அது, சிறுகை அளாவிய கூழ். எவர் சிறுகை அளாவிய கூழ்? "தம்மக்கள் சிறுகை அளாவிய கூழ்".

## இளமை காத்தல்

அமிழ்தம் மரணத்தைப் போக்குவது. தம் மக்கள் சிறுகை அளாவிய கூழோ அமிழ்தினும் ஆற்ற இனியது. இக்கூழ் அமிழ்தைக் காட்டினுஞ் சிறந்தது. இக்கூழை யுண்ணும் பெற்றோர்க்கு நரைதிரை மூப்பு ஏது?

நரைதிரை மூப்பை யுண்டு பண்ணுவது கவலை. நரைதிரை மூப்பைத் தடுக்க வல்லது மகிழ்ச்சி - உவகை.

மகிழ்ச்சி நாடோறும் நாடி நரம்புகளில் பாய்ந்து பாய்ந்து இளமை காக்கும்.

" யாண்டு பலவாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
யான்கண் டனையரென் இளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே "—புறநானூறு : ௧௯௧.

## மக்கட்பேற்றின் மாண்பு

சிறுகுடில் இன்ப வீடாகி விட்டது. பெற்றோர் குழந்தை அமிழ்துண்டு நரைதிரை மூப்பின்றி விளங்குகிறார். இவ்வின்பத்துக்கு மூலமா யிருப்பது 'மக்கட்பேறு'. அதன் மாண்மை உன்னித் தெளிக. மக்கட் பேற்றைப் பெருக்கும் இல்வாழ்க்கை ஓங்க; வாழ்க்கைத் துணை வாழ்க; இவைகளை வெறுக்கும் பொல்லாமை வீழ்க. (௪)

## 65

**மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்**
**சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு.**

### பொருள்

மக்கள் மெய்தீண்டல் - தம் மக்கள் தம் உடலைத் தீண்டல், உடற்கு இன்பம் - தமது உடலுக்கு இன்பமாகும். மற்று அவர் சொல் கேட்டல் - மேலும் அவர் தம்மழலைச் சொல்லைக் கேட்டல், செவிக்கு இன்பம் - காதுக்கு இன்பமாகும்.

கருத்து

பெற்றோரது உடலை மக்கள் தீண்டலால் அவர்தம் உட லுக்கும், அப்பெற்றோர் மக்களின் மழலைச்சொல்லைக் கேட்ட லால் அவர்தம் காதுக்கும் இன்பம் உண்டாகும்.

விருத்தி

முன்பாட்டில் மக்களின் சிறுகை அளாவியகூழ் இன்பம் பேசப்பட்டது. இப்பாட்டில் அக்கையின் தீண்டலால் விளையும் இன்பம் பேசப்படுகிறது.

**மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்**

மக்கள் - தம்மக்கள்.

மெய் - உடல்; ஐம்பொறிகளில் ஒன்று.

தீண்டல் - தொடுதல், தழுவுதல், சார்தல்.

உடலுக்கு - உடம்புக்கு; முழு உடம்புக்கு.

உடல் - உயிருக்கு உடுக்கையாயிருப்பது; உயிருட னிருப்பது.

இன்பம் - துன்பங்கலவாத தூய இன்பம்; விடுதலை நிலையில் விளைவது.

"மக்கள் மெய்தீண்டல்" என்பதற்கு, 'தம் மக்கள் தமது உடம்பினைச் சார்தல்' என்று மணக்குடவரும், '(ஒரு வன்) மக்களது மெய்யைத் தீண்டுதல்' என்று பரிமே லழகரும் பொருள் கண்டனர். இவ்விரண்டையும் அநு பவங்கொண்டு ஆராய்ந்து பார்க்க.

**மக்கள்**

மக்கள் என்றது தம் மக்களை. இப்பாட்டின் முன்னும் பின்னும் ஆசிரியர் "தம்மக்கள்" என்று பெய்திருத்தலை நோக்குக. மேற்பாட்டில் "தம்மக்கள்" என்பதற்குப்

பொறிக்கப் பெற்றுள்ள குறிப்பையும் பார்க்க. பிற மக்கள் தீண்டலில் இன்பம் பெரிதும் பிறக்கிறதா என்பதை அநுபவத்தால் தெளிந்து கொள்க.

## மெய் தீண்டல்

உடலுக்கு மெய்யென்றொரு பெயருண்டு. உடல் நிலையுதலின்றிப் பொய்யாய்ப் போன்றுவதென்றும், அப் பொய்யை மெய்யாகக் கூறுவது மங்கல வழக்கென்றும் இலக்கண நூலார் கூறுப. (மங்கலமல்லாததை மங்கலமாக மொழிவது மங்கல வழக்கு). 'எக்காலமும்........பொய்யுடலை மெய்யென்னலும்......' என்பது தாயுமானார் திருவாக்கு. மெய்யைப்பற்றிப் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் தமது "பரிபூரணானந்த போத" நூலின் - பதிபசுபாசப் படலம் - நாற்பத்தெட்டாம் பாட்டின் விருத்தி உரைக்கண் ஒருவிதக் கருத்தை வெளியிட்டுள்ளனர். அது வருமாறு:—

"திருட்டிக்குப் புலப்படாச் சீவனைப் புலப்படுமாறு காட்டி நிற்பதிவ் வுடம்பேயாகலின் இது மெய்யெனும் பெயர்த்தென்பதூஉம், பொய்யுடம்பினை மெய்யென்பது மங்கலவழக்கென்பார் கூற்றுத் தள்ளற்பாலதாமன்றிக் கொள்ளற்பாலதாகாதென்பதூஉம் இந்நூலாசிரியரால் பாடப்பட்ட சேந்தன் செந்தமிழெனும் பெயரிய நூலில் 'மறைந்தவுயி ரைத்தனது வண்மையினுற் காட்டிப், பிறங்குதலின் மெய்யென் பெயர் தான் - பிறந்தவுடல், பெற்றதிது நன்குள்ள ஞான்றே பெறற் குனடி, யற்றமில்வே லோயெற் கருள்'; 'புல்லெதிர்ப்பு ருமுதுவோர் பொய்யுடம்பை மெய்யென்ற, னல்வழக்கென் றேசிலவர் நாட்டுநடு, வல்வழக்காய் - நிற்குங்கொ லோயா னிகழ்த்துண்மை போலெனையாள், பொற்குன்றய் சேந்தா புகல்" என்றியம்புதலி னறியவுள்ளன. உடம்பு உயிர்க்காதாரமெனப்படுவ தொன்றாகலின் ஆதாரமெனும் பெயரும்

நிகண்டு வழியாய தற்குளதென் றுணர்வார்க்கு இவ்வாறியம்பு தலே யேற்புடைத்தென்றலும் இனிது புலப்படும்."

"மெய்" என்பது எப்பொருள் படினும் படுக. ஈண்டு "மெய்யை" உற்று நோக்க நோக்க, அதன்கண் ஒருவித நுட்பம் விளங்குகிறதென்று தெரிகிறது. அதைப் பார்ப் போம்.

மக்கள் தீண்டலின் பயன் உடலளவில் நின்று விளேவ தில்லே. அஃது உடலளவில் நிற்பதாயின், அதனின்றும் உண்மை இன்பம் பிறவாது. மக்கள் தீண்டுதல் பெற்ரேரின் புற உடலேத் துருவிச் சென்று, அகக்கருவி கரணங்களேயுங் கவர்ந்து, உயிரினூடே புகுவதாகிறது. உயிர் அழியாதது. அழியாத மெய்யினின்றும் (சத்தியத்தினின்றும்) பிறப்பதே இன்பம். ஆகவே மக்கள் தீண்டுவது அழியாத மெய்யை (சத்தியத்தை) என்று கொள்க. இம்மெய்யே ஈண்டுக் குறிக் கப்பெற்றது.

தீண்டுதல், தொடுதல் - சார்தல் முதலியவற்றை உணர்த்துவது. மேற்பாட்டை உளங்கொண்டு அளாவிய கூழ்க் கையுடன் தீண்டுதல் என்றுங் கொள்ளலாம்.

### உடற்கின்பம்

மக்கள் தீண்டுதல் உயிரளவு செல்லினும் - இன்பம் பிறத்தற்கு உயிர் மூலமாக இருப்பினும் - இன்பத்தைத் தனித்த உடலோ தனித்த உயிரோ நுகர்வதில்லே. இன்பத் துக்கு இரண்டின் சேர்க்கை தேவை. உயிரின் இயல்பு சார்ந்ததன் வண்ணமிருப்பது. இங்கே உயிர் உடலாக நின்று இன்பந் துய்த்தலே "உடற்கின்பம்" என்ருர்.

### இன்பம் ?

இன்பம் எங்கே நிகழும்? கட்டற்ற விடத்திலேயே இன்பம் நிகழும். முழுக்கட்டு அற்ற இடத்தில் இன்பம்

நிலைபேருக நிகழ்ந்து கொண்டிருக்கும். சிற்சில சமயம் சி, சில காரணம்பற்றிப் பாசி குளத்தினின்றும் விலகுவது போலக் கட்டுச் சிறிது விலகும். கட்டு விலகும் அளவில் இன்பமும் நிகழும்.

குழந்தை பெற்றோரைத் தீண்டும்போது கட்டுச் சிறிது விலகுகிறது. அப்போது அவர்தம் உயிர்கலந்த உடல் வீடாகிறது; அவர் நுகர்வது விடுதலை இன்பமாகிறது. உருவற்ற காதல், குழந்தையாக உருக்கொண்டு வருதல் மேற் பாட்டின் விருத்தியில் விளக்கப்பட்டது. காதல் திரண்ட அமிழ்த வடிவின் சிறுகையினது பெற்றி அப்பாட்டில் பேசப் பட்டது. அக்கையினையுடைய வடிவமே நெருங்கிப் பெற் ரோரைத் தழுவி அவர்மீது வீழ்ந்து புரண்டால் அவருடலில் அமிழ்தூறி இன்பம் பிறத்தல் இயல்பன்றோ ?

காதலர் இருவர் ஒருவரை ஒருவர் தீண்டிக் கொள்ளும் போது சொலற்கரிய இன்பம் பிறக்கிறது. அவ்விருவர் காதல் உருண்டு திரண்டு உருக்கொண்டு குழந்தையாய் அவரைத் தீண்டும் வேளையில் எத்தகை இன்பம் பிறக்கும் என்று சொல்லவும் வேண்டுமோ ?

## ஆன்றோர் உரை

மற்றுமொரு குறிப்பு வருமாறு :

குழந்தையின் உள்ளம் மாசற்றது. அதன உள்ளத்தில் அழுக்காறு அவா முதலிய நஞ்சு படிவதில்லை. குழந்தையின் உள்ளத்தில் அறமே பொலிகிறதென்று கூறல் மிகை யாகாது.

> “அவர் (கிறிஸ்து) தொடவேண்டு மென்று குழந்தைகளை அவரிடங் கொண்டு வந்தார்கள். சீஷர் அதைக் கண்டு, கொண்டு வந்தவர்களை அதட்டினார்கள். இயேசுவோ அக் குழந்தைகளைத் தம்மிடம் அழைத்து : சிறு பிள்ளைகள் என்

ளிடம் வருகிறதற்கு இடங்கொடுங்கள்; அவர்களைத் தடை பண்ணுதிருங்கள்; கடவுளின் ராஜ்யம் அப்படிப்பட்டவர்களுடையது. சிறு பிள்ளையைப்போல் கடவுளின் ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளாதவன் எவனும் அதில் பிரவேசிக்கவே மாட்டானென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்ருர் ”
—லூக்கா 18 : 15 - 17

என்று கிறிஸ்து பெருமானும், ‘சேய்போ லிருப்பர்கண்டீர் உண்மை ஞானந் தெளிந்தவரே’ என்று பட்டினத்தடிகளும் குழந்தைகளின் பெருமையை உலகுக்கு அறிவுறுத்தியிருப்பதையோர்க.

அறவண்ணமான பரலோக ராஜ்யம்போன்ற நெஞ்சுடைய குழந்தையின் தீண்டுதல் பரலோகராஜ்ய இன்பத்தையூட்டாது வேறு எதையூட்டும்?

## உடலோம்பல்

உயிர் விளக்கத்துக்கென்று கடவுளால் அருளப்பெற்ற ஒரு பெருங்கொடை உடல். இவ்வரிய உடலை ஓம்பவேண்டுவது மக்கள் கடமை. உடலை ஓம்புதற்கென்று ஏற்பட்டுள்ள முறைகளும் துறைகளும் பல. அவைகளுள் சிறந்தது இயற்கையோடியைந்து வாழ்வது. பெண் ஆணுடனும், ஆண் பெண்ணுடனும் சேர்ந்து வாழ்வது இயற்கை. தனித்தனியே பிரிந்து வாழ்வது இயற்கையாகாது. இதுபற்றிய நுட்பங்கள் விருத்தியில் பலவிடங்களில் விளக்கப்பட்டுள்ளன. பெண் ஆண் சேர்ந்த இயற்கை வாழ்க்கையால் விளையும் நலன்களுள் உடல் நலமும் ஒன்று. இளமைப் போகம் உடலை நன்முறையில் ஓம்பும். போகம்மட்டும் இயற்கையளவினதா யிருத்தல் வேண்டும். இயற்கையளவைக் கடந்த போகம் உடலுக்குப் பெருங்கேடு செய்யும். அளவிற்கு மிஞ்சினல் அமிர்தமும் நஞ்சாகுமன்றே?

காதற் போகத்தின் பயனாய்த் தோன்றுஞ் சேய் தனது அமிழ்தக்கையால் பெற்றோரைத் தீண்டி அவர்மீது விழுந்து புரளும்போது பிறக்கும் இன்பம் நாளுக்குநாள் உடலை ஓம்பிவரும். இன்பம் விளையும் இடத்தில் கவலைக்கு இடம் ஏது? மக்கள் மெய்தீண்டல் உடற்கு இன்பம் விளைவித்தலால், அவ்வின்பம் கவலைபோக்கி நரப்புக்கட்கு அமிழ்தமூட்டி உடலை ஓம்புவதாகிறது.

## இயற்கை மருத்துவம்

இயற்கை இல்வாழ்க்கையில் நின்று, அளவாகப் போகந் துய்த்து, மகவீன்று, மகவின் ஆடல் பாடல் தீண்டல் முதலியவற்றைக் கண்டும் பெற்றும் இன்புறுவோர் உடல்நலனுக்கென்று மருந்தோ பிறவோ உண்ணவேண்டுவதில்லை. தன்வழி நிற்போர் உடலைப் பேணவேண்டுவது இயற்கை அன்னையின் கடன். இயற்கை அன்னை பெண்ணுக்கு ஆணாய், ஆணுக்குப் பெண்ணாய், காதலாய், போகமாய், பிள்ளையாய், அன்பொழுக்க அருளாய், அறமாய் உடலை ஓம்புகிறாள் என்க. இயற்கை அன்னையினுஞ் சிறந்த மருத்துவப்பெண் யாண்டுமில்லை.

## மற்றவர் சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு

மற்று - மேலும்.
அவர் - அம்மக்களின்.
சொல் - மழலை.
கேட்டல் - வேட்கையுடன் கேட்டல்.

## மற்றவர் சொற்கேட்டல்

ஆசிரியர், குழந்தையின் தீண்டலால் தாம் நுகர்ந்த உடலின்பத்தை மட்டும் உலகுக்குணர்த்தும் அளவில் நிற்க

விரும்புகிறாரில்லை. அவர்தம் விருப்பம் மேலும் மேலும் பொங்குகிறது. அவர் குழந்தையின் மழலைச் சொல்லால் நுகர்ந்த செவி யின்பத்தையும் உலகுக்குணர்த்த உவகை கொள்கிறார். அவர்தம் உவகை, " மற்றவர் சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு " என்று எழுத்துருக்கொண்டு தேக்குறல் காண்க.

" மற்று " என்பது தீண்டலுக்கு மேலுஞ் செல்வதை உணர்த்துவது.

" அவர் " என்பது, பெற்றோரைத் தீண்டி அவர்தம் உடலுக்கு இன்பமூட்டிய மக்கள் என்பதை விளக்குவது.

" சொல் " என்றது மழலையை. இன்பமூட்ட வல்லது மழலையே. விளக்கம் வரும்பாட்டிற் பார்க்க. " மக்களது மழலைச்சொல்லே யன்றி அவர் கற்றறிவுடையராய்ச் சொல் லுஞ் சொல்லும் இன்பமாகலின், பொதுப்படச் 'சொல்' என்றார் " என்பது பரிமேலழகரது குறிப்புரை.

கேட்டல் செவிப்புலனுக் குரியது. மழலைச் சொல்லின் மீது மனஞ்செலுத்தி வேட்கையுடன் கேட்பதே ஈண்டுக் கேட்டல் என்றது. மனஞ்செல்லாச் செவிப்புலன் கேட்டலை நிகழ்த்தாது.

## செவிக்கின்பம்

செவிக்கு என்றது செவிப்புலனை; ஆகுபெயர். புலனற்ற வெறுஞ் செவிப்பொறி பயனற்றது. புலன், பொறி வழி இயங்குவதாதலின் பொதுப்படச் " செவிக்கு " என்றார்.

செவியின் பெற்றியை ஆசிரியரைப்போலச் சிறப்பித்த வர் ஒருவருமில்லை என்றே கூறலாம். " கேள்வி " என்னும் அதிகாரம் செவிச் சிறப்புக்கென்று ஆசிரியரால் அருளப் பட்டது. "செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல் வம் - செல்வத்துள் எல்லாந் தலை " என்னுங் குறட்பாவில்

படிந்து ஆசிரியரது உள்ளங்காண முயல்க. ஆசிரியர் செவி சிறப்பை யுணர்ந்தவராதலின் தீண்டற்குரிய உடலளவி னில்லாது கேட்டற்குரிய செவியையுங் குறிப்பிடலாயினர்.

மேற்பாட்டை உளங்கொண்டு கூழைப் பூசிக்கொண்ட அமிழ்த வாயின் மழலைச் சொல் என்றுங் கொள்ளலாம்.

## தீண்டலும் கேட்டலும் பிறவும்

தீண்டலால் உடல்வழிப் பிறக்கும் இன்பம், நிலையாக நிற்பதற்குக் கேட்டலால் செவி வழியாகவும் (இன்பம்) புகு கிறது போலும்.

இனம் பற்றிச் செவிப்புலனுடன் மற்றப் புலன்களையுஞ் சேர்த்துக் கொள்க.

செவிவழிப் புகும் இன்பம், மற்றப் புலன்களிலும் மனம் முதலிய கரணங்களிலும் பாயும் தன்மை வாய்ந்தது.

மெய்ப்புலனுக்குத் தீண்டல் - செவிப்புலனுக்குக் கேட்டல் - இரண்டும் ஒன்றி மற்றப் புலன்கட்கும் கருவி கரணங் கட்கும் இன்பூட்டுகின்றன. (ரு)

## 66

குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்.

### பொருள்

தம் மக்கள் மழலை சொல் கேளாதவர் - தம் குழந்தை களின் மழலைச் சொல்லைக் கேளாதவரே, குழல் இனிது யாழ் இனிது என்ப - குழலிசை இனியது யாழ் இசை இனியது என்று சொல்வர்.

### கருத்து

தங் குழந்தைகளின் மழலை மொழி குழலிசையினும் யாழிசையினும் மிக இனியது.

## விருத்தி

மேற்பாட்டிற் போந்துள்ள "அவர்தஞ் சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு" என்பதன் விரிவு இப்பாடல்.

### தம்மக்கள் மழலைச்சொல் கேளாதவர்

மழலைச் சொல் - குதலைச்சொல், இளஞ்சொல், நல்ல வடிவம் பெறாதது.

"மெய்பெறா மழலையின் விளங்குபூண் நனைத்தர" —கலித்தொகை: அக : உ; "மெய்பெறா எழுத்துயிர்க் கும் மழலைவாயின் * * *"—சிந்தாமணி : 181.

மேற்பாட்டில் "சொல்" என்றார்; இப்பாட்டில் அதை, "மழலைச் சொல்" என்று விளக்கஞ் செய்கிறார். சொல் பொது. சொல் எவர் வாயினின்றும் வரும்? முதியர் வாயினின்று வருவதுஞ் சொல்லே. "சொல்"லின் பொதுமை நீக்கிக் குழந்தையின் சொல்லென்பார், "மழலைச் சொல்" என்றார். மழலையாகிய சொல் என்று விரிக்க: இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.

கேளாதவர் - கேளாதவரே; கேட்கும் பேறு பெறாதவரே: ஏகாரம் தொக்கது.

குழல் - குழலிசை, குழலோசை : ஆகுபெயர்.
யாழ் - யாழிசை, யாழோசை : ஆகுபெயர்.
என்ப - என்பர்; என்று சொல்வர்.

### தம்மக்கள் மழலைச்சொல்

"தம்மக்கள் மழலைச் சொல்" என்றார். ஏன்? தங் காதலின் பயனே மக்களாகத் திரண்டு வந்து மழலை மிழற்ற லால் "தம்மக்கள் மழலைச்சொல்" என்றார். தங்காதலே மக்களாக இறங்கி வடிவம் பெறுதலால், அம்மக்களின் மழலை, பெற்றோர்க்கு இனிமை பயப்பதும் அவர்க்கு மற்ற மக்களின்

மழலை அவ்வளவு இனிமை பயவாமையும் இயல்பு. இவ்வியல்பை ஆசிரியர் நன்கு உணர்ந்து, 'தம்மக்கள் மழலைச் சொல்' என்றார்.

## கேளாதவர்

இவ்வதிகாரம் "மக்கட் பேற்றை" அறிவுறுத்துவது. மக்கட் பேற்றை உளங்கொண்டு, ஈண்டு ஆசிரியர் பொறித்த "கேளாதவர்" என்பதை நோக்குக; நோக்கின், "கேளாதவர்" என்பதில் "பிள்ளைப் பேறில்லாதவர்" என்பது பொலிதல் நனி விளங்கும். பிள்ளைப் பேறில்லாத பாவிகள் என்பது குறிப்பு. அவரைக் காதுள்ள செவிடர் என்றபடி. காதின் பயன் மக்களின் மழலைச் சொல்லைக் கேட்டு இன்புறுவதென்க. மக்களின் மழலையைக் கேட்டின்புறுதற் பொருட்டுக் காது படைப்பில் அமைந்தது என்றுங் கூறுவது மிகையாகாது. மற்றுங் குழந்தையின் மாண்பை மேற்பாட்டு விருத்தியிற் பார்க்க.

## குழலினிது யாழினிது என்ப

குழல் - புல்லாங்குழல், வேய்ங்குழல்.

யாழ் - பழந்தமிழ் நாட்டு இசைக்கருவிகளுள் சிறந்த ஒன்று. பழைய தமிழ் நூல்களுள் இதன்மாண்பு பெரிதும் பேசப்பட்டுளது. இச்சிறந்த இசைக்கருவியைப் பிற்காலத் தமிழ்நாடு இழந்தது. இந்நாளிற் சிலர் வீணையை யாழ் என்று கூறுகின்றனர். யாழ் வேறு; வீணை வேறு. 'குழலும் வீணையும் யாழுமென் றினையன குழையா' என்று கம்பர் கூறியதைச் சிந்திக்க.

## குழலும் யாழும்

குழலும் யாழும் இசைக்கருவிகளிற் சிறந்தனவாகலின், அவைகள் ஆசிரியரால் இங்கே ஆளப்பட்டன. குழலிசையும்

யாழிசையும் செவிப்புலன் வழி உள்ளம் புகுந்து அமிழ்தம் பொழியும். அவ்விசையமிழ்தம் உள்ளம் புகுந்து ஊறி நாடி நரப்புகட்குப் பசுமை யூட்டி, உடலுக்குப் பலவழியிலும் நலஞ் செய்யும்; உயிர்களிடத்துள்ள கொடிய குணங்களைப் போக்கிச் சாந்தமூட்டும் பேராற்றல் வாய்ந்தது. குழலிசையும் யாழிசையும், விலங்குகளையும் வயப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தன. அவ்விசைகளின் பெற்றியை என்னென்று கூறுவது?

* "வள்ளலார் வாசிக்கும் மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறைஅஞ் செழுத்தாக ஒழுகியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கும் மேலமரர் தருவிளைதேன்
தெள்ளமுதின் உடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க"

* "ஆனிரைகள் அறுகருந்தி அசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையில் பற்றும்இளங் கன்றினமும்
தானுணவு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமும்
மான்முதலாம் கான்விலங்கும் மயிர்முகிழ்த்து வந்தணைய"

* "ஆடமயில் இனங்களும்அங் கசைவயர்ந்து மருங்கணுக
ஊடுசெவி இசைநிறைந்த உள்ளமொடு புள்ளினமும்
மாடுபடிந் துணர்வொழிய மருங்குதொழில் புரிந்தொழுகும்
கூடியவன் கோவலரும் குறைவினையின் துறைநின்றார்"

*    *    *    *

* "நலிவாரும் மெலிவாரும் உணர்வொன்றாய் நயத்தலினால்
மலிவாய்வெள் எயிற்றரவம் மயில்மீது மருண்டுவிழும்
சலியாத நிலைஅரியும் தடங்கரியும் உடன்சாரும்
புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும்"

* "மருவியகால் விசைத்தசையா மரங்கள்மலர்ச் சினைசலியா
கருவரைவீழ் அருவிகளும் கான்யாறும் கலித்தோடா

---

* பெரியபுராணம்: ஆனாயர் - உக, ௩௦, ௩க, ௩௪, ௩ரு.

பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா
இருவிசும்பி னிடைமுழங்கா எழுகடலும் இடைதுளும்பா"

இப் பாக்கள் குழலிசையின் மாண்பை விளக்குவன.

*"ஆட கத்தியன் மேனிலை மிசையணங் கனையார்
மாட கத்தனி யாழிசைக் குவந்துறும் வான
நாட கத்துவெண் களிற்றினை நளினமென் மலர்ப்பூம்
பாட கத்தடி நடையினுற் பருவர லுறுப்பார்"

†"நிலவுவெண்கரி வணக்கிய நிகரில்யாழ் தழுவி
மலரு மின்னிசை யெழுப்புவர் மேனில மகளிர்"

இவை யாழிசையின் மாண்பை விளக்குவன.

## மேம்பட்ட இசை மழலை

அஃறிணை உயிர்களையும் வயப்படுத்தவல்ல குழலிசைக்கும் யாழிசைக்கும் ஒப்பாகவோ உயர்வாகவோ எதன் இசையைக் கூறுவது? ஒன்றுந் தோன்றவில்லை. திருவள்ளுவர் குழலிசைக்கும் யாழிசைக்கும் மேம்பட்ட ஓர் இசை கண்டனர்; அதை உலகுக்கு உணர்த்தலாயினர். அஃது எது? அது, "தம் மக்கள் மழலைச் சொல்".

## விளக்கம்

திருவள்ளுவர் பலதிறச் செயற்கை ஓசைகளையுங் கேட்டார்; இயற்கை ஓசைகளையுங் கேட்டார். இவைகளைக் கேட்டதன் பயனாக அவர் குழலோசையினும் யாழோசையினும் விழுமிய ஓசை இல்லை என்ற முடிவை முதலில் பெற்றார். பின்னை அவர் இல்வாழ்க்கை என்னும்

* காஞ்சிப் புராணம் : திருநகரம் - ௮௦.

† தணிகைப் புராணம் : திருநகரம் - கஉ௫.

இயற்கை வாழ்வை நடாத்தினார்; மக்களை ஈன்றார்; மக்களின் மழலையைக் கேட்டார்; மக்கள் மழலை குழலோசைக்கும் யாழோசைக்கும் மேம்பட்டு விளங்கியதைக் கண்டார்; கண்டு முன்னர்த் தாம் பெற்ற முடிவை மாற்றிக்கொண்டார்; மாற்றிக்கொண்டு தாம் கண்ட உண்மையை, "தம்மக்கள் மழலைச் சொல் கேளாதவர், குழலினிது யாழினிது என்ப" என்று அருளினர்.

திருவள்ளுவர் குழலையும் யாழையும் குறித்தமையால், அவர் குழலிசையையும் யாழிசையையும் உணர்ந்தவர் என்பது விளங்குகிறது. "தம்மக்கள் மழலைச்சொல்" என்றமையால் அவர் பிள்ளைப்பேறு பெற்றவர் என்பதும், மழலைச் சொல்லைச் செவிமடுத்தவர் என்பதும் விளங்குகின்றன. குழலோசையையும் யாழோசையையும் மழலையையும் உணராது இப்பாட்டை ஆசிரியர் அருளினாரில்லை; அவைகளை நன்கு உணர்ந்தே இப்பாட்டை அருளினர். அவர் அவைகளை உணர்ந்தமையாலே குழலென்றும் யாழென்றும் மழலையென்றும் குறிக்கலாயினர்.

தம்மக்கள் மழலைச்சொல் கேளாதவர் குழலினிது யாழினிது என்பர். தம்மக்கள் மழலைச்சொல் கேட்டவர் குழலினிது யாழினிது என்னார் என்றபடி.

## மழலை கேட்பதற்கு முன்னும் பின்னும்

"தம்மக்கள் மழலைச்சொல் கேளாதவர்" என்பது, மாந்தர் தம்மக்கள் மழலைச்சொல் கேட்பதற்கு முன்னர் குழலினிது யாழினிது என்று சொல்லிக்கொண்டிருத்தலையும், தம் மக்கள் மழலைச்சொல் கேட்ட பின்னர்க் குழலினிது யாழினிது என்று சொல்லாமையையும் விளக்குவதாம்.

## மக்கட்பேற்றின் சிறப்பு

மழலை, குழலிசையினும் யாழிசையினும் சிறந்ததெனில் அதன் மாண்பை எச்சொல்லால் சொல்லுதல் கூடும்? அதன் மாண்பு என்னே! இங்கே இல்வாழ்க்கை நடாத்தி மக்கட்பேறடைந்து மக்களின் மழலையை நுகர்வோர் பெருமையை என்னென்று கூறுவது? "தம்மக்கள் மழலைச்சொல் கேளாதவர், "குழலினிது யாழினிது என்ப" என்று கூறுமுகத்தான், மக்கட்பேற்றின் சிறப்பை உலகுக்கு உணர்த்திய தெய்வப் புலவரின் திறத்தை நினைக்க என்மனம் போதவில்லையே! என் செய்வேன்!

## காதல் - குழவி - மழலை

இளங்காதலர் இருவர்க்கு இன்ப மூட்டும் பொருள்கள் சிலவுண்டு. அவைகளுள் இசையும் ஒன்று. குழலிசையும் யாழிசையும் காதலர்க்கு இன்பூட்டுவதில் சிறந்து விளங்குவன. இவை எழுப்பும் இன்பம் இருவர் பேச்சையும் படிப்படியே மழலையாக்கும். இன்பம் மிகமிக மழலை, குழலையும் யாழையும் வீழ்த்தும்; தானே மீக்கூரும். காதல் கலவியாய், இன்பமாய் ஒன்றி, அமிழ்தக் குழவியாய் முகிழ்க்கிறது. முகிழ்த்த குழவியினின்றும் மழலை யொழுகுகிறது. அம்மழலை எத்தகையது? அது குழலையும் யாழையும் வீழ்த்திய இன்பத்தினின்றும் பிறந்ததன்றோ? அது குழலினும் யாழினும் சிறந்து விளங்குதல் இயல்பே.

## கண்ணகி மழலை

கோவலன் கண்ணகியின் மழலை இன்பத்தை நுகர்ந்ததை இளங்கோஅடிகள், "* * அளிய தாமே சிறுபசுங் கிளியே- குழலும் யாழும் அமிழ்துங் குழைத்தநின் - மழலைக் கிள

விக்கு வருந்தின வாகியும் * * ” என்று அமிழ்தத் தமிழ்க் கிளவியால் எடுத்துக் காட்டியுள்ளதை நோக்குக.

கண்ணகியின் மழலை இன்பத்தை நுகர்ந்த கோவலனுக்கு அம்மழலை இசை எங்ஙனம் தோன்றியது? அதை இளங்கோஅடிகளின் தமிழ் எங்ஙனம் எடுத்துக்காட்டுகிறது? குழலிசை யாழிசை கேட்டுக் கேட்டுக் கனிந்த கோவலன் கண்ணகியின் மழலை கேட்டதும், அம்மழலையை “ யாழிடைப் பிறவா இசையே என்கோ” என்று போற்றுதல் காண்க. இஃது இக்குறட்பாவின் எதிரொலி போலும்.

## மழலை உடலோம்பல்

உடலோம்புவனவற்றுள் இசையும் ஒன்று. இசையினுஞ் சிறந்தது குழந்தையின் மழலை. குழந்தையின் மழலை கேட்போரின் கவலை போக்கும்; அவர் உடலுக்கு நலம் செய்யும். குழந்தையின் மழலை அமிழ்தாய் உடலை ஓம்பும்.

## வெறுங் கருவிகள்

குழலோசையும் யாழோசையும் தம்மக்களின் மழலையினும் சிறுமையுடையன என்று ஆசிரியர் விளக்கியுள்ள முறையை நோக்குக. ஆசிரியர் குழலிசை யாழிசை என்று கூறாது குழல் என்றும் யாழென்றும் கருவிகளை மட்டுங் குறிப்பித்துச் சென்றனர். வெறுங் கருவிகள் என்செய்யும்? அவைகளை ஒருவர் மீட்டினாலல்லவோ இசை எழும்பும்? மழலையை ஒருவர் மீட்டவேண்டுவதில்லை. அது தானே பாண்மிழற்றும். தம்மக்கள் மழலையை நோக்கக் குழலும் யாழும் இசையற்ற வெறும் கருவிகளாம் என்றபடி.

## நோக்கம்

“ தம்மக்கள் சிறுகை அளாவியகூழ் அமிழ்தினும் ஆற்ற இனிதே ” என்றும், “ மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்

மற்றவர் - சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு" என்றும், "தம்மக்கள் மழலைச்சொல் கேளாதவர் - யாழினிது குழலினிது என்ப" என்றுங் குழந்தைகளின் மாண்பை உலகியலில் அமைத்து விளக்கியதன் நோக்கம் என்னை? உயிர்கள் இல்வாழ்க்கையை நடாத்தி, மக்களை ஈன்று, உலகை வளர்ப்பது இயற்கை வாழ்வாம் என்பதையும், இயற்கைக்கு மாறுபட்டுப் போலித்துறவில் புகுவது இயற்கை வாழ்வாகா தென்பதையும், இயற்கைக்கு மாறுபட்ட வாழ்வு இனிமையற்றதென்பதையும், அது பலவித இன்னல்களுக்கு உட்படுத்துமென்பதையும் அறிவுறுத்தியவாறும். (௬)

(v) பெற்றோர்க்கும் மக்கட்குமுள்ள இயைபு

## 67

தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

### பொருள்

தந்தை மகற்கு ஆற்றும் நன்றி - தகப்பன் பிள்ளைக்குச் செய்யும் நன்மை, அவையத்து - சபையிலே, முந்தி இருப்ப செயல் - (மகனை) முன்னே இருக்கச் செய்தல்.

### கருத்து

தகப்பனின் சிறந்த கடன் தன் பிள்ளையைச் சபைகளில் முன்னே இருக்கச் செய்தல்.

### விருத்தி

முன்னே இன்பம் சொல்லப்பட்டது. இப்பாட்டிலும் தொடர்ந்து வரும் பாட்டுக்களிலும் இன்ப இயைபு சொல்லப்படுகிறது. இயைபு தந்தை மகற் காற்றல் வழி இப்பாட்டில் விளக்கப்படுகிறது.

முதற்பாட்டில் "அறிவறிந்த" என்பதற்குப் பரிமேலழகர் கூறிய உரையைக் கொண்டு சிலர், அவ்வுரையுடன் இப்பாட்டையும், பின்னேயுள்ள "ஈன்றபொழுதினும்......" என்னும் பாட்டையும் தொடர்புபடுத்திக் கல்வி ஆணுக்கே உரியதென்றும், அது பெண்ணுக்குரியதன்றென்றும் வாதப்போர் நிகழ்த்திவருகின்றனர். முதற்பாட்டிலே "அறிவறிந்த" என்பதற்கு யான் பொறித்துள்ள குறிப்புக்களை நோக்குக. இதுபற்றிப் பின்னே எனது உள்ளக்கிடக்கையை வெளியிடுவன்.

### தந்தை....செயல்

தந்தை - தகப்பன், ஈன்றவன்.

மகற்கு - மகனுக்கு, பிள்ளைக்கு.

நன்றி - நன்மை, உபகாரம்.

அவை : அவை - அவையம் - அவையத்து.

அவையத்து - சபையிலே, கல்வி அறிவு ஒழுக்கமுடையார் கூட்டத்திலே, அறவோர் குழுவிலே.

"முந்தியிருப்பச் செயல்" என்பதற்கு, 'முந்தியிருக்குமாறு கல்வி உண்டாக்குதல்' என்று மணக்குடவரும், 'அவரினும் (தந்தையினும்) மிக்கிருக்குமாறு கல்வியுடையவனுக்குதல்' என்று பரிமேலழகரும் உரைவிரித்துள்ளனர்.

### தந்தை மகற்காற்றும் நன்றி

"தந்தை" என்பது ஆண்பாலாயினும், இங்கே அது பொதுவாகப் பெற்றோரைக் குறித்து நிற்பது. அவ்வாறே "மகன்" என்பதும் மகளை உடன்கொண்டதென்க.

பொதுவாக மக்களை முற்படுத்திக் கூறும்போது, மக்களுக்குப் பதிலாக மகன் அல்லது ஒருவன் என்று கூறும்

வழக்காறுண்டு. மகன் அல்லது ஒருவன் என்றமையால், மகள் அல்லது ஒருத்தி என்னும் பெண்ணை விலக்கியதாகாது. 'மகன்' அல்லது 'ஒருவன்' என்பது மகளையும் அல்லது ஒருத்தியையும் உடன்கொண்டதென்க. பொதுமைக்கு ஆணை முற்படுத்திக் கூறும் வழக்காறு பல மொழிகளிலுள்ளதே. இதையுணராது பெண்ணை இழிவுபடுத்தப் புகுவது அறியாமையாகும்.

தந்தை வழித் தோன்றுவோன் மகன். தன் வழித் தோன்றலாகிய மகனைப் பிறந்தபடியே தந்தை விட்டுவிட்டால் அவன் கதி என்னுகும்? தந்தை அப்படி மகனை விடுவனே? விடான். அவ்வாறு விடும் இயல்பு தந்தையினிடம் இல்லை.

## அஃறிணை உயிர்கள்

அஃறிணை உயிர்களை நோக்குவோம். அவைகள் தங்கள் குழவிகளைப் பிறந்தபடியே விடுகின்றனவா? இல்லையே. அவைகள் தங்கள் கான்முளைகளை ஒரு பருவம்வரை வளர்ப்பதில் கண்ணுங் கருத்துமாகவே இருக்கின்றன. இங்ஙனமாக உயர்திணையின் பாற்பட்ட மக்கள் குழந்தைகளைப் பிறந்தவாறே விட்டுவிட மனந் துணிவார்களோ? குழந்தையைப் பெற்றோர் தம் உயிரினும் விழுமியதாகப் பேணி வளர்த்தலை அறியாதாரில்லை. பெற்றோர் குழந்தை மீது செலுத்துங் கவலைக்கோர் அளவும் உண்டோ? இதற்கு அடிப்படை அவர்மாட்டு இயல்பாயமைந்துள்ள அன்பேயாகும். அன்பு, கடனாற்றுமாறு பெற்றோரை உந்துகிறது. அக்கடனை ஆசிரியர் "ஆற்றும்" என்னுஞ் சொல்லால் தெரிவித்தல் காண்க.

தந்தை மகனுக்குச் செய்யத்தக்க நன்மைகள் எத்துணையோ உண்டு. அவைகள் கணக்கில் அடங்கா. குழந்தைக்கு ஒவ்வொரு பருவத்திலும் ஒவ்வொரு படியிலும் ஒவ்வொருவித உதவி தேவையாகிறது. அத்தேவைகளெல்லாம்

தந்தையால் அவ்வப்போது நல்கப்படுகின்றன. தேவைகளைக் கணக்கிடப் புகுந்தால் அவைகள் கோடிக்கணக்கில் விரியும். அவ்வத் தேவை அவ்வப்போது அன்புடன் நிறைவேற்றப் படுவதே தந்தையால் மகனுக்கு ஆற்றப்படும் நன்றி எனப் படும்.

தந்தை மகற்காற்றும் நன்றிகளைக் குறிப்பிடத் திருவள்ளுவர் உளங்கொண்டனர். கோடிக்கணக்கிலுள்ள நன்றிகளை ஒரு பாட்டில் எங்ஙனம் கிளந்து கூறுதல் கூடும் ? ஆகவே எல்லாம் அடங்கும் ஒன்றை அவர் குறிக்கப் புகுந்தனர். அதனால் ஆசிரியர் " நன்றிகள் " என்னாது " நன்றி " என்றனர்.

## அவையத்து முந்தியிருப்பச் செயல்

அந்நன்றி எது? அஃது, " அவையத்து முந்தியிருப்பச் செயல். "

அவையத்து - சபையினிடத்திலே. கல்வி அறிவு ஒழுக்கமுடைய நல்லோர் சேருங் கூட்டமே அவை என்று வழங்கப்பட்டு வருகிறது. ஏனையோர் சேருமிடம் அவை என்று வழங்கப்படுவதில்லை. அவை என்பதில் அறமே கூர்ந்து விளங்கல் வேண்டும். அதனால் அஃது அறங்கூரவை என்றொரு வழக்கும் பெறலாயிற்று. அவையின் இயல்பை, " புகழுந் தருமநெறி நின்றோர் பொய்காமம், இகழுஞ் சினஞ் செற்ற மில்லோர் - நிகழ் கலைகள், எல்லா முணர்ந்தோர் இருந்த இடமன்றோ, நல்லாய் அவைக்கு நலம் " எனவரூஉம் வெண்பாப் பாட்டியலால் அறிக. (பொது : 9)

முந்தியிருப்பச் செய்தலாவது அவையத்துப் பேசப் படும் அறவுரைகளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிவுபெறல் வேண்டுமென்னும் வேட்கை மதர்த்து எழுச்சி கொண்டிருக்கச் செய்தல் ; வேட்கை மேலீட்டான் சிந்தை விரைந்து

நிற்றல்; முதன்மை அதாவது தலைமை தாங்கச் செய்தல் என்னலுமாம்; அவையத்துள்ள பிறரைப் பின் தள்ளித் தான்மட்டும் முன்னே அமர்ந்து உடலால் இடத்தை நிரப்புதலன்று.

மக்கள் எத்தனையோவித வாழ்வுத் துறைகளில் ஈடுபடுகிறார்கள்; உழைக்கிறார்கள். அவர்கள் வாழ்வுத்துறைகளில் ஈடுபடும்போதும், உழைக்கும்போதும் மன மொழி மெய்களில் நல்லனவும் நிகழும்; தீயனவும் நிகழும். தீயன பெருகாதவாறு காத்தலே அறிவுடைமை. இதற்கு அறங்கூர் நல்லவையின் சேர்க்கை தேவை.

## அறவோர் இணக்கம்

ஏட்டுக் கல்விமட்டும் வாழ்வைப் பண்படுத்தாது. வாழ்வுப் பண்புக்கு ஏட்டுக் கல்வியுடன் அறவோர் இணக்கமும் வேண்டும்.

அறங்கூர் அவையத்தின் சேர்க்கையால் நல்லனவற்றின் மேன்மையும் தீயனவற்றின் சிறுமையும் விளங்கும். அதனால் வாழ்வில் தீயன நிகழாதவாறு காக்கும் நிலை உண்டாகும். வாழ்வைப் பண்படுத்தும்ஆற்றல் அவையத்தின் சேர்க்கைக்கு உண்டு. இந்நாளில் அறங்கூர் அவைக்களங்களுக்குப் பதிலாகக் களியாட்டக் கூட்டங்கள் பெருகி நிற்கின்றன. இப்பெருக்கால் மக்கள் வாழ்வு கெட்டுவருதல் கண்கூடு. *"அறவோர் அவைக்களம் அகலாது அணுகுமின் - பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்" எனவரூஉம் முன்னோர் மொழிகளை நோக்குக.

'தொழின் முறைகளை முடித்து எப்பொழுது அவையத்தை நண்ணப்போகிறோம்' என்னும் வேட்கை மக்கள் உள்ளத்தை உந்துதல்வேண்டும். இவ்வேட்கை எழாத

* சிலப்பதிகாரம்: ௩௦. வரம்: ககரு - ௪.

வாழ்வு வாழ்வாகாது; அது விலங்கு வாழ்வாகும். அவை யத்து நண்ணும் வேட்கை திடீரென எழாது. அதற்குரிய பயிற்சி இளமை தொட்டே பெற்றிருத்தல்வேண்டும். "தொட்டிற்பழக்கம் சுடுகாடுமட்டும்" என்பது பழமொழி.

## தந்தை கடன்

மகன் அவையத்து முந்தியிருக்கும் வேட்கையை வாழ் வில் பெறுமாறு அவனை வளர்க்கும் பொறுப்பு எவருடை யது? தந்தையினுடையதன்றோ? மகனை அவையத்து நண் ணும் வேட்கை எழும் மனமுடையனாக்காமல், அவனுக்கு வாசனை பூசியும், பட்டாடை அணிந்தும், பொன்னணி புனைந் தும், பாலும் தேனும் ஊட்டியும், நிலபுலம் வைத்தும் வளர்க் கும் அளவில் நின்று செல்வோன் தந்தையாகான்; இவன் மகனுக்கு ஆற்றத்தக்க கடனை ஆற்றாதவனாவன். கடனை ஆற்றாதவனை இயற்கை அன்னை ஒறுத்தே தீர்வள்.

## உயர்திணை அஃறிணை

தந்தையும் உயர்திணை; மகனும் உயர்திணை. உயர் திணைக்கும் அஃறிணைக்கும் என்ன வேற்றுமை? உயர்திணை யில் பகுத்தறிவு விளக்கத்துக்குரிய கருவி கரண அமைப் புண்டு; அஃறிணையில் அக்கருவிகரண அமைப்பில்லை. உயர் திணை உலகிற்றோன்றிப் பகுத்தறிவை விளக்கஞ் செய்தற் குரிய வாய்ப்பைப் பெற்றும் அதைப் பயன்படுத்தாதாரை அஃறிணையுலகில் வாழ்வோர் என்று கூறாது வேறென் கூறுவது?

அஃறிணை உயிர்கள் தங்கள் கான்முளைகளின் உடல் வளர்ச்சியை மட்டும் ஓரளவில் நாடும் வாய்ப்பைப் பெற் றிருக்கின்றன; உயர்திணை உயிர்கள் உடல் வளர்ச்சியுடன் உயிர் வளர்ச்சியையும் நாடும் வாய்ப்பைப் பெற்றிருக்

கின்றன. வாய்ப்பை நன்முறையில் பயன்படுத்துவது அறிவுடைமை.

உயர்திணைத் தந்தை உயர்திணை மகனை எப்படி வளர்த்தல் வேண்டும்? மகன் தன் வாழ்வில் அறவோர் அவைக்களன் நண்ணும்வேட்கை மீக்கூரும் மனமுடையவனுகுமாறு வளர்த்தல்வேண்டும். இதுவே "தந்தை மகற்காற்றும் நன்றி" யாகும்.

## செயல் வேண்டும்

மகன் உயர்திணையின்பாற்பட்ட உயிராயினும், அவையத்து முந்தியிருத்தல் வேண்டும் என்னும் வேட்கை அவன் மாட்டுத் தானே எழாது. அவன்மாட்டு அஃது எழும் முறையில் அவனை வளர்க்குங் கடமை தந்தையினுடையதே யாகும். ஆசிரியர் "முந்தியிருப்ப" என்னுது, "முந்தியிருப்பச் செயல்" என்றதை நோக்குக. "செயல்" தந்தை ஆற்றுங் கடனை உணர்த்துவது.

தந்தை தனக்குரிய கடனாற்ருதொழிவானுயின், மகன் பெறுதற்குரிய பேற்றை இழப்பவனுகிருன். குற்றம் எவனுடையது? தந்தையினுடையது என்று சொல்லவும் வேண்டுமோ? மகனது அறிவு வளர்ச்சிக்குத் தக்க சமயத்தில் துணை புரியாத தந்தை இயற்கை மனிதனுகான். அவன் பாவி. அவன் செயல் அவனைத் தாக்கியே தீரும்.

மக்களைப் பெறுவது மட்டும் மக்கட்பேருகாது. பெற்ருேர், மக்களை அவையத்து முந்தியிருப்பச் செய்தல் அவர் தம் மக்கட் பேற்றின் பயனுகும்.

## அவையத்து முந்தியிருப்பச் செயலின் உள்ளுறை

"அவையத்து முந்தி யிருப்பச் செயல்" கல்வியறிவு விளக்கத்தைக் குறிப்பது. கல்வியறிவில்லாதார்க்கு அவையத்து முந்தியிருக்க மனமெழாது. தந்தை மகற்காற்றும்

நன்றி மகனைக் கல்வியறிவுடையவ னாக்குதல் என்க. * "சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே" எனவரும் † புறநானூற்றின் உள்ளத்தை ஆய்க. பழைய உரையாசிரியர் இருவர் கருத்துக்கள் மேலே பொறிக்கப்பட்டுள்ளன. அவை களை நோக்கின் உள்ளுறை நன்கு விளங்கும்.

மகனுக்கு வெறுங் கல்வியறிவு வழங்கல் என்று குறித்து விடாமல் "அவையத்து முந்தியிருப்பச் செயல்" என்று கூறியதை ஆழ்ந்து சிந்திக்க.

## கல்வி கேள்வி

மகன் பெறுங் கல்வி எத்தகையதா யிருத்தல்வேண்டும்? அக்கல்வி, தானே கல்வியறிவுடையன் என்னுஞ் செருக்கை எழுப்புவதா யிருத்தல்கூடாது. மகன்பெறுங் கல்வி மேலும் மேலும் தன் அறிவு விளக்கத்துக்கென்று வேட்கை கொள்வதா யிருத்தல்வேண்டும். இவ்வேட்கை எழுச்சிக்கு அறிகுறியென்ன? அவையத்து முந்தியிருப்ப மனத்தில் கிளர்ச்சியுறல். இதற்குரிய கல்வியை மகன் பெறுதல்வேண் டும். இதுபற்றியே ஆசிரியர் வெறுங்கல்வி என்று கூறாது, "அவையத்து முந்தியிருப்பச் செயல்" என்று கூறினர். இதன் வாயிலாகக் கேள்விச் சிறப்பையுங் குறிப்பிட்டவாறும்.

தந்தை மகற்காற்றும் நன்றிகளிற் சிறந்தது எது? மகனை அவையத்து முந்தியிருப்பச் செய்வதென்பது ஆசிரி யர் கருத்து. இது பொருளாழமுடையது. மற்ற நன்றிகள் மறக்கற்பாலன; மறையற்பாலன. மகனை அவையத்து முந்தி யிருப்பச்செய்வது என்றும் நின்று நன்மை பயந்துகொண் டிருப்பது. அறங்கூர் அவை நண்ணும் வேட்கை மேலும் மேலுங் கல்வியறிவை எழுப்புவது; ஒழுக்கத்தை மென் மேலும் ஓம்பிக்கொண்டு போவது; வாழ்வைத் தூய்மை

*சான்றோன் - கல்வி யறிவு ஒழுக்கம் நிறைந்தவன். †௩௧௨ : ௨.

செய்வது ; மறுமைக்குந் துணை செய்வது. இன்னோரன்ன நலம் பல பயத்தலால் தந்தை மகற்காற்று நன்றிகளிற் சிறந்தது அவனை அவையத்து முந்தியிருப்பச் செய்வதென்க. (எ

## 68

மகன்தந்தைக் காற்று முதவி ' இவன்தந்தை
என்னோற்றான் கொல்' லென்னுஞ் சொல்.

### பொருள்

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி - மகன் தகப்பனுக்குச் செய்யும் உதவி, ' இவன் தந்தை என்னோற்றான்கொல் ' என்னுஞ் சொல் - ' இவன் தகப்பன் என்ன தவம் செய்தனனோ ' என்னும் பேச்சை (உலகிடை) உண்டாக்குதல்.

### கருத்து

தந்தைக்குப் புகழ் நிலவுமாறு பிள்ளை ஒழுகுதல் வேண்டும்.

### விருத்தி

முற்பாட்டில் தந்தை மகனுக்கு ஆற்றும் நன்றி சொல்லப்பட்டது. இப்பாட்டில் மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி சொல்லப்படுகிறது. இரண்டும் மக்கட் பேற்றின் சிறப்பை உணர்த்துவன.

**மகன் தந்தைக் காற்றும் உதவி**

உதவி - துணை, பயன்படுதல்; ' உபகாரம் ' என்றனர் மணக்குடவர் ; ' கைம்மாறு ' என்றனர் பரிமேலழகர்.

**நன்றி - உதவி**

முற்பாட்டில் " தந்தை மகற்காற்றும் நன்றி " என்றார்; இப்பாட்டில் " மகன் தந்தைக்காற்றும் உதவி " என்றார்

அங்கே "நன்றி" என்னுஞ் சொல்லும், இங்கே "உதவி" என்னுஞ் சொல்லும் பெய்யப்பட்டிருத்தல் கருதற்பாலது. வெண்பாத்தளை தட்டாமலிருத்தற்கு அங்கே "நன்றி"யும், இங்கே "உதவி"யும் பெய்யப்பட்டன என்று இலக்கணப் புலவோர் கூறுப. இரண்டுக்கும் பொருளில் ஏதேனும் வேற்றுமையுண்டோ எனில் பெரிதும் வேற்றுமையில்லை என்று இலக்கியப் புலவோர் கூறுப. பொருளில் இரண்டு சொல்லும் நெருங்கிய உறவுடையன. ஆனால் இரண்டு சொல்லையும் ஊன்றி நோக்கின், ஏதோ ஒருவித நுண்ணிய வேற்றுமை விளங்குமாறே அவைகளை ஆசிரியர் பெய் திருப்பர் என்று தோன்றும்.

நன்றி - உதவி: இவைகளின் நிகழ்ச்சி மூலத்தை உன்னுதல் வேண்டும். நன்றி எப்பொழுது நிகழும்? உதவி எப்பொழுது நிகழும்? நன்றி குறை காணாத நிலையிலும் நிகழ்வது; உதவி பெரிதும் குறை போக்க நிகழ்வது.

குறை

குறை பொது. அதை உணராத பருவமும் உண்டு; உணரும் பருவமும் உண்டு. குறை உணரப்படாத இடத்தில் துன்பம் நிகழ்வதில்லை. அஃது உணரப்படும் இடத்தில் துன்பம் நிகழும்.

குழந்தை தன் குறையை யுணர்ந்து வருந்துவதில்லை. அந்நிலையில் தந்தை குழந்தைக்குச் செய்யத் தக்க கடனைச் செய்கிறான். இதுவே நன்றி - நன்மை - என்பது.

தந்தை வயதானவன். அவனுக்குக் குறை விளங்கும். அக்குறை போக்க வேண்டுவது மகன் கடன். இஃது உதவி என்பது.

**நன்றியே உதவியாதல்**

*தந்தை மகற்காற்றும் நன்றியே பின்னை, தந்தைக்கு மகனின் உதவியாக வருதலால், அங்கே "தந்தை மகற்காற்று நன்றி" என்றும், இங்கே "மகன் தந்தைக் காற்றும் உதவி" என்றும் ஆசிரியர் அருளினர். அந்நன்றியும் இவ்வுதவியும் வாணிபம் போன்றனவல்ல. அஃதும் இஃதும் பயன் கருதா வழியில் நிகழ்வனவாம். பயன் கருதா நன்றியினின்றும் பயன் கருதா உதவி பிறத்தல் இயல்பு.*

## இவன் தந்தை என்னோற்றான் கொல் என்னுஞ் சொல்

*இவன் - மகன்.*

*நோற்றல் - நல்வினை செய்தல், புண்ணியம், தவம்.*

*நோற்றான் - நல்வினை செய்தான் ; புண்ணியம் செய்தான் ; தவம் செய்தான்.*

*கொல் : வியப்பிடைச்சொல் என்ப ; ஐயவிடைச் சொல் என்ப ; இரண்டும் விரவிய சொல் என்ப. "கற்றதனாலாய......" என்னும் பாட்டுக் குறிப்பைப் பார்க்க.*

*என்னும் - என்று பேசும்.*

*சொல் - பேச்சு : புகழுமாம்.*

*எல்லார் வாயிலும் உலவுஞ் சொல்லாதலின் "பேச்சு" என்று சொல்லப்பட்டது.*

*என்னுஞ் சொல் - என்னுஞ் சொல்லை - பேச்சை உண்டாக்குதல்.*

*உண்டாக்குதல் : சொல்லெச்சம்.*

*"என்று உலகத்தார் சொல்லுஞ் சொல்லைப் படைத்தல்"—இது மணக்குடவர் உரை.*

*"என்று சொல்லுஞ் சொல்லை நிகழ்த்துதல்"—இது பரிமேலழகர் உரை. "சொல் என்பது நிகழ்த்துதலாகிய*

தன் காரணந் தோன்ற நின்றது. நிகழ்த்துதல் - அங்ஙனம் சொல்ல ஒழுகுதல்—இது பரிமேலழகர் குறிப்புரை.

## உதவி விளக்கம்

தந்தைக்கு மகன் ஆற்றும் உதவிகளைப் பலபடக் கூறலாம். இன்சொல், உணவு, உடை, மருந்து முதலிய பல கூறிக்கலாம். இவை எவரானும் குறிக்கத்தக்கன. ஈண்டு ஆசிரியர் அருளியுள்ளதை நோக்குக. "இவன் தந்தை என் னோற்றான் கொல்லென்னுஞ் சொல்" என்பது ஆசிரியர் மொழி.

"தந்தை மகற்காற்று நன்றி அவையத்து - முந்தியிருப் பச் செயல்"; "மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை-என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்". இவ்விரண்டுக்கு முள்ள தொடர்பு வெள்ளிடைமலையென விளங்குதல் காண்க. அவையத்து முந்தியிருக்க அவாவும் மகனே, இவன் தந்தை என்னோற்றான் கொல் என்னுஞ் சொல்லை உண்டாக்க வல்லவனுவன் என்பது கருத்து. அவையத்து முந்தியிருக்க அவாவு தற்குரிய முறையில் மகனைத் தந்தை வளர்த்தால், மகன் "இவன் தந்தை என்னோற்றான் கொல்" என்னுஞ் சொல் உலகிடை வழங்குமுறையில் ஒழுகுவன் என்க.

தந்தை மகனை அவையத்து முந்தியிருக்கச் செய்தலாவது மகனைக் கல்வி அறிவு ஒழுக்கமுடையவனாகச் செய்வது என்று மேற்பாட்டில் விளக்கப்பட்டது. கல்வி அறிவு ஒழுக்கமுடைய மகனைப் பார்த்தே உலகம், "இவன் தந்தை என்னோற்றான் கொல்" என்று சொல்வது வழக்கம். "இவன் தந்தை என்னோற்றான் கொல்" என்பது உலக வழக்கினின்றும் எழுந்த பெருமொழி.

## சோதனை

*தந்தையொருவன் தன்மகனை வளர்க்கப் புகுகிறான். எப்படி? கல்வி அறிவு ஒழுக்க முடையவனாகுமாறு வளர்க்கிறான். தான் வளர்த்த முறையில் மகன் பின்னே வாழ்கிறானா இல்லையா என்பதைத் தந்தை எவ்வாறு உணர்தல் கூடும்? இச்சோதனை இப்பாட்டில் குறிக்கப்பட்டிருக்கிறது. மகனை உலகோர் பார்க்கும்போதெல்லாம் "இவன் தந்தை என்ன புண்ணியம் செய்தனனோ" என்று பேசின், மகன் கல்வியறிவு ஒழுக்கமுடையவனாக வாழ்கிறான் என்பது தந்தைக்கு விளங்கும். ஆகவே, மகனது நல்வாழ்க்கையைப்பற்றிய சோதனை இப்பாட்டில் விளங்குதல் காண்க.*

*மகன் தந்தைக் காற்றும் உதவி என்ன? "இவன் தந்தை என்னோற்றான் கொல்" என்னுஞ் சொல்லை உலகிடை வழங்க வைப்பது; அதாவது மகன் கல்வி அறிவு ஒழுக்கமுடையவனாக வாழ்வது. இளமையில் தந்தை மகனுக்களித்த கல்வி அறிவு ஒழுக்கம் குலையாதவாறு மகன் தன் வாழ்வில் காத்து வருவதே, "மகன் தந்தைக் காற்றும் உதவி" என்பது ஆசிரியர் கருத்து.*

## குறைபோகல்

*உதவியாவது குறை போக்குவது. இங்கே குறிக்கப்பட்டுள்ள உதவி மகன் தந்தைக் காற்றுவது.*

*உணவு உடை முதலியவற்றில் தன் தந்தைக்கு மனக்குறையுறாதவாறு ஒருமகன் நடக்கிறான். ஆனால், அம்மகன் நல்லொழுக்கமுடையவனாக வாழ்கிறானில்லை. அவனைப் பார்த்து உலகம் என்ன பேசும்? "இவனை எப்பாவி பெற்றானோ" என்று பேசும். இப்பேச்சுத் தந்தையின் செவிக்கு எட்டுகிறது. அந்நிலையில் தந்தை மனம் என்ன பாடுபடும்? அதைச் சொல்லவும் வேண்டுமோ? மகனிடம் நல்லுணவு நல்*

லுடை முதலிய உதவிகளைப் பெறுவதால் மட்டும் தந்தையின் மனம் நிறைவடைவதில்லை. மகன் நல்லொழுக்கமுடையவனாக வாழவில்லையே என்னும் மனக்குறை யுடையவனாய்த் தந்தை வருந்துகிறான். மகன் நல்லொழுக்கமுடையவனாய் வாழாது தன் தந்தைக்கு எத்தகை உதவி புரியினும் அஃது உதவி யாகாது. தள்ளாத வயதிலும் தந்தை மகனிடம் நல்லொழுக்க வாழ்வையே நாடி நிற்பன். நல்லொழுக்கமுடைய மக்கட்பேறே உலக வளர்ச்சிக்குத் தேவை என்பது ஆசிரியர் உள்ளக் கிடக்கை.

### மார்க்கண்டேயர்

மார்க்கண்டேயர் தந்தையார் மகப்பேறு குறித்துத் தவங்கிடந்தபோது, ஆண்டவன் அவர் முன் தோன்றி, "நீண்டகாலம் வாழும் தீயொழுக்கமுடைய மகன் வேண்டுமா? சில காலம் வாழும் நல்லொழுக்கமுடைய மகன் வேண்டுமா?" என்று கேட்டபோது அவர் எம்மகவை விரும்பினர்? முனிவர் நெஞ்சில் நீண்டகாலம் நிலவவில்லை; நல்லொழுக்கமே நிலவலாயிற்று. சில காலம் வாழும் நல்லொழுக்கமுடைய மகப் பேற்றையே அவர் விரும்பினர். விரிவைக் கந்தபுராணம் மார்க்கண்டேய படலத்திற் பார்க்க. (அ)

## 69

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

### பொருள்

தன்மகனை - தன்மகனை, சான்றோன் எனக் கேட்ட தாய் - சால்புடையவன் என்று கேட்டதாய், ஈன்ற பொழுதின் - அவனைப் பெற்ற பொழுதினும், பெரிது உவக்கும் - மிகவும் மகிழ்வள்.

## கருத்து

மகனைச் சான்ருேர் புகழ்தலைக் கேட்டலே தாய்க்கு மகிழ்ச்சி யூட்டுவது.

## விருத்தி

மேற்பாட் டிரண்டிலும் தந்தைக்கும் மகனுக்கு முள்ள ஒப்புரவு பேசப்பட்டது. இப்பாட்டில் தாய்க்கும் மகனுக்கும் உள்ள ஒப்புரவு பேசப்படுகிறது.

## தன்மகனைச் சான்ருே னெனக்கேட்ட தாய்

"தன்மகனை" என்பதுபற்றிய குறிப்புக்கள் சில மேலே பொறிக்கப்பட்டன.

சான்ருேன் - சால்புடையோன்; சால்பு - தகுதி, குணம், நிறைவு, அமைதி.

"மென்ருேள் சாய்த்தும் சால்பின் றன்றே"—குறுந்தொகை: 90 : 7; "அறிவும் சால்பும் அரசியல் வழக்கும்"—மணிமேகலை : ச : கoக.

எனக்கேட்ட - என்று பிறர் சொல்லக்கேட்ட; என்று பிறர் பேசக்கேட்ட.

தாய் - தாய்மையுடையவள்.

தன்மகனை - தன்னுடைய மகனை, தன் வயிற்றில் பிறந்த மகனை, தான் ஈன்ற மகனை.

### தன்மகனை

மகன் தாய்வயிற்றிற் பிறத்தல் இயல்பு. தான் ஈன்ற மகனைத் தாய் தன் மகன் என்று சொல்லாது வேறென் சொல்வள்? இங்ஙனமாக ஆசிரியர் "தன் மகனை" என்று சொல்வானேன்? இதில் ஏதேனும் பொருட் செறிவிருக்குமா? சிறிது சிந்தித்துப் பார்ப்போம்; சிந்தனையில் ஆழ ஆழச்

சில நுட்பங்கள் தோன்றும். அவை ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு விதமாகத் தோன்றும்.

தாயின் வயிற்றில் மகவு பிறக்கிறது. அம்மகவு எது? தாயின் இயல்புகளெல்லாம் திரண்ட ஒருபிண்டம் மகவு என்பது. தாய் இயல்புகளின் செறிவு மகவாகத் தோன்றலின், "தன்மகன்" என்று சொல்லப்பட்டிருக்கலாம். தன் (தாயின்) இயல்புகள் செறியப் பிறந்த மகன் என்று பொருள் விரிக்க.

## சான்றோன்

சான்றோன் - நற்குணங்களால் அமைந்தோன்; அறிவு ஒழுக்கத்தால் நிறையப் பெற்றோன்; அறிஞன்; வீரன்; "இவ்வுலகத்துச் சான்றோர் செய்த நன்றுண்டாயின்"—புறநானூறு : ௩௪: ௨௦; "தகைமிகு தொகை வகை அறியுஞ் சான்றவர் இனமாக"—கலித்தோகை : ௩௧ : ௪௭ ; "நோன்புரித் தடக்கைச் சான்றோர்"—பதிற்றுப்பத்து : ௧௪ : ௧௨.

"சான்றோன்" என்பது தமிழ்மொழியிலுள்ள ஒரு மணிச் சொல். அதன்கண் நற்பொருள்பல மலிந்து கிடக்கின்றன. பல நற்பொருளுடைய 'சான்றோன்' என்னுஞ் சொல்லை மிகப்பொருந்திய இடத்தில் ஆசிரியர் பெய்திருத்தல் கருதற்பாலது. ஒவ்வொருவரும் சான்றோராதல் வேண்டுமென்பது ஆசிரியர் உள்ளக்கிடக்கை.

மக்கட் பிறவி தாங்குவதால் மட்டும் பயன் விளைந்து விடாது. மக்கள் தாங்கள் சான்றவராகத் தங்கள் வாழ்வைப் பண்படுத்திக் கொள்ளல்வேண்டும்; இல்லையேல் மக்கட் பிறவியின் பயன் விளையாமற் போகும்.

சான்றோர் யார்? நற்குணம் அமைந்தோர். நற்குணம் நல்லறிவின்றி அமையாது. நல்லறிவும் குணமும் நிறைந்து அமைந்த விடத்தில் பொலிவது வீரம். ஆகவே, அறிவும்

குணமும் வீரமும் செறிந்த ஒருவரைச் சான்றோர் என்று தமிழ் கூறுகிறது.

அறிவும் குணமும் வீரமும் செறிந்த சான்றோர் திறங்களைப் பலபடக் கூறலாம். ஈண்டுச் சில வருமாறு :—அவை : தீமையை எதிர்த்து நில்லாமை, பகைவருக் கருளல், தீங்கு செய்வோர்க்கும் நலஞ்செய்தல், புகழுக்கு நாணல், பழிக்கு அஞ்சல் முதலியன.

தீமையை எதிர்த்து நிற்கவேண்டாம்; உன்னை வலது கன்னத்தில் அறைகிறவனுக்கு மறுகன்னத்தையும் திருப்பிக் காட்டு. உன்னோடு வழக்காடி உன் உள்வஸ்திரத்தை எடுத்துக் கொள்ள விரும்புகிறவனுக்கு உன்மேல் வஸ்திரத்தையும் விட்டுவிடு. மத்தேயு : 6 : 39 - 41

உன் அயலானில் அன்புகூரு, உன் சத்துருவையோபகை என்று சொல்லப்பட்டதாகக் கேட்டிருக்கிறீர்கள்; நான் உங்களுக்குச் சொல்வதோ : உங்கள் சத்துருக்களில் அன்பு கூருங்கள்; உங்களை இம்சைப் படுத்துகிறவர்களுக்காக ஜெபஞ் செய்யுங்கள். மத்தேயு : 6 : 43 - 5

"...சான்றோர் - புகழு முன்னர் நாணுப
பழியாங் கொல்பவோ காணுங் காலே"
—குறுந்தொகை : உ௫உ - 7 - 8

## எனக்கேட்டதாய்

எனக் கேட்டதாய் - என்று பிறர் சொல்ல அல்லது பேசக் கேட்டதாய். பிறரைச் சான்றோரெனக் கொள்ளலுமாம். சான்றோனியல் சான்றோர்க்கே தெரியுமாதலின்.

"கேட்ட" என்னுஞ் சொல்லைக் கொண்டு சிலர் பெண்ணுலகுக்கு அறியாமை கற்பிக்க முயல்கின்றனர். இவர், "பெண்ணியல்பால் தானாக அறியாமையின் 'கேட்டதாய்' எனக்கூறினார்" எனவரூஉம் பரிமேலழகர் குறிப்புரையை

யும் எடுத்துக்காட்டுவர், இஃது இடைக்காலக் குறும்புகளுள் ஒன்று. இதுபற்றிச் சில குறிப்புக்கள் இவ்வதிகார முதற் பாட்டின் விருத்தியுரைக்கண் பொறிக்கப்பட்டன. அவைகளை நோக்குக.

"கேட்ட" என்பதைக் கொண்டு பெண்ணுக்கு அறிவு விளக்கமின்மை கற்பிக்க முந்தும் 'அறிஞர்' கேட்டலின் நுண்மையை ஆய்ந்து உண்மை காண முயல்வாராக.

*"கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை களத்த லென ஈரிரண்டாங் களக்கின் ஞான-வீட்டையடைந் திடு வர்நிட்டை மேவி னோர்கள்" என்பது ஆன்றோர்மொழி. ஒன்றைக் கேட்டபின் அதைச் சிந்தித்தல் வேண்டும்; சிந் தனையினின்றும் தெளிவு பிறக்கும்; தெளிவால் கூடுவது நிட்டை. நிட்டையைப் பற்றிய ஆராய்ச்சி ஈண்டு வேண்டுவ தில்லை. தெளிவுமீது சிறிது கருத்துச் செலுத்திப் பார்க்க.

கேட்டலைச் சிந்தித்தலால் தெளிவு பிறக்கிறது. தெளிவு, அறிவு விளக்கமில்லாதவிடத்தில் எங்ஙனம் பிறக்கும்? கேட்டல் செவியளவில் நிற்பதா?

"தன்மகனைச் சான்றோனெனக் கேட்ட தாய்" தான் கேட்டதைச் செவியளவில் நிறுத்திக் கொண்டா உவப்பள்? செவிப்பொறிக்கு உவக்குந் தன்மை உண்டோ? பெண் ணுக்கு அறியாமை கற்பிக்கப் புகுந்த 'அறிஞர்' அறியாமை யில் கிடப்பவரே யாவர். கேட்டதைத் தெளிந்துணரும் அறிவு விளக்கமில்லையேல் உவப்பு எப்படித் தோன்றும்? பின்னை ஆசிரியர் எற்றுக்குக் "கேட்ட" என்னுஞ் சொல்லைப் பெய்தனர்?

தாய், கல்வி அறிவிற் சிறந்தவள். அவள் தன்மகன் சான்றோன் என்பதை அறிவால் அளந்து தெளிந்து உள்ளத் துள்ளே உவந்து கொண்டிருக்கிறாள். பின்னைப் பிறரும் தன்

*சிவஞான சித்தியார்.

மகனைச் சான்றோன் என்று பேசக் கேட்ட தாய்க்கு உவப்புப் பெரிதாய்க் கூர்ந்து பொங்குகிறது.

தன்மகனைப் பிறர் சான்றோனெனப் பேசுகின்றனரா என்று கேட்கும் வேட்கையுடையவள் தாய். உலகம் தன் மகனைப் பற்றி என்ன பேசுகிறது என்று கேட்டுணர விழைவது தாயின் இயல்பு. இவ்வியல்பை ஈண்டு ஆசிரியர், "கேட்ட" என்பதன் வாயிலாக விளங்கச் செய்கிறார்.

### தாய்

தாய் - தாய்மையுடையவள். பெண்மணியின் வாழ்விலே மூன்று நிலை முறை முறையே அரும்பி மலர்ந்து கனிதல் வேண்டும். அவை பெண்மை, தாய்மை, இறைமை என்பன. இம் மூன்றனுள் மிகச் சிறந்தது தாய்மை. பெண்மை தாய்மை மலர்ச்சிக்கென்று ஏற்பட்டது. தாய்மை மலர்ந்தால் இறைமை தானே கனியும். இறைமைக் கனிவுக்குத் தாய்மை இன்றியமையாதது. தாய்மை மலரா விடத்தில் இறைமை கனியாது. தாய்மை மலராத பெண்மையும் சிறப்புடையதன்று. ஆதலின் தாய்மை சிறந்த தென்க. தாய்மையாவது அன்பின் நிறைவு - அன்பின் விளைவு - அன்பின் வண்ணம்.

## ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்

ஈன்ற - பெற்ற, கருவுயிர்த்த.

ஈன் முதனிலை; ஈனல் - உண்டாக்குதல்; இங்கே கருவுயிர்த்தல்.

பொழுதின் - பொழுதினும்.

உவக்கும் - உவப்பள்; செய்யுமென்னும் முற்று; இங்கே பெண்பாலின் மேலது.

ஈ ன் ற......உ வ க் கு ம்

"ஈன்ற பொழுதின்" என்பதை உற்று நோக்குக; நோக்கின் அதன்கண் மற்றுமொரு பொழுது தொனிக்கும். அது தன் மகனைச் சான்றோன் எனத் தாய் கேட்ட பொழுதென்க.

"பெரிதுவக்கும்" என்பதிலும் இருபொழுது ஒலித்தலை உணர்க. உவத்தல் ஒரு பொழுதை உணர்த்துவது; பெரிதுவத்தல் மற்றொரு பொழுதை உணர்த்துவது. உவத்தல் ஈன்ற பொழுதும், பெரிதுவத்தல் தன்மகனைச் சான்றோனெனக் கேட்டபொழுதும் நிகழ்வன.

ஈன்றபொழுது உவப்புத் தோன்றுவானேன்? தன் மகனைச் சான்றோனெனக் கேட்டபொழுது அவ்வுவப்புப் பெரிதாவதேன்?

உவப்பு

இல்வாழ்க்கையின் பயன் அன்பைப் பெற்று அந்தண்மை எய்துவது. இதற்கு அடிப்படை மக்கட்பேறு. மக்கட்பேறு அன்பு ஊற்றைத் திறப்பது. இல்வாழ்க்கையில் மக்கட்பேறில்லா தொழியின் அதன் பயனும் நிறைவேறு தொழியும். இல்வாழ்க்கையின் பயனாகிய அந்தண்மையை வளர்க்கும் அன்பு ஊற்றைத் திறக்கும் மகப்பேறடையும் போது வாழ்வின் வெற்றிகுறித்துத் தாய் உவப்பது இயல்பு.

பெண் பிறவியின் உயிர்நாடி தாய்மை. தாய்மை மகப்பேறு வழியே மலர்வது. மகப்பேறில்லையேல் தாய்மைப் பேறும் இல்லாமற்போகும். தாய்மையை வழங்கும் மகப்பேறடையும்போது தாய் உவகையுறுவது இயற்கையேயாகும்.

உலகம் வளர்ச்சியுறுந் தன்மையது. வளர்ச்சிக்குத் துணைபுரியும் உயிர்கள் நலம் பெறும்; மற்ற உயிர்கள் நலம்

பெறுது இடர்ப்படும். உலக வளர்ச்சிக்குத் துணைபுரியும் நெறிகளுள் சிறந்த ஒன்று மக்கட்பேற்றிற்குரிய இல்வாழ்க்கையை ஏற்று நடத்துவது. இல்வாழ்க்கை யென்னும் இயற்கை வாழ்க்கையை ஏற்று நடாத்தும் பெண்மகள் கருவுறுகிறாள். கருக்குறி அவளுக்கு உவகையை ஊட்டிக்கொண்டேயிருக்கும். இடையில் எவ்வித ஊறும் விளையாது குழந்தை பிறக்கிறது. "உலக வளர்ச்சிக்குத் துணைபுரிய வந்தேன்" என்று ஆனந்த அழுகுரலைக் குழந்தை எழுப்புகிறது. அக்குரல் கேட்குந் தாய்க்கு எத்தகை உவப்பு உண்டாகும்? அது சொல்லுந் தகையதோ?

## பேருவப்பு

பிள்ளை பிறந்து விட்டது; வளர்ந்து வருகிறது. பெற்றோர் பிள்ளை சான்றோனாகும் முறையில், அவனை வளர்த்து வருகிறார். தன் மகனைச் சான்றோன் என்று தாய் உணர்கிறாள்; உலகம் மகனைச் சான்றோன் எனச் சொல்கிறதா என்று விழைந்து நிற்கிறாள்; தன்மகனை உலகம் 'சான்றோன்' 'சான்றோன்' என்று போற்றிப் புகழ்வதைப் பல வழியால் கேள்வியுறுகிறாள். அவளுக்கு உவகை பொங்கி வழிகிறது. இவ்வுவகை மகனை ஈன்றபொழுது உற்றதினும் பெரிதாகிறது.

## திருவள்ளுவர் நோக்கம்

தாய் மகனை ஈன்றபோது உவக்கிறாள். அவ்வுவகையை ஆசிரியர் பெரிதாகக் கொண்டாரில்லை; மகனைப் பிறர் சான்றோனெனக்கூறத் தாய் கேட்டபோது அவள் அடையும் உவகையையே "பெரிது" என்கிறார். திருவள்ளுவர் குறிக்குந் தாய் நிலையையோர்க; மகன் நிலையையும் ஓர்க. உலகம் சான்றவர் வண்ணமாதல் வேண்டுமென்பது அவர்தம் உள்ளக்கிடக்கை.

உலகைச் சான்றவர் வண்ணமாக்க அவர் திருக்குறளை அருளி னர். திருக்குறள் சான்றவர் உலகை ஈனும் தெய்வமறை என்க.

மக்கள் சான்றவராய் வளர்ந்து உலகை ஓம்புதல் வேண்டுமென்னுங் கருத்தை ஆசிரியர் இக்குறளில் எம்முறை யில் புகுத்தியுள்ளார் என்பது உன்னற்பாலது.

மீனுண் கொக்கின் றூவி யன்ன
வானரைக் கூந்தன் முதியோள் சிறுவன்
களிறெறிந்து பட்டன னென்னும் உவகை
ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
நோன்கழை துயல்வரும் வெதிரத்து
வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே.

நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்று பலர்கூற
மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.

—புறநானூறு : 277 ; 278. (க)

## 70

தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

### பொருள்

தம்மின் - தம்மைக் காட்டிலும், தம் மக்கள் அறி வுடைமை - தம் மக்கள் அறிவுடைமை, மாநிலத்து மன்

உயிர்க்கு எல்லாம் - பெரிய நில உலகத்திலே நிலை பெற்
உயிர்கட்கெல்லாம், இனிது - இனியதாகும்.

கருத்து

பெற்றோர் மக்களை அறிவுடையோ ராக்குதல் உலகுக்கே நன்மை செய்வதாகும்.

விருத்தி

மேற்பாக்கள் மூன்றும் மக்களறி வுடைமையைச் சிறப்பு முறையில் பேசின. இப்பாட்டில் அவர்கள் அறி வுடைமை பொது முறையில் பேசப்படுகிறது.

" தம் மக்கள் அறிவுடையாரானல் அது தம்மினும் உல கத்துயிர்கட்கெல்லாம் இனிதாம்"—இது மணக்குடவர் உரை.

" தம்மக்களது அறிவுடைமை பெரிய நிலத்து மன்னு நின்ற உயிர்கட் கெல்லாந் தம்மினும் இனிதாம் "—இது பரிமேலழகர் உரை.

" மாநிலத்து மன்னுயிர்க் கெல்லாம் தம்மின் தம்மக்கள் அறிவுடைமை இனிது " என்று கொண்டு பொருள் விரிப் போரு முளர்.

## தம்மிற் றம்மக்கள் அறிவுடைமை

தம் - தாய்தந்தையர், பெற்றோர்.

மேற்பாட்டு மூன்றிலும் முறையே தந்தையும் தாயும் தனித்தனியே குறிக்கப் பெற்றனர். இப்பாட்டில் அவர் இருவரும் சேர்ந்த முறையில் " தம் " என்று குறிக்கப் பெற்றுள்ளனர். இதனல் தந்தையும் தாயும் அறிவு விளக் கத்தில் ஏற்றத் தாழ்வில்லாதவர் என்று விளக்கியவாறும்.

தம்மின் - தம்மைக் காட்டிலும் (தாய் தந்தையரைக்

*தம் மக்கள் அறிவுடைமை - தம் மக்கள் அறிவுடையராதல்; தம் மக்களின் அறிவுடைமை; தம் மக்களை அறிவுடையோராக்குதல்.*

*அறிவுடைமை - அறிவுடையராந்தன்மை; அறிவுடையராதல்; அறிவுச் செல்வம் பெறுதல்.*

## தம்மின் தம்மக்கள் அறிவுடைமை

*'தம்மின் தம் மக்கள் அறிவுடைமை' என்பது தாய் தந்தையரின் அறிவுடைமையை உணர்த்துவது. அறிவுடைய தாய் தந்தையர் தம் மக்களைத் தம்மினும் அறிவுடையவராகச் செய்தல்கூடும். இக்குறிப்பு மேற்பாக்களிலும் மிளிர்கிறது. அறிவுடைய தந்தையே தன் மகனை அவையத்து முந்தியிருப்பச் செய்வன்; அறிவுடைய தாயே தன் மகனைச் சான்றோன் எனக் கேட்டு உவப்பள்.*

*மேலே தந்தை என்றதற் கேற்பத் 'தன்மகனை' என்றும், தாய் என்றதற் கேற்பத் 'தன்மகனை' என்றும் ஒருமையில் அருளினர். இங்கே "தம்மின்" என்றதற் கேற்பத் "தம்மக்கள்" என்று பன்மையில் அருளினர்.*

*ஈண்டு மக்கள் என்றது பிள்ளைகள் என்னும் பொருளின் மேலது. "தம்மக்கள்" என்பதிலேயே அறிவுடைமை கரந்து தொனித்தல் காண்க.*

### செல்வம்

*தாய் தந்தையர் மக்களுக்கென்று தேடிவைக்கும் செல்வம் பலவிதம். அவைகளை இருகூறு படுத்தலாம். ஒன்று பொருட்செல்வம்; மற்றொன்று அறிவுச்செல்வம். முன்னையது பிறிதின்கிழமையா யிருப்பது; பின்னையது தற்கிழமையா யிருப்பது. பிறிதின்கிழமை நீங்குந் தன்மையது; தற்கிழமை நீங்குந் தன்மையதன்று.*

உலகில் எத்தனையோ தாய் தந்தையர் எத்தனையோ விதப் பொருட் செல்வத்தை மக்களுக்குத் தேடிவைத்துச் சென்றனர். அப்பொருட் செல்வங்கள் எல்லாவற்றையும் இழந்து பிச்சை யெடுத்துத்திரியும் மக்களுமுளர். *"யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச், சேனைத் தலைவ ராய்ச் சென்றோரும் - ஏனை, வினையுலப்ப வேறாகி வீழ்வர் தாங் கொண்ட, மனையாளை மாற்றார் கொள" என்பதும், †"குடை நிழலிருந்து குஞ்சர மூர்ந்தோர் - நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்" என்பதும் ஆன்றோர் மொழிகள்.

அறிவுச் செல்வம் தற்கிழமைப் பொருளாயிருத்தலான், அஃது எந்நிலையிலும் மக்களை விடுத்து அகலாது; உற்ற சமயங்களில் உறுதுணை செய்துங் காக்கும்.

பொருட்செல்வம் சில சமயங்களில் அடாத செயல்புரிய மக்களைத் தூண்டுவதுமுண்டு; இடர் விளைப்பதுமுண்டு. அறிவுச் செல்வம் கொடுஞ் செயல் புரியத் தூண்டாது; நலம் புரியத் தூண்டும்.

எவ்வகையில் சிந்தித்துப் பார்த்தாலும் அறிவுச் செல் வமே சிறந்த தென்பது புலனாகும். ஆதலின் தாய் தந்தை யர் மக்களுக்கு அறிவுச் செல்வம் வழங்குதலே சிறப்பு.

### தம்மினும்

எத்தகை அறிவுச் செல்வம்? தம்மினும் தம்மக்களை அறிவுச் செல்வமுடையராக்குதல் தாய் தந்தையர் கடமை என்று ஆசிரியர் கூறுகிறார்.

அறிவுடைய தாய் தந்தையர் வழித் தோன்றிய மக்கள், அறிவு வளப்பத்தில் அவரினும் சிறந்து விளங்கல் இயற்கை. என்னை? உலகம் வளர்ச்சி யுடையதாதலின்.

---

* நாலடியார். † வெற்றிவேற்கை.

## பரிணமம்

பெற்றோரே பிள்ளையாகப் பரிணமிக்கின்றனர் என்பது ஒருவித சித்தாந்தம். இஃது ஒரு விளக்கினின்றும் மற்றொரு விளக்கு ஏற்றப்படுவது போன்றதென்க.

பரிணமித்தலில் உள்ளது சிறந்து விளங்குவது இயல்பு. ஒரு விதை முளைத்துச் செடியாகி மரமாகிப் பலவிதைகளைத் தருகிறது. இவ்விருவகை விதைகளில் சிறந்தது எது? தாய் விதையைப் பார்க்கிலும் அதினின்றும் தோன்றிய சேய் விதையே சிறந்ததாகிறது. இஃது இயற்கையின் போக்கு. ஒரு மாணிக்கக் கல்லை எடுத்துக் கடையக் கடைய அதன் பண்பு பெருகுவதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். இவ் வெடுத்துக்காட்டுக்களால் விளங்குவது என்னை? ஒன்றி னின்றும் தோன்றும் மற்றொன்று சிறந்ததென்பது விளங்கு கிறது. பெற்றோரினும் மக்கள் அறிவுடையராதல் இயற்கை.

## கூட்டுறவு

இயற்கை அறிவு பெரிதும் தானே வளமுறாது; பண் படாது. இயற்கை அறிவு நலம் பெறுதற்கு வேறு சில கூட் டுறவு வேண்டும். இல்லையேல் இயற்கை அறிவு வளர்ச்சிக் குச் சிறிது தடைநேரினும் நேரும்.

விதையினின்றும் முளை எழுகிறது. முளை வளர்ந்து மரமாதற்கு மண் நீர் காற்று ஒளி முதலியன வேண்டும். இதுபோல இயற்கை அறிவுக்கும் சில கூட்டுறவு தேவை.

வாழ்வு நலத்துக்கு வெறும் அறிவு விளக்கம் மட்டும் போதாது. அறிவுடன் குணமும் செயலும் வேண்டும். குண மும் செயலும் விரவி ஒன்றும் முறையில் பண்படும் அறிவே விழுப்பமுடையதாகும். சிலருக்கு இயற்கை அறிவுண்டு. ஆனால் அவரிடம் நற்குணமும் நற்செயலும் முகிழ்ப்பதில்லை. நற்குணமும் நற்செயலும் முகிழ்க்கப்பெறாத தனித்த

இயற்கை அறிவால் என்ன பயன்? அவ்வறிவு சில சமயம் தீமைக்குப் பயன்படினும் படும். ஆதலின் இயற்கை அறிவு வளம்பெற அதனுடன் குணமும் செயலும் விராவி ஒன்று தல் வேண்டும். இதற்குத் தாய் தந்தையரின் துணை தேவை யாகிறது.

## பெற்றோர் கடமை

பெற்றோர் கடமை மேற்பாக்களில் ஒரோ வழி குறிக் கப்பட்டுளது. 'மகனை அவையத்து முந்தியிருப்பச் செயல்' என்றும், 'சான்றோன் எனக் கேட்டல்' என்றும் ஆசிரியர் குறிப்பிட்டிருத்தலை உன்னுக. இது 'தம்மின் தம் மக்களறி வுடைமை' என்பதில் விளங்குதலைக் கூர்ந்து நோக்குக.

மைந்தனை, அவையத்து முந்தியிருப்பச் செய்தலாலும் சான்றோன் எனப் பிறர் பேசுதலாலும் விளையும் பயன் என்ன? இதற்கு விடை 'மாநிலத்து மன்னுயிர்க் கெல்லாம் இனிது' என்பது.

## மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிது

மன் : இடைச் சொல் ; நிலை பெற்ற ; பெரிய.

மன்னுயிர்க்கு - நிலைபெற்ற உயிர்கட்கு ; பெரிய உயிர் கட்கு ; வாழும் உயிர்கட்கு ; மக்களினம் என்று கொள் வோருமுளர்.

இனிது - இனியது, இனிமை பயப்பது, நலஞ் செய்வது.

## மா நி ல த் து......இ னி து

"மாநிலம்" என்பது சாதி மதம் முதலிய கட்டுக்களைக் கடந்த நிலையை உணர்த்துவது.

"மன்னுயிர்க் கெல்லாம்" என்பது அஃறிணை உயர் திணை ஆகிய இருவகை உயிரையுங் குறிப்பது.

உயிரில் அஃறிணை உயர்திணை என்னும் வேற்றுமை யில்லை. உடலமைப்பிலும், கருவிகரண அமைப்பிலும் வேற்றுமையுண்டு. இவ்வமைப்புக்களுக் கேற்ற வண்ணம் அறிவு விளக்கம்பெறும்.

## எவ்வுயிரும் பொது

மக்கட் பிறவியின் நோக்கங்கள் பலபடச் சொல்லப்படு கின்றன. அவைகளுள் சிறந்தது மற்றவர்க்கு நலஞ்செய்வ தென்று சான்றோர் பலர் சாற்றிச் சென்றனர். மற்றவர்க்கு நலஞ் செய்வோர் நெஞ்சில் சாதிக்கட்டு, மதக்கட்டு, நிறக் கட்டு, மொழிக்கட்டு, நாட்டுக்கட்டு முதலியன இரா. அவர் தம் நெஞ்சம் எல்லா உயிர்மீதும் படிந்துகிடக்கும். எவ்வுயி ரும் பொது என்பது அவர்தங் கொள்கை. இது, 'மாநிலத்து மன்னுயிர்க் கெல்லாம்' என்பதில் திகழ்தல் காண்க.

## எவ்வுயிர்க்குந் தீங்கு செய்யாமை

அறிவு விளக்கத்திலுள்ள வேற்றுமை கொண்டு ஆன் றோர் உயிர்களை அஃறிணை என்றும் உயர்திணை என்றும் பிரிக்கலாயினர். உயிர் எத்திணையதாயினும் ஆக. எவ்வகை உயிர்க்கும் தீங்கு செய்யாதிருப்பதே அறிவுடைமை. இஃது " இனிது " என்பதில் மருவுவதை ஓர்க.

மரங்கள் நலமே புரிகின்றன. காரணமின்றி அவைகளை ஏன் வெட்டிக் குவித்தல்வேண்டும்? அழகிய பறவைகளையும் விலங்குகளையும் காரணமின்றிச் சுட்டு வீழ்த்துவது எற் றுக்கு? மக்களுக்குள் கொள்ளை, கொலை, புரட்சி முதலியன ஏன் நிகழ்தல்வேண்டும்? இந்நிகழ்ச்சிகள் நடைபெறுதற்குக் காரணம் மக்கள் போதிய அளவில் அறிவுச் செல்வம் பெறுமையாகும்.

அறிவுடைமைக்கு அறிகுறி எது ? எவ்வகை உயிர்க்கும் தீங்கு செய்யாது நலஞ்செய்வது. இதுவே சிறந்த அறம்; தவம்.

பிற உயிர்க்குத் தீங்கு செய்வதால் தன்னுயிர் வளர்ச்சியும் மற்ற உயிர் வளர்ச்சியும் ஊறுபடும் என்னும் உணர்வை ஊட்டுதற்கு வேண்டப்படுவது அறிவுச் செல்வம் என்பதை விளக்க வேண்டுவதில்லை. மக்கட்கு வேண்டுவது அறிவுடைமை. அறிவுடைமையை மக்களுக்கு வழங்கவேண்டுவது பெற்ரோர் கடமை. இக்கடமை, “ தம்மின் தம்மக்கள் அறிவுடைமை ” என்பதில் விளங்குதல் காண்க.

## வளர்க்கும் முறை

தாய் தந்தையர் எவ்வுயிர்க்குந் தீங்கு நினைக்கவுந் தூண்டாத அறிவுடையவர். இத்தகை அறிவுடைய தாய்தந்தையர் தம் மக்களை எப்படி வளர்த்தல் வேண்டும் ? தம்மினும் தம் மக்கள் அறிவுடையவராக அவர்களை வளர்த்தல் வேண்டும். அப்பொழுதே மக்களால் மன்னுயிரெல்லாம் இனிமை பெறுவனவாகும். மன்னுயிர்க்குத் தீங்கு விளைக்கும் பிள்ளைகளைப் பெறுந் தாய் தந்தையரை உலகம் இகழ்ந்து கூறல் இயல்பு.

தாய் தந்தையர் அறிவிற் சிறந்தவராயிருக்கலாம். அவர் வழித் தோன்றும் மக்கள் அவரினும் அறிவுடையரா யிருக்கலாம். அவ்வறிவாலும் இவ்வறிவாலும் மன்பதைக்கு என்ன பயன் ? அறிவுடைமை என்பது மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிமை பயப்பதாதல் வேண்டும். இம்முறையில் மக்கள் அறிவைப் பண்படுத்த வேண்டுவது தாய் தந்தையர் கடமை.

மக்களின் இயற்கை அறிவுடன் குணமும் செயலும் ஒன்றி (மற்றவர் நலங் கருதி) அவர்கள் வாழும் முறையில் அவர்களை வளர்க்கும் பொறுப்பு பெற்ரோருடையதாகும்.

பெற்றோர் தங்கடமையில் வழுவி விடுவாராயின் மக்களின் இயற்கை அறிவு நற்குண நற்செயல்களால் பண்படாதொழியும். அதனால் மாநிலத்து மன்னுயிர்க்குப் பெருங்கேடு விளையினும் விளையும்.

கூர்தல்

மன்னுயிர்க்குத் தீங்குசெய்யாமையால் கூர்தல் அல்லது உள்ளது சிறத்தல் என்னும் பேரறம் உலகிடை வளரும். இவ்வறத்துக்குத் துணைபுரியாத மக்கள் கூட்டம் பெருகுவதால் உலகம் இனிமை பெறாது இடர்ப்படும்.

இனிமை இன்னாமை

இப்பெரிய உலகில் ஒரு சிலர் அறிவுடைமையால் மன்னுயிர்க்கெல்லாம் இனிமையும் ஒரு சிலர் அறியாமையால் அவ்வுயிர்க்கெல்லாம் இன்னாமையும் எங்ஙனம் உண்டாகும்? இஃது உன்னற்பாலது ; பெரிதும் உன்னற்பாலது.

பெரும் பெரும் பதவி ஏற்போர் ஒரு சிலரே. எவ்வித ஆட்சியிலும் ஒரு சிலரே அதிகாரத்தில் வீற்றிருப்பர். ஒருவர் வழி உலகம் நடத்தலும் உண்டு. இவ்வொரு சிலரோ ஒருவரோ நற்குணமும் நற்செயலும் விரவாத அறிவுடையராயின் அவரால் மன்னுயிரெல்லாம் துன்பமுறும். ஆகவே நற்குணமும் நற்செயலும் பூத்த அறிவுடைமையே மன்னுயிர்க்கு இன்பம் பயப்பதாகும்.

தாய் தந்தையர் தம்மினும் தம் மக்களை அறிவுடையவராகச் செய்வது, மாநிலத்து மன்னுயிர்க்கு இனிமை செய்வதாகும். (கo)

# அ. அன்புடைமை

அன்பு + உடைமை = அன்புடைமை. அன்பைப் பற்றிப் பேசாத அறிஞரில்லை. அன்பில்லையேல் உலகேது? உயிரேது? இரண்டுக்கும் உள்ள தொடர்பேது? அண்ட பிண்ட சராசரங்க ளெல்லாவற்றையுங் கட்டியாள்வது அன்பே. அன்பே கடவுள்; கடவுளே அன்பு.

## அன்பின் தன்மை

அன்பு எத்தகையது? அது காணக் கூடியதன்று; நிகழ்ச்சி வாயிலாக உணரக் கூடியது. அன்பு, தாய் தந்தையர் - தலைவன் தலைவி - பிள்ளை - சுற்றத்தார் முதலியோர் வாயிலாக, உறவு - காதல் - நட்பு முதலியவாற்றான் தன்னை உணர்த்தி வருவது. இவ்வாற்றான் முழு அன்புநிலை எய்துவது கடவுட்பே றெய்துவதாகும். அன்பைப் பற்றிய சான்றவர் உரைகள் பலவுண்டு. அவைகளில் இரண்டொன்று வருமாறு:—

"* * * அது குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும்போல, 'இது காண் அன்பு' என்று தந்து காட்டலாகாது. அன்புடையரான குணங்கண்ட விடத்து 'ஈண்டு அன்புண்டு' என்று அனுமிக்கற்பாற்று"—நக்கீரர் (இறையனாரகப் பொருளுரை: க.)

"அன்பென்பது அருட்கு முதலாகி மனத்தில் நிகழும் நேயம்; அஃதுடையார்க்குப் பிறர்கட் டுன்பங் கண்டவழிக் கண்ணீர் விழுமாதலின் அவ்வருளானே அன்புடைமை விளங்கு மென்பது"—பேராசிரியர் (தொல் - பொருள் மெய்ப்பாட்டியல்: கஉ: உரை.)

உடைமை - உடைத்தாதல்; உடையராந் தன்மை; செல்வமுமாம்.

அன்புடைமை - அன்புடைத்தாதல், அன்புடையராந் தன்மை; அன்புச் செல்வமுமாம்.

## தொடர்பு

"அன்புடைமை" என்னும் இவ்வதிகாரம் "மக்கட் பேறு" என்னும் அதிகாரத்தைத் தொடர்ந்து நிற்கிறது. இத்தொடர்பு உன்னற்பாலது.

திருவள்ளுவர் அறத்தையும், அதனை யொட்டிப் பொருளையும் இன்பத்தையும் அறிவுறுத்தப் போந்தவர். "மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறம்" என்று அவரே அருளியுள்ளனர். மனமாசுக ளாவன அழுக்காறு அவா வெகுளி முதலியன. இவைகட்கெல்லாம் மூலம் தன்னலம். தன்னலம் அழிந்தால் மனமாசுகள் தாமே அகலும். தன்னல அழிவுக்குத் தியாகம் வேண்டும். தியாகத்துக்கு அன்பு வேண்டும்.

மக்கட்பேற்றில் தியாகமிருத்தல் வெள்ளிடைமலை. தமது நலனுக்கென்று வாழ்வு நடாத்திய தாய் தந்தையர் பிள்ளை பெற்ற பின்னர்த் தமது நலன்களை யெல்லாம் பிள்ளைக்கென்றே அர்ப்பணஞ் செய்கின்றனர். மக்களை ஈன்ற தாய் தந்தையர் தியாக மூர்த்திகளாகின்றனர்.

தியாகம் அன்பின்றி நிகழாது. அன்புள்ள இடத்தி லேயே தியாகம் நிகழும்.

தாய் தந்தையரின் அன்புக் காதலே பிள்ளையாகப் பிறக்கிறது. மக்கட்பேறு அன்பை அடிப்படையாகக் கொண்டுள்ளமையானும், அப்பேற்றினின்றும் தாய் தந்தையர் அன்புடையராய்த் தியாகத்தில் தலைப்படுதலானும் "மக்கட் பேற்றுக்"குப் பின்னை "அன்புடைமை" வைக்கப்பட்டது.

## உள்ளுறையும் அமைவும்

இவ்வதிகாரத்தின் பொருண்மை நான்கு பகுதிகளை யுடையது. க. அன்பின் இயல். உ. பிறவிப் பயன் அன்

புடைமையில் உண்மை. ௩. இல்வாழ்க்கையில் அன்பெழு
லும் விளைதலும். ௪. அன்பின்மையின் கொடுமை.

அன்புண்மை பருமையாகக் காணக் கூடியதன்று. அது நெகிழ்ச்சியின் நிகழ்ச்சியால் உணருந் தன்மையது. அன்பை உணர்த்தும் வாயில்கள் சில உண்டு. அவைகளுள் சிறந் ஒன்று கண் - கண்ணீர். அன்பு நெகிழ்ச்சியால் விளை தென்னை? பிறர்க்குதவல் நிகழும். உதவி என்பையும் திய கஞ் செய்யும்வரைச் செல்லும். இத்துணைச் சிறப்புடை அன்புப் பெருக்கத்துக் கென்று மனித உடல் வழங்கப்ப கிறது. அன்புப் பெருக்குக்குக் களனாகாத உடல் உயிரற்றது தோலின் பாவை. அது வற்றல் மரமாகும். அன்பு ஊற்றை திறக்க வல்லது இல்வாழ்க்கை. அதினின்றும் அன்பு, நட் முதலியனவாகப் பெருக்கெடுக்கும். அன்பு அறவழியிலும் பெருகும்; மறவழியிலும் பெருகும். அன்பெழாத உயி உயிரன்று. அதை அறம் காயும். உயிருக்கு உயிர் அன்பு அன்பேயாகும்.

முதலிரண்டு பாக்களிலும் அன்பின் இயலும், மூன்ற முதல் ஆறுவரைப் பிறவிப் பயன் அன்புடைமையி லுண்மை யும், ஏழு எட்டு ஒன்பதில் இல்வாழ்க்கையில் அன்பெழு லும் விளைதலும், பத்தில் அன்பின்மையின் கொடுமையு உரைக்கப்பட்டுள்ளன.

(i) அன்பின் இயல்

## 71

*அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்*
*புன்கணீர் பூசல் தரும்.*

பொருள்

அன்பிற்கும் - அன்பினுக்கும், அடைக்குந் தாழ் - (தன்னை) அடைக்குந் தாள், உண்டோ - உளதோ, ஆர்வலர் -

அன்புடையார், புன்கண்நீர் - சிறிய கண்ணீர், பூசல்தரும் - ஆரவாரத்தை உண்டாக்கும்.

## கருத்து

அன்பைத் தடுத்தல் இயலாது. அது கண்ணீர் வாயிலாகத் தன்னை வெளிப்படுத்தும்.

## விருத்தி

'அன்பினை அடைக்குந் தாழும் உளதோ? அன்புடையார்மாட்டு உளதாகிய புல்லிய கண்ணின் நீர் தானே ஆரவாரத்தைத் தரும்'—மணக்குடவர்.

'அன்பிற்கும் (பிறரறியாமல்) அடைத்து வைக்கும் தாழுளதோ? (தம்மாலன்பு செய்யப்பட்டாரது துன்பங் கண்டுழி) அன்புடையார் கண்பொழிகின்ற புல்லிய கண்ணீரே (உள்நின்ற அன்பினை யெல்லாரும் அறியத்) தூற்றும் (ஆதலான்)'—பரிமேலழகர்.

இவ்விரண்டுரையினும் உள்ள ஒற்றுமை வேற்றுமை சிந்திக்கற்பாலன.

'அன்பு காட்சியளவைக்கு எய்தாததாயினும் அனுமான அளவையான் வெளிப்படும் என்பதாம். இதனான் அன்பினது உண்மை உணர்த்தப்பட்டது' என வரூஉம் பரிமேலழகர் குறிப்புரையை நோக்குக.

இப்பாட்டு அன்பின் உண்மையை அறிவுறுத்துவது. இதற்கு இரண்டு குறிப்பு உள்ளன. ஒன்று அன்பின் உண்மை உள் நெகிழ்ச்சியால் உணரத் தக்கதென்பது; இன்னொன்று அன்பின் உண்மை அனுமானத்தால் தெளியத் தக்க தென்பது. முன்னையது, "அன்பிற்கும் உண்டோ அடைக்குந் தாழ்" என்பதாலும், பின்னையது, "ஆர்வலர் புன்கணீர் பூசல்தரும்" என்பதாலும் விளங்குதல் காண்க.

40

**அன்பிற்கும் அடைக்குந்தாழ் உண்டோ ?**

அன்பிற்கும் - அன்பினுக்கும் ; அன்பினை என்றனர் மணக்குடவர்.

உம்மை : சிறப்பு ; உம்மையைத் தாழுடன் சேர்த்தனர் மணக்குடவர்.

அடைக்கும் - மூடும் ; தடுக்கும்.

தாழ் - தாள், தாழ்ப்பாள், தாழ்க்கோல், தாழக்கோல் ; கதவு (ஆகுபெயர்.)

உண்டோ - உளதோ ; இல்லையென்றபடி.

ஓ : எதிர்மறை.

## அன்பிற்கும்

ஏரி வெள்ளம் பெருகி வருகிறது ; ஆற்று வெள்ளம் பெருக்கெடுத்து வருகிறது ; கடலும் கரைகடந்து பொங்கி வெள்ளமெடுத்து வருவதாக வைத்துக் கொள்வோம். இவ் வெள்ளங்களை யெல்லாம் அடைத்துத் தடுத்தல்கூடும். ஆனால் அன்பு வெள்ளத்தையோ அடைத்துத் தடுத்தல் இயலாது. என்னை ? ஏரி வெள்ளமும் ஆற்று வெள்ளமும் கடல் வெள்ளமும் எல்லையுடையன. அன்பு வெள்ளம் எல்லையற்றது. எல்லையற்றதை எப்படி அடைப்பது ? எப்படித் தடுப்பது ?

‘ அன்பு சிறிய மனத்தினின்றும் பிறப்பது. சிறிய மனத்தினின்றும் பிறக்கும் அன்பு வெள்ளமா, ஏரி - ஆறு - கடல் - வெள்ளங்களினும் பெரியது ? எல்லை கடந்தது ?’ என்று சிலர்க்கு வியப்புண்டாகும்.

## அன்பின் பிறப்பிடம்

அன்பின் பிறப்பிடத்தை ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். அன்பின் பிறப்பிடம் மேல்நோக்கு ஆராய்ச்சியால் மனம் என்று விளங்கும் ; ஆழ்ந்த ஆராய்ச்சியால் அறிவு

என்று விளங்கும். இரண்டையும் சீர்தூக்கிப் பார்த்தால் அறிவினின்றும் அன்பு பிறந்து மனத்தில் சுரந்து தேங்கிப் பெருகுதல் விளங்கும்.

## மனம்

முதலாவது மனத்தை எடுத்துக் கொள்வோம். மனத்தைச் சிறிய உடலினுள்ள ஒரு குறுங்கரணம் என்று கருதலாகாது. மனம் உடலைக் கடந்துஞ் செல்லுந் தன்மையது. மனத்தின் எல்லையைச் சிறிது சிந்திப்போம். மனம் கங்கை செல்கிறது; ஹோயாங்கோ - யாங்டிஸ்கியாங் செல்கிறது; வால்கா செல்கிறது; மெஸோரி - மெஸிஸிபி செல்கிறது; டான்யூப் செல்கிறது; தேம்ஸ் செல்கிறது; நைல் செல்கிறது; திங்களில் செல்கிறது; ஞாயிற்றில் செல்கிறது; நிபுலாவில் செல்கிறது; இறையிடம் செல்கிறது. இவ்வாறு செல்லும் மனத்தின் எல்லையை என்னென்று கூறுவது? இம்மனமா குறுங்கரணம்! சிறிய உடலிலிருப்பது!

## அறிவு

மனத்தின் எல்லை இத்தகையதாயின் அறிவின் எல்லை எத்தகையதா யிருக்கும்? ஓர்க.

'அறிவின் பிறப்பிடம் சிறிய மூளைதானே; அதுவா மனத்தினும் பெரியது?' என்று சிலராதல் நினைத்தல்கூடும். மனம் ஓரிடத்திலிருந்து பாய்ந்து பாய்ந்து பரந்து செல்வது. அறிவோ யாண்டும் என்றும் நீக்கமற நிற்பது. அறிவு மனத்தையுங் கடந்து நிற்பது. அறிவை நோக்க மனம் சிறியது.

அறிவு யாண்டும் இருக்கிறது. அஃது எப்படி யாண்டும் இருக்கிறது? விளக்கமின்றி இருக்கிறது. அதை ஓரளவில் விளக்குங் கருவி உடல் (மூளை). மின்சாரம் யாண்டும் இருப்

பினும் அது குறிப்பிட்ட ஓரிடத்திலேயே விளங்கிக் காட்டு தல் ஈண்டுக் கருதற்பாலது.

## அறியாமை

யாண்டுமுள்ள அறிவு விளக்கம்பெறும விருத்தற்குக் காரணமென்னை? அதை அறியாமை மறைத்திருப்பதே யாகும். யாண்டுமுள்ள அறிவை, மறைத்துள்ள அறியா மையை நீக்கவே அறியாமையில்லா அறிவாகிய இறை உயி ருக்கு அழகிய உடலைத் தருகிறது. உடல் மாயா காரியத் தத்துவங்களால் ஆக்கப்பட்டது. அத்தத்துவங்களில் இங்கே கொள்ளற்பாலன இரண்டு. ஒன்று மனம்; மற்றொன்று புருடன். இவைகள், "சுவை ஒளி......" என்னுங் குறளின் விருத்தியில் சிறிது விளக்கப்பட்டன.

உயிர், கலா தத்துவக் கூட்டுறவு பெற்றதும் புருடனாத லைத் தத்துவ நூல்கள் அறிவிக்கின்றன.

உயிர் புருடனாகுங்கால் அறியாமை சிறிது நீங்கப் பெற்று அவ்வளவில் அறிவு விளக்கம் பெறுகிறது. உடல் தாங்கிச் சிறிது அறிவு விளங்கப்பெற்ற உயிர், மேலும் மேலும் முயன்றால் முழு அறியாமை நீங்கப்பெற்று முழு அறிவு மயமாக விளங்கும்.

## அறிவு - மூளை - மனம்

உயிர் புருடனாகி நிற்குங்கால் அறிவு மூளையை நிலைக் களனாக்கொண்டு மனத்தின் வாயிலாக வினையாற்றும். அறி வுக்கும் மனத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு. (அறி வுக்கு மூளை முதற்போர்வை; இரண்டாம் போர்வை மனம்; மூன்றாம் போர்வை உடல்)

## அறிவும் அன்பும்

அறிவின் குணம் அன்பு. அறிவு குணி; அன்பு குணம். குணியுள்ள இடத்தில் குணமும் இருத்தல் இயல்பு. அறிவு

யாண்டும் இருப்பதைப்போல அன்பும் யாண்டும் இருக்கிறது. அறிவு எவ்வெவ்வளவில் விளக்க முறுகிறதோ அவ்வவ்வள வில் அன்பும் விளங்கி எழும். அறிவினின்றும் விளங்கி எழும் அன்பு, மனத்தின் வழியே சுரந்து தேங்கிப் பெருகும். (முழு அறிவு விளக்கத்தில் எக்கருவி கரணமும் நிலவா. எல்லாம் ஒடுங்கிப் போகும். அந்நிலையில் எல்லாம் அறிவு - அன்பு - மயமாகும்.)

அறிவினின்றும் தோன்றி மனத்தின் வாயிலாகச் சுரப் பெடுத்துத் தேங்கிப் பெருகும் அன்பு பிறக்குமிடம் மனம் என்று பருமையில் கூறுவது உலக வழக்கு.

## அடைக்குந் தாழ்

ஒரு பெரிய ஏரியில் வெள்ளம் பெருகிநிற்கிறது. ஒரு மூலையில் கரையுடைந்து வெள்ளம் வெளி வருமானால், அஃது எவ்வளவு வேகமாக ஓடிவரும்? அதேபோல மனத்தில் தேங்கும் அன்பு, வெள்ளமெடுத்தால் மிக விரைந்து வெளி வருமன்றோ? நீர் வெள்ளம் விரைந்து இரைந்து ஓடிவரும் வழியை அடைத்தல் இயலும். அன்பு வெள்ளத்தை அடைத்தல் இயலாது. இதுபற்றியே "அன்பிற்கும் உண்டோ அடைக்குந் தாழ்" என்றார்.

ஆசிரியர் எண்ணம் தாழ்மீது சென்றதென்னை? என்ன ஊகிக்கலாம்?

ஏரியில் நீர் பெருக்கெடுக்கிறது; வெள்ளக்காடாகிறது; மதகைக் கடக்கப் புகுகிறது. அந்நிலையில் உழவர் என் செய்வர்? பலகை கொண்டு மதகை அடைப்பர். இக்காட்சி ஆசிரியர் நெஞ்சில் படிந்திருக்கும்.

## உண்டோ

மனத்திலே அன்புவெள்ளம் பெருகிப் பொங்கியோடிய போது அதை அடைக்க ஆசிரியர் நெஞ்சம் தாழைத் தேடி

யிருக்கும். அன்பு வெள்ளத்தை அடைக்கவல்ல தாழ் கிடைக்கவில்லை. நெஞ்சம், 'அன்பை அடைக்குந் தாழ் உண்டோ உண்டோ' என்று அறைகூவி யிருக்கலாம். அவ்வறை கூவல் "அன்பிற்கும் உண்டோ அடைக்குந் தாழ்" என்ற பாட்டுருவம் பெற்றதென்று ஊகிக்கலாம்.

தாழ் என்னுஞ் சொல் முன்னாளில் மதகை அடைக்கும் பலகைக்கு அதாவது கதவுக்கு வழங்கப்பட்டு வந்தமை ஈண்டுக் குறிக்கத்தக்கது. தாழைக் கதவாகக்கொள்ளாது, தாழ்ப்பாள் என்றே கொள்ளின், கதவால் மூடித் தாழ்ப்பாளிடல் என்று கொள்ளலாம்.

அன்பிற்கும் உண்டோ? எது? அடைக்குந் தாழ். உம் மிலும் ஓவிலும் உள்ள ஒலிப்பொருளை ஓர்க; ஓர்ந்தால் அன்பை அடைக்கவல்லது ஒன்றுமே யில்லை என்று அறுதியிடும் ஒலி செவிப்புலனுக்கு விருந்தாதலை உணரலாம்.

## ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்

ஆர்வலர் - அன்பர்; அன்புடையார்.

புன்கண் - புல்லிய கண், சிறிய கண்; துன்பம் வருத்தமுமாம்; "புன்கண் யானையொடு—" ஐங்குறுநூறு ௩௯ : ௬. "நயந்தோர் புன்கண் தீர்க்கும் - பயந்தலைப் படாஅப் பண்பினை எனினே"—குறுந்தொகை : ௩௪௨ ௬ - ௭.

பூசல் - ஆரவாரம்; "தினைவிளை சாரல் கிளிகடி பூசல்"—மதுரைக்காஞ்சி : 291.

## ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்

அன்பை அடைக்குந் தாழ் இல்லையெனில் அது விரைந்து வெளிவருதல் வேண்டுமன்றோ? எவ்வழியில்

வெளிவருகிறது? கண்ணீர் வழியாக வெளிவருகிறது. 'கண்ணீர்' வழி என்கிறார் ஆசிரியர்.

## எவர் கண்ணீர் வழி

அன்பு பிறக்குமிடம் அறிவு. அன்பு சுரந்து தேங்கிப் பெருகுமிடம் மனம். தான் சுரந்து தேங்கிப் பெருகும் மனமுடையாரின் அறிவினின்றுமே அன்பு பிறக்கும். அம்மனமில்லாதாரின் அறிவினின்றும் அன்பு எளிதில் பிறவாது. மனத்துக்கும் அறிவுக்குமுள்ள தொடர்பை அநுபவத்தில் அறிதல் கூடும். இதற்கு எடுத்துக்காட்டுக்கள் வேண்டுவதில்லை.

அறிவினின்றும் அன்பு பிறத்தற்கென்று மூளையும் மனமும் உடலும் அளிக்கப்பட்டன. இதுபற்றிப் பின்னே விளக்கம் செய்யப்படும்.

அன்பு தான் பிறக்குமிடத்திலேயே தேங்கிப் பெருகுமாதலின், கண்ணீர் - புன்கண்ணீர் - என்னாது, "ஆர்வலர் புன்கணீர்" என்றார். ஆர்வலர் - அன்புடையவர். ஆர்வு - ஆர்வம் - உடையவர். ஆர்வம் அன்பின் எழுச்சி வேகத்தை உணர்த்துவது.

## புன்கணீர்

மனம் பெரியது. அதன்கண் சுரந்து தேங்கும் அன்பு, கண்ணீர் வழியே வெளிப்படுகிறது. கண் மனத்தை நோக்க மிகச் சிறியதாதலின், "புன்கண்" என்றார். பெரிய மனம் என்னுங் குறிப்புப் பாட்டில் இல்லை. அது பாட்டில் கரந்து விளங்குதலைப் "புன்கண்" உணர்த்துகிறது.

## துன்பம்

"புன்கண்" என்பதற்குப் புல்லிய - சிறிய - கண் என்று பொருள் கொள்ளாது, 'துன்பம்' என்றும் பொருள் கொள்ளலாம். ஆனால் இப்பொருள் ஈண்டு ஓரோ வழிக் கொள்ளற்பாலது.

துன்பங்கண்டவிடத்தில் மட்டும் அன்பு வெளிப்படுவதில்லை. இன்பங்கண்ட விடத்தும் அன்பு வெளிப்படுவதுண்டு. முன்னையது உலகில் பெரிதும் நிகழ்வது ; பின்னையது சிறிதே நிகழ்வது. பழைய உரை ஆசிரியர் சிலர் துன்பங்கண்டவிடத்து வெளிப்படுவது அன்பு என்று சொல்லிச் சென்றனர். அதையே பின் வந்தோரும் கடைப்பிடித் துரைக்கலாயினர். அவர்தங் கூற்றுக்குப் "புன்கண்" என்பதற்குத் 'துன்பம்' என்றொரு பொருளிருத்தலும் துணைபோய்க் கொண்டிருக்கிறது.

அன்பு, புன் கண்ணீர் வழி வெளிப்படுகிறது. அன்பு வெளிப்படுதலைக்கொண்டு அது சுரந்து தேங்குமிடமொன்றிருத்தல் வேண்டுமென்று தெளிதல் கூடுமன்றோ ? அஃது எது ? அதுவே மனம். "அடைக்குந் தாழ்" என்பதும், மனத்தில் அன்பு சுரந்து தேங்கிப் பெருகுதலை உணர்த்துவதென்க.

## பூசல் தரும்

"அடைக்குந் தாழ்" கிடைத்திருந்தால் "புன்கண்ணீர் பூசல் தரு"தற்கே இடம் நேர்ந்திராது.

மனத்தில் சுரந்து தேங்கும் அன்புப் பெருக்கை அடைக்குந் தாழில்லை. அதனால் அன்புப் பெருக்கு, கண்ணீர் வழி வெளிப்பட்டுப் பூசல் தருகிறது.

வெள்ளம் நிரம்பித் ததும்பி வழியும் ஒரு பெரிய ஏரியின் ஒரு பகுதி உடைப்பெடுத்துக் கொள்கிறது. உடைப்பெடுத்த இடம் மிகச் சிறியது ; குறுகியது. அச்சிறிய குறுகிய இடம் நோக்கியே வெள்ளம் பன்முகங்கொண்டு ஓடிவரும். பெரிய வெள்ளம் சிறிய குறுகியவிடத்தில் புகுந்தால் நீர்ப் பெருக்கு நெருக்குண்ணுமன்றோ ? நெருக்கால் நீர் புது சக்தி பெற்று வீறுகொண்டு நிலத்தைக் கிழித்து விரைந்தும்

இரைந்தும் ஆர்ப்பரித்தும் ஓடி வரும். அங்கே நிகழும் ஆர வாரத்தை என்னென்று சொல்வது? கரையுடைய ஒரு பெரிய ஏரியின் வெள்ளம், ஒரு சிறிய - குறுகிய உடைப்பின் வழித்திரும்பி ஓடி வரும்போது நிகழும் ஆரவாரமே இத் தகையதாயின், கரை கடந்த மனத்தில் சுரந்து தேங்கிப் பெருக்கெடுக்கும் அன்புநீர் புல்லிய கண்வழி ஓடிவரும்போது நிகழும் ஆரவாரத்தை எச்சொல்லால் சொல்லுதல் கூடும்? அதனை ஆசிரியர் நன்கு உணர்ந்து, " பூசல்தரும் " என்கிறார். "பூசல்" என்னுஞ் சொல்லின் பொருளில் அழுந்துக. அச்சோ! " ஆர்வலர் புன்கணீர் பூச "லிடுகிறது! " உலக மெல்லாம் ' ஆர்வலர் பெருகுதல் வேண்டும். அவர்தம் புன் கண்ணீர் பூசல்' தரல்வேண்டும் " என்பது ஆசிரியர் வேட்கை. அவ்வேட்கை அவர்தங் கண்ணில் ததும்பி இன்ப நீராகிப் பூசலிடுகிறது. அப்பூசலினின்றும் பிறந்த " பூசல் தரும் " என்பதில் எத்துணைப் பொருதலும் ஆரவாரமும் மலிகின்றன! நோக்குங்கள்.

அன்பு நீர் பெருகுகிறது; கண் வழியே ஓடி வருகிறது; விழுகிறது. எப்படி? மலை அருவிபோல் விழுகிறது. அந்த வீழ்ச்சிக்கு எந்த நீர் வீழ்ச்சியை ஒப்பிடுதல் இயலும்?

" அன்பிற்கும் அடைக்குந்தாழ் உண்டோ " என்று வினவி, ' ஆர்வலர் ' என்பதால் அன்புடைமையை நிறுவி, " புன்கணீர் பூசல்தரும் " என்று அன்பின் வெளிப்பாட்டை ஆசிரியர் விளக்கிய பெற்றிமையை உன்னிப் பார்க்க. இவ் வளவு விளக்கஞ்செய்த ஆசிரியர், அன்பு பிறக்குமிடத்தையும் சுரந்து தேங்குமிடத்தையும் வெளிப்படையாகக் குறிப் பிட்டாரில்லை. சிலவற்றை வெளிப்படையாகக் கூறாது விடுப் பது கவிகளின் இயல்பு. பாட்டைப் படிப்போரின் அறிவுக்கு இன்பவேலை கொடுக்க வேண்டுமென்பது கவிகளின் எண்ணம் போலும்! " அடைக்குந்தாழ் ", " ஆர்வலர் ", " புன்கணீர்

பூசல்"—இவைகள் அன்பின் பிறப்பிடத்தையும் சுரந்து தேங்குமிடத்தையும் உணருமாறு தூண்டுங் கருவிகளாக நிற்கின்றன.

ஆசிரியர் அன்பின் உண்மையையும் இயலையும் எவ்வெம் முறையில் நிறுவிக்காட்டுகின்றனர்! ஒரு குறள் வெண்பாட்டில் அன்புப் பெருக்கையும் அதன் உடைமையையும், அதன் வெளிப்பாட்டையும் ஆசிரியர் திறம்பட அருளியுள்ளதை உன்னிப் பார்க்க. (க)

## 72

*அன்பிலா ரெல்லாம் தமக்குரியர் அன்புடையார்*
*என்பும் உரியர் பிறர்க்கு.*

### பொருள்

அன்பிலார் - அன்பில்லாதவர், எல்லாம் தமக்கு உரியர் - எல்லாவற்றையும் தமக்கே உரியனவாகக் கொள்வர், அன்புடையார் - அன்புடையவர், என்பும் பிறர்க்கு உரியர் - தமது எலும்பையும் பிறர்க்கு உரியதாக்குவர்.

### கருத்து

அன்புடைமையாவது பிறர்க்கென்று வாழ்வது.

### விருத்தி

முன்னே அன்புண்மை வழி அன்பியல் நிறுவப்பட்டது. இங்கே அன்புடையார் இயல் விளக்கப்படுகிறது.

**அன்பிலார்...........பிறர்க்கு**

தமக்கு - தமக்கே: ஏகாரம் பிரிநிலை; தொக்கது.

என்பும் - எலும்பும்; ஆகுபெயராக் கொண்டு உடம்பையும் என்று பொருள் கூறலுமாம்.

எல்லாம் தமக்கு உரியர் - 'எல்லாப் பொருளையும் தமக்கு உரியராக உடையார்' என்று மணக்குடவரும், 'எல்லாப் பொருளானும் தமக்கே உரியர்' என்று பரிமேலழகரும் பொருள்கொண்டதைக் கூர்ந்து நோக்குக.

## அன்பிலார் எல்லாம் தமக்குரியர்

இப்பாட்டு அன்பியலை அன்பிலார் வழியும் அன்புடையார் வழியும் விளக்கா நிற்கிறது.

முதலில் அன்பிலார் இயல் கூறப் படுவதென்னை? இன்மையின் சிறுமையை யுணர்ந்தால் உண்மையின் பெருமை தானே விளங்குமாதலின் என்க.

## அன்பு வளர்தல்

அன்பு விளங்கி நிகழ்வது எங்கே? அறிவு விளக்கமுறும் இடத்தில் அன்பும் விளங்கி எழும். அறிவு எங்கணும் விளக்கம் பெறும்போது அன்பும் எங்கணும் விளங்கி நிகழும். இப்பெருநிலை கூடுதற்கு முன்னர்ச் சில படிகள் இயற்கையிலேயே அமைந்துள்ளன. அறிவுநிலை, மரம் செடி கொடி முதலிய இனங்களில் மிக மிகச் சிறுத்தும், புழு பாம்பு பல்லி முதலிய இனங்களில் இன்னுஞ் சிறிது பெருகியும், பறவை விலங்கு முதலிய இனங்களில் மேலும் சிறிது விரிந்தும், மக்களினத்தில் பகுத்துணர்வு விளக்கத்தால் மேலும் மேலும் படிப்படியே வளர்ந்து பெருகிக்கொண்டும் போகும் இயல்பினது. முன்னைய அஃறிணை உயிர்களிடைப் பகுத்துணருங் கருவி கரண அமைப்பின்மையால் அவைகட்கு முழு அறிவு விளக்கம் பெறும் வாய்ப்பு இல்லாமற் போகிறது. பின்னைய உயர்திணை உயிர்களிடைப் பகுத்துணர்தற்குத் துணைபுரியும் கருவி கரணங்களுண்மையால், முழு அறிவையும் விளங்கச் செய்து கொள்ளும் வாய்ப்பு அவைகட்குண்டு. வாய்ப்பைப் பயன் படுத்திக்கொள்ள

வேண்டுவது மக்கள் கடமை. வாய்த்த கருவிகரண அமைப்பைப் பயன்படுத்திக் கொள்ள முந்தாதார் விலங்கினுங் கொடியராய் வதிந்து பிறர்க்குத் தீங்கிழைப்பவராவர்.

உயிர்களின் அன்பு விளக்கம் அவைகளின் அறிவு விளக்கத்தையொட்டி நிகழ்வது. அஃறிணை உயிர்கட்கும் உயர்திணை உயிர்கட்கும் அறிவு விளக்கத்தில் வேற்றுமை இருத்தல் போல அன்பு விளக்கத்திலும் வேற்றுமையுண்டு. அஃறிணை உயிர்கள் தங்கள் குஞ்சுகளையும் குட்டிகளையும் மிக அன்பாக நேசிக்கும். எவ்வளவு காலம்? சில ஆண்டு கழிந்த பின்னர் அவைகட்குத் தங்கள் குஞ்சி குட்டி என்னும் நினைவும் இருப்பதில்லை. அவைகட்கு வாய்த்துள்ள கருவிகரண அமைப்பு அத்தகையது. மக்கட் பிறவி தாங்கினோர்க்குத் தம் சேய்களின் நினைவு எப்பொழுதும் உண்டு. சேய்களை மறப்பிக்கும் கருவிகரண அமைப்பு மக்கட்கில்லை. அஃறிணை உயிர்கள் தங்கள்பால் அன்பு வளரும் வாய்ப்பைப் பெறவில்லை. அவ்வாய்ப்பை உயர்திணை உயிர்கள் பெற்றுள்ளன.

## அன்பிலார்

எவ்வகை உயிர்க்கும் அன்பு சிறிது உண்டு. முற்றும் அன்பற்ற உயிர் இருத்தல் அரிது. அங்ஙனமாக ஆசிரியர் "அன்பிலார்" என்றதென்னை?

அன்பு வளரும் அமைப்பும் வாய்ப்பும் பெற்ற மக்களில் ஒரு கூட்டத்தார் அவைகளைப் பண்படுத்தி அன்பை வளர்க்க முனையாராயினர். அவர் அன்பு வளரும் அமைப்பும் வாய்ப்பும் பெறாத விலங்கினத்தினுங் கொடியராய்க் காலங் கழிப்பாராதலின், அவரை 'அன்பிலார்' என்று ஆசிரியர் கூறலாயினர். காட்டிலுள்ள விலங்குகளைக் காட்டினும், அன்பை வளர்க்கப் புகாத மனிதக் கூட்டம் நாடுகளில்

கொடுமை விளைத்து வருதல் கண்கூடு. காட்டிலுள்ள விலங்கு கட்குப் பகுத்தறிவின்மையால் அவைகள் ஓரளவில் கோடுமை புரியும். நாட்டில் அன்பு வளர்க்க முனையாத மனி தக் கூட்டத்துக்குப் பகுத்தறிவுண்மையால் இக்கூட்டம் அளவின்றிக் கோடுமை செய்யும். *இக்கூட்டத்தை அன்பில் லாதது என்று சொல்வது இழுக்காகாது.*

## எல்லாம் தமக்குரியர்

*அன்பிலார் எவர்? இதற்கு விடை ஆசிரியரே கூறு கிறார். "எல்லாம் தமக்குரியர்" என்பது ஆசிரியர் கூற்று. இக்கூற்றால் விளங்குவதென்ன? அன்பிலார் என்பவர் தமது நலங்கருதி வாழ்வோர் என்பது விளங்குகிறது. இதனால் அன்பின்மைக்கு அறிகுறி தன்னலம் என்பது தெளிவாதல் காண்க.*

*"தமக்கு" என்பது தன்னலத்தை உணர்த்தி நிற்பது. தன்னல அன்பு அன்பாகாது. அதனால் அஃது அன் பின்மை என்னப்பட்டது.*

## தன்னல் இயல்

*தன்னலம், அவா பொறாமை பகைமை போர் முதலிய வற்றை ஈன்ற வண்ணமிருப்பது. இது தன்னலத்தின் இயல். அவா பொறாமை முதலியன வாளா கிடக்குமோ? இவை எரி பகைகளைக் கிளப்பிக்கொண்டே இருக்கும்; உலகை அன்பில் வளரவிடா; உலகைப் பல வகையிலும் அலைத்துச் சகோதர நேயத்தைக் கெடுத்துக் கொண்டேயிருக்கும் என்று சுருங்கச் சொல்லலாம்.*

## ஆசை

*தன்னலப்பேய் ஆசையையே உருவாக்கொண்டது. அதன் ஆசைக்கோர் அளவில்லை. தன்னலப்பேய் - வீட்டை -*

தெருவை - ஊரை - நாட்டை - உலகை - மற்றமற்ற அண் டங்களை - பிறவற்றை - தனக்குரிமையாக்கவே எண்ணும்; எழும். ஆசிரியர் தன்னலப் பேயின் ஆசையின் அளவைக் கூறியுள்ள அருமைப் பாட்டை நோக்குக. அவர் அஃது என்றும் இஃது என்றும் தனித்தனி வகுத்துக் கூருது, "எல்லாம்" என்று அருளினர். "எல்லாம்" என்பதில் என்ன அடங்கா? அணு முதல் அண்டம் வரையுள்ளனவும், அவைகட்கு மேற்பட்டுள்ளனவும், பிறவும் அடங்கும். "எல் லாம்" என்பதில் அடங்காதது ஒன்றுமில்லை; உடல் முதலி யனவும் அடங்குமென்க.

## தன்னலப் பேயின் கோரம்

அன்பிலார் - தந்நலப் பேயர் - என்ன நினைக்கிறார்? என்ன செய்கிறார்? எல்லாம் - எல்லாம் - எல்லாம்-தமக்கே - தமக்கே - தமக்கே - உரியனவாதல் வேண்டும் என்று எண்ணு கிறார்; எண்ணி எண்ணி எழுகிறார். அவரிடம் எழும் கோரத் தைக் காணுங்கள். அவர் மனத்தில் எரி! நாவில் கனல்! கண்களில் பொறி! காதுகளில் புகை! மெய்யில் விதிர்ப்பு! மயிர்க்கால்களில் வெந்நீர்! என்னே தன்னலப் பேயின் கோரம்!

ஒவ்வொருவரும் அன்பில்லாத தந்நலப் பேயராயின் உலகநிலை என்னுகும்? ஓர்மின்! இந்நிலையை மாற்றவேண்டு மென்பது ஆசிரியர் உள்ளக்கிடக்கை. அவ்வுள்ளக்கிடக்கை இக்குறளாகி உலகுக்கு வழிகாட்டுகிறது.

## தனித்தனிக் கூட்டம்

"அன்பிலார்" மீது இன்னுஞ் சிறிது கருத்துச் செலுத்துவோம். ஈண்டு அன்பிலார் என்றது தனித்தனி மனிதரை மட்டுங் குறித்து நிற்கவில்லை; தனித்தனிக் கூட் டத்தாரையுங் குறிக்கொண்டு நிற்கிறது.

உலகில் சாதி மதம் நிறம் மொழி நாடு முதலிய பிரிவுகளிருக்கின்றன. இப்பிரிவுகளும் அன்பைக் குலைப்பதுண்டு. சிலர் தனி முறையில் அன்பிலராயிருப்பதில்லை; ஆனால் சாதி முதலியவற்றில் பற்றுக்கொண்டு தம்தம் சாதி முதலியவற்றில் மட்டும் அன்பு செலுத்திப் பிற சாதியார் முதலியவரிடை அன்பிலராய் வாழ்கின்றனர். இவரும் தன்னந்தனி முறையில் அன்பிலாரைப் போன்றவரேயாவர்.

ஒவ்வோர் இனத்தவரும் தமது நலங் கருதி வாழப் புகுந்தால் மன்பதையில் பகைமை மூண்டே தீரும். உலகில் சாதி - மத - நிற - மொழி - நாட்டுச் சண்டைகள் பெருகுவதன் மூலத்தை ஆராய்ந்து பார்த்தால் உண்மை விளங்கும்.

ஒரு சாதியார் தமது நலமே கருதி இன்புற விரும்பினால், அவர் மற்றவர்க்குத் தீங்கிழையாது இன்புறல் இயலாது. ஒரு மதத்தார் தமது நலமே கருதினால் அக்கருத்து மற்றவர்க்குத் தீங்கு செய்வதாகும். இவ்வாறே நிறம் மொழி நாடு முதலிய பிரிவுகளில் மட்டும் தனித்தனி அன்பு செலுத்துவதால் பகைமை வளர்ந்துகொண்டே போகும். ஆகவே தனித்தனி முறையிலும், சாதி முதலிய கண்டப்பட்ட முறையிலும் தன்னலங் கருதலாகாதென்பதும், கருதின் தீங்கே விளையுமென்பதும் உணரற்பாலன.

## அன்புடையார் * * * * உரியர்

இனி அன்புடையார் இயல்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். அன்புடையார் இயல், "அன்பிலார் எல்லாம் தமக்கு உரியர்" என்பதிலேயே அடங்கிக் கிடக்கிறது. அன்பிலார் எல்லாம் தம்முடையனவாகக் கொள்வோரெனில், அன்புடையார் எல்லாம் பிறருடையனவாகக் கொள்வோர் என்பது சொல்லாமலே விளங்கும். அன்புடையார் சிறப்பை இவ்வளவில் நிறுத்திக் கூற ஆசிரியர் விரும்பவில்லை. அவர்

தஞ் சிறப்பை இன்னும் வேறு முறையில் கூறி மகிழ வேண்டுமென்பது ஆசிரியர் கருத்துப் போலும்.

ஆசிரியர், "அன்புடையார் எல்லாம் பிறர்க்குரியர்" என்று கூறாது, "அன்புடையார் என்பும் பிறர்க்குரியர்" என்று அருளியுள்ளனர். இதன்கண்ணுள்ள பொருட் பொதிவை ஆராய்க.

## தற்கிழமை - பிறிதின் கிழமை

பொருள்களை ஈரினமாகப் பிரிக்கலாம். ஒன்று - உடல், அதன் உறுப்புக்கள், இன்னபிற சேர்ந்தது; இன்னொன்று - இவைகளுக்கு வேறாகவுள்ள பொன், பொருள், வீடு, காணி, இன்ன பிற சேர்ந்தது. முன்னையது 'தற்கிழமை' என்னப் படும்; பின்னையது 'பிறிதின்கிழமை' என்னப்படும்.

இங்கே "அன்பிலார்" எங்ஙனஞ் சொல்லப்பட்டிருக் கிறார்? "எல்லாம் தமக்குரியர்" என்று சொல்லப்பட்டிருக் கிறார். "எல்லாம்" என்பதில் பிறிதின்கிழமைப் பொருளும் தற்கிழமைப்பொருளும் அடங்கும். தமக்கு வேறாக உள்ள பொன், பொருள், வீடு, காணி முதலியவற்றைத் தமக்குரி யன என்று கருதுவோர், தம்முடன் பிரியாதுள்ள உடல் முதலியவற்றைப் பிறர்க்குரியன என்று கருதுவரோ? இதற்கு விரிவுரையும் வேண்டுமோ?

## பிறர்க்குரிமை

"அன்புடையார்" ஈண்டு எவ்வாறு சொல்லப்பட்டிருக் கிறார்? "என்பும் பிறர்க்குரியர்" என்று சொல்லப்பட்டிருக் கிறார். தம்மினின்றும் பிரிந்து வேறாக நில்லாத தமது என் பும் பிறர்க்குரியது என்று கருதுவோர், தமக்கு வேறாக உள் ளனவற்றைத் தம்முடையனவாகக் கருதுவரோ? கருதார் என்பதை விளக்கவேண்டுவதில்லை.

**என்பீதலின் நுட்பம்**

என்பைப் பிறர்க்குரியதாக்குவதென்பது உயிரையே நல்குவதாகும். என்பின்றி உயிர் வாழ்தல் அரிதன்றோ? அன்புடையார், தம் உடல் பொருள் ஆவி மூன்றையும் பிறர்க்கு உதவுவோர் என்று கொள்க.

'என்பும் பிறர்க்குரியர்' என்பதில் மற்றுமொரு சிறப் புண்டு. அஃதென்னை? உயிரைக் கொடுத்தலால் விளையும் துன்பம் நீண்டநேரம் நிலைத்திருப்பதில்லை. என்பைக் கொடுப்பதால் விளையுந் துன்பம் உடனே நீங்காது பெருகித் துயர் விளைக்கும். மற்றவர்க்கு நலஞ்செய்வதில் தாம் துன்ப மேற்பதையும் "என்பும் பிறர்க்குரியர்" என்பது உணர்த்தி நிற்கிறது.

"அன்புடையார் எல்லாம் பிறர்க்குரியர்" என்று பொதுப் படக்கூறாது, "அன்புடையார் என்பும் பிறர்க்குரியர்" என்று அருளியதில் விழுப்பமிருத்தலைக் கூர்ந்து நோக்குக.

அன்பில்லாதார் தம் பொருட்டு வாழ்வோர்; அன்புடை யார் பிறர் பொருட்டு வாழ்வோர்.

அன்புடையார் தமது என்பையும் பிறர்பொருட்டாக்கி உயிர்துறந்த கதைகள் பல உண்டு. ததீசி, சிபி, கிறிஸ்து, மெய்ப்பொருள் நாயனார் முதலியோர் வரலாறுகள் இங்கே குறிக்கத்தக்கன. (உ)

(ii) பிறவிப்பயன் அன்புடைமையிலுண்மை

**73**

அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

பொருள்

ஆருயிர்க்கு - அரிய மக்களுயிர்க்கு, என்போடு இயைந்த தொடர்பு - உடலோடு பொருந்திய தொடர்பை, அன்போடு

இயைந்த வழக்கு என்ப - அன்போடு பொருந்திய நெறி என்பர்.

### கருத்து

உயிர் உடல் தாங்குதல் என்பது அன்பு நெறியில் நிற்பது என்க.

### விருத்தி

சமயம் நேர்ந்துழி அன்புடையார் தமது என்பையும் பிறர்க்குதவுவர் என்னுங் கருத்து, சென்ற பாட்டில் விளங்குகிறது. இப்பாட்டில் அவ்வுதவுதலுக்குரிய நெறியும் நெறிக்குரிய கருவியும் விளங்குகின்றன.

'முற்பிறப்பின்கண் அன்போடு பொருந்தச் சென்ற செலவென்று சொல்லுவர்; பெறுதற்கரிய உயிர்க்கு இப்பிறப்பின்கண் உடம்போடு இடைவிடாத நட்பினை'—மணக்குடவர்.

**ஆருயிர்க்கு....என்ப**

ஆர் - அரிய, அருமையான; 'பெறுதற்கரிய' என்றனர் மணக்குடவரும், பரிமேலழகரும்; நுகரும் எனினுமாம். "துன்னிநங் காதலர் துறந்தேகும் ஆரிடை." (ஆரிடை - அரிய வழி); "வாள்வென்று வருபவர் வனப்பார விடுவதோ" (ஆர - நுகர)—கலித்தொகை : ௧௬ : ௬; ௩௧ : ௧௪.

உயிர்க்கு - உயிர்கட்கு; இங்கே மக்களுயிர்க்கு.

என்போடு - எலும்புடன், உடலோடு, பருஉடலோடு (ஆகுபெயர்).

என்போடு இயைந்த - எலும்போடு பொருந்திய, உடலோடு உண்டாகிய, உடல் தாங்கிய.

தொடர்பு - தொடர்பை, தொடர்ச்சியை, சம்பந்தத்தை, நட்பை.

வழக்கு - நெறி என்றனர் பரிமேலழகர்; முறைமையுமாம்.

என்ப - என்பர் அறிஞர்.

## ஆருயிர்க்கு என்போடியைந்த தொடர்பு

ஆர் உயிர் - அருமையான உயிர்; உயிரின் அருமைப்பாடு யாது? நிலைபேறான இன்பம் நுகரும் வாய்ப்பைப் பெற்றுள்ளமை. "ஆர்" என்பதற்கு நுகரும் என்று ஒரு பொருளிருத்தலுங் கருதற்பாலது.

உயிர் தாங்கும் பிறவிகளுள் நிலைபேறான இன்பம் நுகர்தற்குரியது மக்கட் பிறவியாதலின், "ஆருயிர்க்கு" என்பதற்கு, 'மக்களுயிர்க்கு' என்று பொருள் கூறப்பட்டது. 'பிறப்பினது அருமை பிறந்த உயிரின்மேல் ஏற்றப்பட்டது' என்பது பரிமேலழகர் குறிப்பு.

### என்போடியைதல்

"என்போடு" என்பது பருவுடலை உணர்த்துவது. என்னை? என்பு பருவுடலுக்கே அமைதலின். பருவுடலில் மற்ற இரண்டு உடலும் இருத்தல் இயல்பு.

"ஆருயிர்க்கு என்போடியைந்த தொடர்பு" என்பதை உற்றுநோக்கினால், ஆருயிர்க்கு என்போடியையாத நிலையுமிருத்தல் பெறப்படும். அஃது எது?

உயிருக்கு உடலுற்ற நிலையும் உண்டு; உடலற்ற நிலையும் உண்டு. உடலுற்ற நிலை உயிர் என்போடியைந்து நிற்பது; உடலற்றநிலை உயிர் என்போடியையாது கிடப்பது.

உயிர் என்போடியையாத நிலை இருவகை. ஒன்று கட்டுற்றது, அதாவது இருளில் கிடப்பது; மற்றொன்று கட்டற்றது, அதாவது விடுதலை பெறுகை. இவ்விரண்டிற்கும் இடையில் நிற்பது, உயிர் என்போடியைந்த நிலை. உயிர் கட்டுற்ற - என்போடியையாத - நிலையினின்றும், என்போ

டியைந்த நிலைபெற்று அதாவது உடல் தாங்கி, கட்டற்ற - என்போடியையாத - நிலையெய்தல் வேண்டும். இதுபற்றிய குறிப்புக்கள் பாயிர விரிவுரையில் பல விடங்களில் பொறிக்கப்பட் டுள்ளன.

உடலின்றி இருளில் கிடந்த ஆருயிர் ஆண்டவனருளால் என்போடியைந்த உடல் பெறுகிறது. இவ்வுடல் எற்றுக்கு ? விடுதலைக்குத் துணைபுரிதற்கென்க.

## அன்போடியைந்த வழக்கென்ப

விடுதலைக்குரிய வழி என்னை ? "அன்போடியைந்த வழக்கென்ப" எனவரூஉம் ஆசிரியர் மொழியில் வழி விளங்குதல் காண்க.

"ஆருயிர்க்கு என்போடியைந்த தொடர்பு, அன்போடியைந்த வழக்கு என்ப" என்பது ஆசிரியர் திருவாக்கு. இதில், ஆருயிர் என்போடியைவதன் நோக்கம் நன்கு ஒளிர்கிறது. ஆருயிர் என்போடியைவது அன்போடியைந்த நெறி நின்று ஒழுகுதற்கு என்னுங் கருத்து வெள்ளிடைமலையெனத் திகழ்கிறது.

ஆருயிர் அறியாமை இருட் கட்டினின்றும் விடுதலையடைந்து அறிவு ஒளியாதல் வேண்டும். உயிர், அறிவு ஒளியாதற்கு அன்பொழுக்கம் வேண்டும். அறியாமையை நீக்கும் ஆற்றல் அன்பொழுக்கத்துக்குண்டு. அறியாமையிற் கிடக்கும் ஆருயிர் எப்படி அன்பொழுக்கம் பூண்டு விடுதலை எய்தும் ? இதற்கு உடலென்னுங் கருவித்துணை தேவை. உடலற்ற நிலையில் அன்பொழுக்கம் நிகழாது. ஆகவே, அன்பொழுக்கத்துக்கு உடலின் கூட்டுறவு இன்றியமையாததாகிறது. இன்னோரன்ன கருத்துக்கள் பொதுள, ஆசிரியர், ஆருயிர் உடல் தாங்குதலை, "என்போடியைந்த தொடர்பு"

என்றும், அத்தொடர்பால் அன்பு நிகழ்தலை, "அன்போடியைந்த வழக்கு" என்றும் அருளியுள்ளதை நோக்குக.

## உடல் தாங்கல் அன்பொழுக்கத்துக்கு

ஆருயிர், 'என்போடியைவது அன்போடியைந்து ஒழுகுதற்கு' என்னுங் கருத்தை ஆசிரியர் வெளியிட்டுள்ள முறைமை உன்னத்தக்கது. ஆருயிர் என்போடியைவது ஒன்று; அதனால் அஃது அன்போடியைந்து ஒழுகுதல் இன்னொன்று. பாட்டைப் படிப்போர் உள்ளத்தில் இவ்விருமை தோன்றாத முறையில் ஆசிரியர் வாய்மை பிறந்துள்ளது. "ஆருயிர் என்போடியைந்த தொடர்பு அன்போடியைந்த வழக்கு". ஆருயிர் என்போடியைவதென்பது அஃது அன்போடியைவது. இங்கே இருமை தோன்றுகிறதா? ஆருயிர் என்போடியைதலும் அஃது அன்போடியைதலும் ஒன்றே என்பதன்றோ தோன்றுகிறது? அஃதே இஃது என்று கொள்ளும் முறையில் ஆசிரியர் அருளிய பெற்றிமையை யோர்க; ஓர்ந்தால் உயிர் உடல் தாங்குதல் அன்பொழுக்கத்தின் பொருட்டே என்பது உறுதிப்படும்.

## கூட்டுறவு

என்போடியைந்த உயிரெல்லாம் அன்போடியைந்து நின்று ஒழுகுகின்றனவா? என்று சிலர் கருதலாம். விதை எந்நோக்குடன் விதைக்கப்படுகிறது? விதை மரமாகி நல்ல கனிதரும் என்னும் நோக்குடன் அது விதைக்கப்படுகிறது. விதை நன்முறையில் முளை விடுதற்கும், வளர்ந்து மரமாகிக் கனி தருதற்கும் இயற்கைக் கூட்டுறவுகள் சில வேண்டப்படுகின்றன. அவை நீர் காற்று ஒளி முதலியன. சாக்கடை நீர் பாயுமிடத்தில் - காற்றும் ஒளியும் நன்கு படர இயலாதவிடத்தில் - மரம் நன்முறையில் வளருங்கொல்? அது தீங்கனியை உதவுங்கொல்?

என்போடியையும் உயிர் அன்போடியைதற்குச் சில இயற்கைக் கூட்டுறவுகள் வேண்டும். அவை எவை ? இல் வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு முதலியன. 'அன்புடைமை' என்னும் இவ்வதிகாரத்துக்கு முன்னுள்ள அதிகாரங்களை நோக்குக.

மக்கள் பிறவி தாங்குவோர் அன்பொழுக்கப் பேற்றிற்கு இல்வாழ்க்கையில் நின்று, வாழ்க்கைத் துணையுடன் கூடி வாழ்ந்து, மக்களைப் பெறும் இயற்கை அறத்தை மேற்கொள்ளல் வேண்டும்; இல்லையேல் மக்கட் பிறவி தாங்கியதன் பயனாகிய அன்போடியைந்து ஒழுகும் பேறு கிட்டாமற் போகும்.

அன்பொழுக்கத்துக்கென்று கிடைத்த என்பை-உடலை-அரிய பிறவியை - இயற்கை வாழ்வெனும் இல்வாழ்க்கையில் புகுத்திப் பண்படுத்தாது, வேறு செயற்கை வாழ்வில் புகுத்திப் பண்படுத்துவோர் பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து வருந்துவோராவர். இவரே இயற்கை இறையின் நோக்குக்கு மாறுபட்டு நடப்பவருமாவர். இவர் என்போடியைந்து நிற்றல் வெறும் போலியேயாகும். இவர் தம் நிலையைப் பின்னும் ஆசிரியர் விளக்கஞ் செய்துள்ளனர். (௩)

## 74

அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு.

பொருள்

அன்பின் வழியது - அன்பின் வழியதாகிய உடம்பே, உயிர்நிலை - உயிர் நிற்பதாகும், அஃது இலார்க்கு - அவ்வன்பு இல்லாதவர்க்கு, (உள்ளது) என்புதோல் போர்த்த உடம்பு-உள்ளது என்பும் தோலும் போர்த்த வெற்றுடம்பாகும்.

## கருத்து

அன்புள்ள உடலே உயிருடையது. அன்பில்லா உடல் உயிரற்ற பிணம் போன்றது.

## விருத்தி

கடந்த பாட்டு அன்பால் பிறர்க்குதவலுக்கென்று உயிர் உடல் தாங்குகிறதென்று சொல்வது. இப்பாட்டு அன்பில்லாத பிறவியால் உடல் தாங்கிய நோக்கம் நிறைவேறுவதில்லை என்றும், அவ்வுடல் உயிரற்றதென்றும் விளக்கஞ் செய்வது.

### பாடபேதமும் பிறவும்

இப்பாட்டில் பாடபேத மிருக்குமென்று தோன்றுகிறது. "அஃதிலார்க்கு" என்பது மணக்குடவரும் பரிமேலழகருங் கொண்ட பாடம். "அஃதில" என்றும், "அஃதிலார்" என்றுங் கொள்வோருளர்.

"அன்பின் வழியது உயிர்நிலை" என்பதற்கு, 'உயிர்க்கு நிலைபேறு அன்பின் வழியதாகிய அறத்தினான்வரும்.' என்று மணக்குடவரும், 'அன்பு முதலாக அதன்வழி நின்ற உடம்பே உயிர் நின்ற உடம்பாவது' என்று பரிமேலழகரும் உரை கண்டுள்ளனர்; 'உயிர் நிற்கும் உடல் அன்பு வழியில் நிற்பது' என்று பொருள் கூறுவோருமுளர். இப்பொருள்கள் யாவும் ஒரே கருத்துடையன.

"அஃதிலார்க்கு என்புதோல் போர்த்த உடம்பு"—இதற்கும் ஒரே கருத்தில் பலதிறப் பொருள்கள் சொல்லப்படுகின்றன.

'அவ்வன்பிலாதார்க்கு உளதாவது என்பின்மேல் தோலினால் போர்க்கப்பட்ட உடம்பு'—இது மணக்குடவர் உரை. 'அவ்வன்பில்லாதார்க்கு உளவான உடம்புகள்

என்பைத் தோலால் போர்த்தனவாம்; உயிர் நின்றன வாகா'— இது பரிமேலழகர் உரை.

'அவ் வன்பிலார்க்கு உடம்புகள் தோல் போர்த்த என்புக் கூடுகள்' என்று பொருள் விரிப்போரும் உளர்.

இவ்வுரைகளில் கொண்டு கூட்டல் மலிந்துள்ளமை நோக்கற்பாலது. நேர்முறையில் பொருள் காணப்புகுந்தால் எழுவாய் கிடைத்தலின் அருமைப்பாட்டை நோக்கி உரை ஆசிரியர்கள் கொண்டு கூட்டலில் நுழையலானார்கள். பரிமேலழகர் "போர்த்த" என்பதைப் பலவின்பால் வினைமுற்றாக் கொண்டு உடம்பை உடம்புகள் என்று பன்மையில் கூறினர். மற்றவர் போர்த்த என்பதைப் பெயரெச்சமாக் கொண்டு, 'தோல் போர்த்த உடம்பு என்பு' என்று பொருள்கூறு நிற்கின்றனர். இப்பொருள் கோளுக்கு என்பு, குறிப்பு வினைமுற்றாகிறது.

"அஃதிலார்க்குப்" பின்னர் 'உள்ளது' என்றொரு சொல் வருவித்தால் சிக்கலின்றிப் பொருள்படும். மணக்குடவர் உரையில் 'உள்ளதாவது' என்பது எழுவாயாக வருவிக்கப்பட்டதும் ஈண்டு உன்னற்பாலது. இயற்கைவழி நின்று பாட்டை உற்று நோக்கும்போது ஒரு சொல் வருவிக்க இடந்தருதல் புலனாகும்.

உள்ளது - உள்ள உடம்பு. அன்பிலார்க்கு உள்ளது (உள்ள உடம்பு) என்புதோல் போர்த்த உடம்பு.

## அன்பின்........உடம்பு

உயிர் நிலை - உயிர் நிற்பது; உடல். "ஆருயிர் என்போடியைந்த தொடர்பு" என்று மேற்போந்துள்ளமை காண்க.

## இருவகை உடல்

இப்பாட்டில் இருவகை உடம்பு சொல்லப்படுகின்றன. ஒன்று உயிர் நிற்கும் உடம்பு; மற்றொன்று உயிர் நில்லா உடம்பு. உயிர் நிற்கும் உடம்பை "உயிர் நிலை" என்றும், மற்றையதை வெறும் "உடம்பு" என்றும் ஆசிரியர் அருளி யுள்ளது சிந்தனைக்கு உரியது.

உயிர் நிற்கும் உடம்பு - உயிர் நில்லா உடம்பு என்னும் இரண்டில் பின்னையது ஐயப்பாட்டைத் தோற்றுவிக்கும். உயிர்நில்லா உடம்பு என்பது உயிர் நீங்கிய பிணத்தைக் குறிப்பதன்று; உயிருடன் கூடிய பிணத்தைக் குறிப்பது. நடைப்பிணம் என்னும் வழக்காற்றை நினைவூட்டிக் கொள்க.

இங்கே 'உயிருள்ள உடம்பு' என்றது எது? 'உயிரில்லா உடம்பு' என்றது எது? அன்புடையது உயிருள்ள உடம்பு; அன்பில்லாதது உயிரில்லா உடம்பு.

இங்கே உயிருண்மையும் உயிரின்மையும் முறையே அன்புண்மையையும் அன்பின்மையையும் உணர்த்துவன. அன்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பைச் சிந்தித்துப் பார்க்க.

"வருமுயி ரிரக்கம் பற்றியே யுலக
வழக்கிலென் மனஞ்சென்ற தோறும்
வெருவிநின் னடிக்கே விண்ணப்பித் திருந்தேன்
விண்ணப்பஞ் செய்கின்றே னின்றும்
உருவஎன் னுயிர்தா னுயிரிரக் கந்தான்
ஒன்றதே யிரண்டிலை யிரக்கம்
ஒருவிலென் னுயிரு மொருவுமென் னுள்ளத்
தொருவனே நின்பதத் தாணை"

"தலைவர்க ளெல்லாந் தனித்தனி வணங்குந்
தலைவனே யின்றுமென் னுளமும்
மலைவிலென் னறிவு நானுமிவ் வுலக
வழக்கிலே யுயிரிரக் கத்தால்

இலகுநின் றனம்நா னென்செய்வேன் இரக்கம்
என்னுயி ரென்னவே றிலேயே
நிலைபெறு மிரக்கம் நீங்கிலென் னுயிரும்
நீங்குநின் றிருவுள மறியும் ”

“ என்னையு மிரக்கந் தன்னையு மொன்ற
இருக்கவே யிசைவித்திவ் வுலகில்
மன்னிவாழ் வுறவே வருவித்த கருணை
வள்ளல்நீ நினக்கிது விடயம்
பன்னலென் னடியே னுயினும் பிள்ளைப்
பாங்கினு லுரைக்கின்றே னெந்தாய்
இன்னவா றெனநீ சொன்னவா றியற்று
திருந்தனோ ரிறையுமிங் கிலேயே ”

எனவரூஉம் இராமலிங்க சுவாமிகளின் உயிர் இரக்க - அன்புப் பாக்களை நோக்குக.

## அன்பு விளக்கம்

அன்பு, தனித்த உயிரிலும் விளங்குவதில்லை; தனித்த உடலிலும் விளங்குவதில்லை. அஃது உயிரும் உடலும் ஒன்றிய நிலையில் விளங்குவது. இது மேற்றிருக்குறளில் மிளிர்வது. விடுதலைக்கு வெறும் உயிர் - உடல் கூட்டுறவு மட்டும் போதாது. அக்கூட்டுறவால் அன்பு எழுந்து நிகழ்தல் வேண்டும். இல்லையேல் உயிருக்கு விடுதலை கிடையாது. உயிரும் உடலும் ஒன்றிய நிலைக்கு உயிர்ப்பு வழங்குவது அன்பு. இதுபற்றியே ஆசிரியர், “அன்பின் வழியது உயிர்நிலை” என்றனர். உயிரும் உடலும் ஒன்றிய நிலை, அன்பென்னும் உயிர்ப்பைப் பெறு தொழியின், அஃது உயிர்நிலை ஆகாது. அதை ஆசிரியர், “ என்புதோல் போர்த்த உடம்பு ” என்றனர். ஆசிரியர் முன்னையதை “ உயிர்நிலை ” என்றும், பின்னை

யதை "உடம்பு" என்றும் ஓதியதை ஓர்க. இதை வரும் பாட்டில் ஆசிரியர் இன்னும் விளக்கஞ் செய்துள்ளனர்.

உயிர் - உடல் - இவ்விரண்டுஞ் சேர்ந்த நிலையில் வினையும் அன்பு - ஆக மூன்றற்கும் உள்ள தொடர்பு பெரிதுங் கருதற்பாலது. அன்பு நிகழ்ச்சிக்கு உயிர்சேர்ந்த உடல் தேவை. இதனை, "அன்பினால் அடியேன் ஆவியோ டாக்கை ஆனந்த மாய்க்கசிந் துருக" என்று மாணிக்கவாசகனார் அருளிய அனுபவ மொழியால் தெளிக. (௪)

## 75

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு.

### பொருள்

யாக்கை - உடலின், அகத்து உறுப்பு - உள்ளுறுப்பாகிய மனத்தில், அன்பு இலவர்க்கு - அன்பு இல்லாதவர்க்கு, புறத்து உறுப்பு எல்லாம் - வெளியிலேயுள்ள உறுப்புக்களெல்லாம், எவன் செய்யும் - என்ன செய்யும் ?

### கருத்து

அகத்தில் அன்பில்லாவிடின் புறவுறுப்புக்களால் என்ன பயன் ?

### விருத்தி

மேற்பாட்டில் அன்பற்ற உடலின் இழிவு பேசப்பட்டது. இப்பாட்டில் அன்புற்ற உடல் உறுப்புக்களின் இழிவு பேசப்படுகிறது.

"யாக்கை அகத்துறுப்பு அன்பிலவர்க்கு"—இதற்கு மணக்குடவர் "உடம்பிற்கு அகத்துறுப்பாகிய அன்பிலார்க்கு" என்றும், பரிமேலழகர் 'யாக்கை அகத்தின்க

ணின்று இல்லறத்திற் குறுப்பாகிய அன்புடைய ரல்லா தார்க்கு' என்றும் பொருள் விரித்துள்ளனர்.

**யாக்கை........செய்யும்**

யாக்கை - உடல்; யா - கட்டு; நரம்பு, எலும்பு, நிணம், இரத்தம் முதலியவற்றால் கட்டப்பட்டது.

அகத்து உறுப்பு - உள்ளுறுப்பு, உள்ளேயுள்ள உறுப்பு, மனம்; 'அன்பு' என்று பழைய உரையாசிரியர் பொருள்கண்டனர்.

அகத்துறுப்பு அன்பு - அகத்துறுப்பில் (மனத்தில்) அன்பு. அகத்துறுப்பையே அன்பாகக் கொள்வோர் அகத்துறுப்பாகிய அன்பு என்று சொல்வர்.

யாக்கையின் அகத்துறுப்பு என்றும், யாக்கையின் புறத்துறுப்பெல்லாம் என்றுங் கொள்க.

## அகத்துறுப்பு - புறத்துறுப்புக்கள்

உடலுக்குப் புறம் அகம் என்றிரண்டு உண்டு. புறத்துக்குரிய உறுப்புக்களும் உண்டு; அகத்துக்குரிய உறுப்புக்களும் உண்டு. புற உறுப்புக்கள்: கண் காது மூக்கு கை கால் முதலியன; அக உறுப்புக்கள்: மனம் புத்தி சித்தம் அகங்காரம் முதலியன. இவைகளுள் சிறந்தது மனம். இது பற்றி 'அகத்துறுப்பு' என்பதற்கு மனம் என்று பொருள் கூறப்பட்டது.

## அகத்துறுப்பும் அன்பும்

உயிரும் உடலும் ஒன்றும் நிலையில் பலப்பல தத்துவங்கள் பரிணமிக்கின்றன. அவைகளுள் சிறந்த ஒன்று மனம். மனத்தினின்றும் தோற்றமுறும் கருவி கரணங்கள் பல. மனம் அகவுறுப்புக்களுள் மிகச்சிறந்த ஒன்று. புலன்களுக்கும் அறிவுக்கும் இடையில் நின்று உயிர்களை இயக்கும்

மாண்புடையது மனம். இவ்வதிகார முதற்பாட்டு விரிவுரையிலும், பிறவிடங்களிலும் மனத்தின் இயல் பேசப்பட்டிருக்கிறது. மனம் நுண்ணுடல் என்று கூறப்படுதலும் உண்டு. நுண்ணுடலின் தடிப்பே பருவுடல். பருவுடலின் உறுப்புக்களெல்லாம் மனத்தின் பரிணாமம் என்று தத்துவர் கூறுப. இத்துணைச் சிறப்புவாய்ந்த அகத்துறுப்பாகிய மனமே அன்பு தேங்குமிடம் என்பது ஈண்டுச் சிறப்பாகக் கருதத் தக்கது. அன்பு தேங்குமிடம் மனம் என்பதைப்பற்றி விரித்துரைக்க வேண்டுவதில்லை. 'அன்பகம்' 'ஈர நெஞ்சம்' முதலிய வழக்காறுகளே அன்பு தேங்குமிடம் மனம் என்பதை எளிதில் புலப்படுத்தும்.

"பெருகிய அன்பென வருநீர் நிறைந்த இதய வாவி......" என்பது பட்டினத்தடிகளின் திருவாக்கு. "அன்பகத் தில்லா உயிர் வாழ்க்கை..." என்று பின்வரும் பாடல் தொடங்கப்படுதல் காண்க.

## புறத்துறுப்பு

அன்பு தேங்குமிடமாகிய அகத்துறுப்பில் அன்பே அற்றுவிடுமாயின் அவ்வுறுப்பின் பரிணாமமாகிய புற உறுப்புக்களின் நிலை என்னாகும்?

மரத்துக்குப் பசுமை வழங்குவது எது? அதன் வேரிடைத் தேங்கும் நீர். அந்நீர் வற்றினால் வேர் உலர்ந்து போகுமன்றோ? வேர் உலர்ந்தால் மரம் என்ன பயன் தரும்? சந்து பொந்துகளில் நச்சுப்பூச்சிகள் சேர்தற்கு மரம் நிலைக்களனாயினுமாகும்.

உடலாகிய மரத்துக்கு வேராயிருப்பது எது? மனம். அம்மனத்தில் அன்பில்லா தொழியின், உடல் நிலை என்னாகும்?

புறத்துறுப்புக்கள் உடலில் பூத்து நிற்பன. அகத்துறுப்பில் அன்பில்லை எனின் புறத்துறுப்புக்கள் என்ன செய்யும்? அவை பசுமையற்றுக் கிடக்கும்; அல்லது தீங்கு செய்வனவாகும்.

அகத்துறுப்பில் அன்பு தேங்குதல் வேண்டும். அன்பு தேங்காத காலத்து அன்புக்கு மாறுபட்ட அழுக்காறு முதலிய நச்சுநீர் பெரிதும் தேங்கப்பெறும்.

## இரண்டும்

புறத்துறுப்புக்களாகிய பொறி புலன்கள் அகத்துறுப்பாகிய மனத்தின் வழி இயங்குவன. மனம் நல்வழியில் நின்றால் புறத்துறுப்புக்கள் நல்வழியில் இயங்கும். மனம் தீய வழியில் நின்றால் புறத்துறுப்புக்களும் தீய வழியில் இயங்கும். அகத்துறுப்பில் அன்பு தேங்கினால் புறத்துறுப்புக்களும் அன்புற்ற நல்வினைகளை ஆற்றுவனவாம். அகத்துறுப்பில் அன்பில்லையேல் புறத்துறுப்புக்கள் அன்பற்ற தீவினைகளை ஆற்றுவனவாம்.

"யாக்கை, அகத்துறுப்பு அன்பிலா தவர்க்கு - புறத்துறுப்பெல்லாம் எவன் செய்யும்" என்று ஆசிரியர் கேட்கிறார். இன்ன செய்யும் என்று கூற ஆசிரியர்க்கு மனம் எழவில்லை. அவை உலகை அழிக்கும் கேடு செய்யினும் செய்யும்.

## வேர் கெட்டால்

மனத்தை "அகத்துறுப்பு" என்று ஒருமையிலும், மற்ற வுறுப்புக்களை, "புறத்துறுப்பெல்லாம்" என்று பன்மையிலும் ஆசிரியர் அருளினர். இஃது அகத்துறுப்பின் மாண்பை உணர்த்துவதாம். மனம் ஒன்று அன்பிலதாயின், எல்லாப் புறத்துறுப்பும் பயனில்லாதொழியும். "எல்லாம்" என்பது இங்கே இழிவைக் குறிப்பது. வேர் கெட்டால் மரத்தின்

உறுப்புக்களெல்லாம் பாழ்படு மல்லவோ? அக அன்பே எல்லாவற்றிற்கும் ஊற்று என்றபடி. (ரு)

## 76

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பார்க்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

### பொருள்

அகத்து அன்பு இல்லா உயிர் வாழ்க்கை - உள்ளத்தில் அன்பு இல்லாத உயிர்வாழ்வு, வன்பார்கண் - வலிய பாறை நிலத்திலே, வற்றல் மரம் தளிர்த்தற்று - உலர்ந்த மரம் தழைத்தாற் போலும்!

### கருத்து

உயிர் வாழ்க்கைக்கு அன்பு வேண்டும்.

### விருத்தி

முன்னே அன்பில்லாத உடல் உறுப்புக்களின் நிலை சொல்லப்பட்டது. இங்கே அன்பில்லாத வாழ்க்கையின் நிலை தொகுப்பு முறையில் சொல்லப்படுகிறது.

அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை - 'தன்னிடத்து அன்பில்லாத உயிரினது வாழ்க்கை'—இது மணக்குடவர் உரை; 'மனத்தின்கண் அன்பில்லாத இல்லறத்தோடு கூடி வாழ்தல்'—இது பரிமேலழகர் உரை.

**அன்பகத்தில்லா உயிர்வாழ்க்கை**

அகம் - உள்ளம்; மனம்

உயிர் வாழ்க்கை - உயிர் உடலோடு கூடிய வாழ்க்கை.

**அ ன் ப க த்........வா ழ் க் கை**

உடலோடு கூடிய உயிர் வாழ்க்கை அன்போடு கூடிய வாழ்க்கை என்பது முன்னே பலவாறு விளக்கப்பட்டது.

உயிர் வாழ்க்கையில் அன்பு தேங்கும் உறுப்பு அகமாதலால் " அன்பகத்து " என்றனர்.

அகத்தில் அன்பு தேங்கும் வாழ்க்கையே உயிருடையது; மற்றையது உயிரற்றது. "அன்பகத்தில்லா" என்பதே, அன்புக்குரியது அகம் என்பதை வலியுறுத்துவது.

அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை எத்தகையது ? 'வன் பார்க்கண் வற்றல் மரம்' போன்றது.

## வன்பார்க்கண் வற்றல்மரந் தளிர்த்தற்று

வன் - வன்மை, வன்மையுடைய, வலிய.

பார் - பாறை ; 'பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு'—பரிபாடல் : ரு : க.

வன்பார்க்கண் - வலிய பாறையில், வலிய பாறை நிலத்தில், வன்னிலத்தில்.

"வன்பாற்கண்" என்பது பரிமேலழகர் கொண்ட பாடம்.

வன்பால் - 'வன்னிலம்' (கடினமாகிய பூமி) என்றனர் பரிமேலழகர்.

வற்றல் மரம் - வற்றலாகிய மரம், பசுமை வற்றிய மரம், உலர்ந்தமரம் ; பட்டுப்போன மரம் என்பர் சிலர் ; ஒருவகை மரம் என்று கூறுவோருமுளர்.

வற்றல் : 'பால்விளங்கா அஃறிணைப் படர்க்கைப் பெயர்' என்பர் பரிமேலழகர்.

தளிர்த்தற்று - தளிர்த்தாலற்று ; தளிர்த்தாற்போலும் ; தளிர்விட்டது போலும் ; தழைத்தாற் போலும்.

## வன்........தளிர்த்தற்று

வாழ்க்கை மரம் போன்றது. 'வாழ்க்கை மரம்' என்னும் ஆட்சியை உன்னுக.

மரத்துக்குப் பசுமை வேண்டும். பசிய மரமே தளிர்த்து நிற்கும். வாழ்க்கைக்குப் பசுமை எது? அன்பு. அன்புடைய வாழ்க்கையே செழுமையுடைய தாகும்.

மரத்திலுள்ள பசுமை பட்டுப் போயின் மரம் என்னாகும்? அதேபோல வாழ்க்கையிலுள்ள அன்பு நீங்கின் வாழ்க்கை என்னாகும்? வற்றல் மரம் போன்றதாகும்.

## நகைச்சுவை

அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை வற்றல் மரம் போன்றது என்று ஆசிரியர் அருளினாரில்லை. அக்கருத்தை அவர் நகைச்சுவைபட, "வன்பார்க்கண் வற்றல் மரந்தளிர்த் தற்று" என்று அருளினர்.

"வற்றல் மரம்தளிர்த் தற்று" என்று கூறுமளவில் ஆசிரியர் நில்லாது, "வன்பார்க்கண் வற்றல் மரம் தளிர்த் தற்று" எனப் பெருக்கிக் கூறியதும் கருதற்பாலது.

வற்றல் மரம் தளிர்த்தலே அரிது; அதிலும் வன்பார்க் கண் வற்றல் மரம் தளிர்த்தலின் அருமைப் பாட்டைக் கூற வும் வேண்டுமோ? அன்பில்லா உயிர் வாழ்க்கைக்கு ஆசிரியர் எடுத்துக் காட்டாக எதைக் கொண்டார் பாருங்கள்! வற்றல் மரத்தை - வன்பார்க்கண் வற்றல் மரத்தைக் கொண்டனர்! அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கையை எவ்வளவு இழிவாக ஆசிரியர் கருதுகிறார்!

## ஆசிரியர் அநுபவம்

ஆசிரியர், இல்வாழ்க்கையில் நின்று வாழ்க்கைத் துணை யுடன்கூடி, மகப்பேறெய்தி, அன்பு அகத்தில் தேங்கப் பெற்றவர். அவர் மென்னிலத்தில் தளிர்த்த பசுமை மரக் கூட்டத்தையும் பார்த்திருப்பர்; வன்னிலத்தில் உலர்ந்து வற்றிய மர இனத்தையும் பார்த்திருப்பர். அவர்க்கு முன்னையது அன்பகத்துள்ள உயிர் வாழ்க்கை யெனத் தோன்றி

யிருக்கும்; பின்னையது அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை யெனத் தோன்றியிருக்கும்.

ஆசிரியர் தமது அநுபவத்தை 'அன்புடைமை'யில் வெளிப்படுத்த நேர்ந்தபோது, "அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை வன்பார்க்கண் - வற்றல் மரந்தளிர்த் தற்று" என்று அருளலாயினர்.

## வன்னிலம்

வன்னிலத்தில் வற்றியமரம் தளிர்க்குமா? தளிர்த்தல் அரிது. ஆசிரியர் "வன்பார்க்கண் வற்றல் மரந்தளிர்த் தற்று" என்று அருளியுள்ளனர். "வன்பார்க்கண் வற்றல் மரம் தளிர்த் தற்று - அன்பில்லா உயிர் வாழ்க்கை" என்று ஆசிரியர் அன்பில்லா வாழ்க்கையை எள்ளி நகையாடுகிறார். 'வன் பார்க்கண் வற்றல் மரம் தளிர்ப்பதில்லை - அன்பில்லா வாழ்க்கையில் உயிர் நிலவுவ தில்லை' என்பது கருத்து. அன் பில்லா வாழ்க்கை, வன்பார்க்கணுள்ள வற்றல் மரம் போன்றது.

## மென்னிலம்

"வற்றல் மரம் தளிர்த்தற்று" என்னாது, "வன்பார்க் கண் வற்றல் மரம் தளிர்த்தற்று" என்ற தென்ன? 'மென் னிலத்தில் வற்றிய மரம் தளிர்க்கும் வாய்ப்புப் பெறினும் பெறுமாதலால், வன்னிலத்தில் வற்றியமரம் தளிர்க்கும் வாய்ப்புப் பெறாது' என்பதை விளக்கவேண்டி என்க. தளிர்த்தலின்மையைத் "தளிர்த்தற்று" என்று அருளி னர். 'தளிர்த்தற்குக் காரணமின்மையால் தளிராதென்ற வாறு' என்பது மணக்குடவர் குறிப்புரை. அன்பில்லா வாழ்க்கை உயிருடையதாதல் அரிது என்றபடி. (௯)

(iii) இல்வாழ்க்கையில் அன்பெழுதலும் விளைதலும்

## 77

*அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்*
*தின்புற்று ரெய்துஞ் சிறப்பு.*

### பொருள்

*வையகத்து - உலகத்திலே, இன்பு உற்றார் எய்தும் சிறப்பு - இன்பம் நுகர்ந்தவர் அடையும் சிறப்பு, (அவர்) அன்பு உற்று அமர்ந்த வழக்கு என்ப - அவர் இல்வாழ்க்கையில் அன்பு கொண்டு ஒழுகிய பயன் என்று சொல்வர் (அறிஞர்).*

### கருத்து

*இன்பப் பேறு அன்பார்ந்த இல்வாழ்க்கையைப் பொறுத்தது.*

### விருத்தி

*மேற்பாக்களில் அன்பின் இயலும் பிறவும் சொல்லப் பட்டன. இப்பாட்டிலும் வரும் பாட்டிரண்டிலும் அன்பின் எழுச்சியும் விளைவும் சொல்லப்பட்டுள்ளன. இவை இல் வாழ்க்கையில் உறுதல் இப்பாட்டில் சொல்லப்படுகிறது.*

*“முற்பிறப்பின்கண் பிறர்மேல் அன்பு வைத்துச் சென்ற செலவென்று சொல்வர், இப்பிறப்பின்கண் உலகத் தில் இன்பமுற்றார் அதன் மேலுஞ் சிறப்பெய்துதலை”* —மணக்குடவர்.

*“அன்புடையராய் இல்லறத்தோடு பொருந்திய நெறி யின் பயன் என்று சொல்வர் அறிந்தோர், இவ்வுலகத்து இல்வாழ்க்கைக்கண் நின்று இன்பநுகர்ந்து அதன்மேற் றுறக் கத்துச் சென்றெய்தும் பேரின்பத்தினை”*—பரிமேலழகர்.

**வையகத்து....சிறப்பு....அன்பு....என்ப**

*உற்றூர் - நுகர்ந்தவர்; அநுபவித்தவர்.*
*சிறப்பு - இங்கே விடுதலை, வீடு.*
*அமர்ந்த - பொருந்திய, ஒழுகிய.*

## வையகத்து இன்புற்றூர் எய்துஞ் சிறப்பு

*ஆசிரியர் "இன்புற்றூர்" என்று கூறுது, "வையகத்து இன்புற்றூர்" என்று கூறியுள்ளனர். "வையகம்" வெற்றுரையாக நிற்கவில்லை. அது பொருளுடையதாகவே நிற்கிறது. அஃது இயற்கை வாழ்வென்னும் இல்வாழ்க்கையைக் குறிக்கொண்டு நிற்கிறது. இன்பநுகர்ச்சிக்கு வையக வாழ்வு வேண்டும் என்றவாறும்.*

*உயிர்களின் துன்பத்தைப் போக்கவே ஆண்டவன் இவ்வுலக வாழ்வை அவைகட்கு நல்குகிறுன். இவ்வுலக வாழ்வை நீத்தால் துன்பம் எப்படி நீங்கும்? துன்பநீக்கத்துக்கும் இன்ப ஆக்கத்துக்கும் வையக வாழ்வு வேண்டற்பாலதே. இதை வலியுறுத்தவே ஆசிரியர், "வையகத் தின்புற்றூர்" என்றூர்.*

*வையகத் தின்புறலில் ஏதேனும் அடைவு உண்டோ? அடைவு உண்மையைக் குறிப்பது "எய்து" என்பது. "வையகத்து இன்புற்றூர்" எய்துவதென்னை? அதைக் "சிறப்பு" என்றூர் ஆசிரியர்.*

*இன்பம் கட்டில் பிறவாது. கட்டில் பிறப்பது துன்பம். இங்கே ஆசிரியர் "இன்புற்றூர்" என்று அருளியுள்ளனர். கட்டினின்றும் விடுதலையடைந்தவரே இன்புற்றவராவர். இன்புற்றவர் அடையும் பேறு என்னை? அதை விடுதலை அல்லது வீடு என்று கூறலாம்.*

ஆசிரியர் "இன்புற்றார் எய்துஞ் சிறப்பு" என்றனர். இன்புற்றார் எய்துவது விடுதலையன்றி வேறில்லை. ஆதலின், விடுதலையே ஆசிரியரால் 'சிறப்பு' என்னப்பட்டது.

ஒவ்வொரு முயற்சியின் பயனில் ஒவ்வொருவிதச் சிறப்பு உண்டென்பது பலரும் அறிந்த ஒன்று. 'இவர் இம் முயற்சியில் தலைப்பட்டு உழைத்தார். இதற்குரிய சிறப்பு எய்தினர்' என்று உலகோர் சொல்வது வழக்கம். வையகத்து இன்புற்றாரும் ஒருவிதச் சிறப்பெய்தல் வேண்டுமன்றோ? இம் மரபுபற்றி ஆசிரியர் "சிறப்பு" என்றனர்.

இன்புற்றார் எச்சிறப்பு எய்துவர்? அச்சிறப்புக் கட்டற்ற வீடுபேறேயாகும்.

சிறப்பு இருவகை. அவை இம்மைச் சிறப்பு; மறுமைச் சிறப்பு என்பன. இம்மைச் சிறப்பு வையகத்தின்பம்; மறுமைச் சிறப்பு வீடுபேறு. விளக்கம், பாயிரம் - அறன் வலியுறுத்தல் - முதற்பாட்டுக் குறிப்புக்களிற் பார்க்க.

## அன்புற் றமர்ந்த வழக்கென்ப

"வையகத்து இன்புற்றார் எய்துஞ் சிறப்பு" எதன் பயன்? இதற்கு விடை, "அன்புற் றமர்ந்த வழக்கென்ப" எனவரூஉம் ஆசிரியர் மொழியிலேயே இருத்தல் காண்க.

"வையகத்து" என்பது, இல்வாழ்க்கையைக் குறிக் கொண்டதென்று மேலே சொல்லப்பட்டது. இல்வாழ்க்கை நேரே உயிர்கட்கு இன்பூட்டிச் சிறப்பை எய்துவியாது. இடையில் ஒன்று தேவையாகிறது. அஃது இவ்வதிகாரத்திற் சொல்லப்படும் அன்பு.

அன்பு இல்வாழ்க்கை வாயிலாக வெளிப்படுவது. இது பற்றியே, "அன்புற் றமர்ந்த" என்பதற்கு, 'இல்வாழ்க்கையில் அன்புகொண் டொழுகிய' என்று பொருள்கொள்ளப் பட்டது.

இல்வாழ்க்கையில் அன்புற்றமர்ந்த வழக்கு (பயன்) யாது? வையகத்து இன்புற்றார் எய்துஞ் சிறப்பு.

"வையகம்" என்பதை அன்புக்கு முன்னும் சேர்த்துப் பொருள்முறை காண்க.

வையகத்து இன்புற்றார் எய்துஞ் சிறப்பு, அவ்வையகத்து அன்புற்றமர்ந்த வழக்கு (பயன்) என்க.

அன்பு உற்று என்பது அன்பில் ஒன்றுவதை உணர்த்துவது.

அமர்தல் ஈண்டுப் பொருந்திய செயலின் மேலது. இது பற்றி "அமர்ந்த" என்பதற்கு ஒழுகிய என்று பொருள் கூறப்பட்டது.

அன்புற்றமர்தலாவது இல்வாழ்க்கையில் அன்புற்று ஒழுகல்.

"என்ப" என்பது அறிவினும் அநுபவத்தினுஞ் சிறந்த ஆன்றோர் மொழியை உளங்கொண்டது. (எ)

## 78

அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.

### பொருள்

அன்பு ஆர்வம் உடைமை ஈனும் - அன்பு விருப்பமுடைமையை உண்டாக்கும், அது நண்பு என்னும் நாடா சிறப்பு ஈனும் - அவ்வார்வ முடைமை நட்பு என்னும் அளவிறந்த சிறப்பினை உண்டாக்கும்.

### கருத்து

அன்பு விருப்பத்தையும் விருப்பம் நட்பையும் தரும்.

விருத்தி

முன்னே இல்வாழ்க்கையில் அன்பெழுந்து விளைதல் பேசப்பட்டது. இங்கே அவ்வன்பு விளைந்து வளரும் முறை பேசப்படுகிறது.

**அன்பீனும்............சிறப்பு**

ஈனும் - உண்டாக்கும், தரும்.

ஆர்வம் - விருப்பம்.

நண்பு - நட்பு.

நாடா - நாடாத, அளவிறந்த, ஆராய்தற்கரிய, நினைவுக்கெட்டாத, தேடிக் காணாத.

நாடுதல் - அளத்தல், ஆராய்தல், நினைத்தல், தேடுதல்; "நீமெய் கண்ட தீமை காணின் - ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி"—புறநானூறு : ௧௦ ; ௩-௪; "...அவனைத் - திரைதரு முந்நீர் வளாக மெல்லாம் - நிரைகதிர் ஞாயிற்றை நாடென்றேன்..."—கலித்தொகை : ௧௪௯ : ௨௭ - ௯ ; "நாடா துணிந்து..."—மணிமேகலை சிறை : ௧௯ : ௪.

சிறப்பு - சிறப்பை ; செல்வத்தை எனினுமாம்.

அன்பு வளர்ச்சி

அன்பு வளர்ச்சி படிப்படியே இப்பாட்டினும் வரும் பாட்டினும் சொல்லப்படுகிறது. அன்பு அகத்திலிருப்பது. அது படிப்படியே வளர்ந்து யாண்டுமுள்ள அன்பாதல்வேண்டும். முதல் முதல் அஃது ஆர்வமாக அரும்புகிறது ; பின்னே நண்பாக மலர்கிறது. விதை முளையாகிச் செடியாகி மரமாகி அரும்பாகி மலராகிப் பிஞ்சாகிக் காயாகிக் கனியாகி உலகிற்கு, முறை முறையே பயன்பட்டு மீண்டும் பலப்பல விதைகளாகிக் கூர்ந்து பெருகுவதுபோல, அன்பும் மக்களின் அகத்தில்

தேங்கி விருப்பமாகி வேட்கையாகிக் காதலாகி நண்பாகி அந் தண்மையாகிக் கூர்ந்து பெருகி, மீண்டும் அன்பாகிப் பெருகு தல் இயல்பு. விருப்பம், வேட்கை, காதல், நட்பு முதலியன அன்புக் கூறுகள். *"முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடி விலா இன்ப மான - அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம்பொங்கி - மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி - என்புநெக் குருகி உள்ளத் தெழுபெரு வேட்கை யோடும்" எனவரூஉஞ் சேக்கிழார் திருவாக்கை நோக்குக.

## ஆர்வமும் நண்பும்

இப்பாட்டில் அன்பு ஆர்வத்தை ஈனுகிறதென்றும் ஆர்வம் நண்பை ஈனுகிறதென்றும் சொல்லப்பட்டன. முத லும் முடிவும் குறிக்கப்பட்டன. இடையிலுள்ளனவற்றை வருவித்துக் கொள்க.

ஆர்வம் அன்பின் சிறுகூறு. அது படிப்படியே வளர்ந்து வளர்ந்து நண்பாகும். ஈண்டு நண்பு என்றது பெரும்பொரு ளுடையது; அழுக்காறு வெகுளி பகை முதலியவற்றைக் கடந்தது.

அகத்திலுள்ள அன்பு படிப்படியாக வளர்ந்து வளர்ந்து நண்பாகக் கனியும். நண்பு, அழுக்காறு வெகுளி பகை முத லியவற்றைக் கடந்ததாகலான், அஃது எவ்வுயிர்க்குஞ் செந் தண்மை பூண்டொழுகும் அந்தண்மையாகும். எவ்வுயிர்க் குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அந்தண்மை கூட்டும் நண்பின் மாண்பை என்னென்று கூறுவது? இதுபற்றியே, "நண்பென்னும் நாடாச் சிறப்பு" என்றார்; மற்றுமோரிடத் தில் "செயற்கரிய யாவுள நட்பின்" என்றருளியதையும் ஈண்டு நினைவூட்டிக் கொள்க. (அ)

* பெரியபுராணம் : கண்ணப்பர் : ௧௦௨.

## 79

*அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை.*

### பொருள்

*அறியார் - (அன்பின் தன்மை) அறியாதவர், அன்பு அறத்திற்கே சார்பு என்ப - அன்பு அறச்செயலுக்கே துணையாவது என்று சொல்வர், (அறிந்தார்) மறத்திற்கும் அஃதே துணை (என்ப) - (அன்பின் தன்மை அறிந்தவர்) மறச்செயலுக்கும் அவ்வன்பே துணை (என்று சொல்வர்).*

### கருத்து

*அறத்துக்கும் மறத்துக்கும் அன்பே துணை.*

### விருத்தி

*சென்ற பாட்டு அன்பு வளர்ச்சியைக் கூறுவது. இப் பாட்டு அவ்வளர்ச்சி அறத்தின் வழியும் மறத்தின் வழியும் நிகழ்தலைக் கூறுவது.*

**அறியார்........அறத்திற்கே........துணை**

*அறியார் - அன்பின் தன்மை இன்னதென்று அறியாதவர்.*

*அறம் - நன்மை, புண்ணியம், தருமம்.*

*அறத்திற்கே - அறச் செயலுக்கே, நல்வினைக்கே. ஏகாரம் : பிரிநிலை.*

' சினமும் பாவமும் பிணக்கும் கூற்றும் - வலியும் சேவகமும் வம்பும் மறமே '—பிங்கலந்தை : ௩௯௩௯. (சேவகம் - வீரம்).

பண்டைநாளில் மறம் என்னுஞ் சொல் வீரம் என்னும் பொருளையே பெரிதும் பெற்றிருந்தது ; பின்னே அதினின்றும் பல பொருள் பிறக்கலாயின.

மறத்திற்கும் - மறச் செயலுக்கும், தீவினைக்கும்.

உம் : இறந்தது தழுவியது.

அஃதே : ஏகாரம் தேற்றம்.

அதுவே துணை என்பது அஃதே துணை என்று வந்தது செய்யுளின் பொருட்டென்க.

**' அறிந்தார் '**

" அறியார் அறத்திற்கே அன்பு சார்பென்ப " என்றருளி, " மறத்திற்கும் அஃதே துணை " என்றருளினமையான், 'மறத்திற்கும் அஃதே துணை' என்று எவர் கூறுப என்றொரு வினு எழுதற்கு இடம் உண்டாகிறதன்றே ? அவ்வினுவிற்கு விடையே 'அறிந்தார்' என்பது. "......அறியா" ரினின்றும், " மறத்திற்கும் அஃதே துணை " என்பது, ' அறிந்தா 'ரைப் பிறக்கச் செய்தது.

**' அறிந்தார் ' ' அறத்திற்கும் '**

அறத்திற்கே அன்பு சார்பென்ப. யார் ? அறியார். மறத்திற்கும் அன்பே துணை என்ப. யார் ? அறிந்தார். அறத்திற்கே என்பதிலுள்ள ஏவும், மறத்திற்கும் என்பதிலுள்ள உம்மும் ' அறிந்தார் ' ' அறத்திற்கும் ' என்னும் இரு சொல்லை அடக்கிக் கொண்டிருத்தல் காண்க.

## பாட்டின் தெளிவு

பாட்டின் தெளிவு வருமாறு :—அன்பின் தன்மை அறியாதார் அறத்திற்கே அன்பு சார்பென்றும், மறத்திற்கு அவ்வன்பு சார்பில்லை என்றுஞ் சொல்வர் ; அன்பின் தன்மை அறிந்தவர் அறத்திற்கும் மறத்திற்கும் அன்பே சார்பு என்று சொல்வர்.

## அறமும் அன்பும்

அறம் முழுமை ; கூறன்று. அது மரம் போன்றது. பல கூறுகள் சேர்ந்த ஒன்றே மரம். அறமும் பல கூறுகள் சேர்ந்த ஒன்று. மரக்கூறுகளுள் சிறந்தது எது? வேர். அறக்கூறுகளுள் சிறந்தது அன்பு. அறத்துக்கு வேர் போன்றது அன்பு.

அன்பு வழி நிகழ்வது அறவினை எனப்படும். அன்பற்ற வினை அறத்தின்பாற் படுவதாகாது. அறவினைக்கு அன்புத் துணை வேண்டும். அன்புத் துணையின்றி அறவினை நிகழாது.

அன்பு வழி நிகழ்வது அறவினை என்றும், மற்ற வழி நிகழ்வது மறவினை என்றுஞ் சொல்வது உலக வழக்கு. அன்பு வழி அறவினையும் நிகழ்வதுண்டு ; மறவினையும் நிகழ்வதுண்டு. இந்நுட்பம் பெரிதும் அறிஞர்க்கே தெரியும்.

உலக வழக்கிலுள்ள அறியாமையைப் போக்கவேண்டி, " அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார் " என்றனர் ; அறிஞர் திறத்தை விளக்கவேண்டி, " மறத்திற்கும் அஃதே துணை " என்று தொடர்ந்து கூறினர்.

## அறக்கருணை - மறக்கருணை

கருணையொன்று. அஃது அறக்கருணையென்றும் மறக்கருணையென்றும் வழங்கப்படுகிறது. கருணையொன்றே இரு கிளையாகப் பிரிந்து நிற்கிறது.

தந்தையொருவன் இருக்கிறான். அவனுக்கு இரண்டு பிள்ளைகளிருக்கிறார்கள். ஒருவன் நல்லவன் ; மற்றொருவன் கெட்டவன். இருவரிடத்திலும் தந்தைக்குக் கருணையுண்டு. கருணை செயலாக வெளிவரும் பொழுது வேற்றுமைப்படுகிறது. முன்னவனைத் தந்தை கடிவதில்லை ; பின்னவனைக் கடிகிறான். இவனைத் தந்தை எந்நோக்குடன் கடிகிறான்?

பிள்ளை திருந்தி நல்லவனாதல் வேண்டும் என்னுங் கருணையுடன் கடிகிறான். கடிதலின் அடியிலிருப்பது என்னை? கருணையன்றோ? கடிதல் அறத்தின்பாற் பட்டதன்று; மறத்தின்பாற் பட்டது. தந்தையின் மறச்செயல் யாண்டிருந்து பிறந்தது? கருணையினின்றும் பிறந்தது. மறச்செயல் கருணையினின்றும் பிறத்தலால் அது மறக்கருணை என்று வழங்கப்படுகிறது. கருணை அறச்செயலுக்கு மட்டும் அடியில் நிற்பதில்லை என்பதும், மறச்செயலுக்கும் அஃது அடியில் நிற்பதென்பதும் உணரற்பாலன. இது பற்றியே அறக்கருணை மறக்கருணை என்னும் வழக்காறுகள் பிறந்துள்ளன. அறக்கருணை மறக்கருணைக்கு இன்னும் பல எடுத்துக் காட்டலாம்.

அறக்கருணை மறக்கருணை நுட்பம் விளங்கப் பெறுவோர்க்கு இக்குறட்பாவின் கருத்து நன்கு புலனாகும்.

அன்புத் துணையால் அறச்செயல் நிகழ்கிறது என்னுங் கூற்றை உலகம் ஏற்கும். அன்புத் துணையால் மறச்செயலும் நிகழ்கிறது என்பதை உலகம் பெரிதும் ஏற்பதில்லை. இவ்வறியாமையைக் களைவது இத்திருக்குறள்.

'ஒருவன் செய்த பகைமை பற்றி உள்ளத்து மறம் நிகழ்ந்துழி அவனை நட்பாகக்கருதி அவன்மேல் அன்புசெய்ய அது நீங்குமாதலின், மறத்தை நீக்குதற்குந் துணையா மென்பார், 'மறத்திற்கும் அஃதே துணை' என்றார்; 'துன்பத்திற்கு யாரே துணையாவார்' என்புழிப் போல"—இது பரிமேலழகர் குறிப்புரை.

## அன்பு ஆசையா?

'ஒரு பொருள்மீது ஒருவர்க்கு அன்பு தோன்றுகிறது. மற்றொருவர்க்கும் அப்பொருள்மீது அன்பு தோன்றுகிறது. அப்பொருளைப் பெற இருவரும் முயல்கின்றனர்.

இருவர்க்கும் போராட்டம் நிகழ்கிறது. இப்போராட்டம் அன்பு காரணமாக எழுந்தமையான் மறத்துக்கும் அன்பு துணையாகிறது' என்று கூறுவோருமுளர்.

'மனைவி மக்கள்மீது கொண்ட அன்பு காரணமாகப் பிறர் பொருள்பறித்தல் முதலிய மறச்செயல்கள் நிகழ்தலின், மறத்துக்கும் அன்பு துணை போகிறது' என்று கூறுவோருமுளர். இன்னும் பலவாறு சொல்வோரும் உளர்.

இவர் அன்பு என்று சொல்வது அன்பன்று; அஃது ஆசை. ஆசை வேறு; அன்பு வேறு.

மறச்செயலை இருகூறிட்டுக் கொள்ளலாம். ஒன்று ஆசையை அடிப்படையாகக் கொண்டது; மற்றொன்று அன்பை அடிப்படையாகக்கொண்டது. முன்னையது தன்னல முடையது; பின்னையது தன்னலமற்றது. அம்மறச் செயலால் நலன் விளையாது; போராட்டம் பெருகும். இம்மறச் செய லால் நலனே விளையும்; போராட்டம் அற்றுப்போகும். ஆசைப் பேயையும் அன்புத் தெய்வத்தையும் ஒன்று படுத்துவது கூடாதென்பது எளியேன் கருத்து.

இவ்வதிகாரம் ஆசையைப்பற்றிக் கூறுவதன்று; அன் பைப் பற்றிக் கூறுவது. அதிகாரத்தை உளங்கொண்டே பொருள் கொள்வது அறம்.

## ஐயப்பாடு

'அன்புத் துணைகொண்டு அறச்செயல் நிகழ்வது இயல்பு. அன்புத் துணையின்றி அறச்செயல் நிகழாது. அன்புத் துணையின்றி நிகழ்வது அறச் செயலாகாது. இது நியாயம். மறச்செயலுக்கு இந்நியாயம் பொருந்தி வருமா?' என்னும் ஐயப்பாடு உறலாம்.

அறச்செயல்களுக் கெல்லாம் அன்புத் துணையுண்டு என்று கூறுதல் கூடும். மறச்செயல்களுக்கெல்லாம் அன்புத்

துணையுண்டு என்று கூறுதல் கூடுமா? இக்குறட்பாவை உளங்கொண்டு சிந்தனையில் அமர்க. ஒவ்வொருவர்க்கு ஒவ்வொருவித நுட்பம் புலப்படும்.

## ஆசிரியர் கருத்து

" மறத்திற்கும் அஃதே துணை " என்று ஆசிரியர் அருளியதைக் கூர்ந்து நோக்கல் வேண்டும். ஆசிரியர் அன்புளங் கொண்டவர்; அன்புலகங் கண்டவர்; அன்புலகமே பெருகுதல் வேண்டுமென்னுங் கருத்துடையவர். ஒவ்வொருவரது ஒவ்வொரு செயலும் அன்புத் துணையுடையதா யிருத்தல் வேண்டுமென்பது ஆசிரியர் வேட்கை. செயலெல்லாம் அன்புடையனவாயின் உலகில் போராட்டமே அற்றுப் போகுமன்றோ?

செயல் எவ்வழியில் நிகழினும் நிகழ்க; அறவழியிலோ மறவழியிலோ நிகழ்க. அதனடியில் அன்பிருத்தல் வேண்டுமென்பது ஆசிரியர் கருத்து. மறச்செயலும் அன்புவழி நிகழின் உலகில் போராட்டத்துக்கு இடம் ஏது?

அன்பற்ற அறச்செயல் நிகழ்வதில்லை. அன்பற்ற மறச்செயல் நிகழ்வதுண்டு. அன்பற்ற மறச்செயல் நினைவு ஆசிரியர் உள்ளத்தில் தோன்றவே யில்லை; தோன்றி யிருப்பின் அவர், " மறத்துக்கும் அஃதேதுணை " என்று அருளியிரார். தோன்றாமைக்குக் காரணம் என்னை? அவர் இல்வாழ்க்கையில் நின்று, வாழ்க்கைத்துணை யேற்று, மக்கட்பேறுற்று, அன்பு ஊற்றுத் திறக்கப்பெற்றவர். அவர்பால் எச்செயல் நிகழ்ந்திருப்பினும் அஃது அன்புத் துணைகொண்டே நிகழ்ந்திருக்கும். இதனால் விளங்குவது யாது? இல்வாழ்க்கையில் நின்றொழுகி அன்பூற்றுத் திறக்கப்பெற்றவரின் மறச்செயலும் அன்புத்துணை கொண்டே நிகழும் என்பது விளங்கும். இல்வாழ்க்கையால் அன்பூற்றுத் திறக்கப் பெறாதாரின் மறச்

செயல் அன்புத்துணை கொண்டதாகா தென்க. இயற்கை வாழ்க்கை யென்னும் இல்வாழ்க்கை அன்பற்ற மறச்செயலை வளர்க்காது என்பது நுட்பம். இஃது அதிகார வைப்புக்கு ஒத்துவருதல் காண்க.

அன்பற்ற மறச்செயலால் உலகம் இடர்ப்படு மாதலால், அம்மறச் செயலும் அன்புடையதாதல் வேண்டுமென்று அறிவுறுத்தியவாறும். (௯)

(iv) அன்பின்மையின் கொடுமை

## 80

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

### பொருள்

என்பு இலதனை - என்பில்லாத உயிரை, வெயில் (காய்வது) போல - வெயில் எரிப்பது போல, அன்பு இலதனை - அன்பில்லாத உயிரை, அறம் காயும் - அறம் எரிக்கும்.

### கருத்து

அன்பில்லாத மக்களை அறக்கடவுள் ஒறுக்கும்.

### விருத்தி

முற்பாக்களெல்லாம் அன்புத் திறங்களை வகுத்து விளம்பின. இப்பா அன்பின்மையின் கொடுமையை விளம்புகிறது.

என்பிலதனையும் அன்பிலதனையும் முறையே உடம்பு உயிராகப் பரிமேலழகர் கொண்டனர். 'என்பில தென்றதனான் உடம்பென்பதூஉம், அன்பில தென்றதனான் உயிரென்பதூஉம் பெற்றாம்' என்பது அவர்தங் குறிப்பு.

**என்பிலதனை....அறம் காயுமே**

என்பு - எலும்பு.

இலதனை - இல்லாத உயிரை; சீவனை.

இல்லது, இலது ; இல்லதனை, இலதனை.

என்பிலது : முதல் வேற்றுமை; என்பிலதனை : இரண்டாம் வேற்றுமை.

என்பிலது - என்பில்லாத உயிரினம்; புழுவினம் என்பர்; புல்லினம் என்பர் சிலர்; புல்லினத்திற் சேர்ந்த ஒருவகை மூங்கிலினம் என்பர் சிலர்.

வெயில் - சூரியவெப்பம்.

வெயில்போல - வெயில் (காய்வது) போல.

அன்பிலது - அன்பில்லாத மக்களினம்.

அறம் - தருமம்; அறக்கடவுள்.

காயும் - எரிக்கும் ; சுடும், வருத்தும், ஒறுக்கும், கொல்லும்.

என்பில் அதனை என்றும் அன்பில் அதனை என்றும் பிரித்துப் பொருள் கூறுவோருமுளர்.

**உயிரினமும் வெயிலும்**

இங்கே உயிர்வகையை இரண்டாகப் பிரித்தல் பொருத்தம். ஒன்று என்புள்ள உயிரினம்; மற்றொன்று என்பில்லா உயிரினம். இவ்விரண்டனுள் எவ்வினம் வெயில் பட்டதும் துடி துடித்துச் சுருண்டு மாயும்? என்பில்லாத உயிரினமென்று எவருங் கூறுவர். இதற்கு விரிவுரை வேண்டுவதில்லை.

வெயில் வேளையில் என்பில்லா உயிரினம் பெரிதும் நிழலிலிருந்தே காலங்கழிக்கும்; என்புள்ள உயிரினம் அப்படி இருப்பதில்லை. வெயில் பொறுக்கும் இயல்பு என்

புள்ள உயிரினத்துக்கு உண்டு. இது பொதுமை. எதற்கும் புறனடை உண்டு.

## புழு

என்பிலது, பொதுவாக என்பில்லா உயிரினத்தைக் குறிப்பது; சிறப்பாகப் புழுவைக் குறிப்பது. நோயாலோ பிறவற்ருலோ ஒருவன் துடிக்கும்போது மக்கள் என் சொல்கிருர்கள்? 'ஐயோ! அவன் புழுப்போலத் துடிக்கிருன்; பாவம்!' என்று சொல்கிருர்கள். துடிப்புக்கெல்லாம் புழுவின் துடிப்பை எடுத்துக் காட்டுவது உலக வழக்கு. புழுவின் துடிப்பென்பது அது வெயிலில் துடிப்பது. அத்துடிப்பு மக்கள் உள்ளத்தில் நின்று, வேறு துடிப்புக்களை அவர்கள் காண நேரும்போது, அவர்களது வாயின்வழி அஃது எடுத்துக் காட்டாக வெளிவருகிறது. உலக வழக்கையொட்டி ஆசிரியர் புழுவை உளங்கொண்டு, "என்பிலதனை" என்றருளியிருப்பர்.

கடு வெயிலால் புல்லினம் காய்தலும் உண்டு. அவ்வினத்தில் ஒருவகை மூங்கில் காய்ந்து எரிந்து கரிவதுமுண்டு.

புல்லினத்தைக் காயவல்லது கடுவெயில். ஆனல் புழுவைக் காய்வதற்குக் கடுவெயில் வேண்டுவதில்லை. ஈண்டு ஆசிரியர், "வெயில்" என்றே கூறியுள்ளனர்.

## என்பு முழக்கம்

அன்பிலது என்றது இங்கே மக்களினத்தைக் குறிக்கொண்டது. முன்னே "என்பிலதனை" என்று கூறிப் பின்னே, "அன்பிலதனை" என்றமையால், இது மக்களினத்தை உணர்த்துவதென்க. இவ்வதிகாரத்தில் ஆசிரியர், "என்பு - என்பு" என்று அருளியிருத்தலை உன்னுக. என்பு கொண்டெழுந்த யாக்கையுடைய மக்கட் பிறவியையே

"என்பு - என்பு" என்று ஆசிரியர் குறித்து வருகின்றனர். விளக்கம் முற்பாக்களிற் பார்க்க.

## என்பிலது - அன்பிலது

முன்னே "என்பிலதனை" என்றார். பின்னே "அன்பிலதனை" என்றார். முன்னையது உவமானத்திலிருப்பது; பின்னையது உவமேயத்திலிருப்பது. இரண்டிற்கும் பொருளில் ஏதேனும் தொடர்புண்டா? நேர் பொருளில் எவ்விதத் தொடர்புமில்லை. தொனியில் - தொனிப்பொருளில் - ஒரு விதத் தொடர்பிருத்தல் புலனாகிறது. அஃது, என்புடைய மக்கட் பிறவியில் அன்பிருத்தல் வேண்டுமென்பதும், இல்லையேல் அப்பிறவி என்பிலதனை ஒக்குமென்பதும், இது பற்றியே ஆசிரியர் வேறு சொற்களைப் பெய்யாது, "என்பிலதனை", "அன்பிலதனை" என்னுஞ் சொற்களைப் பெய்தனரென்பதுமாம்.

மக்கட் பிறவியில் அன்பு அகத்திருத்தல் வேண்டும்; இல்லையேல் அப்பிறவி என்பிலதாகும்; அதாவது புழுவாகும் என்றபடி. அன்பில்லா மக்கட் பிறவி, என்பில்லாப் புழுப் பிறவியை யொத்த தென்பார், அதை "அன்பிலதனை" என்று அஃறிணையால் இழித்துக் கூறினர்.

> "புழுவுக் குங்குணம் நான்கெனக் கும்மதே
> புழுவுக் கிங்கெனக் குள்ளபொல் லாங்கில்லை
> புழுவி னுங்கடை யேன்புனி தன்தமர்
> குழுவுக் கெவ்விடத் தேன்சென்று கூடவே"

எனவரூஉம் அப்பர் மொழியை உன்னுக.

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க் - கென்போ டியைந்த தொடர்பு" என்னுங் குறட்பாட்டை உளங்கொண்டு, இப்பாட்டின் தொனிப்பொருளை ஆராய்க.

## அறக்கடவுள் ஒறுத்தல்

அறம் என்பது யாது? 'அறன் வலியுறுத்த'லில் அறத்திறன் நன்கு விளக்கப்பட்டது. விளக்கம் ஆண்டுப் பார்க்க. அறம் ஒரு பொதுச் சக்தி. அது மிகத் தூயதாய் நடுநிலை பிறழாது நிற்பது. அதைக் கடவுளென்று சமயத்தார் அனைவரும் வெவ்வேறு பெயரால் போற்றுகின்றனர். அறக்கடவுள் என்னும் ஆட்சியையும் நோக்குக. அறக்கடவுள் அன்புடையது.

"அன்புடைய ஒன்று காயுமா? இங்கே 'அறம் காயும்' என்று சொல்லப்பட்டிருக்கிறதே" என்று சிலர் ஐயுறலாம். ஐயுறுவோர் மேற்பாட்டின் பொருளை ஊன்றிநோக்குவாராக. மறத்துக்கும் அன்பு சார்புண்டு என்பது அப்பாட்டில் பேசப்பட்டுள்ளது.

ஈண்டு அறக்கடவுள் காய்வதென்பது அன்பின் சார்பு கொண்டதை என்க. அதுவே மறக்கருணை - மற அன்பு - என்பது.

## வெயிலும் அறமும்

அறம் நேரே காய்வதில்லை. பிழை செய்யும் உயிர் தானே காயப்பெறும். இதனை விளக்கவே ஆசிரியர், "வெயில் போல" என்றனர். அறம் வெப்பமுடையதன்று. அஃது அன்புத் தன்மையுடையது. உலகம் அறத்தையே வெயிலாகக் கொள்ளப் போகிறதென்று "வெயில்போல" என்றனர்.

## தன் வினை தன்னைச் சுடும்

வெயில் பொதுப்படக் காய்வது. அதன்கண் வேண்டுதல் வேண்டாமையில்லை. அதனிடை என்பில்லாத உயிர் தானே அகப்பட்டுக் கொள்கிறது. வெயில் அவ்வுயிரை அழைக்கவில்லை. அது தானே வந்து சிக்கிக்கொள்கிறது. சிக்கிக் கொண்டதன் பயனை அஃது அநுபவியாமற் போமோ?

அறம் பொதுவாக நிலவுவது. அதற்கு மாறுபட்டு நடக்கும் உயிரே காயப்பெறுகிறது. மாறாக நடந்த குற்றம் யாருடையது? அறத்தினுடையதா? உயிரினுடையதா? இயற்கை அறத்தில் சில நியதிகளுண்டு. அவைகட்கு இயைந்து நடந்தால் நன்மை விளையும்; இயையாது மாறுபட்டு நடந்தால் தீமை விளையும். நன்மையும் தீமையும் எதனிடத்திலிருக்கின்றன என்று சிந்தித்துப் பார்க்க. அவை உயிரினிடமே யிருக்கின்றன என்று சொல்லவேண்டுவதில்லை.

அறங்காய்தல் என்பது உபசாரம். அறத்தினடியில் காழ்ப்பில்லை. காய்தல் - மறக்கருணை; அருளல் - அறக்கருணை.

"வெறுப்பின்றியே எங்கும் ஒரு தன்மைத்தாகிய வெயிலின்முன் என்பில்லது தன்னியல்பாற் சென்று கெடுமாறுபோல, அத்தன்மைத்தாகிய அறத்தின்முன் அன்பில்லது தன்னியல்பாற் சென்று கெடுமென்பதாம். அதனைக் காயுமென வெயில் அறங்களின் மேலேற்றினார்; அவற்றிற்கும் அவ்வியல்புண்மையின். இவ்வாறு 'அல்லவை செய்தார்க் கறங் கூற்றம்' எனப் பிறரும் கூறினார்"—இது பரிமேலழகர் குறிப்புரை. (௧௦)

## க. விருந்தோம்பல்

விருந்து - புதுமை; இங்கே விருந்தினர் (புதியவர்) : ஆகுபெயர்.

ஓம்பல் - பேணல், போற்றல், உபசரித்தல்.

விருந்தோம்பல் விருந்தினரைப் பேணல்; இதில் இன்னும் ஆழ்ந்த பொருளுண்டு.

சோறிடுவது விருந்தோம்பல் என்று பொதுவாக வழங்கப்படுகிறது. அதன் உட்பொருளென்னை ? அன்பால் தியாகஞ் செய்தல் என்பது.

இல்வாழ்க்கையில், வாழ்க்கைத் துணை நலத்தால் - பிள்ளைப் பேற்றால் - அன்பு ஊற்றுப் படிப்படியே திறக்கப்பெறுகிறது. அவ்வன்பைத் தன்னளவில் - தன் மனைவி மக்கள் அளவில் - சுற்றத்தார் அளவில் - கட்டுப்படுத்திக் கொள்ளலாகாது. அதை மற்றவர்பால் செலுத்தித் தொண்டாற்றல் வேண்டும். இதுவே அந்தண்மை. அந்தண்மையாவது எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகுவது.

விருந்தினராவார் மனைவி மக்கள் சுற்றத்தாரல்லர். விருந்தினர் புதியவர்; முன்பின் தெரியாதவர். அவரை உபசரிக்கத் தூண்டுவது அன்பேயாகும். அஃதே அந்தண்மை; செந்தண்மை. ஆகவே விருந்தோம்பலென்பது உயிர்க்குச் செந்தண்மை பூண்டொழுகும் அந்தண்மை என்க. விருந்தோம்பல் அன்பு வண்ணமென்க.

அன்புப் பெருக்கே விருந்தோம்பலாதலின், இவ்வதிகாரம் ' அன்புடைமைக்'குப் பின்னர் வைக்கப்பட்டது.

### உள்ளுறையும் அமைவும்

இவ்வதிகாரத்தின் உள்ளுறை நான்கு பகுதிகளையுடையது. க. விருந்தோம்பலின் விழுப்பம். உ. விருந்தோம்

பாமையின் இழிவு. ௩. விருந்தோம்பு முறை. ௪. விருந்தோம்பலின் பயனிலை.

இல்வாழ்க்கையின் உயிர்நாடி எது? விருந்தோம்பல். விருந்தோம்பலில்லா இல்வாழ்க்கை இல்வாழ்க்கையாகாது. விருந்தோம்புவோன் வறுமையுறான். அவனது இல்லம் திருமகள் உறைவிடமாகும். அவன்தன் நிலபுல விளைவுக்கென்று வலிந்து முயற்சிசெய்ய வேண்டுவதில்லை. இயற்கைத் தெய்வம் அவனுக்குப் பெருந்துணை செய்யும். விருந்தோம்பும் மேலவனுக்குப் பெரியோர் ஆசி என்றுமிருக்கும். விருந்தை விருந்தினர் மனம் மகிழும் முறையில் ஓம்புவது சிறப்பு. அதை ஓம்பாது கிடப்பது கரவு; மடைமை. இத்தகை விருந்தோம்பலின் பயனை என்னென்று கூறுவது?

முதல் ஆறு பாக்களில் விருந்தோம்பலின் விழுப்பமும், ஏழில் விருந்தோம்பு முறையும், எட்டு ஒன்பதில் விருந்தோம்பாமையின் இழிவும், பத்தில் விருந்தோம்பலின் பயனிலையும் சொல்லப்பட்டுள்ளன.

(i) விருந்தோம்பலின் விழுப்பம்

## 81

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

பொருள்

இல் இருந்து ஓம்பி வாழ்வதெல்லாம் - வீட்டிலிருந்து (அன்பை) வளர்த்து வாழ்வதெல்லாம், விருந்து ஓம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு - விருந்தினரைப் பேணி அவர்க்கு உபகாரம் செய்தற்பொருட்டாம்.

கருத்து

இல்வாழ்க்கை, விருந்ினரை ஓம்புதற்கென்க.

விருத்தி

இப்பாட்டு இல்வாழ்க்கைக்கும் விருந்தோம்பலுக்கும் உள்ள தொடர்பை உணர்த்துகிறது.

## இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம்

இல் இருந்து - வீட்டில் தங்கி ; இல்லந்துறந்து காட்டுக்கேகாது என்றபடி.

ஓம்பி - வளர்த்து ; (அன்பை) வளர்த்து ; " கற்றுங்கெரியோம்பி "—ஞானசம்பந்தர் ; 'பொருளைப் போற்றி' என்றனர் மணக்குடவரும், பரிமேலழகரும்.

" வாழ்வது எல்லாம் " : ஒருமை பன்மை மயக்கம் என்பர் இலக்கணப் புலவோர்.

வாழ்வது - வாழ்தல், வாழ்க்கை.

வாழ்வது எல்லாம் - வாழ்தல் எல்லாம் ; வாழ்க்கையெல்லாம்; வாழ்க்கையினின்றும் பிறக்கும் எல்லாச் செயல்களும் ; வாழ்க்கைச் செயல்களெல்லாம்.

## இ ல் இ ரு ந் து

மக்கள் வாழ்வு எங்கே நடாத்தல் வேண்டும்? வீட்டிலா? காட்டிலா? வீட்டில் என்பார், " இல் இருந்து " என்றார்.

இல்லிருத்தல் இயற்கை; அதை விடுத்துச்செல்லல் செயற்கை. இயற்கை வாழ்வு இல்வாழ்வு ; அதாவது கூட்டு வாழ்வு. செயற்கை வாழ்வு தனிமையது.

## ஓ ம் பி

கூட்டு வாழ்வில் அன்பு வளரும் ; தனித்த வாழ்வில் தன்னலமே வளரும்; பரநல அன்பு வளராது. கூட்டு

வாழ்வாகிய இல்வாழ்வில் அன்பு வளர்தலை, "ஓம்பி" என்னுஞ் சொல்லால் உணர்த்துகிறார்.

## வாழ்வதெல்லாம்

"வாழ்வதெல்லாம்" - "ஓம்பி வாழ்வதெல்லாம்" - "இருந்து ஓம்பி வாழ்வதெல்லாம்" - "இல்லிருந்து ஓம்பி வாழ்வதெல்லாம்". இல்லிலிருந்து அன்பு வளர்கிறது. அன்பினின்றும் வாழ்க்கை மலர்கிறது. அன்பினின்றும் மலரும் வாழ்க்கை எத்தகையதாயிருக்கும்? நெல்கமுகாய் நீளுமோ? அன்பினின்றும் மலரும் வாழ்க்கை அன்புடையதாகவே யிருக்கும்.

வாழ்க்கையினின்றும் பிறக்குஞ் செயல்களை அளவிடுதல் இயலுமோ? எவ்வளவோ பிறக்கும்! அதுபற்றியே "எல்லாம்" என்றார்.

## அன்பும் செயலும்

ஒரு சுரை விதை மண்ணில் நடப்படுகிறது. அதனின்றும் எத்தனையோ சுரைக் காய்கள் தோன்றுகின்றன. அவைகளெல்லாம் சுரையேயன்றி வேறல்ல. அதேபோல் அன்பினின்றும் பிறக்கும் வாழ்க்கைச் செயல்களெல்லாம் அன்புடையனவே யாகும்; வேறாகா. ஆகவே "வாழ்வதெல்லாம்" என்பதை அன்பு வாழ்க்கைச் செயல்களெல்லாம் என்று கொள்க.

அகத்திலுள்ள அன்பு, வாழ்க்கையாய்ச் செயல்களாகிறது. அன்புச் செயல்கள் தம் நலம் அற்றன. அச்செயல்கள் மற்றவர்க்கே பயன்படுவனவாம். அன்புச் செயல்களெல்லாம் மற்றவர்க்குப் பயன்படுதலை, "விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு" என்பதால் அறிவுறுத்துகிறார்.

## விருந்தோம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு

*விருந்து - புதுமை ; இங்கே புதியவர் : ஆகுபெயர் ; " வெல்புக மூலகேத்த விருந்துநாட் டுறைபவர் "*—கலித்தொகை : *உசு : கஉ ; " மெலிய ரல்லோர் விருந்து புனலயர "*—பரிபாடல் : *சு : சo.*

*ஓம்பி - பேணி, போற்றி, உபசரித்து. " தடியுங் கிழங்குந் தண்டினர் தரீஇ - ஓம்புந ரல்லது உடற்றுந ரில்லை "*—மலைபடுகடாம் : 425 - 6.

*வேளாண்மை - உபகாரம் ; " கேளல்கேளிர் வேளாண் சிறுபதம் "*—புறநானூறு : *எச : ச ; " வேளாண்மை செய்தனகண் "*—கலித்தொகை : *கoக : சசு.*

*பொருட்டு - நிமித்தம்.*

## விருந்தோம்பி வேளாண்மை

*" விருந்து " புதியவரைக் குறிப்பது ; " ஓம்பி " புதியவரை உபசரிப்பதைத் தெரிப்பது ; " வேளாண்மை " புதியவரை உபசரிக்கும் உபகாரத்தை உணர்த்துவது.*

*மனைவி மக்கள் முதலிய சுற்றத்தாரை உபசரிப்பதில் தற்பயனுண்டு ; மற்றவரை உபசரிப்பதில் தற்பயனில்லை. இஃதே அன்புச் செயல் ; வேளாண்மை. விருந்தினரை ஓம்புவது சிறந்த வேளாண்மையாகும்.*

*விருந்தோம்பும் வேளாண்மை யுடையவர் தம் சுற்றத்தவரையும் தற்பயன் கருதாது பாதுகாப்போராவர் என்பதும் ஈண்டுக் குறிக்கத்தக்கது.*

*வேளாண்மை யுடையார் யார் ? விருந்தோம்புவோர் ; விருந்தோம்புவோர் உயிர்கட்குச் செந்தண்மை பூண்டொழுகுவோர் என்பது மேலே விளக்கப்பட்டது.*

## நோக்கமும் பயனும்

இருந்தோம்பி இல்வாழ்வது எற்றுக்கு? விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு. இல்வாழ்க்கையின் நோக்கம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற்கென்க.

இல்வாழ்க்கையால் விளையும் பயன் அன்பு வளர்ச்சியால் தன்னலமழிந்து எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு வாழ்வதென்க. இவ்வதிகாரத்தில் அந்நிலை ஒவ்வொரு பாட்டில் ஒவ்வொரு விதமாகப் பேசப்படுதல் காண்க. (க)

## 82

*விருந்து புறத்ததா தானுண்டல் சாவா*
*மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.*

### பொருள்

விருந்து புறத்தது ஆ - விருந்தினர் (வீட்டின்) புறத்திருப்ப, தான் உண்டல் - தான் உண்பது, சாவாமருந்து எனினும் - சாவை யொழிக்கும் அமிழ்தமாயினும், வேண்டல் பாற்று அன்று - (அவ்வுண்டல்) விரும்புந் தன்மையதன்று.

### கருத்து

விருந்திருக்க உண்ணுதல் கூடாது.

### விருத்தி

மேற்பாட்டில் இல்வாழ்க்கையின் நோக்கம் விருந்தோம்பல் என்பது விளக்கப்பட்டது. இப்பாட்டில் அந்நோக்கம் விருந்தினரை விடுத்து இல்வாழ்வான் உண்ணலாகாது என்னும் முறையில் வலியுறுத்தப்படுகிறது.

'விருந்தினர் இற்புறத்தினராகத் தானே யுண்டல் சாவாமைக்கு உண்ணும் மருந்தாயினும் வேண்டும் பகுதியுடைத்தன்று' —மணக்குடவர்.

‘உண்ணப்படும் பொருள் அமிர்தமே யெனினும் தன்னை நோக்கி வந்த விருந்து தன் இல்லின் புறத்ததாகத் தானே அதனையுண்டல் விரும்புதன் முறைமை யுடைத்தன்று’—பரிமேலழகர்.

**விருந்து புறத்ததா........வேண்டற்பாற்றன்று**

*விருந்து - விருந்தினர்; நாடிவந்த விருந்தினர்.*

*புறத்ததுஆ - புறத்தினராக; வீட்டின் புறத்திருப்ப. ஆக என்பதன் தொகுத்தல் ஆ.*

*சாவா மருந்து - ‘சாவாமைக்குக் காரணமாகிய மருந்து’; அமிழ்தம்; அமிர்தம்; கற்பமுமாம்.*

## விருந்தோடுண்ணல்

*தானுண்டல் சாவா மருந்தெனினும் அதைத் தானே யுண்டல் வேண்டற்பாற்றன்று என்று கொள்க. எதையும் விருந்தோடுண்ணல் வேண்டுமென்பது கருத்து.*

*“விருந்தின்றியே ஒருகால் தானுண்டலைச் சாவா மருந்தென்பாருளராயினும், அதனை ஒழிக என்றுரைப்பினும் அமையும்”—இது* பரிமேலழகர் *குறிப்புரையிலுள்ளது.*

## தமிழ்நாடும் விருந்தோம்பலும்

*விருந்தினரை விடுத்து உண்ணுதல் கூடாதென்பது பொது அறம். விருந்தோம்பலில் தமிழ்நாடு பேர் பெற்றது. பழந்தமிழ் மக்கள் விருந்தோம்பலை வாழ்க்கையின் உயிர் நாடியாகக் கொண்டமை அக்கால நூல்களால் நன்கு தெரிகிறது. பழந்தமிழ் நூல்களில் விருந்து மணமே பெரிதுங் கமழ்ந்துகொண் டிருக்கிறது. விருந்தோம்பலின் இன்றியமையாமை மேற்பாட்டில் வலியுறுத்தப்பட் டிருக்கிறது.*

### அறவோர் இயல்

நல்லன யாண்டுத் தோன்றினுலென்ன? அவை நாளடை வில் மன்பதைக்குப் பொதுமையாகும். நல்லனவற்றைப் பொதுமையாக்க அறவோர் முயல்வது இயல்பு. ஒரு சிறப் புப் பிறந்த இடத்தையே உளங்கொண்டு அவ்விடத்துக்குப் பெருமைதேட முயல்வது அறிவுடைமையாகாது. அச் சிறப்பை மன்பதைக்குப் பொதுமையாக்க முயல்வதே அறி வுடைமை. திருவள்ளுவர் தாம் தமிழ் நாட்டிற்கண்ட விருந் தோம்பல் முறையை மன்பதைக்கே உரியதாக்க வேண்டு மென்று இவ்வதிகாரத்தை அருளியிருப்பர் என்றுங் கூற லாம்.

திருவள்ளுவர் காலத்தில் பலதிற நாகரிகம் நாட்டிடை நுழைந்தமைக்குச் சான்றுகளிருக்கின்றன. அவைகளுள் நல் லன அறிஞரால் ஏற்கப்பட்டன; தீயன கடியப்பட்டன. விருந்தோம்பலில் ஒருவிதப் புதுமுறை அந்நாளில் தலை காட்டியிருக்கும். அதைக் கடியும் முறையில் இத்திருக்குறள் பிறந்திருக்கலாம்.

### வகுப்புப் பாகுபாடும் விருந்தோம்பலும்

திருவள்ளுவர் காலத்துக்கு முன்னரே மன்பதையில் தொழில்பற்றி நிலவிக் கொண்டிருந்த பாகுபாடுகள் சில விடங்களில் பிறப்புப்பற்றி நிலவலாயின. பிறப்பை யொட்டி வகுப்புப் பாகுபாடுகளிருத்தல் இயற்கைக்கு மாறுபட்ட தென்பது ஆசிரியர் கருத்து. "பிறப்பொக்கும் எல்லாவுயிர்க் கும் சிறப்பொவ்வா - செய்தொழில் வேற்றுமையான்" என வரூஉம் திருக்குறளால் ஆசிரியரின் உள்ளக் கிடக்கை இனிது புலனுகும்.

பிறப்பையொட்டி மேல் - கீழ்வகுப்புக்கள் தோன்றிய போது, சில இடங்களில் மேல்வகுப்பா ரென்றவரிடை விருந்

தினரை விடுத்து உண்ணும் வழக்கமும் உடன் தோன்றி யிருக்கும். அதைக் கடியும் நோக்குடன் இப்பாட்டை ஆசிரி யர் அருளியிருக்கலாம்.

தாம் உண்ட பின்னர் விருந்தினரைப் பேணும் வழக்கம் இந்நாளிலும் சிலரிடை இருந்து வருதல் கண்கூடு. தாம் உண்ட பின்னர் விருந்தினரைப் பேணுவது அந்தண்மையை அடிப்படையாகக் கொண்ட விருந்தோம்பலாகாது.

### புறத்ததா

விருந்தினர் புறத்திருப்ப எவரும் உண்ணுதல் கூடா தென்பது இப்பாட்டின் திரண்ட பொருள். இதை ஆசிரியர், "விருந்து புறத்ததா தானுண்டல் சாவா - மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று" என்று அழகுபட ஓதலாயினர்.

"விருந்து புறத்ததா" என்பதில் இரக்கக் குறிப்பிருத் தலை நோக்குக. விருந்தினரை விடுத்து உண்ண எப்படி மனம் இசையும் என்றபடி.

### சாவா மருந்தெனினும்

'சாதாரண உணவாயின் அதை விருந்தோடு உண்ண லாம். அசாதாரண உணவாயின் (சாவா மருந்தாயின்) அதை எப்படி விருந்துக் களிப்பது' என்னும் ஐயம் பிறக்கலாம். அவ்வையத்தைக் களையவே "தானுண்ணல் சாவா மருந் தெனினும்" என்றார். எத்தகை உணவாயினுமாக. அதை விருந்தினரை விடுத்து உண்ணுதல் கூடாதென்பது ஆசிரியர் உள்ளக்கிடக்கை. எதையும் விருந்தோடுண்ணல் வேண்டும் என்றவாறும். "மருந்தே ஆயினும் விருந்தோடுண்" என் பது ஆன்றோர் மொழி.

### விருந்தோம்பல் தன்னலங் கடந்தது

சாவா மருந்தென்று அதை விருந்தினர்க்களிக்க முந்தாது அவரை விடுத்துத் தானே உண்ணப் புகுவது அன்பின்

பாற்படுவதாகாது. அது தன்னலத்தின்பாற் படுவதாகும். விருந்தோம்பல் தன்னலங் கடந்த அந்தண்மை வாய்ந்தது. விருந்தினரை விடுத்துத் தனியே உண்பதை ஆசிரியர், "வேண்டற்பாற் றன்று" என்று நாகரிக மொழியால் கடிந் திருத்தல் காண்க. (உ)

## 83

*வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை*
*பருவந்து பாழ்படுத லின்று.*

### பொருள்

வருவிருந்து வைகலும் ஓம்புவான் - (தன் வீட்டுக்கு) வரும் விருந்தினரை நாடோறும் பேணுவானது, வாழ்க்கை- வாழ்க்கை, பருவந்து பாழ்படுதல் இன்று - (வறுமை மேலீட் டான்) வருந்திப் பாழ்படுவதில்லை.

### கருத்து

விருந்தினரை உபசரிப்பதால் வாழ்க்கை கேடுறாது.

### விருத்தி

முன் பாட்டில் விருந்தோடுண்ணல் சொல்லப்பட்டது. இப்பாட்டில் விருந்தோம்பலால் வறுமைத் துன்பமோ பிற துன்பங்களோ உண்டாகா என்பது விளக்கப்படுகிறது.

**வருவிருந்து............இன்று**

வருவிருந்து : வரும் - வருகின்ற - வந்த - விருந்தினர்.

வாழ்க்கை - 'ஆக்கம்' என்றனர் மணக்குடவர்.
பருவரல் - வருத்தம், துன்பம்.
பருவந்து - வருந்தி, துன்புற்று.

பாழ்படுதல் - கெடுதல், அழிதல், சூனியமாதல்.

"வைகலும் வருவிருந்து" எனக்கொண்டு பொருள் கூறலுமாம்.

## விருந்தால் பொருள் கிளைத்தல்

இடையீடின்றி நாடோறும் விருந்தோம்புவானைப் பற்றிக் கூறுவது இக்குறள். இக்குறள், 'நாடோறும் விருந்தோம்புவோன் வாழ்க்கை,பொருள் முடையால் கெடுமன்றோ' என்று எண்ணுவோர்க்குப் பதிலிறுப்பது.

'நாள்தோறும் விருந்தோம்புவானுக்கு அதனால் பொருள் தொலையாது மேன்மேற் கிளைக்கும் என்பதாம்'- இது பரிமேலழகர் குறிப்பு.

## வருவிருந்து

ஆசிரியர் "விருந்து" என்னாது, "வருவிருந்து" என்றது கருதற் பாலது. "வரும்" என்பதிலுள்ள தொனியை உன்னுக. அதில் தம்மைப் பேணுவோன் நிலையுணர்ந்தே அவனை நோக்க விருந்தினர் மனங்கொள்வர் என்பது தொனித்தல் காண்க.

## விருந்தினர் நிலை

விருந்தினர் என்போர் பெரிதும் எவர் வீடு நோக்குவர்? தம்மை அகமலர்ச்சியுடன் பேணுவோர் வீடு நோக்குவர்; ஏனையோர் வீட்டில் அடியெடுத்தும் வையார். விருந்தினர் மனோநிலையை, "மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து - நோக்கக் குழையும் விருந்து" என்று ஆசிரியர் இவ்வதிகாரத்திலேயே விளக்கியிருத்தலை யோர்க.

"வைகலும்" என்பது அன்பையும் சலிப்பின்மையையும் உணர்த்துவது.

## விருந்தும் சலிப்பும்

ஒருவன் ஒரு செயலை இடைஇடை விட்டுவிட்டு நிகழ்த்தி ஞல் அவனுக்கு அதனுல் சலிப்புத் தோன்றுவதில்லை. அவன் அச்செயலை இடையீடின்றி நிகழ்த்திஞல் அவனுக்கு அதன் கண் சலிப்புத் தோன்றுதல் இயல்பு. 'அளவுக்கு மிஞ்சிஞல் அமுதமும் நஞ்சாம்' என்பது முதுமொழி.

ஆனால் நாடோறும் விருந்தோம்புவதில் சலிப்புத் தோன்றுவதில்லை. என்னை? அதனடியில் அன்பு எழுச்சி யுண்மையான் என்க. அன்பை அடிப்படையாக் கொண்ட எச்செயலும் சலிப்பை உண்டு பண்ணுது. அன்பற்ற செயலே இடையிடைச் சலிப்பை உண்டுபண்ணும். இந்நுட்பம் "ஓம்புவான்" என்பதில் பொலிகிறது.

## ஓம்புதல் நுட்பம்

"ஓம்புதல்" என்னுஞ் சொல், பொருள் பொதிவுடையது. அன்புக் கிளர்ச்சியால் அகமலர்ந்து உபசரித்தலே - பேணுதலே - ஓம்புதல் என்பது. போலி உபசரிப்பு ஓம்புதலாகாது.

ஆதலால் வரும் விருந்தினரை வைகலும் ஓம்புவதால் சலிப்பு உருதென்க.

## பொருள்முடை

நாடோறும் விருந்து ஓம்புவோனுக்குச் சலிப்பு உருமல் இருக்கலாம். ஆனால் அவனுக்குப் பொருள்முடை நேராதிருக்குமோ?

விருந்து ஓம்புதலுக்குப் பொருள் இன்றியமையாதது. திருவள்ளுவர் அறத்துக்கும் இன்பத்துக்கும் பொருள் தேவை என்பதை நன்குணர்ந்தவர். இல்லையேல் அவர் 'பொருட்பால்' அருளியிரார்.

**முயற்சி**

நாடோறும் விருந்தோம்புவோர் சோம்பேறியாயிரார். அவர் முயற்சி யுடையராகவே யிருப்பர். அவர்தம் முயற்சிக்கு ஆண்டவன் துணைசெய்துகொண்டே யிருப்பன். ஆண்டவனருளால் அவனுக்குப் பொருள் பெருகிக் கொண்டே போகும். பொருள்முடை அவனுக்கு உண்டாகாது.

"முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்பது ஆன்றோருரை. ஆசிரியர் தமது அருமைத் திருக்குறளில், "ஆள்வினை யுடைமை" என்றோர் அதிகாரம் அருளியுள்ளனர். அதை நோக்குவோர்க்கு ஆசிரியர் 'முயற்சி'யில் எவ்வளவு உறுதியுடையார் என்பது நனி விளங்கும். அவ்வதிகாரத்தில் "தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே - வேளாண்மை என்னுஞ் செருக்கு" என்றும், "தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை - வாளாண்மை போலக் கெடும்" என்றும், "முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை - இன்மை புகுத்தி விடும்" என்றும், "தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன் - மெய்வருந்தக் கூலி தரும்" என்றும் போந்துள்ள பாக்களைப் பார்க்க.

முயற்சி வேண்டும். முயற்சியில் ஆண்டவன் அருள் தானே மருவும். ஆண்டவன் அருளால் பொருட்செல்வம் தானே பெருகும். பெருகும் பொருளைக் கொண்டு விருந்தோம்புதல் வேண்டும். விருந்தோம்பாது வேறு தீய வழியில் பொருளைச் செலவழித்தால் பொருள்முடை யுண்டாகும்; வாழ்க்கை பாழ்படும்.

விருந்தோம்புவோர் முயற்சியுடையாராதலானும், அவர்தம் முயற்சியில் ஆண்டவன் அருள் மருவுதலானும், அவர்க்

குப் பொருட்செல்வம் பெருகிக்கொண்டே போகும். அவர் தம் வாழ்க்கை பாழ்படாது. இதை உளங் கொண்டதே, "......வாழ்க்கை பருவந்து பாழ்படுவதின்று" என்னுந் திருமொழி.

## பருவந்து பாழ்படுவதின்று

எவர் வாழ்க்கையில் துன்பம் புகும்? விருந்தோம்பா தார் வாழ்க்கையில் என்க. இது பற்றியே "பருவந்து" என்றார்.

பருவரல் புகும் வாழ்க்கை பாழ்படும். பாழ்படலாவது ஒன்றுமில்லா தொழிவது.

"...........வாழ்க்கை" செம்மையுறும் என்னும் பொருள் தரும் சொற்களைப் பெய்யாது, "பருவந்து" - "பாழ் படுவது - என்னுஞ் சொற்களைப் பெய்து, முடிவில், "இன்று" என்பதை ஏன் பெய்தல் வேண்டும்?

## எச்சரிக்கையும் கருணையும்

பொருளைத் தீய வழியில் செலவழிப்பது செல்வர் இயல்பு. அவருக்கு எச்சரிக்கை செய்யவேண்டி, "பருவந்து-பாழ்படுவது" என்னுஞ் சொற்களைப் பெய்யலாயினர். இத னுல் விருந்தோம்புமாறு அவர்க்கு நல்லறிவு கொளுத்தியவா ரும். விருந்தோம்பாதார் நிலையைக் குறிப்பால் உணர்த் தினுல் உலகம் நல்வழியில் திரும்பும் என்னுங்கருணை மேலீட் டான் "பருவந்து பாழ்படுவது" என்று அருளி, மேலே தொடர்ந்து "இன்று" என்று அருளினர்.

"பருவந்து பாழ்படுவ" தென்பதை எச்சரிக்கை மொழியாகவும், "இன்று" என்பதைக் காப்பு மொழியாக வுங் கொள்க.

மாறனார்

விருந்தோம்பலால் பேறுபெற்றவர் வரலாறுகள் பல உண்டு. இளையான்குடிமாறனார் முதலியோர் வரலாறுகளை நோக்குக. விருந்தோம்பலின் மாண்பை மாறனார் வாயிலாக உலகுக்கு விளக்கும் பொருட்டு ஆண்டவன் அவரைச் சோதனைக்கு உட்படுத்தினன். அப்போதும் அவர் விருந்தோம்பலினின்றும் வழுக்கி வீழ்ந்தாரில்லை.

“ஆறு நாயகர் அன்பர் ஆனவர் அளவி லார்உள மகிழவே
நாளு நாளுநி றைந்து வந்து நுகர்ந்த தன்மையின் நன்மையால்
நீளு மாநிதி யின்ப ரப்பு நெருங்கு செல்வம் நிலாவிஎண்
தோளி னார்அள கைக்கி ருத்திய தோழ னாரென வாழுநாள்”

“செல்வம் மேவிய நாளில் இச்செயல் செய்வ தன்றியும் மெய்யினால்
அல்லல் நல்குர வான போதினும் வல்லர் என்றறி விக்கவே
மல்லல் நீடிய செல்வம் மெல்ல மறைந்து நாள்தொறும் மாறிவந்
தொல்லை யில்வறு மைப்ப தம்புக உன்னி னார்தில்லை மன்னினார்”

“இன்ன வாறுவ ளஞ்சு ருங்கவும் எம்பி ரான்இளை யான்குடி
மன்னன் மாறன்ம னஞ்சு ருங்குதல் இன்றி உள்ளன மாறியும்
தன்னை மாறிஇ றுக்க உள்ளக டன்கள் தக்கன கொண்டுபின்
முன்னை மாறில்தி ருப்ப ணிக்கண் முதிர்ந்த கொள்கைய ராயினார்”

முதற் பாட்டு விருந்தோம்பலால் செல்வம் பெருகுதலை உணர்த்துவது; இரண்டாம் பாட்டு ஆண்டவனருளால் நேர்ந்த சோதனையை அறிவிப்பது; மூன்றாம் பாட்டு விருந்தோம்புவோரின் உறுதியைத் தெரிவிப்பது. மாறனார்க்கு வறுமை விருந்தோம்பலால் நேரவில்லையென்றும், ஆண்டவனருளால் அது நேர்ந்ததென்றும் தெளிவு செய்துகொள்க.

விருந்தோம்புவோர் வாழ்க்கை பருவந்து பாழ்படுவதில்லை. எப்படி? வரும் பாக்களை நோக்குக. (௩)

## 84

*அகனமர்ந்து செய்யா ளுறையும் †முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

### பொருள்

முகன் அமர்ந்து நல்விருந்து ஓம்புவான் இல் - முக மலர்ந்து நல்விருந் தோம்புவோன் வீட்டில், அகன் அமர்ந்து செய்யாள் உறையும் - மனமகிழ்ந்து திருமகள் வீற்றிருப்பள்.

### கருத்து

விருந் தோம்புவோன் வீட்டில் செல்வம் பெருகிக் கொண்டே யிருக்கும்.

### விருத்தி

விருந்தோம்புவோன் பொருள் முடையால் வருந்து வதில்லை என்பது மேற்பாட்டில் சொல்லப்பட்டது. இப் பாட்டில் அவனது பொருள் கிளைத்தல் சொல்லப்படு கிறது.

'பொருள் கிளைத்தற்குக் காரணங் கூறியவாறு' என்பது பரிமேழலகர் குறிப்பு.

**முகனமர்ந்து நல்விருந் தோம்புவா னில்**

முகம் - முகன்.

அமர்ந்து - பொருந்தி, விரும்பி, மகிழ்ந்து, மலர்ந்து.

பொருத்தத்தில் விருப்பும், விருப்பில் மகிழ்வும், மகிழ்வில் மலர்தலும் பிறங்குவது இயல்பு. "உவந்த உள்ளமொ டமர்ந்தினிது நோக்கி"—மலைபடுகடாம் : 560 ; "வண்புலக் கேளிர்க்கு வருவிருந் தமரும்"—புறநா னூறு : சஉ.

பா - ம்—*அகமலர்ந்து. †முகமலர்ந்து.

முகன் அமர்ந்து - 'முகம் இனியனாய்' என்றனர் பரிமேலழகர்.

நல்விருந் தோம்புவான் - நல்ல விருந்தோம்புவோன்; நல்ல முறையில் விருந்தோம்புவோன்; விருந்தினர் மனம் சிறிதும் எக்காரணம் பற்றியும் திரியா முறையில் விருந் தோம்புவோன் என்றபடி; பயன் கருதாது விருந்தோம்பு வோன் என்பது நுட்பம்.

"நல்விருந் தோம்புவான்" என்பதற்குப் பரிமேலழ கர், 'தக்க விருந்தினரைப் பேணுவோனது' என்று பொருள்கூறி, 'தகுதி-ஞான வொழுக்கங்களால் உயர்தல்' என்ற குறிப்பும் பொறித்துள்ளனர்.

## முகனமர்ந்து

முகனமர்ந்து - முகம் மலர்ந்து. முகம் எப்பொழுது மலரும்? அன்பால் அகம் மலரும்பொழுது முகமும் மலரும். அகம் மலராத இடத்து முகமும் மலராது. அகத்தின் பருமை முகம். அகத்தின் நிலையை முகம்போல முன் னுரைப்பது வேறில்லை.

ஆகவே, ஈண்டு 'முகனமர்தல்' என்றது, அகனமர்தலை யும் உட்கொண்டதென்க.

விருந்தினரை மகிழ்விப்பது விருந்தோம்புவோனின் முகமலர்ச்சியாதலின், "முகனமர்ந்து" என்றார்.

## நல்விருந்தோம்புவான்

ஆசிரியர் "விருந்தோம்புவான்" என்று கூறாது, "நல் விருந்தோம்புவான்" என்று கூறியது சிந்திக்கற்பாலது.

"நல்" விருந்தினருக்கு அடையாக நிற்கிறதா? விருந் தோம்புவானுக்கு அடையாக நிற்கிறதா? உன்னுக.

"நல்" என்பதற்குப் பரிமேழலகர் கண்ட உரையும் பொறித்த குறிப்பும் மேலே எடுத்துக் காட்டப்பட்டன. "நல்" விருந்தினர்க்கு அடையாக நிற்கிறதென்று பரிமே லழகர் கருதுகிறார்.

இவ்வதிகாரம் விருந்தோம்பலைப்பற்றியது; விருந்தின ரைப் பற்றியதன்று. ஆதலின் "நல்" என்பது விருந் தோம்புவோன் தன்மையை விளக்குதற்கு ஏதுவாய் நிற்கிற தென்று கொள்வது பொருத்தமுடையதாகும்.

"நல்" என்பது பயன் கருதாமையையும் குறிக் கொண்டு நிற்கிறது. பயன் கருதுவோன் உள்ளத்தில் அன்பு இராது; தன்னலமிருக்கும். அன்பு இல்லாத இடத்தில் அகமலர்ச்சி இராது; அகமலர்ச்சி இல்லாத இடத்தில் முக மலர்ச்சியிராது.

## இல்

"இல்" என்றார். ஏன்? அன்புக்கு நிலைக்களன் இல் வாழ்க்கையாதலின்; அன்பால் விருந்தோம்புவோனிடத்தில் என்பது நுட்பம். விருந்தோம்புவோன் இல்லில் - இல்வாழ்க் கையில் - என்றபடி.

## அகனமர்ந்து செய்யாளுறையும்

அகம் - அகன்.

அகன் அமர்ந்து - "மனம் மகிழ்ந்து" என்றனர் பரிமேலழகர்.

செய்யாள் - செம்மை ஆள், செம்மையுடையாள்.

செம்மை என்பது ஈறு கெட்டு முன்னின்ற மெய்திரிந்து 'செய்' ஆயிற்று.

செய்யாள் - திரு, திருமகள், திருவினள், நல்லாள். (பொருட் செல்வத்தையும் கல்விச் செல்வத்தையும் பெண் ணாகச் சொல்வது பல நாட்டு மரபு).

உறையும் - தங்குவள், நீங்காது தங்குவள், வாழ்வள், வீற்றிருப்பள்.

அகனமர்ந்து

விருந்தோம்புவோன் 'இல்'லில் இன்மை உறையாது. பின்னை என்ன உறையும்? திரு உறையும். எப்படி உறையும்? "அகனமர்ந்து" உறையும்.

"முகனமர்ந்து நல்விருந்தோம்புவான்" என்றார்; "அகனமர்ந்து செய்யாளுறையும்" என்றார். விருந்தோம்புவோன் முகங்கண்டே அவனது நிலையை விருந்தினர் உணர்தல் கூடுமாதலின், "முகனமர்ந்து......" என்றார். செய்யாள், நல்ல விருந்தோம்புவோனும், மற்றவரும் உணராதவாறு எழுந்தருளும் நுண்ணியளாகலின், "அகனமர்ந்து" என்றார்.

விருந்தோம்புவோன் பயன் கருதாத அன்புத் தொண்டன். தன் வீட்டில் திருமகள் எழுந்தருளல்வேண்டும் என்னும் எண்ணத்துடன் அவன் விருந்தோம்புவதில்லை. விருந்தோம்புவான் தன்னை உணர முகங் காட்டித் திருமகள் அவன் இல்லில் எழுந்தருளின், 'விருந்தோம்பலால் திருமகள் எழுந்தருள்வள்' என்னும் ஒருவிதத் தன்னல எண்ணம் தோன்றுதற்கு இடம் உண்டாகும்; திருமகள் காட்சிக் கென்று விருந்தோம்பல் உலகில் நடைபெறுவதாகும். இன்னோரன்ன பயன் கருதும் விருந்தோம்பல் உலகில் பெருகுதல் கூடாதென்பார், "அகனமர்ந்து" என்றார்.

பயன் கருதாத நல்ல விருந்தோம்புவோன் இல்லில் எவரும் உணராதவாறு செய்யாள் எழுந்தருளி நலஞ் செய்வள் என்றபடி.

## செய்யாள்

விருந்தோம்பலுக்குப் பொருள் தேவை. பொருளுக்கு முயற்சி தேவை. முயற்சிக்குத் திருவினுள் துணை வேண்டும். முயற்சி யுள்ளவிடத்தில் கடவுள் அருள் நிலவுதல் மேற்பாட்டு விருத்தியில் சொல்லப்பட்டது.

இறைவன் ஒருவனே. அவன் பல கூறுடையவன். இங்கே பொருள் முயற்சியில் அவன் செய்யாளாகித் துணை செய்கிறான். "முயற்சி திருவினையாக்கும்" என்றார் பிறண்டும்.

செய்யாள் - செம்மையாள் ; நல்ல விருந்தோம்புவோனில்லில் வெம்மை இன்மை புகாதவாறு செம்மை நலஞ் செய்துகொண்டிருப்பவள்.

## உறையும்

நல்ல விருந்தோம்புவோன் இல்லில் செய்யாள் வீற்றிருப்பதை "உறையும்" என்று ஆசிரியர் கூறுகிறார். அதன் குறிப்பு என்னை? என்றும் நீங்காதிருத்தலென்க. நல்ல விருந்தோம்புவோன் இல்லில் இன்மை நுழைந்தது என்னும் எண்ணம் தோன்றுதற்கே இடம் நேராதவாறு செய்யாள் செம்மை நலம் செய்துகொண்டிருப்பள். இதை யுணர்த்தவே, "உறையும்" என்றனர்.

நல்ல விருந்தோம்புவோன் இல்லில் செல்வம் பெருகிக் கொண்டிருக்கும் என்றபடி. மற்றவன் வீட்டு நிலையைச் சொல்ல ஆசிரியர் விரும்பவில்லை. முகனமர்ந்த நல்ல விருந்தோம்பல் உலகில் நடைபெற வேண்டுமென்பதும், உலகம் செய்யாள் உறைவிடமாகவே பொலிதல் வேண்டுமென்பதும் ஆசிரியர் வேட்கை. (௪)

## 85

*வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி*
*மிச்சின் மிசைவான் புலம்.*

### பொருள்

*விருந்தோம்பி - விருந்தினரை உபசரித்து, மிச்சில் மிசைவான் - மிகுந்ததை உண்பவனது, புலம் - கழனியிலே, வித்தும் இடல்வேண்டும் கொல்லோ - விதையும் இடுதல்வேண்டுமோ ?*

### கருத்து

*விருந்தோம்பி உண்பவனது நிலம் தானே விளையும்.*

### விருத்தி

*விருந்தோம்புவான் வீடு செல்வத்திற் சிறந்தே விளங்கும் என்று முற்பாட்டு முழங்குகிறது. அச்செல்வம் வரும் வழியை இப்பாட்டுக் குறிக்கிறது.*

**வித்தும்........புலம்**

*மிச்சில் - மிஞ்சு : பகுதி. மிச்சில் - மிகுந்ததை ; மிச்சத்தை ; எஞ்சியதை ; "வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு - விருந்துண் டெஞ்சிய மிச்சில்..."—குறிஞ்சிப் பாட்டு : 205-6.*

*மிசைவான் - உண்பவனது ; "கரும்பின் தீஞ்சாறு விரும்பினிர் மிசைமின் "*—பெரும்பாணாற்றுப்படை : 262.

*புலம் - கழனியில், விளைநிலத்தில்.*

*வித்திடல்-விதை விதைத்தல். வேண்டும் கொல்லோ - வேண்டுமோ ? வேண்டுவதில்லை என்றபடி.*

*" 'தானே விளையும்' என்பது குறிப்பெச்சம் " என்பர்* பரிமேலழகர்.

கொல் : ஐயம் ; ஓ : எதிர்மறை. இரண்டும் ஒன்று பட்டு வேண்டாமையைத் தொனிக்கச் செய்கின்றன.

'கொல்'லை அசையாகக் கொள்வோரும் உளர்.

## பிறர்க்கென வாழல் - தனக்கென வாழல்

விருந்தொடு உண்ணலும், விருந்தோம்பிய பின்னர் உண்ணலும் மரபு. இங்கே பின்னையது குறிக்கப்பட்டது.

ஆசிரியர், "விருந்தோம்பி" என்றருளி, மேலுந் தொடர்ந்து, "மிச்சில் மிசைவான்" என்றருளியதை உற்று நோக்குக.

"விருந்தோம்பி" என்பது, தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்தலை உணர்த்துவது.

"மிச்சில் மிசைவான்" என்பது, "விருந்தோம்ப"லுக்கென்று தான் வாழ்தலை உணர்த்துவது.

மக்கட்பிறவி தாங்கினோர் தமது நலமே கருதி வாழ்தலாகாது ; பிறர் நலத்துக்குத் தாம் வாழ்வதாகக் கருதியொழுகல் வேண்டும். இஃதே அறம். இவ்வறம் இக்குறட்பாவில் விளங்குதல் காண்க.

தனக்கென ஒருவன் வாழ்தல் கூடாதென்பதை "விருந்தோம்பி" என்றும், விருந்தோம்பலுக்கென்று தன்னையும் ஓம்புதல் வேண்டுமென்பதை, "மிச்சில் மிசைவான்" என்றும் விளக்கியவாறும்.

## புலத்தில் வித்திடல்

புலம் : இங்கே விளை நிலத்தின்மேலது. வித்திடும் இடம் விளைநிலம் என்று சொல்லவேண்டுவதில்லை. வித்திடல் என்பதைக்கொண்டே, "புலம்" என்பதற்குக் கழனி என்று பொருள் கூறப்பட்டது. விருந்தோம்பலுக்கு வேண்டப்படுந் தானியத்தை அளிப்பது புலமன்றோ ?

விருந்தோம்பலுக்குத் தானியம் வேண்டும். தானியம் பெறுதற்குப் புலத்தில் வித்திடல் வேண்டும். வித்திடாமல் தானியம் பெறுதல் அரிது. இங்கே ஆசிரியர், "வித்தும் இடல் வேண்டுங் கொல்லோ" என்று கூறுகிறார். இஃது இயற்கைக்கு அரண் செய்வதா? முரண் செய்வதா? உன்னுக. இயற்கைக்கு முரண்படுவதென்று எவருங் கூறுவர். இயற்கைக்கு முரண்படுவதொன்றை ஆசிரியர் குறிப்பிட்டதென்னை? இதற்குப் பலதிறக் கருத்துக்களை வெளியிடலாம்.

மணக்குடவர், 'பொருள் வருவாயாக இயற்றுமிடம் நன்றாகப் பயன்படும் என்றவாறு' என்று விளக்கஞ் செய்தனர்; 'தானே விளையும்' என்று பரிமேலழகர் குறிப்புப் பொறித்தனர்.

## கடவுள் அன்பால்

கடவுளுண்மையில் உறுதியுடையார் மிக எளிதில் பதி விறுத்தல் கூடும். விருந்தோம்பி மிச்சில் மிசைவான், தானோ அல்லது தன்னைச் சேர்ந்தவரோ புலத்தில் விதையிட முயல வேண்டுவதில்லை என்றும், தெய்வமே விதையிட்டுப் பயிர் செய்யும் என்றும் அவர் கூறுப.

அன்னார், "வித்தின்றி நாறு செய்வானும்"; "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என வரூஉம் ஆன்றோர் மொழிகளையும், சில வரலாறுகளையும் எடுத்துக் காட்டுவர்.

கடவுட் பற்றுடையார் நம்பிக்கையால் எல்லாஞ் செய்ய வல்லவராவர். பெரியோர் பலர் செய்த அற்புதங்களை ஈண்டு நினைவூட்டிக் கொள்க.

விருந்தோம்பலுக்கென்று தன் உடல் பொருள் ஆவியை அர்ப்பணஞ் செய்த ஒருவனது உடல் பொருள் ஆவியைக் காக்கும் பொறுப்புக் கடவுளினுடையது. அவன் புலத்தில் கடவுளருள் வித்தின்றியும் விளைவுசெய்யும்.

விருந்தோம்பலுக்கென்று நெல் விரும்பிய பரவையார்க்குக் குண்டையூர்க்கிழார் வாயிலாக ஆண்டவன் நெற்களஞ்சியத்தை நல்கியதுபோன்ற நிகழ்ச்சிகள் சிலவற்றை ஈண்டுக் குறிக்கலாம். நெல்லுக்கென்று அம்மையார் புலத்தில் விதையிடவில்லை; ஆனால் விரும்பிய நெல்லைப் பெற்றனர். காரணம் அவர் விருந்தோம்பல்மீது கொண்ட அன்பேயாகும். இது கடவுட் பற்றுடையார் கருத்துக்குத் துணைபோவது.

## எண்ணத்தால்

எண்ணத்தின் ஆற்றலும் ஈண்டு உன்னற்பாலது. ஈண்டு எண்ணம் என்றது சாதாரணமாகத் தோன்றி நின்று எழுந்து வீழ்ந்தொழிவதன்று. ஆழ்ந்த - மிக ஆழ்ந்த - மனத்தினின்றும் முகிழ்ப்பதே மேலே எண்ணம் என்று குறிக்கப்பெற்றது. இவ்வாழ்ந்த எண்ணமுடையார் வித்தின்றியும் விளைவு காணலாம். இஃது எண்ணமே எல்லாம் என்னும் வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்டது.

ஓர் ஊரில் ஒரு நல்ல விருந்தோம்புவோன் இருக்கிறான். இரவு பகல் அவன் எண்ணமெல்லாம் விருந்தோம்பலிலேயே படிந்து கிடக்கும். விருந்தோம்பலிலன்றி வேறொன்றில் அவன் கருத்துச் செல்வதில்லை.

அவன் வீட்டுவழியாகப் போவோர் வருவோர் பலவாறு பேசுவதுண்டு. சிலர், 'என்ன இவன் விருந்தோம்புதலிலேயே காலங் கழிக்கிறான். இவன் விளை நிலம் என்னாகும்? அது விளைந்தால்தானே இவன் விருந்தோம்பல் கூடும்' என்று பேசுகிறார். அதற்குச் சிலர், 'அவன் ஏன் விளைநிலம் போதல் வேண்டும்? அது தானே விளையும்' என்று பதிலிறுக்கிறார். இதையே பலர், 'ஆமாம்; அவன் புண்ணியவான்; அவன் நிலம் தானே விளையும்' என்று ஆதரித்துப் பேசுகிறார். இஃதொருவித உலக வழக்கு.

அறத்தால்

அறவோர் ஒருவர் இருக்கிறார். அவர் புலங்கள் பக்கம் போவதில்லை. ஆனால் புலங்களெல்லாம் நன்கு விளையும்; தானியங்கள் மலை மலையாக வந்து குவியும். அவரைப்பற்றி உலகம் என்னென்ன பேசும்? 'என்ன இவர் வீட்டைவிட்டசைவதில்லை. நெல் போர்போராகக் குவிகிறதே' என்று ஒருவகை உலகம் பேசும்; மற்றொரு வகை உலகம், 'அவரேன் புலங்களுக்குப் போதல் வேண்டும்? எல்லாம் தாமே நடக்கும்' என்று சொல்லும். 'எல்லாம் தாமே நடக்கும்' என்பதன் பொருளென்னை? கடவுளருளால் நடக்குமென்பதா? இயற்கையாகவே நடக்குமென்பதா? மற்றவர் முயற்சியால் நடக்குமென்பதா? அறம் எல்லாஞ் செய்யும்.

உலக வழக்கு

உலக வழக்கை யொட்டிப் பொருள் கொள்வோர், '...மிசைவான் - வித்தும் (அவன் கையால்) இடல் வேண்டுங் கொல்லோ' என்று கொள்வாராக.

'பொருள் வருவாயாக இயற்றுமிடம் நன்றாகப் பயன் படும் என்றவாறு' என்பது மணக்குடவர் விளக்கம்.

உலகம் பலபட்டது. பலபட்ட உலகம் பலவாறு கொள்ளும் முறையில், 'வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ .........' என்றார். (ரு)

86

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

பொருள்

செல்விருந்து ஓம்பி - வந்த விருந்தினரைப் பேணி, வருவிருந்து பார்த்திருப்பான் - இனி வரும் விருந்தினரை எதிர் பார்த்திருப்பவன், வானத்தவர்க்கு நல்விருந்து உயர்ந்தவர்க்கு நல்ல விருந்தாவன்.

## கருத்து

விருந்தோம்புவோன் பெரியோருக்கு இனியனுவன்.

## விருத்தி

விருந்தோம்புவோனுக்குச் செல்வம் வரும்வழி, மேலே குறிக்கப்பட்டது. இங்கே அவன் அடையும் பயன் பேசப் படுகிறது.

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்" என்பதற்கு, 'வந்த விருந்தினரைப் போற்றி, வாராத விருந் தினரது வரவு பார்த்திருக்குமவன்' என்று மணக்குடவரும், 'தன்கட் சென்ற விருந்தைப் பேணிப் பின்செல்லக் கடவ விருந்தைப் பார்த்துத்தான் அதனேடு உண்ண இருப்பவன்" என்று பரிமேலழகரும் உரை கண்டுள்ளனர்.

## செல்விருந்து........பார்த்திருப்பான்

செல்விருந்து : வினைத்தொகை; இங்கேசென்ற விருந்து. செல் - தன்கண் சென்ற, தன்னிடம் போந்த - வந்த.

"'வருவிருந்து' என்பது இடவழு அமைதி" என்பர் பரிமேலழகர்.

'செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப'

இது பொதுவிதி.

*'அவற்றுள், தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த'

*'ஏனை யிரண்டும் ஏனை யிடத்த'

இவ்விரண்டும் சிறப்பு விதிகள்.

---

*தொல்காப்பியம் : கிளவியாக்கம் : உஅ, உகூ, கூ௦.

பொது விதிப்படி 'வரு' சொல் மூன்றிடத்துக்கும் உரியதென்பதும், சிறப்பு விதிப்படி அச்சொல் தன்மை முன்னிலைக்கே உரியதென்பதும் சூத்திரங்களால் விளங்குகின்றன. இப்பாட்டில் "வரு" சொல், "விருந்து" என்னும் படர்க்கையுடன் போந்துள்ளமையான், உரையாசிரியர் 'இடவழு அமைதி' என்றார்.

ஆசிரியர் இலக்கண விதிகொண்டு, "வரு விருந்து" என்று அருளியிருப்பரோ என்பது ஐயம். தெய்வப்புலவர் இயற்கை யொலிவழியே பாடிச் செல்வர். அதற்குச் சொற்புலவோர் இலக்கணங்கூறி மகிழ்வர்.

## விருந்தோம்பலின் திறங்கள்

விருந்தோம்பல் பலதிறம். நாடோறும் ஒருவேளை விருந்தோம்பல், இருவேளை விருந்தோம்பல், வாரந்தோறும் விருந்தோம்பல், திங்கள்தோறும் விருந்தோம்பல் முதலிய பலதிறம் வழக்கிலுண்டு. இவை வரம்புக்குட்பட்ட அன்பின் வழி நிகழ்வன; நியதியின்பாற் பட்டன. நியதி கடந்த விருந்தோம்பலே சிறந்தது. அதுவே கரைகடந்த அன்பின் பெருக்கால் நிகழ்வது; அந்தண்மையால் நிகழ்வது.

இங்கே ஆசிரியர், "செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்" என்கிறார். 'செல்விருந்தோம்பல்' 'வரு விருந்து பார்த்தல்' என்று ஆசிரியர் இரண்டு குறித்துள்ளனர். இவ்வாறு கூறியதென்னை ?

நியதி கடந்த விருந்தோம்பலை அறிவுறுத்த வேண்டுமென்று ஆசிரியர் விரும்பியிருப்பர். அதுபற்றி இருவகையும் பொதுள அருளியிருப்பரென்று கொள்க.

வந்த விருந்தினரை மட்டும் ஓம்பி இனிவரும் விருந்தினரை எதிர் பாராமை ஒருவகை நியதியின்பாற்பட்ட விருந்தோம்பலாகும். ஆனால் இந்நியதிக்கும் முன்னே கூறிய

நியதிகட்கும் வேற்றுமையுண்டு. அவைகளினும் இதன்கண் அன்பு நிகழ்ச்சி அதிகமாகும்.

எவ்வகை நியதியையுங் கடந்த விருந்தோம்பலை உலகுக்கு உணர்த்தவேண்டி, ஆசிரியர், "செல்விருந் தோம்பி" என்றருளி, மேலுந் தொடர்ந்து, "வருவிருந்து பார்த்திருப்பான்" என்றருளினர் போலும்.

தன்பால்வந்த விருந்தினரை யோம்புதலுடன் இனிவரும் விருந்தினரை எதிர்பார்த்திருப்பது நியதிகளை யெல்லாங் கடந்த அன்புப் பெருக்கேயாகும்; அந்தண்மையே யாகும்.

## விருந்தோம்புவோன் நிலை

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பவன்" எவன்? எத்தகையன்? அவன் என்றும் விருந்தோம்பலி லேயே கருத்தைப்படிய வைத்திருப்பவன். அவன் நெஞ்சம் விருந்தோம்பலிலேயே திளைத்துக்கொண் டிருக்கும்.

விருந்தோம்பலிலேயே கருத்தைப் படியவைத்திருப்பவன் விருந்து வண்ணமாதல் ஒருதலை. மனிதனிடத்தில் எவ் வெண்ணம் தடிக்கிறதோ அவன் அதன் வண்ணமாதல் இயல்பு.

ஒருவன் விருந்தையே நினைக்கிறான்; அதையே பேசுகிறான்; அதையே செய்கிறான். அவன்றன் முக்கரணமும் விருந்திலேயே ஈடுபட்டுக் கிடக்கும். அவன் எவ்வண்ணத்தவனாவன்? விருந்தின் வண்ணத்தவனாவன்.

விருந்து அன்பின் பெருக்கு; அந்தண்மைச் செயல். செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பவன் அன்புப் பெருக்கில் மூழ்கினவன்; அந்தண்மைச் செயலுடையவன்; தனக்கென வாழாதவன்; பிறர்க்கென வாழ்வோன். அவன் அழுக்காறு அவா வெகுளி முதலிய தீமைகளைக் கடந்து நிற்கும் குணமலை என்று சொல்ல வேண்டுவதில்லை.

## நல்விருந்து வானத்தவர்க்கு

வானத்தவர்க்கு-உயர்ந்தோர்க்கு, பெரியோர்க்கு; 'வானி னுள்ளார்க்கு' என்றனர் பரிமேலழகர்.

பாயிரத்துள் "சிறப்பொடு பூசனை........." என்னும் பாட்டில் "வானோர்க்கு" என்னுஞ் சொல் போந்துள்ளது. ஆண்டும் அச்சொல்லுக்கு, 'உயர்ந்தோர்க்கு' என்றே பொருள் காணலானேன். அதுபற்றி விருத்தியில் விளக்கஞ் செய்துள்ளேன். விரிவு ஆண்டுப் பார்க்க.

நல் விருந்து - நல்ல விருந்து; நல்ல அமுதம்; இனிமை.

ஈண்டு விருந்து, அமுதத்தின் - இனிமையின் - மேலது.

"வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணும் இருந்தும்பி" கலித்தொகை. உக: கக.

'இக்குழந்தையின் பேச்சு எனக்கு விருந்தாயிற்று'; இப்பெண்ணின் முகம் எனக்கு விருந்தாயிற்று' என வரூஉம் வழக்காறுகளை நோக்குக.

## வானத்தவர்க்கு நல்விருந்து

வானத்தவர் - உயர்ந்தோர்; பெரியோர்; ஐம்பூத உடலொடு வாழினும் வானில் தொடர்பு கொண்டு பிறவற்றில் தொடர்பு கொள்ளாது வாழ்வோர்; உள்ளொளியர்; பிறர் நிலையை அகக் கண்ணால் உணரும் பேராற்றல் வாய்ந்தவர். அவர், செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பவனை நினைக்கவோ காணவோ நேரும்போது, அவர்தம் உள்ளத்துக்கு அவன் நல்விருந்தாகிறான் - அமுதாகிறான் - இனியனாகிறான். அவன் தேனென அவர்தம் உள்ளத்தில் விருந்தாகிறான். பெரியோர்க்கு விருந்து, செல்விருந் தோம்பி

வருவிருந்து பார்த்திருப்பவன் என்க. உலகில் பெரியோர்க்கு இனியராக வாழ்தலே சிறப்பு என்றபடி. அவ்வாழ்வைக் கூட்டுவது விருந்தோம்பல்.

"வானத்தவர்க்கு" என்பதற்கு வானிலுள்ள தேவர்க்கு என்று பொருள் கொள்வோர், "நல்விருந்தை" மறுமைப் பயனுக் கொள்வர்.

'நல்விருந்து - எய்தாவிருந்து. இதனுல் மறுமைக் கண் எய்தும் பயன் கூறப்பட்டது'—இது பரிமேலழகர் குறிப்பு. (க)

(ii) விருந்தோம்பு முறை

## 87

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

### பொருள்

அனிச்சம் - அனிச்சமலர், மோப்ப குழையும் - மோந்தால் வாடும், விருந்து - விருந்தினரோ, முகந்திரிந்து நோக்க குழையும் - முகம் வேறுபட்டு நோக்க வாடுவர்.

### கருத்து

முகந்திரிந்து விருந்தினரை ஓம்புதலாகாது.

### விருத்தி

மேற்பாக்களில் விருந்தோம்பலின் விழுப்பம் சொல்லப் பட்டது. இப்பாட்டில் அவ்விழுப்பத்தை அடைதற்குரிய முறை சொல்லப்படுகிறது. அம்முறை முகந்திரிந்து விருந் தோம்பல் கூடாதென்பது.

அனிச்சம் தன்னை மோப்பக் குழையும்; விருந் தோம்புவோர் விருந்தினரை முகந்திரிந்து நோக்கினதும் விருந்தினர் குழைவர்.

## மோப்ப............விருந்து

அனிச்சம் - அனிச்சமலர்; மலரில் மென்மையது; "மோப்ப" என்றமையான், "அனிச்சம்" ஈண்டு மலரின் மேலது.

மோப்ப - மோந்தால், மோந்தக்கால்.

திரிதல் - வேறுபடல், மாறுபடல்.

நோக்க - நோக்கினால், நோக்கியதும்.

### அ னி ச் ச ம்

அனிச்சம் பூவை மென்மைக்கு ஆள்வது மரபு. வேறு சில இடங்களிலும் அப்பூ ஆசிரியரால் ஆளப் பட்டுளது.

"நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும் - மென்னீரள் யாம்வீழ் பவள்", "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு - நல்ல படாஅ பறை", "அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் - அடிக்கு நெருஞ்சிப் பழம்"—இவை ஆசிரியர் திருவாக்குகள்.

"பஞ்சியட ரனிச்ச நெருஞ்சியீன்ற பழமாமென் - றஞ்சு மலரடி கள்."

"அம்மெல் லனிச்சம் மலருமன்னத் தூவியும் - வெம்மையா மென்றஞ்சி மெல்ல மிதியாத - பொம்மென் னிலவப் பூம் போதன நின்னடி போற்றி".

அனிச்சத்தம் போது போலத் தொடுப்பவே குழைந்து மாழ்கி"—சிந்தாமணி.

### இரண்டு பூக்கள்

இப்பாட்டில் இரண்டு பூக்கள் காட்சி யளிக்கின்றன. ஒன்று அனிச்சம்பூ; மற்றொன்று விருந்துப்பூ. அனிச்சம்பூ

மென்மைக்குப் பேர் பெற்றது. அதனினும் மென்மை யுடையது விருந்துப்பூவாம். இது கண்ட ஆசிரியர் திறம் என்னே !

அனிச்சம் பூவினும் விருந்துப்பூ மென்மையுடையதெனில், எப்படி? அதை நிறுவிக் காட்டுதல் வேண்டுமன்றோ? ஆசிரியர் காட்டும் முறைப்பாட்டை நோக்குக.

## முறைப்பாடு

மலர்களில் வன்மை மென்மை எப்படிக் காண்பது? அதன் குழைவைப் பார்த்து வன்மை மென்மை கூறலாம். வலியது விரைவில் குழையாது; மெலியது விரைவில் குழையும். இதைப்பற்றியே குழைதல் இருமுறை பெய்யப்பட்டது போலும்!

## எது மேன்மை?

" அனிச்சம் மோப்பக் குழையும்......விருந்து நோக்கக் குழையும் " என்றார். மோப்பக் குழைவதினும் நோக்கக் குழைவது மென்மையுடையது என்பதற்கு விரிவுரை வேண்டுவதில்லை.

அனிச்சம் நோக்கும் போதும் குழைவதில்லை ; எடுக்கும் போதும் குழைவதில்லை; முகரும் போதே குழையும். விருந்தோ நோக்கும்போதே குழைந்து விடும். இதனால் அனிச்சத்தினும் விருந்து மென்மையுடையதென்று தெளிக.

## முகந்திரிதல் - திரியாமை

மோப்பக் குழைவது அனிச்சத்தின் பொது இயல்பு. நோக்கக் குழைவது விருந்தின் பொது இயல்போ? இதைத் தெளிவு செய்யவேண்டி " முகந் திரிந்து " என்றார்.

" முகந்திரிந்து " என்பது முகந்திரியாமையையும் உணர்த்துவது. முகந்திரியாமை முன்னே " முகனமர்ந்து " என்று சொல்லப்பட்டது.

## குழைதல் - குழையாமை

விருந்தினர் எப்பொழுது குழைவர்? எப்பொழுது குழையார்? விருந்தோம்புவோர் முகந்திரிந்து தம்மை நோக்கும்போது குழைவர்; அவர் தம்மை முகந்திரியாது முகமலர்ந்து நோக்கும்போது குழையார்.

'அனிச்சம்பூ' விருந்தோம்புவோர் முகந்திரிந்து நோக்கப் பெறும் விருந்துக்கு உவமையாக நிற்கிறதென்று கொள்க.

முகந்திரிந்து மோந்தால் அனிச்சம்பூ குழையும் என்று கொள்ளற்க. முகந்திரிதல் திரியாமையை அனிச்சத்தின் பாற்படுத்தற்க.

## அகம் - முகம்

விருந்து குழையும். குழைவு உறுமிடம் எது? அகம். அகநிகழ்ச்சியை எப்படி உணர்வது? அகநிலையை உணர்த்துதற்கென்று படைப்பில் ஒன்று அமைந்திருக்கிறது. அஃதெது? அதுவே முகம்.

விருந்தோம்புவோர் அகத்திரிவே முகத்திரிவாக வெளிப்படுகிறது. அங்ஙனமே விருந்தினரின் அகக்குழைவு முகக்குழைவாக வெளிப்படுகிறதென்க.

## விருந்தினர்

விருந்தோம்புவோர் முகத்திரிவு வெங்கதிர் பொழியும் வெயில்போன்றது. அவ்வெயில் விருந்தினர் அகமலரை எரிக்கும். அதனால் அவர் குழைவர்.

விருந்தினர் மானமிழந்த மருள்களல்லர். அவர் மானமுடையவர்; மெல்லிய மனமுடையவர்; குறிப்புணரும் பேராற்றல் வாய்ந்தவர். விருந்தோம்புவோர் முகத்திரிவாம் வெம்மை விருந்தினர்மீது பட்டதும் அவர் வாட்டமுறுவர்.

விருந்தினர் மனங்குழைய அவரை ஓம்புவதென்பது விருந்தோம்பலாகாது. அது போலியேயாகும்.

விருந்தினரைப் பார்க்கும்போதே அன்பால் விருந்தோம்புவோர் உள்ளக் கமலம் தானே மலரும். அதன்கண் இனிமைத்தேன் பிலிற்றும். அம்மலர்ச்சியும் இனிமையும் விருந்தினர் உள்ளத்தைக் கவரும்; மலரச் செய்யும். அதிலும் இனிமைத்தேன் பிலிற்றும். இனிமை, இனிமையை விளைப்பது இயல்பே.

முகந்திரிந்து விருந்தோம்புதல் கூடாதென்றும், முகமலர்ந்தே விருந்தோம்புதல் வேண்டுமென்றும் இப்பாட்டு அறிவுறுத்துகிறது. (எ)

## (iii) விருந்தோம்பாமையின் இழிவு

### 88

பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

### பொருள்

விருந்து ஓம்பி - விருந்தினரைப் பேணி, வேள்வி தலைப்படாதார் - தியாகத்தில் ஈடுபடாதவர், பரிந்து ஓம்பி - (பொருளின்மையால்) வருந்தித் தம்மைப் பாதுகாத்து, 'பற்று அற்றேம்' என்பர் - 'யாம் பற்றற்றேம் ஆயினம்' என்று சொல்லித் திரிவர்.

### கருத்து

விருந்தோம்பாதார் இவ்வுலகில் வறியராய் வருந்தி, வெளிக்குத் தம்மைப் பற்றற்றவர் என்று சொல்லித் திரிவர்.

## விருத்தி

முற்பாக்களில் விருந்தோம்பலின் விழுப்பமும் முறைமையும் பேசப்பட்டன. இப்பாட்டில் விருந்தோம்பாமையின் இழிவு பேசப்படுகிறது.

'விருந்தினரைப் போற்றி உபசரிக்க மாட்டாதார், வருந்தி உடம்பொன்றையும் ஓம்பிப் பொருளற்றேம் என்று இரப்பர்'—இது மணக்குடவர் உரை; "நிலையாப் பொருளை வருந்திக் காத்துப் பின் அதனை யிழந்து, 'இது பொழுது யாம் பற்றுக்கோடிலமாயினேம்' என்று இரங்குவர். அப்பொருளான் விருந்தினரை ஓம்பி வேள்விப் பயனை எய்தும் பொறியிலாதார்"—இது பரிமேலழகர் உரை.

### விருந்தோம்பி........என்பர்

வேள்வி - தன்னை அர்ப்பணஞ் செய்தல், தன்னை யளித்தல், தியாகம், வேளாண்மை, உபகாரம் எனினுமாம்; '(வேள்விப்) பயன்' என்று ஆகுபெயர்ப் பொருள் கொண்டனர் பரிமேலழகர்.

தலைப்படாதார் - ஈடுபடாதவர்; வேள்வியில் ஈடுபடாதவர்.

பரிவு - அன்பு, வருத்தம், அறுதல், குற்றம் முதலிய பொருள்களையுடையது; இங்கே வருத்தத்தின் மேலது; அறுதலின் மேலது என்பாருமுளர்.

பரிந்து - வருந்தி, (பொருள் முடையால்) வருந்தி. "தாம்பிரிந் துறைத லாற்றலர் - பரிந்தெவன் செய்தி வருகுவர் விரைந்தே"—கலித்தொகை : உஅ : உச.

பரிந்து - அறுந்து, அற்று, பொருளற்று; 'கருங்கோட் டெருமை கயிறுபரிந் தசைஇ" — ஐங்குறுநூறு : கூ௫ : க.

விருந்தோம்பல் - ஓம்பாமை

இதுகாறும் பெரிதும் விருந்தோம்பலின் பெருமையே பேசப்பட்டது. விருந்தோம்பலின் பெருமைக்கு அதை ஓம்பாமையின் சிறுமையும் பேசப்படுதல் நன்று. அப்பொழுது விருந்தோம்பலின் பெருமை நன்கு தெளிவாகும்.

முன்னே சில பாக்களால் விருந்தோம்பலின் பெருமை பேசப்பட்டது. இனிச் சில பாக்களால் விருந்தோம்பாமையின் சிறுமை சொல்லப்படுகிறது.

இப்பாட்டு விருந்தோம்பாதார் நிலைமையை விளக்கும் ஒன்று.

விருந்தோம்பாதாரை ஆசிரியர், "விருந்தோம்பி வேள்வி தலைப்படாதார்" என்றனர். விருந்தோம்பாதாரை இப்படி ஏன் சொல்லுதல் வேண்டும்? விருந்தோம்பாதாரிடம் தியாகமின்மையால் அவரை "வேள்வி தலைப்படாதார்" என்றனர்.

விருந்தோம்புவானிடம் தியாகமிருத்தலால் அவனைக் காக்கும் பொறுப்பு இயற்கை இறைவனுடையதாகிறது. விருந்தோம்புவான் பருவரலால் பீடிக்கப்படான் என்றும், அவன் இல்லில் செய்யாள் உறைவள் என்றும், அவன் புலத்தில் வித்திடலும் வேண்டுவதில்லை என்றும் முன்னே ஆசிரியராலேயே விளக்கப்பட்டன. இவை விருந்தோம்புவான் நிலைமையை உணர்த்துவன. இவை கொண்டு விருந்தோம்பாதான் நிலைமையை ஊகித்தல் கூடுமன்றோ? இவைகட்கு மாறுபட்ட நிகழ்ச்சிகள் விருந்தோம்பாதானிடம் உண்டாகும் என்பதற்கு விரிவுரை வேண்டுவதில்லை.

விருந்தோம்புவானிடத்தில் தியாகமிருக்கிறது. தியாகத்தில் தன்னல அழிவும், பிறர்நல ஆக்கமும் உண்டாகும். இவ்விடத்தில் எழும் முயற்சியிலே திருமகள் பொலிவுடன் நின்று துணைசெய்வள்.

## விருந்தோம்பாதார் நிலை

விருந்தோம்பாதாரிடம் தியாகம் இன்மையால், அவர் பால் தன்னல ஆக்கமும் பிறர்நல அழிவும் உண்டாகும். இவ் விடத்தில் எழும் முயற்சிக்குத் திருவின் அருள் கிடைத்தல் அருமையாகும். இதனால் விருந்தோம்பாதாரிடைப் பொருள் வளஞ் சுருங்கும்; வருத்தம் பெருகும். இந்நிலையையுணர்த்து வது "பரிந்து" என்னுஞ் சொல்.

"பரிந்து" என்பதற்கு, 'வருந்தி' என்று பொருள் சொல்லப்பட்டது. ஏன்? விருந்தோம்பி வேள்வி தலைப்படா தார் என்று ஆசிரியர் அருளினமையாலென்க. இல்லையேல் "பரிந்து" என்பது வேறு பொருள்பட நிற்பதாகும்.

விருந்தோம்பி வேள்வியில் தலைப்படுவோர் பிறரை ஓம்புவதில் தமது முயற்சியைச் செலுத்துவர். விருந்தோம்பி வேள்வியில் தலைப்படாதார் தம்மை ஓம்புவதில் தமது முயற்சியைக் கழிப்பர். இதுபற்றியே "பரிந்தோம்பி" என்பதற்குத் 'தம்மைப் பரிந்து ஓம்பி' என்று பொருள் சொல்லப் பட்டது.

'பரிவு' என்பதற்கு அன்பு என்றொரு பொருளுண்டு. இப்பொருள் கொண்டு, 'பரிந்து ஓம்பி' என்பதற்குத் 'தம்மை அன்புடன் ஓம்பி' என்று பொருள் கூறலாகாதோ எனில், ஆகாதென்க. தம்மை அன்புடன் ஓம்புதற்கும் பொருள் நலம் வேண்டுமன்றோ? விருந்தோம்பாதாரிடம் பொருள்நலப் பொலிவு ஏது? ஆதலின் அவர் தம்மையும் அன்புடன் ஓம்ப இயலாதவராகிறார் என்க.

பொருள் முடையுடையாரும் எவ்விதமாதல் உலகில் வாழத் தம்மை ஓம்புதல் வேண்டுமன்றோ? ஓம்புதற்கு அவரிடம் பொருள் நலமில்லை. என் செய்வர்! வருந்தி வருந்தித் தம்மை ஓம்பி வருவர். "பரிந்தோம்பி" என்பது

வறிய துன்ப வாழ்வை உணர்த்துவது; அரிதில் வாழ்வதை உணர்த்துவது. விருந்தோம்பி வேள்வியில் தலைப்படாமை, மகனைப் பரிந்தோம்பி அரிதில் வாழச் செய்கிறது!

## பற்றற்றேம் என்னும் நடிப்பு

விருந்தோம்பாது தம்மையே ஓம்புவோர் தந்நலமுடைய ரென்பதை விளக்கவேண்டுவதில்லை. தன்னலத் தாயினின்றும் செருக்கு, பொய், வீண்பெருமை, ஏமாற்றம், கரவு முதலிய குழவிகள் பிறக்கும். இவைகளைப் பெற்று வாழ்வோர் தம்மை வளம்பட ஓம்புதற்கே இயலாது பரிந்து ஓம்பும் நிலை எய்துகிறார். இவர் தமது நிலையை வெளிக்குக் காட்டிக்கொள்ள விரும்புவதில்லை. செருக்கும் பொய்யும் வீண்பெருமையும் ஏமாற்றமும் இன்ன பிறவும் இவரைக் கரவுடையராய் வாழ உந்துகின்றன. இப் புன்மைகட்கு அடிமையாகும் ஏழைமக்கள், "பற்றற்றேம்" என்று சொல்லித் திரிவோராகிறார்கள். இவர்கள் என்ன பற்றை அற்றுவிட்டார்கள்? உள்ளே, 'பொருள் கிடைக்கவில்லையே; போகமில்லையே, மற்ற மற்றவர் என்னென்ன போகங்களை அநுபவிக்கின்றனர்! நமக்கு வயிறார உணவும் கிடைக்கவில்லையே; வருந்தி வருந்தி உடலை அரிதில் ஓம்பும் நிலையுற்றிருக்கிறதே; உடல் என்பாய் விட்டதே' என்று ஏக்குறுவார்கள்; ஏக்குற்று ஏக்குற்று வருந்துவார்கள்; புறத்தே, 'பற்றற்றேம்' என்று சொல்லித் துறவோர்போல நடிப்பார்கள். இவர்கள் கரவு என்னே! விருந்தோம்பும் பேறு பெறாத பாவம் இவர்களைப் பொய்யர்களாகவும் நடிக்கச் செய்கிறது.

"பற்றற்றேம்" என்பது தனி வாழ்க்கையையுங் குறிக்கொண்டு நிற்கிறது. தனித்த வாழ்க்கை பெரிதும் தன்னலத்தை வளர்ப்பதாதலின், அதன்கண் விருந்தோம்

னுக்குரிய அன்பு சுரந்து பெருகுதல் அரிது. அன்பற்ற தனிவாழ்க்கை நடாத்துவோர் தம்மைப் பற்றற்றவரென்றும், துறவோரென்றும் சொல்லித் திரிந்து உலகை ஏமாற்றுவது வழக்கம்.

இப்பாட்டை நுணுகி ஆராய்ந்தால் இதில் அன்பற்ற தனித்த வாழ்க்கையின் இழிவும், அன்பால் விருந்தோம்பும் பேறுடைய இல்வாழ்க்கையின் சிறப்பும் திகழ்தல் காணலாம்.

என்பர் - என்று சொல்வர்; என்று சொல்லித் திரிவர்; என்று சொல்லி உலகை ஏமாற்றித் திரிவரென்க. விருந்தோம்பாது தம்மைப் பரிந்தோம்பி, "பற்றற்றேம்" என்பவரிடத்திலுள்ள பொய், வீண்பெருமை, ஏமாற்றம், கரவு முதலிய சிறுமைகளை ஒலிக்கச் செய்வது, "என்பர்" என்னுஞ் சொல். (அ)

## 89

உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்க ணுண்டு.

### பொருள்

உடைமையுள் இன்மை - செல்வத்துள் இனிமை, விருந்தோம்பல் - விருந்தோம்புதல், ஓம்பா மடமை - விருந்தோம்பாத அறியாமை, மடவார்கண் உண்டு - மூடரிடத்தில் உண்டு.

### கருத்து

செல்வத்திற் கழகு விருந்தோம்பல்.

### விருத்தி

கடந்த பாட்டில் விருந்தோம்பி வேள்வி தலைப்படாதார் நிலை விளக்கப்பட்டது. இப்பாட்டில் அவர்தம் மடமை விளக்கப்படுகிறது.

## இன்மையும் மடமையும்

இப்பாட்டில் இரண்டு சொற்கள் ஐயப்பாட்டுக்கு அறிகுறியாக நிற்கின்றன. அவை "இன்மை"யும் "மடமை"யுமாம். இரண்டையும் ஊன்றி நோக்கினால் மடமையைப் பற்றிய ஐயம் மெல்ல மெல்ல மறைந்து போகிறது. இன்மையைப் பற்றிய ஐயம் மறையவில்லை.

## இன்மை

பழைய உரையாசிரியர் இருவரும் இன்மைக்கு வறுமைப் பொருள்கூறி உரை வரைந்துள்ளனர். அவர் தம் உரைகள் வருமாறு :—

'உடைமையின் கண்ணே இல்லாமை போல, விருந்தினர்க்கு அளித்தலைப் போற்றாத பேதைமை, பேதையார் மாட்டே யுளதாம்'—மணக்குடவர்.

'உடைமைக் காலத் தின்மையாவது விருந்தோம்பலை இகழும் பேதைமை ; அஃதறிந்தார் மாட்டு உளதாகாது, பேதையார் மாட்டே உளதாகும்'—பரிமேலழகர்.

## இன்மையால் மயக்கம்

"உடைமையு ளின்மை, விருந்தோம்பல் ஓம்பா மடமை" என்று கூட்டிப் பழைய உரையாசிரியன்மாரைப் பொருள் காண உந்தியது, "இன்மை" என்னுஞ் சொல் என்றே ஊகிக்கலாம்.

"உடைமையுள் இன்மை விருந்தோம்பல்" என்னும் வரை ஒரு பொருள் முடிவும், "ஓம்பா மடமை மடவார்கணுண்டு" என்னும் அளவில் மற்றொரு பொருள் முடிவும் காணுதல் பொருத்தம் என்று தோன்றுகிறது. இவ்வாறு பொருள் கோடற்குத் தடையாக நிற்பது "உடைமையுள் இன்மை" என்பது. உடைமையுள் இல்லாமை (வறுமை)

விருந்தோம்பல் என்று எப்படிப் பொருள் கூறுதல் கூடும்? அஃது இயற்கைக்கு அரண் செய்யுங் கருத்துடைய தாகா தன்றோ? பின்னை என் செய்வது; வேறு வழி என்னை?

"இன்மை"யை உற்று உற்று நீண்ட நேரம் நோக்கினேன். நெட்டுயிர்ப்புத் தோன்றிற்று. பாடபேத நினைவு எழுந்தது. பல பதிப்புக்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தேன். "இன்மை" என்னை மயக்கியதுபோலத் தேசபக்தர் சிதம்பரம் பிள்ளையையும் மயக்கியதென்பதை அவர்தம் பதிப்பில் கண்டேன். அவர் உடைமையுள் உண்மை என்று பாடங்கொண்டு பொருள் கண்டு, தங்கருத்தை வலியுறுத்தக் குறிப்பும் பொறித்துள்ளனர். அக்குறிப்பு வருமாறு :—

## பாடமாற்றம்

"உண்மையான உடைமையை உண்மை என்றார். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'உடைமையுளின்மை.' 'ஒளியுள் இருள்' என்பது எவ்வளவு முரண்பாடோ, அவ்வளவு முரண்பாடே 'உடைமையுள் இன்மை' என்பது. உடைமை என்பது செல்வத்தையும் அறிவையும் அடக்கி நிற்கும் ஆற்றல் உடையது. விருந்தோம்ப லோம்பா மடமை என்பதை ஒரே தொடராகக் கொள்ளுங்கால், 'ஓம்பல்' என்னும் சொல் மிகையாகின்றது. ஏனெனில், ஆசிரியரது கருத்தை விளக்குவதற்கு 'விருந்தோம்பா மடமை' என்பதே போதியது. அன்றியும், 'உடைமையு ளின்மை' என்பதை ஆசிரியர் பாடமெனக் கொள்ளின், 'உண்டு' என்னும் பயனிலைச் சொற்கு 'அது' என்னும் சொல்லைத் தோன்றா எழுவாயாக வருவித்துக்கொள்ள வேண்டியதாகவும் இருக்கிறது. இக்காரணங்களால் 'உடைமையு ளின்மை' என்பது ஏடு பெயர்த்தெழுதியோன் ளுகரத்தை ளிகரமாகவும் ணகர வொற்றை னகர வொற்றாகவும் படித்தெழுதியதால் நேர்ந்த பிழை

எனக்கொள்க. பின்னர் 'இன்மையு ளின்மை விருந்தொரால்' என்று ஆசிரியர் கூறியிருத்தலையும் காண்க."

### நன்மை

'உடைமையுள் உண்மை' என்பதை உன்னிப் பார்த்தேன். "உடைமையுள் உண்மை" என்பதற்குப் பதிலாக "உடைமையுள் நன்மை" என்று கொள்வது பொருத்தமாயிருக்கும் என்று எண்ணலானேன். வலிந்து பாடபேதஞ் செய்ய மனச்சான்று இடந்தரவில்லை.

### உள்ளொலி முழக்கம்

வலிந்து பாடபேதஞ் செய்து, "இன்மை"யை மாற்றவும் மனம் எழவில்லை. இன்மைக்கு இங்கே வறுமைப் பொருள் கொள்ளவும் மனஞ் செல்லவில்லை. ஏதோ ஒரு விதப் பாடபேதமிருக்கிறது என்று மட்டும் உள்ளொலி முழங்குகிறது. அஃது இன்னதென்று தெரியவில்லை. ஆட்சியிலுள்ள பாடபேத மொன்றுங் கிடைக்கவில்லை. ஆகவே உள்ளதைக்கொண்டே வேறு முறையில் பொருள் காணலானேன். இலக்கணப் புலவோர் மன்னிப்பாராக.

### 'இனிமை'ப் பாடம்

'இவ்வளவு முயற்சி எற்றுக்கு? "இன்மை"யை இனிமையாகத் திருத்தினால் போதுமே' என்று சிலர் கருதல் கூடும். அதற்கு வெண்பாப் பாட்டியல் இடந்தராது. "இனிமை" கொள்ளின் செய்யுளோசை முட்டித் தடைபடுதல் எவர்க்கும் எளிதில் விளங்கும்.

"இன்மை"க்குப் பழைய உரையாசிரியன்மார் கொண்ட பொருளுக்கு மறுப்புக் கூறுதல் வேண்டுமென்பது எனது கருத்தன்று. அவர்தங் கருத்தில் தவறுதல் இல்லை என்பது வெள்ளிடைமலை.

## இடர்ப்பாடு

"உடைமையு ளின்மை விருந்தோம்பல், ஓம்பா மடமை * * *" என்று பிரித்துப் பொருள் கொள்வது பொருத்தம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் "இன்மை" இடர்ப் படுத்துகிறது. என் செய்வது?

## இன்மை—இனிமை?

இங்கே "இன்மைக்கு" இனிமைப் பொருள் கூறுவது பற்றி மொழிப் புலவோர் சிலர்க்காதல் சிற்றம் எழும். பொருந்திய பாடபேதம் ஆட்சியிலின்மையால், இன்மைக்கு இனிமைப் பொருள் கூறும் நெருக்கு நேர்ந்ததென்று அவர்க்குத் தணிவு சொல்லக் கடமைப்படுகிறேன்; சில சொற்களுக்குப் பொருந்திய முறையில் புதுப்பொருள் காண்பது குற்றமன்று என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். ஆசிரியர்க்கும் அவ்வெண்ணம் தோன்றியிருக்கலாம்.

## உடைமையுள்........உண்டு

உடைமையுள் - செல்வத்துள், செல்வத்திலே.

ஈண்டுச் செல்வம் அறிவையுங் குறிக்கும்; பொருளையுங் குறிக்கும்.

உடைமை - செல்வம்; அறிவுச் செல்வம், பொருட் செல்வம்; அறிவுடைமை, பொருளுடைமை.

இன்மை - இனிமை; (இதுபற்றிய குறிப்புக்களை மேலே பார்க்க); இல்லாமை, வறுமை என்னும் பொருளும் உண்டு.

இன் + மை = இன்மை; மை : பண்பு விகுதி.

இன் - இனிமை; "இன்னமர் இளவேனில்"—கலித்தொகை: ௩௪ : ௭. "இன்வளர் இளம்பிறை"—சிந்தாமணி : 1008.

இன் : இன்மை - இனிமை - இன்பம் - நன்மை.

'இன்னாமை' என்னும் வழக்கும் ஈண்டு உற்றுநோக்கற்பாலது. இன்மைக்கு இன்னாமையை எதிர்மறையாகவுங் கொள்ளுதற்கு இடனுண்டு.

மடவோர்-மூடர், அறிவில்லாதவர்; "மிக்க நல்லறம் விரும்பாது வாழும்-மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ" —மணிமேகலை : ௬ : ௧௦௩ - ௪.

## உடைமையுள் இன்மை

உடைமையினிடத்தில் - உடைமை வாயிலாக - உடைமையால் - உண்டாகும் இனிமை என்பார், "உடைமையுள் இன்மை" என்றார்.

இனிமை பருமையதன்று; ஆனால் உள்ளது; நுண்மையது; தனியே விளங்கி நிகழாதது; ஒன்றோடொன்று சாருங்கால் நுண்மையாய் விளங்குவது.

## விருந்தோம்பல்

"உடைமையுள் இன்மை விருந்தோம்பல்" என்றார். உடைமையின் சார்பில் மட்டும் இனிமை விளக்கமுறாது. மற்றுமொரு சார்பு அதற்கு வேண்டும். அது பற்றியே, "விருந்தோம்பல்" என்றார்.

உடைமைப் பொருளும் விருந்தோம்புஞ் செயலும் சேர்ந்துழி நிகழ்வது "இனிமை" என்க.

விருந்தோம்பல் தன்னல மற்றதாதலின் அதனுடன் சேரும் உடைமையுள் 'இனிமை' உண்டாகும். தன்னலமுள்ள வினைகளில் சேரும் உடைமையுள் இனிமை உண்டாகாது; இன்னாமை உண்டாகும். இவ்வுண்மை விளங்க "உடைமையுள் இன்மை விருந்தோம்பல்" என்றார்.

**ஓம்பா மடமை**

இனிமை தோன்றும் விருந்தோம்பலைப் பாதுகா வாமை அறிவுடைமையாகுங்கொல்? அஃது அறிவுடைமை யாகாதென்பார், "ஓம்பா மடமை" என்றார். அறிவுடைமை விருந்தோம்ப உந்தும்; மடமை (அறியாமை) விருந் தோம்ப உந்தாது. விருந்தோம்பல் அறிவுடைமை; விருந் தோம்பாமை அறிவுடைமை யன்று அதாவது மடமை.

**மடவார் கணுண்டு**

மடமை எவர் உடைமை? மடவார் உடைமை. இது பற்றியே, "ஓம்பா மடமை மடவார்க ணுண்டு" என்றார்.

மடமை நுண்மை; பருமையன்று. அம்மடமை யிருக் குமிடம் குறிக்க வேண்டி, "மடவார்கண் உண்டு" என்றார்.

சிலர் வேறு துறைகளில் அறிவுடையரா யிருப்பர். ஆனால் அவர்தம் அறிவு விருந்தோம்பலிற் செல்வதில்லை. அவர் அறிவுடையராவரோ? ஆகார். வேறு துறைகளில் அறிவு விளக்கமின்றி விருந்தோம்பலில் அறிவு விளக்கம் பெற்றிருப்போர் அறிவுடையோரே யாவர்.

ஆகவே அறிஞர் யார்? விருந்தோம்புவோர். மட வோர் யார்? விருந்தோம்பாதார் என்க. (௯)

(iv) விருந்தோம்பலின் பயனிலை

## 90

*இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்*
*துணைத்துணை வேள்விப் பயன்.*

பொருள்

வேள்வி பயன் - விருந்தோம்பலின் இன்பம், இனை துணைத்து என்பது ஒன்று இல்லை - இன்ன அளவினது

என்று அறுதியிடலாவது ஒன்றில்லை, விருந்தின் துணை துணை - (அது) விருந்தினரின் உபசரிப்பளவினதாகும்.

கருத்து

விருந்தோம்பலின் பயன் விருந்தினரை உபசரிக்கும் அளவினதாகும்.

விருத்தி

முன்பாட்டில் விருந்தோம்பலின் இன்மையும் இன்மையும் விளக்கப்பட்டன. இப்பாட்டில் விருந்தோம்பலின் இனிமை அளவிடற்பாலதன்று என்று விளக்கப்படுகிறது.

**இனைத்...........பயன்**

வேள்வி - அளித்தல், உபகாரம்; இங்கே விருந்தோம்பல்; 'விருந்தினர்க்கு அளித்தல்' என்பர் மணக்குடவர். 'விருந்தோம்பலாகிய வேள்வி' என்பர்—பரிமேலழகர்.

*ஐம்பெரும் வேள்வியில் ஒன்று என்போரும் உளர்

பயன் - இன்பம்; பலனுமாம்; "சீரமை பாடற் பயத்தாற் கிளர் செவிதெவி"—பரிபாடல்: கக: கக (பாடல் பயத்தால் - பாடல் இன்பத்தால் என்று பரிமேலழகர் பொருள் கண்டுள்ளனர்.)

வேள்விப் பயன் - விருந்தோம்பலால் விளையும் இன்பம்.

இனை - இன்ன.

துணைத்து - அளவுடையது.

---

* பிரம வேள்வி (மறையோதல்); தேவவேள்வி (ஓமம் வளர்த்தல்); பிதிர் வேள்வி (தருப்பணஞ் செய்தல்); பூதவேள்வி (காக்கை முதலியவற்றிற்கு உணவளித்தல்); மனிதவேள்வி (விருந்தோம்பல்).

இனைத் துணைத்து என்பதொன்றில்லை - இன்ன அளவினது என்று அறுதியிட்டுக் கூறுதற்கு ஒன்று மில்லை; இவ்வளவினது என்று அளவிட்டுக் கூறுதல் இயலாது என்றபடி. 'இன்ன அளவினையுடையது என்று சொல்லலாவது ஒன்றில்லை'—மணக்குடவர். 'இன்ன அளவிற் றென்பதோர் அளவுடைத்தன்று'—பரிமேலழகர்.

துணை - உபசரிப்பு, காப்பு, உதவி; "துப்புக்கொளல் வேண்டிய துணையி லோரும்"—பெரும்பாணாற்றுப்படை: 426; "திக்கற்ற வர்க்குத் தெய்வமே துணை" - பழமொழி.

துணை - அளவு.

"விருந்தின் துணைத் துணை" என்பதற்கு 'விருந்தினரின் தன்மை யாதோ ரளவிற்று அத்தன்மை யளவிற்று' என்று மணக்குடவரும், இதைத் தழுவி, 'விருந்தின் தகுதி அளவே அளவு' என்று பரிமேலழகரும் பொருள் விரித்துள்ளனர்.

## வேள்வி

வேள்வி - தன்னை யளித்தல். இதனை வடமொழியில் யாகம் என்பர். யாகம் பலவிதம். எல்லா யாகங்களினுஞ் சிறந்தது தன்னைத் தான் பலியிடுதல். இதனை ஆத்ம நிவேதனமென்பர் தத்துவர்.

தன்னைப் பலியிடுதல் என்பது தற்கொலை செய்து கொள்வதன்று; தான் என்னும் முனைப்பை வீழ்த்துவது; அதாவது தன்னல மொழிப்பது.

விருந்தோம்பல் தன்னலமற்ற அந்தண்மை என்று மேலே சில இடங்களில் விளக்கப்பட்டது. ஆதலின், விருந்தோம்பலை ஒருவகை வேள்வி என்று கொள்க.

வேள்வியை, அளித்தல் - உபகாரம் என்று கொண்டு விருந்தோம்பலாகிய அளித்தல் என்றும், விருந்தோம்பலாகிய உபகாரம் என்றுங் கூறலுமாம்.

இவ்வதிகாரம் விருந்தோம்பலைப் பற்றியதாதலின் வேள்விக்கு விருந்தோம்பல் என்று நேர்பொருள் கூறுவது சால்பு.

பயன்

ஒவ்வொன்றற்கும் ஒவ்வொருவிதப் பயன் உண்டு. விருந்தோம்பல் என்னும் வேள்விக்கும் ஒருவிதப் பயன் இருத்தல் வேண்டுமன்றோ? இல்லையேல், 'வேள்விப் பயன்' என்று ஆசிரியர் கூறியிரார்.

விருந்தோம்பல் அன்பால் நிகழ்வது. அன்புள்ள இடத்தில் இன்பமும் இருத்தல் இயல்பு. அன்புக்கும் இன்பத்துக்கும் தொடர்பு உண்டு. அன்பின் பயன் இன்பம் என்க. அன்பற்ற இடத்தில் இன்பமிராது; துன்பமே துறையும். அன்புக்கும் இன்பத்துக்குமுள்ள தொடர்பை உன்னிப் பார்த்தால், "வேள்விப் பயன்" என்பதற்கு, "வேள்வி இன்பம்" என்று பொருள் கோடல் பொருத்தமென்று தோன்றும். இதுபற்றியே, "பயன்" என்பதற்கு, 'இன்பம்' என்னும் பொருள் கூறப்பட்டது.

இன்பம் பலவாயிலாகப் பிறக்கும். அவைகளுள் ஒன்று விருந்தோம்பல். இதைச் சிறந்ததென்றுங் கூறுப. என்னை? மனமாசற்ற அன்பினின்றும் விருந்தோம்பல் நிகழ்தலின் என்க.

பயன் - பலன்; இது வெளிப்படை. இவ்வாறு கொள்வதும் தவறாகாது.

## இனைத்துணை என்பதொன்றில்லை

மனமாசற்ற அன்பு பெருகி விருந்தோம்பலாக நிகழ்த லின், அதனின்றும் பிறக்கும் இன்பத்தை எதனால் - எவ் வளவையால் - அளவிட்டு, 'அஃது இவ்வளவினது' என்று கூறுதல் இயலும்? இயலாமையை, "இனைத்துணைத் தென்பதொன் றில்லை" என்று ஆசிரியர் விளக்கி யிருத்தல் காண்க. இது பொதுமுறை. வேறு ஒரு முறையில் அதை ஆசிரியர் விளக்க முயல்கிறார். அது, "விருந்தின் துணைத் துணை" என்பது.

## விருந்தின் துணைத்துணை

"விருந்தின் துணைத்துணை" என்பதற்கு 'விருந்தின ரின் தகுதி அளவே அளவு' என்னுங் கருத்துப்படவே பழைய உரையாசிரியன்மார் இருவரும் பொருள் கண்டுள்ள னர். இவ்வதிகாரம் விருந்தோம்பலைப் பற்றியதாதலின், விருந்தினர் தகுதி - தகுதியின்மைகளைக் குறித்துப் பேசு தல் பொருந்தாது என்று முன்னே விளக்கப்பட்டது. "அகனமர்ந்து......" என்னுங் குறளில் "நல்விருந்து" என்னும் பகுதியின் விருத்தியைப் பார்க்க.

வேள்விப்பயன் விருந்தினரின் தன்மைக்கேற்ற அளவி னது என்று சொல்வது விருந்தோம்புவான் பண்பைச் சிறுமைப்படுத்துவதாகும். விருந்தோம்புவான் விருந்தின ரின் தன்மையை ஆராயப் புகுந்தால் விருந்து அன்பு வழியில் நடைபெறுதல் அரிதாகும். அன்புக்கு ஆராய்ச்சி ஏது? ஆராய்ச்சியைக் கடந்தது அன்பு. குறைந்த அன் பினர்க்கே விருந்தினரின் குற்றங் குறைகள் புலனாகும். நிறைந்த அன்பினர்க்கு அவைகள் புலனாகா?

## வரலாறுகள்

நிறைந்த அன்பினர்க்கு விருந்தினர் குற்றங் குறைகள் புலனாகா என்பதற்கு ஆன்றோர் வரலாறுகள் பல உண்டு. அவைகளுள் இரண்டு வருமாறு :—

ஒன்று திருமுனைப்பாடி நாட்டை ஆண்ட நரசிங்கமுனையரைப் பற்றியது. நரசிங்கமுனையர் திருவாதிரை தோறும் அடியவர்க்குச் சோறிட்டு நூறு பொன்கொடுத்து வருவதை ஒருபெருந் தொண்டாகக் கொண்டவர். ஒருபோது வெறுக்கத்தக்க ஒருவனும் அடியவருடன் நரசிங்கர் இல்லம் நோக்கினன். அடியவரெல்லாரும் அவனைக்கடிந்து ஒதுங்கினர். அன்புக் கடலாகிய நரசிங்கமுனையர் அவனிடம் போந்து அவனது அகமலர முகமன் கூறிச் சோறிட்டு இருபங்கு பொன்னளித்து அவனை வழிபட்டனர்.

மற்றொன்று திருப்பெண்ணாகடத்திலே வாழ்ந்த அன்பர் கலிக்கம்பரைப் பற்றியது. அவர் விருந்தோம்புவதில் பேர்பெற்றவர். ஒருநாள் வழக்கம்போல அவர்தம் இல்லில் விருந்தினர் குழுமினர். அவ்விருந்தினருள் ஒருவர் கலிக்கம்பரிடம் ஒருகாலத்தில் பணியாளராய் இருந்தவர். அவரைக் கலிக்கம்பர் மனைவியார் கண்டதும் அருவருத்தனர். அக் காட்சி கண்ட அன்பர் கலிக்கம்பர், பழைய பணியாளர் மனம் மகிழ அவரைப் பணிந்து விருந்தளித்தனர்.

இவ்விரு வரலாறும் பெரிய புராணத்திலிருப்பன. இவைகளால், விருந்தோம்புவோர் விருந்தினர் குற்றங் குறைகளைக் கருதலாகா தென்பது விளங்குதல் காண்க.

ஆகவே, "விருந்தின் துணைத்துணை" என்பதற்குப் பழைய உரையாசிரியர் கொண்ட பொருள் இங்கே கொள்ளப் படவில்லை. அதற்கு 'விருந்தினரின் உபசரிப்பளவினது' என்று பொருள் காணப்பட்டது.

## பாட்டின் உள்ளம்

'வேள்வி இன்பம் இன்ன அளவினது என்று அளந்து கூறுதல் இயலாதது. அது விருந்தினரை உபசரிக்கும் அளவினதாவது' என்னுங் கருத்துப்படும் முறையில் ஆசிரியர் இப்பாட்டை அருளியுள்ளனர்.

விருந்தோம்புவோன் விருந்தினரை எவ்வளவு உபசரிக்கிறானோ அவ்வளவில் அவன்பால் இன்பம் பிறக்கும் என்றபடி.

விருந்தினரை அரைகுறையாகப் பேணுவது விருந்தோம்பலாகாது. விருந்தினர் அகமகிழ அவரைப் பேணுவதே விருந்தோம்பல் என்பது.

விருந்தினரைப் பேணும் அளவை இவ்வளவென்று எப்படி அளந்து கூறுவது? கூறுதல் இயலாது. இது பற்றியே "இனைத்துணைத் தொன்றில்லை" என்றார். மீண்டும் "விருந்தின் துணைத்துணை" என்று ஏன் கூறினார்? முன்னையது அளவிறந்தது போலத் தோன்றுகிறது; பின்னையது அளவுடையதுபோலத் தோன்றுகிறது. இரண்டும் ஒன்றே. முறை மட்டும் வேறு.

இறைவன் பெருமை அளவு கடந்ததென்று மறை முழங்குகிறது. அதனை வேறு முறையிலுங் கூறுதல் கூடும். எப்படி? இறைவன் பெருமை மறைமுழங்கும் அளவினதன்று. இதன் பொருளென்னை? அளவிறந்த தென்பதே. இது போன்றதே இத்திருக்குறளின் நுட்பமுமென்க. (௧௦)

# ௧௦. இன்சொல்

இன்சொல் - இனிய சொல்; இனிமைச்சொல்; இனிமையினின்றும் பிறக்குஞ்சொல்; இனிமை பயக்குஞ் சொல்.

இவ்வதிகாரம் "இன்சொல்" என்று துவங்கப் பெறுகிறது. பல பாக்களில் "இன்சொல்லே" பெரிதுங் காட்சியளிக்கிறது.

பழைய உரையாசிரியன்மார் "இனியவை கூறல்" என்னுந் தலைப்பீந்துள்ளனர்.

## இன்சொல் பிறக்குமிடம்

இன்சொல் பிறக்கும் முதலிடம் யாது? இனிய உள்ளம். இனிய உள்ளத்தினின்று இன்சொல், வாயின் வழிப் பிறக்கும்.

இனிமை உள்ளம் எது? இன்னாமையற்றது.

## இனிமை

இன்னாமை, அழுக்காறு - அவா - வெகுளி முதலிய தீமைகளின் பரிணாமம். இன்னாமை அற்ற இடத்தில் நிலவுவது இனிமை. இனிமை, அழுக்காறு முதலியவற்றைக் கடந்தது.

## அறமும் இனிமையும்

அழுக்காறு முதலிய மாசுகளற்றது 'அறம்' என்று, 'அறன் வலியுறுத்த'லில் விளக்கப்பட்டது. இனிமையும் அழுக்காறு முதலிய மாசுகளற்ற இடத்தில் நிலவுவது. அஃதும் இஃதும் ஒன்று? இரண்டுங் குண குணி போன்றன. மலரின் மணமும் அமிழ்தில் சுவையும் இருப்பதுபோல அறத்தில் இனிமையிருக்கிறது. இரண்டும் பிரிவற்றன.

## தொடர்பு

அன்பு பெருகப் பெருக மனமாசகலும். மனமாசற்ற நிலை அறம் என்பது.

இல்வாழ்க்கையால் அன்பு படிப்படியே பெருகிப் பெருகி அந்தண்மையாய் விருந்தோம்பலாகிறது. அன்பில் - அந்தண்மையில் - விருந்தோம்பலில் இனிமை நிலவுமா? இன்னாமை நிலவுமா? இதற்கு விளக்கவுரை வேண்டுங் கொல்? முன்னைய அதிகாரத்தில் இறுதிப்பாட்டில் விருந்தோம்பலுக்கும் இனிமைக்கும் உள்ள தொடர்பு விளங்குதல் காண்க. அப்பாட்டு இவ்வதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்து நிற்றலும் உணரற்பாற்று.

விருந்தோம்பலுக்கும் இனிமைக்கும் உள்ள தொடர்பை நோக்கியே "விருந்தோம்ப"லுக்குப் பின்னை, "இன்சொல்" வைக்கப்பட்டது.

## உள்ளுறையும் அமைவும்

இவ்வதிகாரம் மூன்று கூறுடையது. ஒன்று இன்சொல் மாண்பு. இன்னொன்று இன்சொற் பயன். மற்றொன்று வன்சொல் வேண்டாமை.

விருந்தோம்பலுக்கு இன்சொல் இன்றியமையாதது. இன்சொல் அற்றது விருந்தோம்பலாகாது. இன்சொலாவது செம்பொருள் கண்டாரிடத்திருந்து பிறப்பது. செம்பொருள் கண்டாரென்பவர் அறவோர். அறவோர் அறநெஞ்சமுடையவர். செம்பொருள் அல்லது அறம் படிந்த நெஞ்சினின்றும் தோன்றி வாயின் வழி வெளிவருவது இன்சொல். இன்சொல் ஈகையினுஞ் சிறந்தது; உயிரணி; அறத்தை வளர்க்குந் தன்மையது; நலம் பயப்பது; வறுமை நீக்குவது; இம்மை மறுமை இன்பந் தருவது. இத்தகை இன்சொல் இருப்ப, வன்சொல் வழங்குவது எற்றுக்கு? கனியிருப்பக் காய் கவர்வது அறிவுடைமையாகுமா?

முதல் நான்கு பாக்களில் இன்சொல் மாண்பும், ஐந்து ஆறு ஏழு எட்டாம் பாக்களில் இன்சொற் பயனும், ஒன்பதி

லும் பத்திலும் வன்சொல் வேண்டாமையும் சொல்லப்பட்டுள்ளன.

(i) இன்சொல் மாண்பு

## 91

*இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம்*
*செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.*

### பொருள்

*செம்பொருள் கண்டார் வாய் சொல் - அறத்தையுணர்ந்து தெளிந்தவரது வாய்ச்சொற்கள், இன்சொல் - இனிய சொற்களாம், ஆல் - ஆதலின், ஈரம் அளைஇ படிறு இலவாம் - (அச்சொற்கள்) அன்பொடு கலந்து வஞ்சனை இல்லாதனவாம்.*

### கருத்து

*அறத்தைக் கண்டோர் சொற்களே இனியன. அவைகள் வஞ்சனையற்ற அன்புடையன.*

### விருத்தி

*விருந்தோம்பல் செந்தண்மையைக் குறிக்கொண்டது. செந்தண்மைக்கு அறிகுறி இன்சொல். இதனால் முன்னைய அதிகாரம் இவ்வதிகாரத்துடன் தொடர்பு கொண்டுள்ளதை ஓர்க.*

*இப்பாட்டுக்குப் பழைய உரையாசிரியன்மார் கண்ட பொருள்கள் வருமாறு :—*

*"இருவர் மாறுபடச் சொன்ன மாற்றத்தினது உண்மைப் பொருளைக் கண்டார் கூறும் மெய்யாகிய சொற்களும் இன்சொலாதலானே அருளொடு பொருந்திக் குற்றமிலவாம்.*

இஃது ஒருவனைக் கடிந்து சொல்லவேண்டு மிடத்தும் இன்சொல்லாலே கடிய வேண்டுமென்றது"—மணக்குடவர்.

"'இன்சொலாவன அன்போடு கலந்து வஞ்சனை இலவா யிருக்கின்ற அறத்தினை உணர்ந்தார் வாயிற் சொற்கள்'"— பரிமேலழகர்.

## செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்

செம்மை + பொருள் = செம்பொருள்.

செம்பொருள் - அறத்தை; "புத்த ஞாயிறு தோன் றுங்காறும் - செத்தும் பிறந்தும் செம்பொருள் காவா - இத் தலம் நீங்கேன்"—மணிமேகலை : உக : கசு௭ - சு.

கண்டார் - உணர்ந்தார்; தெளிந்தார்; உணர்ந்து தெளிந்தார்; அநுபவத்தில் அறிந்தார்.

வாய்ச்சொல் - வாய்மைச்சொல்; வாய்மை.

## செம்பொருள்

செம்மை + பொருள் - செம்பொருள். செம்மை-நேர்மை; தூய்மை; மாசின்மை.

நேரிய - தூய - மாசில்லாத - பொருள் எது? கடவுள். 'செம்பொருள்' பெரிதுங் கடவுளுக்கு வழங்கப்படுவது; இங்கே அறத்தை உளங்கொண்டு நிற்கிறது. கடவுளும் அற மும் ஒன்றா? வேறா? இரண்டும் ஒன்றென்பது புத்தர் உள் ளிட்ட அறவோர் பலரது கொள்கை.

'மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறம்' என்பது ஆசிரியர் திருவாக்கு. அறமாவது மாசற்ற ஒருநிலை. கடவுள் மாசற்ற ஒன்று. இரண்டுக்கும் வேற்றுமை இன்மை காண்க. ஆதலின் அறத்தைக் கடவுளாகக் கொள்ளும் வழக்காறும் தோன்றிற்றென்க. விளக்கம் இந்நூல் 'அறன் வலியுறுத்த'

-வின் விருத்தியுரைக்கண் பார்க்க. "மெய்யுணர்ந்தார் நெஞ்சிற் கெல்லாம் செம்மையுடைத்தாய்த் தோன்றலின், 'அறம் செம் பொருள்' எனப்பட்டது"—இது பரிமேலழகர் குறிப்புரை.

"பிறப்பென்னும்......செம்பொருள் காண்ப தறிவு" என்னுந் திருக்குறளிற் போந்துள்ள 'செம்பொருளு'க்கு, "தோற்றக்கேடுகள் இன்மையின் நித்தமாய், நோன்மையால் தன்னை ஒன்றும் கலத்தல் இன்மையின் தூய்தாய், தான் எல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள், விகார மின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாதல் பற்றி, அதனைச் 'செம்பொருள்' என்றார்" என்று பரிமேலழகர் விளக்கஞ் செய்துள்ளதும் ஈண்டுக் கருதற்பாலது.

கண்டார்

செம்பொருளைக் கண்டார் - செம்பொருளாகிய அறத்தை உணர்ந்து தெளிந்தவர்; அநுபவத்தில் அறிந்தவர்.

செம்பொருளைக் காணவேண்டுவது மக்கள் கடமை; இன்றியமையாக் கடமை. செம்பொருளை உணர்ந்து தெளி தற்கென்று வாழ்வு அளிக்கப்பட்டது. அவ்வாழ்வை வீணே கழித்தலாகாது. "கண்டார்" என்பதில் செம்பொருளைக் காண் டல் வேண்டுமென்னுங் கடமை தொனித்தலை உன்னுக.

செம்பொருளை ஆராயாமலே கிடப்போர் பலர். அவர் மனிதப் பிறவி எய்தியும் எய்தாதவர். செம்பொருளை ஆரா யப் புகுவோர் சிலர்; அதனைச் சிந்திப்போர் மிகச்சிலர். செம் பொருளை ஆராய்தல் மட்டும் போதாது; சிந்தித்தல் மட்டும் போதாது. அதை உணரமுயலல் வேண்டும்; உணரும் முயற்சி பெருகப் பெருகத் தெளிவு ஏற்படும். உணர்ந்து தெளிதலே காண்டல் என்பது. இதுபற்றியே, "கண்டார்" என்பதற்கு 'உணர்ந்து தெளிந்தார் - அநுபவத்தில் அறிந்

தார்' என்று பொருள் கூறப்பட்டது. உணர்ச்சி நாளடை வில் தெளிவைக் கூட்டுதல் இயல்பு.

செம்பொருளை எப்படிக் காண்பது? வழிகாண யாண்டுஞ் செல்ல வேண்டுவதில்லை. திருவள்ளுவர் வழிகாட்டியுள்ளனர்; அது சால்புடைத்து. இல்வாழ்க்கையில் நின்று, வாழ்க்கைத்துணையை ஏற்று, மக்களைப் பெற்று, அன்பை உடைமையாக்கி, விருந்தோம்புஞ் செந்தண்மை வழிச் செம்பொருளைக் காண்டல் கூடுமென்பது திருவள்ளுவர் அறிவுறுத்தல். அவர் அறிவுறுத்தும்வழி நின்று ஒழுகுவோமாக. திருவள்ளுவர் 'இல்வாழ்க்கை' முதலியவற்றை நிரலே அருளி, 'விருந்தோம்ப'லைத் தொடர்ந்து நிற்கும் இவ்வதிகாரத்தின் முதற்பாட்டில் "செம்பொருள் கண்டார்" என்று அருளியதில் வழிபுலனாதல் காண்க. "செம்பொருள் கண்டார்" யார்? இல்வாழ்க்கை முதலிய அறக் கூறுகளில் நின்று நின்று ஒழுகி விருந்தோம்புஞ் செந்தண்மை பூண்டார் செம்பொருளைக் கண்டாரென்க. இந்நுட்பத்தை இக்குறள் குறிப்பால் உணர்த்துவதைச் சிந்தித்துப் பார்க்க.

## வாய்ச்சொல்

செம்பொருள் கண்டார் யார்? அறவோர். அறவோர் யார்? மனமாசகன்றோர்.

செம்பொருள் கண்டார் உள்ளத்தில் - வாயில் - மெய்யில் முறையே என்ன அரும்பும்? என்ன முகிழ்க்கும்? என்ன மலரும்? உண்மை (உள் + மை) அரும்பும்; வாய்மை முகிழ்க்கும்; மெய்ம்மை மலரும். இங்கே வாய்மை (வாய்ச்சொல்) மட்டும் குறிக்கப்பட்டது. நடுவணதாகிய அதன்கண் ஏனைய இரண்டும் அடங்குமாதலின்.

செம்பொருள் கண்டார் வாயில் என்ன சொல் வரும்? வாய்மை - வாய்மைச் சொல்லே.

செம்பொருள் பொய்மை அற்றது. அதைக் கண்டவர் வாயில் பொய்மைச் சொல் வருங்கொல்? வாராது. ஆகவே, செம்பொருள் கண்டார் வாயில் வாய்மை வருதல் இயல் பென்று கொள்க.

வாயில் வருவது வாய்மையாகவே இருத்தல் வேண்டும். வாய்மைக்கென்று வாய் படைக்கப் பட்டது. அதைப் பொய்மைக்குப் பயன்படுத்துவது இயற்கையாகாது.

வாயைப் பொய்மைக்குப் பயன் படுத்துவோர் எவர்? செம்பொருளைக் காணும் முயற்சியில் தலைப்படாதார். செம் பொருளைக் காணும் முயற்சியில் தலைப்படுவோர் வாய்மை காத்து வருவர். ஆகவே, செம்பொருளைக் கண்டார் வாய்ச் சொல் வாய்மையாதலைத் தெளிக.

**இன்சொலால்**

இனிமை + சொல் = இன்சொல்.

இன் சொல்; இனிய சொல்; இன்னாமை அற்ற சொல்; செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்.

ஆல் - ஆதலின் என்பர் மணக்குடவர்; அசையாக் கொண்டனர் பரிமேலழகர்.

**இன்சொல்**

வாயிலே பிறப்பது சொல். இதற்கு அடிப்படை மனம். மனம் நினைப்பதை வாய் சொல்லும்.

இன்சொல் எத்தகை மனத்தினின்றும் முகிழ்க்கும்? இனிய மனத்தினின்றும் இன்சொல் முகிழ்க்கும். இன்னா மனத்தினின்றும் இன்னாச் சொல் பிறக்கும்.

ஈண்டு ஆசிரியர் குறித்துள்ள இன்சொல் ஆழ்ந்த பொருளுடையது. புறத்தே - உதட்டளவில் - தோன்றி

அழிவதை ஆசிரியர் குறித்தாரில்லை. செம்பொருள் கண்டாரது வாய்ச்சொல் ஈண்டு இன்சொல் என்னப்பட்டது.

அதிகாரவைப்பு முறையை நோக்குக. தொடர்பு புலனாகும். "இன்சொல்" "விருந்தோம்ப"லைத் தொடர்ந்து நிற்கிறது. மனமாசகன்ற செந்தண்மையுள்ளமே விருந்தோம்பும் பான்மைக் குரியதென்று முன்னே விளக்கப்பட்டது. செந்தண்மையில் இன்சொல் பிறவாது வேறு என்ன பிறக்கும்?

மாசற்ற மனத்தில் - அறம் விளங்கும் அகத்தில் - செம்பொருள் கண்ட நெஞ்சில் - இனிய எண்ணமே தவழும். இனிய எண்ணத்தினின்றும் இன்சொல் முகிழ்ப்பது இயற்கை. இது, "செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் இன்சொல்" என்று ஆசிரியரால் விளக்கப்பட்டது. செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் இன்சொல் என்க.

"அறன் வலியுறுத்த"லில் அறத்தின் இயலை விளக்கப் புகுந்த ஆசிரியர், "அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும் - இழுக்கா இயன்ற தறம்" என்றருளியது ஈண்டு உன்னற்பாலது. இன்னாச்சொல் அறத்தின்பாற் பட்டதன்று என்று ஆசிரியர் அருளி யிருத்தலைக் காண்க. இன்னாச்சொல் அறத்தின்பாற் பட்டதன்றெனில் இன்சொல் அறத்தின்பாற் பட்டதென்பது நன்கு விளங்குவதாகும். இதனை ஆசிரியர், "செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் இன்சொல்" என்று தெளிவு செய்தனர்.

## ஈரம் அளைஇப் படிறிலவாம்

ஈரம் அளைஇ - 'அருளொடு பொருந்தி' என்றனர் மணக்குடவர்; 'அன்பொடு கலந்து' என்றனர் பரிமேலழகர். (அன்பொடு கலத்தல் - அன்புடைமையை வெளிப்படுத்தல்; இது பரிமேலழகர் குறிப்புரை).

அளைஇ - அளைவி ; கலந்து.

அளைஇ : பெரிதும் அளபெடை பூண்டுருவஞ் சொல். “ நெடுவரை...கழறுகுரல் அளைஇக் - காலொடு வந்த கமஞ்சூல் மாமழை”—குறுந்தொகை : கருஅ ; “அகமலி உவகை ஆர்வமொடு அளைஇ ”—மலைபடுகடாம் : 184 “ நலமுழுது அளைஇய புகரறு காட்சி ”—பரிபாடல் க: சரு ; “பல்வேறு பூம்புகை அளைஇ” —சிலப்பதிகாரம் கஈ : கஉக.

படிறில - வஞ்சனை இல்லாதன (‘படிறின்மை - வாய்மை’ என்று பரிமேலழகர் குறிப்புப் பொறித்துள்ளனர்).

இன்சொல் படிறிலவாம். இன்சொல் பால்பகா அஃறிணை என்பர் இலக்கணப் புலவோர்.

## ஈரம் அளைஇ

இன்சொல் அன்பொடு கலந்துவரல் வேண்டுமென்பார் “ஈரம் அளைஇ ” என்றார். ‘அன்பொடு கலத்தலாவது அன்புடைமையை வெளிப்படுத்துவது’ என்று பரிமேலழகர் பொறித்த குறிப்புப் போற்றுந்தகையது.

அறவழிப் பிறக்கும் எதுவும் அன்பின் வழியதாதல் இயல்பு. அறமும் அன்பும் தொடர்புடையன. அத்தொடர்பு என்றும் பிரியாதது. அறம் விதை ; அன்பு முளை. “ அன்பும் அறமும் உடைத்தாயின்.........” எனவரூஉங் குறட்பாவின் விருத்தியுரையை நோக்குக. அறங்கண்டார் வாயில் முகிழ்க்கும் இன்சொல் அன்புவழி வெளிவரல் இயற்கை என்பது உணரத் தக்கது.

## படிறிலவாம்

அன்பற்ற சொல் இனியதாகாது. அஃது அறங்கண்டவர் வாயில் பிறவாது. அதுவெறும் உதட்டளவில் தோன்றி

அழிவதாகும். உதட்டளவில் பிறப்பது சிங்கிபோன்றது. அது வஞ்சனை புரிவதாகும்.

அறத்திற் பிறந்து அன்பொடு கலந்த இன்சொல் வஞ்சனையற்றது; மக்கள் அகத்தை மகிழ்ச்சியால் மலர்வித்து இன்பத்தேன் பிலிற்றுந் தன்மையது. அன்புடைமையை வெளிப்படுத்தும் இன்சொல் கரவற்றதாதலின், 'படிறில வாம்' என்றனர்.

இக்குறட்பாவில் இன்சொல் பிறக்குமிடம் அறம் என்பதும், அஃது அன்பு வழி வெளிவருவது என்பதும், அதன் இயல் படிறில்லாதது என்பதும் விளங்குதல் காண்க. (க)

## 92

முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானும்
இன்சொ லினதே அறம்.

### பொருள்

முகத்தான் அமர்ந்து - (விருந்தினரை) முகத்தால் விரும்பி, இனிது நோக்கி - இனிதாக (கண்ணாலும் கருத்தாலும் அவரை)ப் பார்த்து, அகத்தான் ஆம் - மனத்தினுள் ஆகும், இன்சொலினதே - இன்சொல்லைச் சொல்லுதலினிடத்ததே, அறம் - அறம் என்பது.

### கருத்து

இன் சொல்லினிடத்தது அறம்.

### விருத்தி

மேற்பாட்டில் அறங்கண்டார் வாய்ச்சொல் இன்சொல் என்னப்பட்டது. இப்பாட்டில் இன்சொல்லின் கண்ணதே அறம் என்று அப்பாட்டிற்கு விளக்கஞ் செய்யப்பட்டுளது.

'கண்ணாலே பொருந்தி இனிதாக நோக்கி மனத்தோடே பொருந்திய இன்சொல் சொல்ல வல்லவனாயின், அது தானே அறமாம்'—இது மணக்குடவர் கண்ட உரை.

## முகத்தான் அமர்ந்தினிது நோக்கி

முகத்தான் - கண்ணால் என்பர் மணக்குடவர்.

அமர்ந்து - விரும்பி; பொருந்தி எனினுமாம்; "முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்தி"—திருமுருகாற்றுப்படை: 251 (முகன் அமர்ந்து-முகம் விரும்பி : நச்சினார்க்கினியம்); "சுவல்மிசை அமைத்த கையன் முகனமர்ந்து" —நெடுநல்வாடை: 183 (முகன் அமர்ந்து - முகம் பொருந்தி : நச்சினார்க்கினியம்).

இனிது நோக்கி - இனிதாகப் பார்த்து; இனிதாகக் கண்ணாலும் கருத்தாலும் பார்த்து.

நோக்கல் கருதற்கும் பொருளாதலை, "காதலாய் நின்னியல் களவெண்ணிக் களிமகிழ் - பேதுற்ற விதனைக் கண்டியா னைக்கநீ யெம்மை - ஏதிலா நோக்குதி" என வரூஉம் பரிபாடலால் (18 : 11 - 2) உணர்க.

முகமலர்ந்து-இனிய நோக்குடன் பார்த்து என்றபடி.

## முகத்தான் அமர்ந்து

விருந்தினர் மெல்லிய மனமுடையார்; முகந்திரிந்து 'நோக்கக் குழையும்' நீரார். அவரை முகந்திரிந்து நோக்கலாகாது. அவருக்கு நோற்பவரின் முகமலர்ந்த - மகிழ்ச்சி - விருப்பம் - முதலில் புலனாதல் வேண்டும். இதுபற்றி, "முகத்தா னமர்ந்து" என்றார். "அமர்ந்து" என்பது, விரும்பி - பொருந்தி - என்னும் பொருள்களைக் குறிக்கொண்டு நிற்கிறது. விருந்தினர் முகத்திலும் அகத்திலும் நோற்பவரின் மலர்ந்த முகம் பொருந்துதல் வேண்டும். அப்

பொழுதே விருந்தினரின் அகங்குளிர்ந்து முகம் மலரும். பொருந்துதல் எங்கே நிகழும்? விருப்பமுள்ள இடத்திலேயே பொருந்துதல் நிகழும். அஃது இல்லாத இடத்து இது நிகழாது. இஃது இல்லாத இடத்து அது நிகழாது. இரண்டும் விரவிவரும் முறையில் "அமர்ந்து" என்னுஞ் சொல் பெய்யப்பட்டது.

## இனிது நோக்கி

"முகத்தா னமர்ந்து இனிது நோக்கி" என்கிறார். இதனால் முகத்துக்கும் அகத்துக்கும் உள்ள இயைபு விளங்குகிறது. "இனிது நோக்கி" என்பதில் அகம் கரந்து நிற்கிறது. இது குறித்தே, "நோக்கி" என்னுஞ் சொல்லிற்குக் 'கண்ணால் பார்த்து' என்று பொருள் கூறும் அளவில் நில்லாது, 'கண்ணாலும் கருத்தாலும் பார்த்து' என்று பொருள் கூறப்பட்டது.

"முகம்போல முன்னுரைப்பதில்", "அகத்தி னழகு முகத்தில் தெரியும்" என்பன ஆன்ற மொழிகள். ஒன்றில் அகம் பொருந்தாது முகம் பொருந்தாது; ஒன்றை அகம் விரும்பாது முகம் விரும்பாது. அகநிலையை உணர்த்துவது முகம். அகத்திலுள்ளதே முகத்தில் தோன்றும்.

இங்கே நோற்போர் அகத்தில் விருப்பம் இயல்பாயிருக்கிறது. அவ்விருப்பம் விருந்தினரைக் கண்டதும் கூர்ந்து எழுகிறது; முகத்தில் திகழ்கிறது. கூர்ந்து எழுதல், "இனிது நோக்கி" என்பதில் உறைந்து நிற்றலை உன்னுக. முகம் அமர்ந்ததும் அகம் இனிது நோக்கலாயிற்று என்று கொள்க. நோக்கு, அகத்தையும் முகத்தையும் ஒன்றுபடுத்தும் தோழமை வாய்ந்தது.

நிகழ்ச்சிகளில் முன்னே முனைந்து உறுவது முகமா அகமா என்னும் ஆராய்ச்சி செய்ய வேண்டுவதில்லை. இரண்

டும் முன் பின்னாகவோ பின் முன்னாகவோ நிகழ்ச்சிகளில் ஈடுபடும். நிகழ்ச்சிகளுள் முகத்தினின்று அகத்துக்குச் செல்வனவும் அகத்தினின்று முகத்துக்குச் செல்வனவும் உண்டு. அவை செல்லும் வேகத்தை அளவிட்டுக் கூறுதல் இயலாது. அவை காற்றினும் வானொலியினும் கடிது விரைந்து செல்லும்.

முகத்தை அமர்தல் என்றார்; நோக்கை இனிது என்றார். அமர்தலில் - அமைவில், இனிமை நிலவுதல் இயல்பு.

## அகத்தானும் இன்சொலினதே அறம்

அகத்தான் - மனத்திலே, மனத்தினுள், உள்மனத்தால்.

ஆம் - ஆகும், பரிணமிக்கும், உருக்கொள்ளும்.

இன்சொல் - இனிய சொல்லைச் சொல்லுதல். இன் சொலினதே - இன்சொல்லைச் சொல்லுதலினிடத்ததே; இன்சொல் சொல்லுமிடத்ததே எனினுமாம்.

"இனிய சொற்களைச் சொல்லுதலின் கண்ணதே" என்பது பரிமேலழகர் உரை. "நோக்கி, என்னும் வினையெச்சம் 'இன்சொல்' என அடையடுத்து நின்ற முதனிலைத் தொழிற்பெயர் கொண்டது."—இஃது அவர்தம் குறிப்புரை.

ஏகாரம் : பிரிநிலை.

## அகத்தானும் இன்சொல்

அகம் இருவிதம். ஒன்று புற அகம்; மற்றொன்று உள் அகம். புற அகம் புலன்களின் வழி உழல்வது; உள் அகம் புலன்களைத் தன் வழிப்படுத்துவது.

முகனமர்ந்ததும் கண்ணோக்கும் கருத்து நோக்கும் விரைந்து நிகழ்கின்றன. கருத்து நோக்கால் புற அகம் உள்

அகத்தில் புகுவதாகிறது. எல்லாக் கருவி கரணங்களும் உள் அகத்தில் ஒன்றுகின்றன. *"ஐந்து போறிவுங் கண்களே கொள்ள...' என்பதுபோல என்க.

குவிந்த உள் அகத்தில் விளங்குவது அறநிலை; அதாவது செம்பொருள் நிலையம். அதினின்றும் அரும்புவது இனிய எண்ணம். இனிய எண்ணத்தினின்றும் இன்சொல் முகிழ்க்கிறது. முக அமர்வும் இனிய நோக்கும் உள் அகத்தில் ஒன்ற, அவ்வகத்தால் ஆவது - பரிணமிப்பது - உருக்கொள்வது - இன்சொல்.

முன்னே செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் இன்சொல் என்னப்பட்டது. இப்பாட்டில் இன்னுஞ் சிறிது தெளிவுசெய்யச் செம்பொருள் நிலையமாகிய அகத்தைக் குறிப்பிட்டு அதனால் ஆகும் 'இன்சொல்' என்றருளினர். இன்சொல் - ஆகும் இன்சொல் - அகத்தானாகும் இன்சொல் - என்று கொள்க.

## இன்சொலினதே

"இன்சொலினதே" என்பதற்கு இன்சொல்லினிடத்ததே என்று பொருள் கூறினால் "நோக்கி" என்னும் வினையெச்சம் சார்பின்றித் தவிப்பதாகும். "நோக்கி"யைத் தவிக்கவிடாது காத்த பெருமை பரிமேலழகருக்கும் உண்டு. "இனிய சொற்களைச் சொல்லுதலின்........" என்று பரிமேலழகரால் பொருள் விரிக்கப்பட்டது. நோக்கிச் சொல்லுதலின் என்று கூட்டிக்கொள்க.

## அறம்

அறம் எதனிடத்தது? இன்சொல்லினிடத்தது என்று விளக்குகிறார் பரிமேலழகர். சொல்லுதலினிடத்தது அறம் என்பதிலுள்ள நுணுக்கம் நெஞ்சைக் கவர்கிறது.

---

* பெரிய புராணம்: தடுத்தாட்: ௪0௬.

அறம், பலப்பல கூறுகளாய், இல்வாழ்க்கை முதலியவற்றிற் படிப்படியே வளர்ந்து, விருந்தோம்பலில் திரண்டு, இன்சொல்லில் பயன் தருதலால், அஃது, 'இன்சொலினதே' என்று ஆசிரியரால் துணிந்து கூறப்பட்டது. காரணம் பலபடக் கூறலாம். ஈண்டு விரிவுரை வேண்டுவதில்லை. ஆசிரியர் அருண் மொழிகளே உண்மையை விளங்கச் செய்யும். ஆசிரியர் "செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் இன்சொல்" என்றருளியதை உன்னுக. செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் இன்சொல் ஆதலின், அச்சொல் தூயதாகிறது. அறங் கண்டார் வாயிற் பிறக்கும் தூய இன்சொல்லினிடத்து அறம் திகழாது வேறென்ன திகழும்? ஆகவே, மாசற்ற தூய அறம் இன்சொல்லினிடத்தது என்று கொள்வது பொருத்தமேயாகும். இப் பாட்டான் அறம் திகழுமிடம் குறிப்பிட்டவாறும்.

## நுணுக்கம்

"முகத்தா னமர்ந்து, இனிது நோக்கி, அகத்தானாம் இன்சொலினதே அறம்"-இப்பாவிலுள்ள சொல் அமைவும், கருத்து நுணுக்கும், பொருளாழமும், இவைகள் ஈனும் அமைதியும் அகத்திணையர்க்கு விருந்தாவன. முகத்தானமர்தல் - மலர்தல்; இனிதுநோக்கல் - மணங் கமழ்தல்; இன்சொல் - தேன்பிலிற்றல்; இன்சொல்லினிடத்ததாகிய அறம் - சுவைத்தல்.

முகனமர்தலில் அன்பும், இனிது நோக்கலில் அருளும் ஒன்றி அகத்தானாம் இன்சொல்லினதாகிய அறமாய்க் கனிந்து நிற்றல் காண்க. இன்சொல் மாண்பென்னே! அதனைத் தமிழ்க் குறளால் ஓதிய ஆசிரியர் திறமென்னே! (உ)

## 93

அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின்.

### பொருள்

முகன் அமர்ந்து இன்சொலன் ஆக பெறின் - முகம் மலர்ந்து இன்சொல்லுடையவனாகப் பெற்றால், அகன் அமர்ந்து ஈதலின் நன்றே - (அது) மனமகிழ்ந்து கொடுத்தலி னும் நல்லதே யாகும்.

### கருத்து

இன்சொல்லுடைமை ஈகையினும் நல்லது.

### விருத்தி

கடந்த பாட்டில் அறம் இன்சொல்லினிடத்தது என்று விளக்கப்பட்டது. இப்பாட்டில் இன்சொல் ஈகையினுஞ் சிறந்தது என்று விளக்கப்படுகிறது.

'மனம் பொருந்திக் கொடுத்தலினும் நன்று; முகம் பொருந்தி இனிமைச் சொல் சொல்ல வல்லவனாயின்'—மணக்குடவர்.

**அகனமர்ந்து...............நன்றே**

அமர்ந்து: மேற்பாட்டிற் பொறிக்கப்பெற்ற குறிப்புக்களையும், எடுத்துக் காட்டப்பெற்ற ஆன்றோருரைகளையும் பார்க்க.

அமர்ந்து - விரும்பி, பொருந்தி; விருப்பமும் பொருத்தமும் விரவியுள்ள இடத்தில் மலர்வும் மகிழ்வும் இருத்தல் இயல்பு. இதுபற்றியே, "முகனமர்ந்து" என்பதற்கு, 'முகம் மலர்ந்து' என்றும், "அகனமர்ந்து" என்

பதற்கு 'மனமகிழ்ந்து' என்றும் பொருள் கொள்ளப் பட்டன.

"முகனமர்ந்து" என்பதற்கு 'முகம் இனியனாய்' என்றும், "அகனமர்ந்து" என்பதற்கு 'நெஞ்சம் உவந்து' என்றும் பரிமேலழகர் பொருள் கண்டதும் ஈண்டு நோக்கற்பாலது.

ஈதலின் - ஈதலினும் (ஐந்தாம் வேற்றுமை உறழ்வுப் பொருு) ; ஈதலைப்போல என்னலுமாம் (ஐந்தாம் வேற்றுமை உவமைப்பொருு).

ஏ : தேற்றம்.

## முகனமர்ந்து இன்சொலுதல்

இன்சொல் மாசற்ற அறநெஞ்சினின்றும் பிறத்தல் மேலே விளக்கப்பட்டது. அறநெஞ்சினின்றும் பிறக்கும் இனிமை, வாயின் வழி இன்சொல்லாகிறது. அறநெஞ்சின் இனிமை, இன்சொல்லாதற்கு முன்னர் ஒரு நிகழ்ச்சியை உண்டுபண்ணுகிறது. அஃதென்னை ? அது முகமலர்ச்சி. அக இனிமை முகத்தை மலரச் செய்கிறது. அகத்தின் பரிணமம் முகமன்றோ ?

அகத்தின் இனிமை, முகத்தை மலர்வித்து, ஒடுங்கிவிடவில்லை ; வாயின் வழி இன்சொல்லாகி வெளிப்படுகிறது. முகம் மலர்ந்து இன்சொல் வழங்குதலால், "முகனமர்ந்து இன்சொல னாகப் பெறின்" என்றார்.

## இன்சொலனாகப் பெறின்

இன்சொல் என்னாது, 'இன்சொலன்' என்றார். இன்சொல் வழங்கி வழங்கிப் பண்படுவோன் இன்சொல்லனாதல் இயல்பு. இதுபற்றியே "இன்சொலன் ஆக" என்றார். 'ஆக' என்பது, முயற்சி - பயிற்சி - பண்படல் முதலியவற்றை உணர்த்துவது.

ஒருவன் எளிதில் இன்சொலனாதல் இயலாது. அதன் அருமைப் பாட்டை உன்னியே, " ஆகப்பெறின் " என்றார். " பெறின் " என்பது, அருமைப் பாட்டைத் தெரிவிப்பது.

மனமாசகற்றலும், அற நெஞ்சம் பெறலும், இன் சொல்லனாதலும், இன்ன பிறவும் வெறும் வாய்ப்பேச்சால் விளைவனவல்ல. அவைகளைப் பெறுதற்குப் பெருமுயற்சி செய்தல் வேண்டும். உலகில் மகன் எல்லாஞ் செய்தல் கூடும். அவன் மனமாசகன்று, அற நெஞ்சம் பெற்று, இன்சொல னாதல் எளிதில் கூடுவதன்று; அருமையில் கூடுவது. அருமையில் கூடுவதை, " ஆகப்பெறின் " என்று விளக்கிய வாறு காண்க.

"ஆகப்பெறின்" என்பது, அருமைப் பாட்டைப் புலப் படுத்தினும், அதன்கண் ' முயற்சியால் இயல்வது ' விளங்கு தலைக் காண்க.

பெண்மணி, இயல்பாகவே இன்சொல்லளாய் வாழும் பேறுடையவளாதலின், அவளை நீக்கி, " இன்சொலனாகப் பெறின்" என்று ஆடவனைக் குறிக்கலாயினர்.

ஆடவன் கரடு முரடான அகமுடையவன். கரடு முர டான மனம் எச்சொல்லை வழங்க மகனை உந்தும்? வன் சொல்லை வழங்கவே அவனை உந்தும். மகன் வன்சொல் வழங்கலை விடுத்து, இன்சொல் வழங்க முயலல்வேண்டும். அம்முயற்சியைத் தூண்டுவது, " ஆகப்பெறின் " என்பது.

### அகனமர்ந்தீதலினன்றே

ஈதல் பல திறத்தது. அவைகளைத் திரட்டி இரு கூறிட்டுக் கொள்ளலாம். ஒன்று பயன் கருதி நிகழ்த்துவது; மற்றொன்று பயன் கருதாது நிகழ்த்துவது. முன்னையது அகனமர் வற்றது; தன்னலமும் புறப்புகழ்வும் உடையது. பின்னையது அகனமர்வுடையது; தன்னலமும் புறப் புகழ்

வும் அற்றது. " நீயோ தர்மஞ் செய்யும்போது, உன் தர்மம் அந்தரங்கமா யிருப்பதால், உன் வலதுகை செய்கிறதை உன் இடதுகை அறியாதிருக்கக் கடவது" என வருஉங் கிறிஸ்து பெருமான் திருவாக்கை நோக்குக.

அகனமர்ந்த ஈகையே ஈகை. அதுவே ஈகை என்னும் பொருளுக்குரியது. இது பற்றியே "அகனமர்ந்தீதலின்" என்றார். அகனமர்வு உள்ள இடத்தில் முகனமர்வு அமைதல் இயற்கை. ஆதலின், முகனமர்வைத் தனியே கூறவேண்டுவதில்லை.

அகனமர்வற்ற முகனமர்வும் உண்டு. அது போலி; நடிப்பு. அதன் உண்மை அறிஞர்க்குப் புலனாகி விடும். போலியை விலக்க வேண்டி, "அகனமர்ந்து" என்றார் போலும்.

"ஈதலின்" என்பதிலுள்ள இன்னுருபுக்குப் 'போல' என்னும் பொருளும் உண்டு (உவமை); 'காட்டினும்' என்னும் பொருளும் உண்டு (உறழ்வு). ஈண்டைக்கு எதைக் கொள்வது? ஒத்த ஒன்றைக் கொள்வதினும் சிறந்த ஒன்றைக் கொள்வது சால்பாகும்.

"நன்றே" என்று தேற்றமாகக் கூறியுள்ளனர். இதனால் ஆசிரியர் உள்ளம் இனிமையில் நன்கு படிந்திருந்தமை புலனாகிறது.

## ஈதற் சிறப்பு

ஈண்டுக் குறிக்கப்பெற்ற ஈகை அகனமர்வுடையது. அத்தகை ஈகையே ஈகை. அவ்வீகையினும் நன்றுடையது இன்சொல் என்கிறார் ஆசிரியர். இன்சொல்லை ஆசிரியர் பாராட்டும் முறையைப் பாருங்கள்.

ஈதலை எற்றுக்கு ஈண்டுக் குறித்தல் வேண்டும்? வேறொன்றைக் குறித்தலாகாதா? என்று சிலர் நினைத்தல்

கூடும். ஈதல் அறக்கூறுகளுள் ஒன்று; ஆனால் சிறந்தது. அது மானமாசற்ற முழு அறநிலைக்குத் திறவு போன்றது. ஈகையின் பெற்றியை, "நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம் - இல்லெனினும் ஈதலே நன்று" என்றும், "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது - ஊதியம் இல்லை உயிர்க்கு" என்றும் ஆசிரியரே உலகுக்கு விளக்கியிருத்தலை ஓர்க.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த ஈகையினுஞ் சிறந்தது 'இன்சொல்' என்பார், "முகனமர்ந் தின்சொல னாகப் பெறின் - அகனமர்ந் தீதலின் நன்றே' என்றார்.

ஈதலினும் இன்சொல் எப்படி நன்றுடையதாகும்? ஈகை அறத்தின் சிறந்த கூறு. இன்சொல் அறத்தின் கூறன்று; அறமே. இரண்டுங் குணகுணி போன்றன என்பது மேலே விளக்கப்பட்டது. கூறு விழுமியதா? முதல் விழுமியதா? இதற்கு விரிவுரை வேண்டுங்கொல்?

இன்சொல் ஈகையினுஞ் சிறந்ததாதலின், ஈகை எற்றுக்கு என்று எவருங் கருதலாகாது. ஈகை இன்சொல்லுக்கு வேறுபட்டு நிற்பதன்று. இன்சொல்லின் ஓர் உறுப்பு ஈகை. இன்சொல்லன் அறவோன் என்று அடிக்கடி முழங்க வேண்டுவதில்லை. ஒருவனை அறவோனுக்குங் கருவிகளுள் சிறந்த ஒன்று ஈகை. அத்தகைய ஒன்றை எப்படி விலக்குதல் கூடும்? அறவோன் என்னும் இன்சொலனிடம் ஈகை தன்னையறியாமல் நிகழ்ந்துகொண்டே போகும். இன்சொல்லன் ஈகையாளனாதல் இயல்பு. இன்சொல்லின் மாண்பைத் தெரிவிக்க அறக்கூறுகளுள் விழுமியதாகவுள்ள ஈகையை ஈண்டு ஆசிரியர் எடுத்துக்காட்டினர். அதனானே ஈகைக்கும் இன்சொல்லுக்கும் உள்ள தொடர்பு நன்கு விளங்குதல் காண்க.

இத்திருக்குறட் கருத்தைப் பின்வந்த பேரறிஞர் பலா பலவாறு ஆண்டனர். "ஈகை அரிதெனினும் நல்கூர்தல் ஓகோ கொடிது கொடிதம் மா" (நீதிநெறிவிளக்கம்) என வரூஉப் சான்றோர் மொழியைச் சிந்திக்க. (ரு)

## 94

*பணிவுடையன் இன்சொல னாதல் ஒருவற்கு*
*அணியல்ல மற்றுப் பிற.*

### பொருள்

*ஒருவற்கு அணி - ஒருவனுக்கு ஆபரணமாவது, பணிவு உடையன் இன்சொலன் ஆதல் - பணிவு உடையனாய் இன் சொல்லனாவது, மற்று பிற அல்ல - மற்றுமுள்ள பிற (அணிகள்) அல்ல.*

### கருத்து

*ஒருவனுக்கு உரிய அணி அவனது இன்சொல்லே.*

### விருத்தி

*மேற்பாட்டில் ஈகையின் அடியில் இன்சொல் நிலவுதல் வேண்டுமென்று சொல்லப்பட்டது. இப்பாட்டு ஒருவனுக் குரிய அணி இன்சொல் என்று சொல்கிறது. இன்சொல் வழிப் பிறக்கும் ஈகை அணிபோன்றதென்றபடி.*

**ஒருவற்கு அணி பணிவுடையன் இன்சொலனாதல்**

*ஒருவற்கு - ஒருவனுக்கு.*

*அணி - பூண், ஆபரணம்; 'அழகு' என்றனர் மணக்* குடவர்.

*பணிவு - தாழ்மை; அடக்கம்.*

## ஒருவற்கு அணி

அணியப்படுவது அணி. மக்கள் தங்கள் தங்கள் நாகரிகத்துக்கேற்ப எவ்வித அணியாவது பூண்பது வழக்கம். முதல் முதல் கண்ணைக் கவர்வது அணியே. அதனால் ஆசிரியர் எண்ணம் அணிமீது சென்றிருக்கலாம்.

அணி இருவகை. ஒருவகை புற அணி; இன்னொருவகை அக அணி. புற அணி பிறிதின்கிழமையது; அக அணி தற்கிழமையது. இப்பாட்டிலுள்ளது அக அணி; தற்கிழமையது. அக அணி எது? அதன் இயல் என்ன?

## பணிவுடையன் இன்சொலனாதல்

ஒருவன் இன்சொலனாவது அவனது அணி என்றபடி. ஆசிரியர் இவ்வளவில் நில்லாது பணிவுடையன் இன்சொலனாதல் என்று அருளியுள்ளது கருதற்பாலது. இன்சொல்லுக்குப் பணிவுடைமை தேவை என்றவாறு. பணிவுடைமையைக் கொண்ட இன்சொல் அணியாகும் என்பது உணரத் தக்கது.

பணிவு எல்லாரிடத்திலும் பொலிதராது. அது கருவி கரணங்களோய்ந்தவரிடத்தில் பொலிவது. மற்றவரிடத்தில் அது தலைகாட்டாது. முனைப்பற்ற இடத்தில் நிகழ்வது பணிவு என்று சுருங்கச் சொல்லலாம். "கருவி கரணங்களோய்ந்த தொண்டர்கள்" என்றார் தாயுமானாரும்.

"அகனமர்ந்த" என்று முன்னே கூறினர்; இங்கே "பணிவுடைமை" என்கின்றார். இரண்டையும் சிந்தித்துப் பார்த்தால் இரண்டும் ஒரு கருத்தன என்பது புலப்படும்.

மாசற்ற அகமே அமர்ந்ததென்பது. அவ்வகத்திலேயே பணிவு இலங்கும்.

கருவி கரணங்கள் வீறிடும் இடத்தில் - முனைப்புள்ள இடத்தில் - மாசு அறாது. அங்கே மாசு பெருகிக்கொண்டே

போகும். மாசுள்ள அகம் அமர்ந்ததாகாது; பணிவுடைய தாகாது. ஆகவே, மாசற்ற அற நெஞ்சில் அமர்வது பணிவு என்க.

அற நெஞ்சினின்றும் எழுவது இன்சொல். அஃது இங்கே பணிவுடைமையில் விளங்குவது என்று சொல்லப் படுகிறது. பணிவுடைமையினின்றும் இன்சொல் தோன்றுத லால், "பணிவுடையன் இன்சொலனாதல்" என்றார். பணிவிலா விடத்தில் தோன்றுவது இன்சொல்லாகாது. அது போலி - கரவு உடையதாகும்.

## ஆதல்

" இன்சொலனாதல் " என்றார். " ஆதலை " உன்னுக. இன்சொல்லும் மகனும் ஒன்றுதல்வேண்டும் என்றபடி. அப் பொழுதே இன்சொல் அக அணியாகும்; தற்கிழமையதாகும். உதட்டளவில் வெளிப்படும் போலிஇன்சொல் அமர்ந்த அகத்தினின்றும் பிறவாதது; அது கரவுடையது. அதை விலக்கி, மகனுடன் ஒன்றும் இன்சொல்லை வலியுறுத்த வேண்டி " ஆதல் " என்றார்.

பாடுவோர் பலருளர். அவரனைவரும் பாட்டுடன் கலந் தவராவரோ? இயந்திரம்போல் பாடுவோருளரல்லரோ? பாட்டுடன் மகன் இரண்டறக் கலத்தல் வேண்டும். அதுவே பாடுவதென்பது. " வான்கலந்த மாணிக்க வாசகநின் வாச கத்தை - நான்கலந்து பாடுங்கால் " என்றார் இராமலிங்க சுவாமிகள்.

## மற்று பிற அல்ல

மற்று - மேலுள்ள, மற்றுள்ள, இன்னுமுள்ள.
பிற - பிற அணிகள்.

மற்றுப் பிற அல்ல

மற்றுப்பிற என்பது இன்சொல் அல்லாத அணிகளைக் குறிப்பது. அவைகளை ஏன் நினைவூட்டல் வேண்டும்? மக்கள் பெரிதும் புற அணிகளைப் பூண்டு, அவைகளில் அழகிருப்பதாக மயங்கி, அழிகின்றார்களாதலின், அவர்கட்கு நல்லறிவுச்சுடர் கொளுத்தவேண்டி, "மற்றுப்பிற அல்ல" என்றார். அழகு அக அணியிலுண்மையும் புற அணிகலன்களில் இன்மையும் ஈண்டு விளங்குதல் காண்க. பணிவுடைமையால் இன்சொல்லை அணிவதே அழகு என்று அருளியவாறும். (ச)

(ii) இன்சொற்பயன்

95

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

பொருள்

நல்லவை நாடி - நல்லனவற்றையே விரும்பி, இனிய சொலின் - இனியவை சொன்னால், அல்லவை தேய - தீயவை தேய, அறம் பெருகும் - அறம் வளரும்.

கருத்து

இன்சொல்லால் அல்லவை தேய்ந்து அறம் பெருகும்.

விருத்தி

மேற்பாக்களில் இன்சொல்லின் தோற்றமும் மாண்பும் பேசப்பட்டன. இனி இன்சொல்லால் விளையும் பயன் பேசப்படும். பயன் இப்பாட்டில் அல்லவை தேய்ந்து அறம் பெருகுதல் என்று பொதுப்படச் சொல்லப்படுகிறது.

மணக்குடவர் உரை வருமாறு :—

'நல்லவான சொற்களை ஆராய்ந்து இனியவாகச் சொல்லுவானாயின், அதனானே அறமல்லாதன தேய அறம் வளரும்'

பரிமேலழகர் உரை வருமாறு :—'பொருளாற் பிறர்க்கு நன்மை பயக்குஞ் சொற்களை மனத்தான் ஆராய்ந்து, இனியவாக ஒருவன் சொல்லுமாயின், அவனுக்குப் பாவங்கள் தேய அறம் வளரும்'

**ந ல் ல வை நா டி.........பெருகும்**

நாடி - விரும்பி; ஆராய்ந்து எனினுமாம். பழைய உரையாசிரியர் இருவரும் ஆராய்ந்தென்றே பொருள் கூறியுள்ளனர். "இல்லோர் புன்கண் டீர நல்கு - நாடல் சான்ற நயனுடை நெஞ்சில்"—பதிற்றுப்பத்து : அசு : கூ - எ (நாடல் - விரும்பல்); "நீமெய் கண்ட தீமை காணின் - ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி"—புறநானூறு : கo : ௩ - ச. (நாடி - ஆராய்ந்து).

இனிய சொலின் - இனியவை சொன்னால்; இனிய சொற்களைச் சொன்னால்.

அல்லவை - அறம் அல்லாதவை; தீயவை; பாவங்கள்; பொய் முதலியன. "அல்லவை கடிந்த அறம்புரி செங்கோல்"—பெரும்பாணாற்றுப்படை : ௩கூ; "அல்லவை செய்தார்க்கு அறங்கூற்ற மாமெனினும் - பல்லவையோர் சொல்லும் பழுதன்றே"—சிலப்பதிகாரம் : உo. வழக்கு : வெண்பா : க; "அழுக்காற்றின் அல்லவை செய்யார்" —திருக்குறள்.

**ந ல் ல வை நா டி**

இவ்வதிகாரம் இன்சொல்லைப் பற்றியது. இன்சொல்லின் தோற்றுவாய் அற நெஞ்சமென்று அடிக்கடி வலியுறுத்

தப்படுகிறது. அற நெஞ்சம் நல்லனவற்றை விரும்புமா? அல்லனவற்றை விரும்புமா? நல்லனவற்றையே விரும்புமாதலின், "நல்லவை நாடி" என்றார்.

சிலர் நல்லனவற்றை எண்ணி நிகழ்த்த முற்படுகிறார். விளைவு தீமையாக முடிதலையும் பார்க்கிறோம். ஆதலின், விளைவை ஆழ நினையாது நல்லன என்று எண்ணி விரைந்து நிகழ்ச்சியில் தலைப்படலாகாது. ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்து ஆராய்ந்து நிகழ்ச்சியில் தலைப்படுவது சிறப்பு. நல்லனவற்றையும் ஆராய்ந்து நிகழ்த்தப் புகுவது அறிவுடைமை என்பார், " 'நல்லவை நாடி (ஆராய்ந்து)' என்றார்" என்று கொள்வோருமுளர்.

## இனிய சொலின்

நல்லனவற்றை விரும்பும் மனத்தினின்றும் முகிழ்ப்பது இன்சொல். இனியசொல் சொல்லுதலின் நோக்கம் என்ன? பயன் கருதாது பிறர்க்கு அன்புப்பணி செய்வதென்பது. இதை ஆசிரியர் "விருந்தோம்பல்" என்றனர். நல்லவை நாடி இனிய சொல்லுதலாவது விருந்தோம்பலென்னுஞ் செந்தண்மை பூண்டொழுகுதல் என்று சுருங்கச் சொல்லலாம். விருந்தோம்பல் முன்னர்ச் சொல்லப்பட்டமையான், இங்கே "இனிய சொலின்" என்று சொல்லுமளவில் நின்று விட்டனர்.

## அல்லவை தேய அறம் பெருகும்

"நல்லவை நாடி இனிய சொல்"வதன் பயன், "அல்லவை தேய்ந்து அறம் பெருகுதல்" என்று அருள்கிறார். "அறம் பெருகும்" என்று மட்டுஞ் சொல்லாது, "அல்லவை தேய அறம் பெருகும்" என்று அருளியது கருதற்பாலது.

அல்லவை அறமல்லாதன. அவை, பொய் அழுக்காறு அவா வெகுளி இன்னுச்சொல் முதலிய மாசுகள். இம்மாசுகள் பளிங்கனைய மனத்தைக் கறைபடுத்துகின்றன. இவைகள் தேயத்தேய அறம் தானே விளங்கிப் பெருகும். பாசி அகன்றால் நறுநீர் புலனாதலும், நோய் நீங்கினுல் நலம் உண்டாதலும், இருள் இரிந்தால் ஒளி விளங்குதலும் இயற்கை. ஆகவே, அல்லவை தேயத்தேய அறம் பெருகுமாதலின், "அறம்பெருகும்" என்று மட்டும் அருளாது, "அல்லவை தேய அறம் பெருகும்" என்று அருளலானர். அல்லவை தேய்க்க முயல்வது அறத்தைப் பெருக்க முயல்வதாம் என்றபடி. அல்லவை தேய்ப்பதில் கருத்துச் செலுத்தி முயலவேண்டு மென்பார், "அல்லவை தேய" என்று வலியுறுத்தினரென்க.

"தேய்தலாவது தன் பகையாகிய அறம் வளர்தலின் தனக்கு நிலையின்றி மெலிதல். 'தவத்தின் முன்னில்லாதாம் பாவம்' என்பதூஉம் இப்பொருட்டு. நல்லவை நாடிச் சொல்லுங்காலுங் கடியவாகச் சொல்லின், அறனுகா தென்பதாம்" எனவரூஉம் பரிமேலழகர் குறிப்பையும் நோக்குக.

"அல்லவை தேய அறம் பெருகுதல்" எச்சார்பில்? ஒரு சார்பையும் ஈண்டு நினைக்கவேண்டுவதில்லை. 'உலகில் அறம் பெருகும்' என்று கொள்வது சிறப்பு.

மக்களிடை நல்லவை நாடி இனிய சொல்லுதல் பெருகப் பெருக உலகில் அல்லவை தேய்ந்து அறம் வளர்தல் பெருகும் என்று சொல்லவும் வேண்டுமோ? மன்பதைக்கண் எது பெருகல் வேண்டும்? இன்சொல் - இன்சொல் - இன்சொல் என்க. (ரு)

## 96

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

பொருள்

பண்பின் தலைப்பிரியா சொல் - இனிமையினின்று சிறிதும் நீங்காதசொல், நயன் ஈன்று - அன்பை உண்டாக்கி, பயன் ஈன்று - இன்பத்தை நல்கி, நன்றி பயக்கும் - அறத்தை வளர்க்கும்.

கருத்து

இன்சொல் அன்பாலும் இன்பாலும் அறத்தை வளர்க்கும்.

விருத்தி

முன்னே அறம் பெருகுதல் சொல்லப்பட்டது. இங்கே அறப்பெருக்கும் அதற்குத் துணைபுரியும் அன்பும் இன்பும் சொல்லப்படுகின்றன.

'பிறரால் விரும்பப்படுதலையும் பயந்து, பொருளையும் பயந்து, அறத்தினையும் பயக்கும்; குணத்தினின்றும் நீங்காத சொல்'—மணக்குடவர்.

'(ஒருவனுக்கு இம்மைக்கு) நீதியையும் உண்டாக்கி, (மறுமைக்கு) அறத்தையும் பயக்கும்; (பொருளாற் பிறர்க்கு) நன்மையைக் கொடுத்து, இனிமைப் பண்பின் நீங்காத சொல்'—பரிமேலழகர்.

## பண்பிற் றலைப்பிரியாச் சொல்

பண்பு - இயல்பு, குணம்; இங்கே இனிமை, இனிமைப் பண்பு; 'பண்பு என்பது ஈண்டு அதிகாரத்தால் இனிமைமேல் நின்றது'—இது பரிமேலழகர் குறிப்பு.

தலைப்பிரியா - நீங்காத; சிறிதும் நீங்காத. தலைப்பிரியா என்பதிலுள்ள 'தலை' பொருளற்றுக் கிடப்பதன்று. சிறிதும் என்னும் பொருள் அதன்கண் ஒலியா நிற்கிறது. சிறிதும் பிரியாமையாவது முற்றும் பிரியாமை.

தலைப் பிரியாமையை ஒரு சொல் நீர்மைத்து என்றனர் பரிமேலழகர். இவர்தங் கூற்றைத் தழுவித் தலைப் பிரியா என்பது இரண்டுசொல் போலக் காணப்படுவ தென்றும், ஆனால் பொருளில் ஒரு சொற்றன்மையுடைய தென்றும், தலை உபசர்க்கமென்றும் இலக்கணப் புலவோர் கூறுப.

'தலை'யை இடப்பொருளாக் கொண்டு, 'பண்பிற்றலைப் பிரியா' என்பதற்குப் பண்பினிடத்தினின்றும் நீங்கா என்று பொருள் கூறுவோருமுளர்.

பண்பிற் றலைப்பிரியாச் சொல் - இனிமையுடைய சொல் - இன்சொல் - தூய இன்சொல் - உண்மை இன்சொல் (பண்பு - உண்மை).

## பண்பிற்றலைப்பிரியாச் சொல்

வெறும் 'இன்சொல்' என்று கூறாது, 'பண்பிற்றலைப் பிரியாச்சொல்' என்று பெருக்கிக் கூறியது எற்றுக்கு? இன்சொல்லின் மாண்பை விளக்கவேண்டி என்க.

இவ்வதிகாரத்தில் பேசப்படுவது அறநெஞ்சினின்றும் பிறக்கும் இன்சொல் என்பது மேலே விளக்கப்பட்டது. அதை ஆசிரியர் பல வழியில் விளக்கஞ்செய்து உலகுக்கு நினைவூட்டிக்கொண்டே போகிறார். உதட்டளவில் பிறந்து வஞ்சிக்கும் பொல்லா 'இன்சொல்'லினின்றும் உலகைக் காத்து வளர்க்கவேண்டுமென்பது ஆசிரியர் கருத்து.

பண்பு பலவகை. இங்கே அஃது இனிமைப் பண்பாக நிற்கிறது. அறநெஞ்சினின்றும் பிறக்கும் இன்சொல் தனது பண்பினின்றும் என்றும் சிறிதும் நீங்காமையை உணர்த்த, 'பண்பிற் றிரியாச்சொல்' என்றார். பண்பிற் றிரியாமையாவது இனிமை - தூய இனிமை - உண்மை இனிமை. அறநெஞ்சினின்றும் பிறப்பது உண்மையன்றி வேறென்னாகும்?

பண்பில் பிரியுந் தன்மையும் உண்டு; பிரியாத் தன்மையும் உண்டு. ஈண்டுப் பண்பின் பிரியாத் தன்மையை ஆசிரியர் கொண்டனர். பிரியாமையிலும் 'சிறிது' 'பெரிது' உண்மையான், அவைகளை நீக்கி என்றுஞ் சிறிதும் பிரியாமையை உணர்த்த, "பண்பிற் றலைப்பிரியா" என்றனர். "பண்பிற் றலைப்பிரியா" என்பது, 'இன்சொல்'லின் மாண்பை விளக்கி நிற்பது.

## நயனீன்று பயனீன்று நன்றி பயக்கும்

நயம் = நயன்

நயன் - அன்பு; "நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சில்" —குறுந்தொகை : ௧௪௩ : ௪.

பயம் - பயன்

பயன் - இன்பம்; "சுணங்கறைப் பயனும் ஊடலுள்ளதுவே"; "சீரமை பாடல் பயத்தால்" பரிபாடல் ௯ : ௨௨ : ௧௧ : ௯௯.

நன்றி - நன்மை; அறம்.

பயக்கும் - வளர்க்கும்; "பார்வளர் முத்த மொடு படுகடல் பயந்த............"—கலித்தொகை : ௧௦௫ : ௬.

## ந ய னீ ன் று...............ப ய க் கு ம்

பண்பிற் றிரியாச் சொல்லின் விளைவுகள் பல. அவைகளில் மூன்று இங்கே ஆசிரியரால் சிறப்பாகக் குறிக்கப் பெற்றுள்ளன. அவை: நயன், பயன், நன்றி என்பன. நயன் - அன்பு; பயன் - இன்பு; நன்றி - அறம். அன்பும் இன்பும் அறத்தில் அடங்குவன.

அறக்கூறுகள் பலதிறத்தன. அவைகளுள் இரண்டு இங்கே சொல்லப்பட்டன. ஒன்று நயனெனும் அன்பு;

மற்றொன்று பயனென்னும் இன்பு. அன்பும் இன்பும் அற முதலுக்கு இரண்டு நாடி போன்றன.

அன்புக்கும் அறத்துக்கும் உள்ள தொடர்பு மேலே பல இடங்களில் விளக்கப்பட்டது. அதை மீண்டும் இங்கே எடுத்துக்காட்ட வேண்டுவதில்லை. இன்பத்தைப் பற்றிச் சிறிது சொல்வது நலன்.

அறம் பொருள் இன்பம் என்னும் வழக்காற்றை நோக்குக. அறம் தனித்தும் பொருளிலும் இன்பத்திலுங் கலந்தும் நிலவும் தன்மையுடையது. அறத்தை விடுத்துப் பொருளும் இன்பமும் நிலவா; நிலவுமேல் அவை அறமற்ற பொருளும் துன்பமுமாகும்.

அறவாழ்வுக்குப் பொருளும் இன்பமும் இன்றியமையாதன. இன்றியமையாத அவைகளைத் தெளிவின் பொருட்டுத் தனிப்படுத்திக் கூறுதல் மரபு; தமிழ் மரபு.

இங்கே பொருள் குறிக்கப்படவில்லை. அது பயனென்னும் இன்பத்தில் அடங்கி நிற்கிறது. 'பயனு'க்குப் பொருள் காணப் புகுந்த பழைய உரையாசிரியன்மார் பொருளை நினைவூட்டிக்கொண்டது நோக்கற்பாலது. இன் சொலால் அன்பும் இன்பமும் அவைகளால் அறமும் பெருகுதல் இப்பாட்டில் சொல்லப்படுகிறது.

நன்மனத்தினின்றும் எழும் இன்சொல் அன்பை எழுப்பும்; அன்பு இன்பத்தை எழுப்பும்; இரண்டும் விளங்கும் இடத்தில் அறம் விளங்குதல் இயல்பு. இன்சொல், நயனையும் பயனையும் ஈன்று, அறத்தைப் பெருக்குதற்கு ஊற்றாயிருத்தலான், "நயனீன்று பயனீன்று நன்றி பயக்கும்" என்றார்.

அறத்தால் பிறக்கும் இன்சொல் அறத்தை வளர்ப்பதென்ற தென்னை என்னும் ஐயம் சில இடத்தில் எழலாம். தூய தீம்புனல் நிரம்பியுள்ள பொய்கை கேடுறாவண்ணம் காக்

கப் படுவதுபோல அறநெஞ்சம் இன்சொலால் காக்கப்படு மென்க.

"பயனீன்று" என்பதைப் பண்பிற்றலைப் பிரியாச் சொல்" என்பதுடன் நேரே கொண்டு பொருளுரைப்பது தவறாகாது. நயனீன்றுடன் பயனீனுதலைச் சேர்த்துப் பொருள் காண்டலில் ஒழுங்குமுறையுறுதல் கருதற்பாலது.

இன்சொல் வழங்குவோரிடத்தும் கேட்போரிடத்தும் ஆக இருசார்பினும் நயனையும் பயனையும் நன்றியையும் விளக்குந் தன்மை வாய்ந்தது. (௬)

## 97

துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

### பொருள்

யார் மாட்டும் - யாவரிடத்தும், இன்பு உறாஉம் - இன்பத்தை மிகச் செய்யும், இன்சொலவர்க்கு - இன்சொல் உடையவர்க்கு, துன்பு உறாஉம் - துன்பத்தை மிகச் செய்யும், துவ்வாமை இல் ஆகும் - வறுமை இல்லையாகும்.

### கருத்து

இன்சொல்லரை வறுமை அணுகாது.

### விருத்தி

பயன், மேலே தொகை முறையில் சொல்லப்பட்டது. இப்பாட்டில் தொகையை வகைப்படுத்தல் சொல்லப்படுகிறது. இக்குறளில் இன்சொலால் வறுமை இன்மை என்னும் பயன் பேசப்படுகிறது.

**துன்புறூஉம்.......இன்சொலவர்க்கு**

உறும்-மிகச்செய்யும், மிகுவிக்கும், சேர்க்கும் எனினுமாம். "உறுதவ நனியென வரூஉ மூன்றும்-மிகுதி செய்யும் பொருள என்ப" — தொல்காப்பியம் : சொல் : ௩௦௪ ; "காலுறு துவைப்பிற் கவிழ்க்கனைத் திறைஞ்சி"—மலைபடுகடாம்: 117.

உறூஉம் : அளபெடை மிகுதியை வலியுறுத்தும் ஒலி.

துவ்வாமை : து - துப்பு - துவ்வு - துவ்வாமை.

து - துப்பு - துவ்வு - நுகர்வு, உணவு, அநுபவம்.

துவ்வாமை - நுகராமை, உண்ணாமை, அநுபவியாமை. இங்கே வறுமையின் மேலது ; "நா முதலிய பொறிகள் சுவை முதலிய புலன்களை நுகராமையுடைமையின், 'துவ்வாமை' என்றார்" என்பது பரிமேலழகர் குறிப்புரை ; "துறந்தார்க்கும் துவ்வாதார்க்கும்........." என்னுங் குறட்பாவின் விருத்தியைப் பார்க்க.

யார் மாட்டும் இன்புறூஉம் இன்சொலவர்க்கு

துன்பம் உறுவது எங்கே ? இன்பம் உறுவது எங்கே ? மாசுள்ள இடத்தில் துன்பம் உறும் ; மாசற்ற இடத்தில் இன்பம் உறும். மாசற்றநிலை அறம் என்பது. ஆகவே, அறத்தில் இன்பமிருத்தல் இயல்பென்க.

இன்சொல், அறம் என்னும் செம்பொருள் கண்டாரிடம் பிறப்பது. மாசற்ற அறத்தில் இன்பம் இயல்பாயிருக்கிறது. இதுபற்றியே, "இன்புறூஉம் இன்சொலவர்க்கு" என்றார். இன்பத்தை மிகச்செய்யும் பண்பு இன்சொல்லுக்கு உண்டு.

அறமாகிய செம்பொருள் கண்டாரிடத்துத் தோன்றும் இன்சொலால் விளையும் இன்பம் இன்னார்க்கு உரியதாகும்

இன்னார்க்கு உரியதாகாது என்னும் நியதி இல்லை. அஃது எல்லார்க்கும் உரியதாகும். இதனை விளங்கச் செய்வது, "யார்மாட்டும்" என்பது.

இன்ப துன்பத் தோற்றம் உள்ளத்திலா? உலகத்திலா? இதைப் பற்றிய கருத்து வேற்றுமைகள் பல உண்டு. கூர்ந்து ஆழ்ந்து சிந்தித்தால் உள்ளமே மூலம் என்பது தெளிவாகும். உள்ளம் அறவண்ணமாயின், உலகம் அற வண்ணமாகத் தோன்றும். அறத்தால் உள்ளம் இன்ப மயமாயின் உலகமும் இன்பமயமாகத் தோன்றும். அறங் கண்டார் உள்ளத்தினின்றுந் தோன்றும் இன்சொலால் விளையும் இன்பம் யார்மாட்டும் உறும். அவ்வின்பத்துக்குச் சாதி மதம் நிறம் மொழி நாடு முதலிய சிறுமைக் கட்டுகளில்லை. அஃது எல்லார்க்கும் பயன்படும். இக்காரணங் கொண்டு, "யார் மாட்டும் இன்புறூஉம் இன்சொலவர்க்கு" என்று அருளினர்.

## துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும்

"யார் மாட்டும் இன்புறூஉம் இன்சொலவர்க்கு" என்ன இல்லாகும்? துவ்வாமை இல்லாகும். எத்தகைத் துவ்வாமை? துன்புறூஉந் துவ்வாமை.

துவ்வாமையாவது நுகராமை; இங்கே வறுமையின் மேலது. வறுமையினுங் கொடிய பிணி வேறொன்றுண்டோ? வறுமைக் கொடுமைகளெல்லாம் பொதுளும் முறையில் "நல்குரவு" என்றோர் அதிகாரம் ஆசிரியரால் அருளப்பட்டுளது. விரிவு அவ்வதிகாரத்திற் பார்க்க.

வறுமைப் பிணியால் பீடிக்கப்படுவோர் எவ்வின்பத்தை நுகரவல்லார்? அவர்தம் புலன்களில் ஒன்றேனும் இன்பம் நுகருமா? அவைகள் வாடும்; வதங்கும்; படிப்படியே செய லற்றும் போகும். பின்னே என்ன நிகழும்? சொல்ல

வும் வேண்டுமோ? துவ்வாமையால் விளையும் துன்பத்துக்கு எதை ஒப்பிட்டுக் கூறுவது? துன்பங்கட்கெல்லாம் தாயகமாயிருப்பது துவ்வாமை. அதனால் "துன்புறூஉந் துவ்வாமை" என்றார்.

"துவ்வாமை இல்லாகும்" யார்க்கு? "இன்சொலவர்க்கு." இன்சொல்லின் பெற்றிமையை ஆசிரியர் விளக்குந் திறத்தைப் பாருங்கள்.

'இன்சொலவர்க்குச் செல்வம் உண்டாகும்; இன்பம் உண்டாகும்; இன்னபிற உண்டாகும்' என்று சொல்லாது, 'துவ்வாமை - துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும்' என்று ஆசிரியர் அருளியதென்னை? இங்கே மக்களியற்கையைச் சிந்திக்கச் சிந்திக்க நுட்பம் புலனாகும்.

துன்பத்தின் கொடுமையே பெரிதும் மக்களை இன்பத்தை நாடச் செய்கிறது. துன்பமில்லையேல் மக்களது முயற்சி இன்பத்துறைகளில் செல்லாது. துன்பம் அணுகாதவாறு தங்களைக் காத்துக்கொள்ள முயல்வது மக்களின் இயற்கை. துன்ப வெறுப்பு இன்ப விருப்பாக முடிகிறது.

துன்பத்தை மிகச் செய்வது எது? துவ்வாமை. துவ்வாமையை ஒழிக்க உலகம் பலவழியிலும் பாடுபடுகிறது. துன்பந்தரும் துவ்வாமையைப் போக்க மன்பதை முயல்வது இயற்கையாதலான், "துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும்" என்றார். இதனால் மக்களியற்கையை ஆசிரியர் நன்கு ஆய்ந்து தெளிந்துள்ளமை விளங்குகிறது.

துன்புறூஉந் துவ்வாமை இல்லாதவாறு செய்துகொள்ள வேண்டுவது மக்கள் கடமை என்பது ஆசிரியர் கருத்து. வழி என்ன? 'இன்சொல் - யார்மட்டும் இன்புறூஉம் இன்சொல் - உடைமை' என்று ஆசிரியர் வழிகாட்டுகிறார்.

துவ்வாமையைப் போக்கவல்லது செல்வப்பொருளா? இன்சொல்லா? என்று மயக்குறுவோருமிருப்பர்; வியப்

புறவோருமிருப்பர். துவ்வாமையைப் போக்கிக்கொள்ளு தற்குச் செல்வப்பொருள் தேவை என்பது ஏழைமக்களின் நம்பிக்கை. ஏழைமக்களின் உள்ளத்தைத் திருவள்ளுவர் நன்கு தெரிந்தே, "............இன்சொலவர்க்கு.........துவ்வாமை இல்லாகும்" என்று அவர்கள் சிந்தனைக்கு விருந்தளித்தனர்.

துவ்வாமையை அறவே போக்கும் ஆற்றல் செல்வப் பொருளுக்கு உண்டோ? துவ்வாமையின் இரண்டொரு கூறுகளைப் போக்கும் ஆற்றல் செல்வப் பொருளுக்கிருக்க லாம். துவ்வாமையை முற்றும் நீக்கும் ஆற்றல் செல்வப் பொருளுக்கில்லை. செல்வரை நோய் பீடிப்பது கண்கூடு. நோய்ச் செல்வரின் புலன்கள் எவ்வின்பத்தை நுகரும்? நோயைப் போக்கும் ஆற்றலும் இன்சொல்லுக்கு உண்டு. இன்சொல் துவ்வாமையை அறவே போக்கும் வல்லமை வாய்ந்தது.

இன்சொல்லர் அற நெஞ்சினர். அற நெஞ்சினர்க்கு எவ ரிடத்துங் காழ்ப்புத் தோன்றாது. அவர், அனைவரையும் தம் மைப்போலவே கருதுவர். அனைவரையுந் தம்மைப்போலக் கருதச் செய்வது அன்பு. அன்புக்கு அறிகுறி என்ன? பிறர் துன்பஞ் சகியாது அத்துன்பங் களைய விரைவது. துன்பங் களைய விரைவதாவது தொண்டுசெய்யப் புகுவது. அன்பால் எழும் தொண்டு பயன் கருதா நெறியில் நிகழ்வது. அற நெஞ்சினராகிய இன்சொல்லர் அன்பால் பயன் கருதாத் தொண்டு செய்வோரென்க. அவர் எவரிடத்தும் அன்பு செலுத்துவர். அவர்தஞ் செயல் எவர்க்கும் இன்பூட்டும்.

இன்சொல்லரது நெஞ்சம் அறவண்ணம்; மொழி இனியது; செயல் பயன் கருதா அன்புப் பணி. அவர்தம் மனமொழி மெய்யெல்லாம் இனியன. அவர் இனிய அமிர்த மயமாய் விளங்குகிறாரென்று சுருங்கச் சொல்லலாம். அவ

ரிடைத் துன்புறுந் துவ்வாமை எங்ஙனம் புகும்? புகுதற்கு இடமுண்டோ? இல்லை. இதுபற்றியே, "..........இன்சொல வர்க்கு.........துவ்வாமை இல்லாகும்" என்றருளினர்.

"யார் மாட்டும்" என்பது, பிறப்பு, ஊர், பால், நிலை முதலியன கருதாது, எவரையுங் கேளிராகக் கொள்வதை விளங்கச் செய்வது. 'இன்புறும்' என்பது, தம்போல் பிறரை யும் எண்ணிப் பயன் கருதாது நலஞ் செய்வதை உணர்த்து வது.

"இன்சொலவர்க்கு" என்பது இன்சொல்லுடன் இனிய அறத்தொண்டு நிகழ்தலையும் உட்கொண்டது.

இன்சொல்லர் தமக்கென வாழாது பிறர்க்கென வாழ் வோர். பிறர்க்கென வாழ்தலினும் இனிமை யுடையது வேறில்லை. இன்சொல்லர் இனிய மனத்தர்; இனிய செயலர். அவர்தம் புலன்களெல்லாம் இனிமையையே நுகர்ந்துகொண் டிருக்கும். இனிமையே அவர்தம் நுகர்வு - துவ்வு - உணவு. அவரைத் துவ்வாமை எப்படிச் சூழும்?

இன்சொல்லுடையவரால் மற்றவர்க்குத் தீங்கு விளைவ தில்லை; நலனே விளையும். ஆதலின், இவர்தம் வாழ்த்தும் அவர்க்கு உரியதாகிறது. இன்சொல்லர் செயலால் பிறர் மன மும் இனியதாகிறது. இத்தகையரிடம் துவ்வாமை இல்லா தல் இயல்பு. இன்சொல்லுடையாரை எவ்விதத் துவ்வாமை யும் - வறுமையும் - அணுகாதெனக் கொள்க. இதனல் விளங்குவது இன்சொல்லின் பெற்றிமை. (எ)

## 98

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும்.

## பொருள்

*சிறுமையுள் நீங்கிய இன்சொல் - சிறுமையினின்று நீங்கிய இன்சொல், மறுமையும் இம்மையும் இன்பம் தரும் - மறுமையிலும் இம்மையிலும் இன்பம் அளிக்கும்.*

## கருத்து

*சிறுமையற்ற இன்சொல் இருமையிலும் இன்பந்தரும்.*

## விருத்தி

*இன்சொல் அன்பையும் இன்பத்தையும் அறத்தையும் அளிக்கும் என்பது சென்ற பாட்டின் நுட்பம். இப்பாட்டின் நுட்பம் இன்சொல் இருமை இன்பம் உண்டாக்குமென்பது.*

### சிறுமையுள்..........தரும்

*சிறுமையுள் - சிறுமையினின்றும்; உள் : இங்கே ஐந்தாம் வேற்றுமை நீக்கப் பொருளின்மேலது.*

*சிறுமை - புன்மை, நோய், துன்பம், அறியாமை, குற்றம்.*

*சிறுமையுள் நீங்கிய - "புன்மையுள் நின்று நீங்கிய" என்றார்—மணக்குடவர்; "(பொருளாற் பிறர்க்கு) நோய் செய்யாத" என்றார் பரிமேலழகர்.*

*மறுமை இம்மை - "இருமை வகைதெரிந்து......" என்னுங் குறளின் விரிவுரை பார்க்க.*

### சிறுமையுள் நீங்கிய இன்சொல்

*முன்னே "பண்பிற் றிரியா இன்சொல்" என்றார்; இங்கே "சிறுமையுள் நீங்கிய இன்சொல்" என்கிறார். இரண்டுங் கருத்தில் ஒருமைப்பாடுடையன. பண்பினின்றும் நீங்காத இன்சொல் என்றுலென்ன? சிறுமையுள் நீங்கிய இன்*

சொல் என்றாலென்ன ? இரண்டும் கருத்தில் ஒன்றே சொல் முறைகள் வேறுபட்டுள்ளன.

பண்பு அறிதில் அமைவது. அதினின்றும் நீங்காதவாறு பயிற்சி செய்வது அறிவுடைமை. சிறுமை மலியுந்தன்மையது. அதினின்றும் நீங்க முயல்வது அறிவுடைமை.

இன்சொல் அற நெஞ்சினின்றும் எழுவது. அறநெஞ்சமாவது பண்பினின்றுந் திரியாதது; சிறுமையினின்றும் நீக்கம் பெற்றது. இதனால் " சிறுமையுள் நீங்கிய இன்சொல் " என்பதன் பெற்றிமை விளங்குதல் காண்க. பண்பிற்றிரியா இன்சொல் பெறுதற்குச் சிறுமையுள் நீங்குதல் வேண்டுமென்க.

இன்சொல் பலவகை. அவைகளுள் உண்மையும் உண்டு; போலியும் உண்டு. உண்மை இன்சொல், மாசற்ற அறநெஞ்சினின்றும் எழுவது; போலி, மாசு மலிந்த நெஞ்சினின்றும் எழுவது. போலியைக் குறிப்பிடவே ஆசிரியர் இப்பாட்டை, " சிறுமை " என்று துவங்குகிறார். போலியினின்றும் விலகி, உண்மையில் புகவேண்டுமென்பார், " சிறுமையுள் நீங்கிய..." என்றார்.

அறநெஞ்சினின்றும் எழுவது இன்சொல்; மற்றையது இன்சொல் போன்றது. இஃது உதட்டளவில் எழுந்து நிற்பது; கரவு, ஏமாற்றம், வஞ்சனை முதலிய சிறுமைகளையுடையது; நோய் செய்வது. இச்சிறுமைகளினின்றும் நீங்கி எழுவது நேரிய இன்சொல். நேரியதைக் குறிக்கும் பொருட்டு, " சிறுமையுள் நீங்கிய இன்சொல் " என்றார்.

ம று மை யு ம்......த ரு ம்

'இம்மை மறுமை' என்னும் ஆட்சி, உலக வழக்கும் முறைமையுமுடையதாகும். வழக்குக்கும் முறைமைக்கும் மாறுபட்டு ஆசிரியர், ' மறுமை இம்மை ' என்று கூறிய

தென்னை? இதற்குப் பரிமேலழகர், 'மறுமை இன்பம் பெரிதாதலின், முற்கூறப்பட்டது' என்று விடையளித்துள்ளதை நோக்குக.

பொதுவாக மக்கள் எண்ணம், கண்ணுக்குப் புலனாகாத மறுமையில் படிந்து கிடப்பதும், இம்மை, மறுமைப் பேற்றுக்குத் துணைசெய்யுங் கருவி என்று அவர்கள் கருதுவதும் இயற்கை. உலக இயற்கையையொட்டி, 'மறுமையும் இம்மையும்' என்று ஆசிரியர் கூறி இருக்கலாம்.

மறுமை இன்பத்தைக் குறிக்கும் அளவில் ஆசிரியர் நில்லாது, இம்மை இன்பத்தையும் ஏன் குறித்தனர் என்று சிலர் கருதலாம். இம்மை இன்பமின்றி மறுமை இன்பத்துக்கு இடம் ஏது? இம்மை இன்பத்தை அடியாக்கொண்டு எழுவது மறுமை இன்பம். இது பற்றியே ஆசிரியர், "மறுமையும் இம்மையும் இன்பந்தரும்" என்று அருளலாயினர்.

மக்களுக்கு மறுமை இன்பத்திலேயே குறிக்கோள் அதிகம். வெறுங் குறிக்கோள் என்செய்யும்? குறிக்கோளுக்குரிய செயல் தேவை. ஆசிரியர் குறிக்கும் செயல் எது? இன்சொல். இன்செயல் என்று சொல்லவும் ஆசிரியர் விரும்பவில்லை. இனிய செயலையும் இன்சொல்லே நிகழ்த்திவிடும் என்பது ஆசிரியர் கருத்துப் போலும். செயல் நிகழ்த்துவதைச் சொல்லே நிகழ்த்தும் என்பது கருத்து. இதனால் இன்சொல்லின் பெற்றி விளங்குதல் காண்க. குறிக்கோளை வாழ்வில் இன்சொல்லாக்கிக் கொள்ளவேண்டுவது மக்கள் கடமை.

இன்சொல் நேரே மறுமை இன்பத்தை அளியாது. இடையில் ஒன்று தேவையாகிறது. அஃது இம்மை இன்பம். இன்சொல் இம்மை இன்பத்தின் வாயிலாக மறுமை இன்பத்தைக் கூட்டும். குறிக்கோள் முன்னும், அதற்குத் துணை புரியுங் கருவி பின்னுங் குறிக்கப்பட்டன என்க.

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமை இன்பத்தை யும், இதற்கு வேண்டப்படும் இம்மை இன்பத்தையும் தரும் தன்மை வாய்ந்தது என்றபடி. (அ)

## (iii) வன்சொல் வேண்டாமை

### 99

*இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ*
*வன்சொல் வழங்கு வது.*

#### பொருள்

*இன்சொல் இனிது ஈன்றல் காண்பான் - இன்சொல் இன்பம் பயத்தலை உணர்ந்து தெளிபவன், வன்சொல் வழங்குவது எவன் கொலோ - வன்சொல் சொல்வது எப்படியோ ?*

#### கருத்து

*இன்சொற் பயன் கண்டவன் வன்சொல் வழங்கான்.*

#### விருத்தி

*மேற்பாக்களில் இன் சொல்லின் மாண்புகளே பெரிதும் பேசப்பட்டன. இப்பாட்டில் வன்சொல்லின் இழிவு பேசாமல் பேசப்படுகிறது.*

*"ஒருவன் இனியவாகச் சொல்லுஞ் சொற்கள் இன்பத்தைப் பயத்தலைக் காண்பான், அதற்கு மறுதலையாகிய வன்சொல்லை வழங்குவது எப்பயனை நோக்கியோ ?"*—மணக்குடவர்.

*" பிறர் கூறிய இன்சொல் தனக்கு இன்பம் பயத்தலை அநுபவித்து அறிகின்றவன், அது நிற்கப் பிறர்மாட்டு வன்சொல்லைச் சொல்வது என்ன பயன் கருதி ?"*—பரிமேலழகர்.

*இரண்டு உரைக்கண்ணும் உள்ள பொருள்நயம் நெஞ்சைக் கவர்கிறது.*

**இன்சொல்...........வழங்குவது எவன் கொலோ ?**

*இனிது ஈன்றல் - இன்பம் பயத்தலை ; இன்பம் தருதலை.*

*காண்பான் - உணர்பவன் ; உணர்ந்து தெளிபவன் ; அநுபவித்துத் தெளிபவன் ; அநுபவிப்போன்.*

*வன்சொல் - கடுஞ்சொல் ; இன்சொல்லுக்கு மாறு பட்டது.*

*எவன்கொலோ - எப்படியோ ? எவ்வண்ணமோ ? எத்தன்மைத்தோ ? என்ன வியப்பு ? என்ன பயன் ? என்ன பயன் கருதியோ ? எக்காரணத்தானோ ? என்றபடி.*

*" அருளோ னுவதை எவனோ "*—ஞானாமிர்தம் : *சக :* *க* ; *" பெண்டிர் அருளக் கிடந்த தெவன்கொலோ "*—கலித் தொகை : *கக : உக* ; *"........புல்லின் மாய்வ தெவன் கொல் "*—குறுந்தொகை : *கருO : ரு* ; *" பிறிதணி அணி யப் பெற்றதை எவன்கொல் "*—சிலப்பதிகாரம் : *மணி யறம் : உ : கச.*

## இன்சொல் இனிதீன்றல் காண்பான்

*இன்சொல் இனிதீன்றலே பெரிதும் இவ்வதிகாரத்தில் பேசப்பட்டுள்ளது. அதைப்பற்றிய விரிவுரை ஈண்டு வேண்டுவதில்லை. இன்சொல் இனிதீன்றல் உண்மை. இதில் என்ன ஐயம் ?*

*இன்சொல் இனிதீன்றல் உண்மை. இவ்வுண்மையைக் கண்டோரும் உளர் ; காணுது நம்புவோருமுளர். ஆசிரியர் உண்மை காணுது நம்புவோரை ஈண்டுக் குறித்தாரில்லை. அவர் " இன்சொல் இனிதீன்றல் காண்பான் " என்றனர். " காண்பா "னில் கருத்துச் செலுத்துக.*

ஆசிரியர்க்குக் " கண்டான் " என்று கூறவும் மனமெழ வில்லை. அவர் " காண்பான் " என்று கூறி மகிழ்வெய்துகிறார். " காண்பான் ", அநுபவிப்பவனை - அநுபவித்துக் கொண் டிருப்பவனை - உணர்த்துவது. அநுபவத்திலிருப்பதை ஆசிரி யர் எடுத்துக்காட்டியுள்ளது ஊன்றி நோக்கத்தக்கது.

## வன்சொல் வழங்குவது எவன்கொலோ?

இன்சொல்லுக்கு மாறுபட்டது வன்சொல். வன்சொல் வழங்குவது தவறு. எவரும் வன்சொல் வழங்குதல் கூடாது. அங்ஙனமாக இன்சொல்லால் இன்பம் விளைதலைக் காண்பவன் வன்சொல் வழங்க ஒருப்படுவனோ? பின்னை எற்றுக்கு ஆசிரியர் வன்சொல் வழங்குவதை ஈண்டு நினைவூட்டு கிறார்? இவ்வையம் மணக்குடவரையும் பரிமேலழகரை யும் மறித்திருக்கும். அம்மறியலைக் கடக்க அவர் ஒவ்வொரு விதப் பொருள் கூறலாயினர். அவைகளும் ஏற்கப்பாலன; போற்றற்குரியன.

இன்சொல்லன் இன்பத்தை நுகர்வோன். இவன் வன்சொல் வழங்குவது அரிது. இது பலரும் அறிந்த தொன்று. இங்ஙனமாகப் பேராசிரியராயுள்ள வள்ளுவனார் வன்சொல் வழங்குவதை எற்றுக்குக் குறிப்பிட்டனர்? இது சிந்திக்கற்பாலதே.

ஆசிரியர் " வன்சொல் வழங்குவது " என்று அருளும் அளவில் நில்லாது, அவர் மேலும் தொடர்ந்து, " எவன் கொலோ " என்று அருளலாயினர். இதன்கண் நுட்பம் இருத்தல்வேண்டும். நுட்பம் இல்லையேல் "வன்சொல் வழங்கு வது எவன் கொலோ " என்னுங் கூற்று வெறுமையாக நிற்ப தாகும். திருவள்ளுவரின் தெய்வ மொழியிலுள்ள ஒவ்வோ ரொலியும் பொருளுடையது. பொருளுண்மை காண முயலவேண்டுவது அறிஞர் கடமை. முயற்சியில் வெற்றி

யும் விளையலாம்; தோல்வியும் விளையலாம். வெற்றி தோல்வி அவரவர் கல்வி அறிவு ஒழுக்கத்தைப் பொறுத்தன வாம். எனது கல்வி அறிவு ஒழுக்கம் எவ்வளவுதூரம் எனக் குத் துணை செய்யுமோ அவ்வளவு தூரஞ்சென்று திருவள்ளு வர் உள்ளங் காண முயல்கிறேன். முற்றறிவு பெறாத எனது முயற்சி முழுவெற்றி அளிக்குமா? அளியாது. ஆயினும், எனக்கு விளங்கிய உண்மையை வெளியிடுகிறேன். மேலுஞ் செல்லும் அறிவாற்றல் வாய்ந்தவர் மேலுஞ் சென்று உண்மையை உலகுக்கு உதவுவாராக.

"இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன் கொலோ - வன்சொல் வழங்கு வது" என்னுந் திருவாக்கி லுள்ள "எவன் கொலோ" என்பது, பலதிறக் கருத்துக் களை உளங்கொண்டதென்று தோன்றுகிறது. சிலவற்றைக் குறிக்க விரும்புகிறேன்.

இன்சொல் இனிதீன்றலைக் காண்பவன் வன்சொல் வழங்குவது எப்படி முடியும்? வழங்குவது எவ்வண்ணம் கூடும்? என்றபடி.

வன்சொல் வழங்குவது எத்தன்மைத்தோ என்றுங் கொள்ளலாம். "......வன்சொல் வழங்குவது" எத்தன்மைய தாகும்? அஃது உன்மத்தமாகும் என்றவாறும்.

"......வன்சொல் வழங்குவ"தும் உண்டாகுங்கொல்? என்ன வியப்பு? என்று கொள்ளவும் இடனுண்டு.

"வன்சொல் வழங்குவது" என்ன பயனளிக்கும்? துன் பத்தைக் காணுதற்கா? என்று எள்ளியவாறும்.

இன்சொல் இன்பம் பயத்தலைக் கண்டும் வன்சொல் வழங்குவது எப்பயன் கருதி? துன்பங் கருதியா என்று இரங்கியவாறும்.

வன்சொல் வழங்குதற்கு எது காரணமாக நிற்கும்? எக் காரணந்தான் முன் நிற்கும்? ஒன்றுமில்லை என்றருளிய வாறும்.

இவ்வாறு பலபடக் கூறிக்கொண்டே போகலாம். திரண்ட கருத்தென்ன? "இன்சொல் இனிதீன்றல் காண்பான் வன்சொல் வழங்கான்" என்பது திரண்ட கருத்து.

"விரிவுரை எற்றுக்கு? எவ்வழியிலோ 'வன்சொல் வழங்கல்' குறிக்கப் பெற்றதன் நோக்கம் யாது" என்னுங் கேள்விக்கு விடை என்ன?

ஆசிரியர் 'கண்டான்' என்று அருளினரில்லை; "காண்பான்" என்று அருளியுள்ளனர். காண்பானுக்கு வழுக்கல் நேர்வதும் உண்டு. அவனை அறியாமல் அவன்பால் வன்சொல் இயங்கினும் இயங்கும். அந்நிலையில் அவனைக் காத்தல் வேண்டுமன்றோ? ஆகவே, காப்பின் பொருட்டு "வன்சொல் வழங்குவது எவன்கொலோ" என்னும் அருள்மொழி எழுந்ததென்க. அதை அன்பார்ந்த எச்சரிக்கை மொழியாகவுங் கொள்ளலாம்.

இன்சொல் இனிதீன்றல் காண்பவருள் பல திறத்தவர் இருப்பர். அவருள் வன்சொல்லே தோற்றமுறாத நிலை பெற்றவரைப் பற்றிய பேச்சு இங்கு வேண்டுவதில்லை. பழைய வாசனை சிலரை விடுவதில்லை. வாசனை அவரை ஒவ்வோர் அளவினதாக ஒவ்வொருபோது ஒவ்வொருவிதமாகத் தாக்கும். அவ்வேளைகளில் அவரைக் காத்தல் வேண்டும்; அன்பால் எச்சரிக்கை செய்தல் வேண்டும்.

இன்சொல்லால் உலகை இன்ப வண்ணமாக்கப் போந்த ஆசிரியர் வழுக்கி விழுவோரைக் காவாது விடுவரோ? விழுவோரைக் காக்க, "வன்சொல் வழங்குவது எவன் கொலோ" என்று இன்மொழி வழங்கியுள்ளனர். "எவன்" என்னாது, "எவன் கொலோ" என்கிறார். "கொலோ" என்னுஞ்

சொல் நெஞ்சைக் கவர்கிறது. அதன் இனிமையையும் நாக ரிகத்தையும் என்னென்று சொல்வேன்! எச்சரிக்கையையும் பிறர் எச்சரிக்கை என்றுணராத முறையில் இன்சொல்லால் வழங்குகிறார் ஆசிரியர். ஆசிரியர் இனிமை என்னே! என்னே!

'கொல்' 'ஓ': அசை நிலைகள் என்று கொள்வோர் கொள்க.

"கொலோ" ஒருகனியெனத் தோன்றுகிறது. அதன் கண் காப்பும் எச்சரிக்கையுங் கலந்த இனிமை ஒழுகுகிறது. அஃது இன்பமூட்டுகிறது.

இன்சொல் இனிதீன்றல் காண்பவனை நேரே நோக்கி, "வன்சொல் வழங்குவ தெவன்கொலோ" என்று வினவுந் தோற்றம் புலனாகவில்லை. எனக்குப் புலனாகுந் தோற்றம் வேறு விதமாக இருக்கிறது.

இரண்டு பிள்ளைகள் ஒரு தெருவில் வதிகிறார்கள். இரு வரும் இன்சொல் இன்பம் பயத்தலைக் காண்பவர். சில வேளைகளில் அறிந்தோ அறியாமலோ அவர்பால் 'வன் சொல்' ஒழுகிவிடும். அவ்வேளைகளில் ஒரு பிள்ளையின் தந்தை, பிள்ளையை நேரே பார்த்து, "வன்சொல் வழங்குவ தென்ன" என்று கடிவர். மற்றொரு தந்தை பிள்ளையை நேரே நோக்கிக் கடிவதில்லை. இவர் பிறரிடம் பேசுகையில், "ஒருவன் இன்சொல்லனாதல் அரிது. அவன் இன்சொல்ல னாய், இன்சொல் இன்பம் பயத்தலைக் காண்பானாயின், அவ னிடம் வன்சொல் தலைகாட்டுமோ? வன்சொல் வழங்க அவன் மனம் எப்படி நினைக்கும்? அவன் நா எப்படி எழும்? இன் சொல் இன்பம் பயத்தலைக் காண்பவன் நெஞ்சில் வன்சொல் எப்படித் திரளும்? வன்சொல் அவன்பால் பிறவாது; பிறந் தால் அது வியப்பே யாகும்..........." என்று சொல்வர். இச்சொல் பிள்ளையை என் செய்யும்? காக்கும்; எச்சரிக்கை

செய்யும் ; நல்லறிவுச்சுடர் கொளுத்தும். முன்னைய பிள்ளையைப் பார்க்கிலும் பின்னைய பிள்ளை விரைவில் இன்பங் கண்டவனாய், வன்சொல் அற்ற நெஞ்சும் நாவும் உடையவனாவன்.

பின்னைய பிள்ளையின் தந்தை போன்றவர் ஆசிரியர். ஆசிரியர் இங்கே, பிறரைப் பார்த்துப் பேசுவதுபோல, "இன்சொல் இனிதீன்றலைக் காண்பான்" மனஞ் சோர்வுறு முறையில் அன்பும் அருளும் இனிமையும் இன்பமும் செறிந்து பொலிய, "* * * * எவன் கொலோ" என்று மொழிகிறார். "இன்சொல்" என்னும் இவ்வதிகாரம், ஆசிரியரின் இனிமை நீர் தேங்கப்பெற்ற நிறை ஏரியெனக் காட்சியளிக்கிறது. "ஏரி நிறைந்தனைய செல்வன் கண்டாய்" என்றார் அப்பரும். பிற தொடர்ந்து வரும் பாட்டிலும் உரையிலும் பார்க்க. (கூ)

## 100

இனிய உளவாக இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று.

### பொருள்

இனிய உள ஆக - இனிய சொற்கள் இருப்பனவாக, இன்னாத கூறல் - (இன்னாதனவாகிய) வன் சொற்களை வழங்குதல், கனி இருப்ப - கனிகள் இருக்க, காய் கவர்ந்து அற்று - காய்களைக் கைக்கொள்வதை ஒக்கும்.

### கருத்து

இனிமையை விடுத்து இன்னாதகைக் கொள்ளல் அறியாமை.

### விருத்தி

முற்பாட்டில், இன்சொல் இன்பம் பயத்தலைக் காண்பவன் வன்சொல் வழங்கான் என்ற கருத்துச் சொல்லப்

பட்டது. இப்பாட்டில் வன்சொல் வழங்குவதன் கொடுமை விளக்கப்படுகிறது.

"(பிறர்க்கு இனியவாகச் சொல்லுஞ் சொற்கள் இன்பத்தைத் தருதலைக்கண்டவன்) இனிய சொற்கள் இருக்கக் கடிய சொற்களைக் கூறுதல்; (பழமும் காயும் ஓரிடத்தே இருக்கக் கண்டவன்) பழத்தைக் கொள்ளாது காயைக் கொண்ட தன்மைத்து"—மணக்குடவர்.

"(அறம்பயக்கும்) இனிய சொற்களும் (தனக்கு) உளவாயிருக்க (அவற்றைக் கூறாது) (பாவம் பயக்கும்) இன்னாத சொற்களை (ஒருவன்) கூறுதல், (இனிய) கனிகளும் (தன்கைக் கண்) உளவாயிருக்க, (அவற்றை நுகராது இன்னாத) காய்களை நுகர்ந்ததனோடொக்கும்"—பரிமேலழகர்.

"'கூறல்' என்பதனான், 'சொற்கள்' என்பது பெற்றாம். பொருளை விசேடித்து நின்ற பண்புகள் உவமைக்கண்ணுஞ் சென்றன. இனிய கனிகள் என்றது, ஔவையுண்ட நெல்லிக் கனிபோல அமிழ்தானவற்றை. இன்னாத காய்கள் என்றது, காஞ்சிரங்காய்போல நஞ்சாவனவற்றை. கடுஞ்சொல் சொல்லுதல் முடிவில் தனக்கே இனிதாகாது என்பதாம்"—பரிமேலழகர் குறிப்புரை.

## இனிய உளவாக........கவர்ந்தற்று

இனிய - இனியன ; இங்கே இனிய சொற்கள்.

உளவாக - இருப்பனவாக ; இருக்க.

இன்னாத - இன்னாதன ; இங்கே வன்சொற்கள்.

கவர்தல் - கைக்கொள்ளல், தனதாக்கிக் கொள்ளல் ; தின்னல், விரும்பல், விரும்பித்தின்னல் என்னலுமாம்.

கனி இருப்பக் காய்கவர்ந்தற்று : உவமானம்.

இனிய உளவாக இன்னாத கூறல் : உவமேயம்.

இனிய (சொற்கள்) : கனிகள்
இன்னாத (சொற்கள்) : காய்கள்

## இனிய உளவாக இன்னாத கூறல்

இனிய சொற்களை "உளவாக" என்றார்; இன்னாத் சொற்களைக் "கூறல்" என்றார். இவ்வாறு ஏற்றுக்குக் கூறினர்? இரண்டுக்கும் வேற்றுமை உண்டோ?

இனியனவும் இன்னாதனவும் ஆக இரண்டும் நெஞ்சில் கருக்கொண்டு வாயில் உருக்கொண்டு வெளியாகின்றன. இரண்டுக்கும் என்ன வேற்றுமை? பின்னை ஏற்றுக்கு ஒன்றை 'உளவாக' என்றும், மற்றொன்றைக் 'கூறல்' என்றுஞ் சொற்றனர்.

'உளவாக' என்பதிலும், 'கூறல்' என்பதிலும் மேல் நோக்குச் செலுத்தும்போதே இரண்டுக்கும் ஏதோ ஒருவித வேற்றுமை இருப்பதுபோன்ற தோற்றம் உண்டாகிறது. அதன்கண் ஆழமுண்மையும் இதன்கண் ஆழமின்மையும் புலனாகின்றன. இரண்டையுஞ் சிறிது கூர்ந்து நோக்குவோம்.

'உளவாக' - 'உளவாக' - என்று சொல்லிப் பார்த்தால் அஃது உள்ளத்தில் ஊடுருவிச் செல்வதையும், 'கூறல்' - 'கூறல்' - என்று முழங்கிப் பார்த்தாலும் இஃது ஆழச் செல்லாது உதட்டளவில் உலவி நிற்பதையும் உணர்கிறோம். இரண்டுக்கும் பிறப்பிடம் நெஞ்சமே. ஒன்று ஆழ்ந்து செல்வதென்னை? மற்றொன்று அவ்வாறு செல்லாததென்னை?

### நெஞ்சம்

நெஞ்சம் இருவகை. ஒன்று உள்நெஞ்சம்; மற்றொன்று புறநெஞ்சம். உள்நெஞ்சம் புலன்களைத் தன்வழிப் படுத்தி இயக்குவது; புறநெஞ்சம் புலன்கள்வழி உழல்வது. முன்னையது நிலையுடையது; ஆழமுடையது. பின்னையது இரண்

டும் இல்லாதது. உள்நெஞ்சினின்றும் எழுங் குமிழி புறநெஞ்சம் என்னலாம். உள்நெஞ்சினின்றும் பிறப்பது 'உளவாக' என்பது; புறநெஞ்சினின்றும் பிறப்பது 'கூறல்'. ஆதலால் அஃது ஆழ்ந்து செல்வதாகிறது; இஃது உதட்டளவில் உலவி நிற்பதாகிறது. அஃது இயற்கை போன்றது; இது செயற்கை போன்றது.

இனிமை இன்னுமை என்னும் இரண்டில் இயற்கை எது? செயற்கை எது? அறிஞரால் விரும்பப்படுவது இயற்கை; வெறுக்கப்படுவது செயற்கை. இனிமை அறிஞரால் விரும்பப்படுவது; இன்னுமை அவரால் வெறுக்கப் படுவது. இப்பாட்டில் இயற்கை இனிமை 'உளவாக' என்றும், செயற்கை இன்னுமை 'கூறல்' என்றும் சொல்லப்பட்டமையை ஓர்க.

இனிமை இயற்கை என்பதற்கும், இன்னுமை செயற்கை என்பதற்கும் பல எடுத்துக் காட்டுக்கள் வேண்டுவதில்லை. ஒன்று சாலும். அஃது அநுபவத்தில் உண்மையை விளக்குவது. இனிமையை நினைந்து இனிமையைப்பேசி இனிமைச் செயல் நிகழ்த்துவோர் உடல் இனிமையதா யிருக்கும்; மற்றவர் உடல் நோய்வாய்ப் பட்டு எரிவதாகும். இன்னுமை செயற்கை என்பதை அதில் மூழ்கிக் கிடப்போர் உடல்நிலை நன்கு புலப்படுத்தும். இனிமை அமிழ்தம்; இன்னுமை நஞ்சு.

இனிமை அமிழ்தம் உள் நெஞ்சில் இயற்கையாகத் திரண்டு திரண்டு கிடப்பது. இன்னுமை நஞ்சு குமிழி போன்ற புற நெஞ்சில் செயற்கையாக நிலவுவது. உள் நெஞ்சில் இயற்கையாகத் திரண்டு வெளிவருவதை "உளவாக" என்றும், புற நெஞ்சில் செயற்கையாக நின்று வெளிவருவதைக் "கூறல்" என்றும் ஆசிரியர் அருளலாயினர். இனிமை, உள் நெஞ்சில் சேமநிதிபோல் இருத்தலால், அதை,

" உளவாக " என்றார். இன்னாமை அங்ஙனம் இல்லாததாதலின், அதை, " கூறல் " என்றார். ஆகவே, கொள்ளற்பாலது எது? தள்ளற்பாலது எது ? ஓர்மின்.

## கனியிருப்பக் காய் கவர்ந்தற்று

கனி - இன்சொல் ; காய் - இன்னாச் சொல். கனி : எக்கனி? காய் : எக்காய்? ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு விதக் கனியுங் காயுந் தோன்றும். கனியை நெல்லிக்கனி என்றும், காயைக் காஞ்சிரங்காய் (எட்டிக்காய்) என்றும் பரிமேலழகர் கூறினர். காஞ்சிரங்காயென்று இன்னாச் சொல்லை விளக்கியவாறும். நெல்லிக்கனி ஆயுளை வளர்ப்பது. காஞ்சிரங்காய் ஆயுளைக் கொல்வது. ஆயுளை இன்சொல் வளர்க்கும் ; இன்னாச் சொல் நோய் செய்து கொல்லும்.

கவர்தலுக்குப் பல பொருள் மேலே சொல்லப்பட்டன. அவைகளுள் 'கைக்கொள்ளல்' பொருத்தமுடையது. " கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வ னேனே " என்றார் அப்பரும். கள்வன் என்பது கவர்தலின் உட்பொருளை விளக்குவது.

கனியுமிருக்கிறது ; காயுமிருக்கிறது. கவர வருவோன் எதைக் கொள்ளல்வேண்டும் ? கனியைக் கொள்வது அறிவுடைமை ; காயைக் கொள்வது அறியாமை. கனிபோன்ற இனிமை உளவாக, காய்போன்ற இன்னாமையைக் கூறுவது அறியாமை என்றபடி.

இனிமைக் கனி உளவாக இன்னாக் காயைக் கவர்வோர் நல்லோராவரோ ? ஆகார். அவர் கள்வரே யாவர். அவர், கள்வரினும் அறிவுடையவராகார்.

கள்வர் நல்ல பொருளைக் கவரவே வருவர். பயனற்ற பொருளைக் கவர வாரார். கண்முன்னே நல்லபொருள்கள் கிடப்ப, அவைகளை விடுத்துப் பயனற்ற தீய பொருள்களைக் கவர்வோன் அறிவுடைய கள்வனாவனோ ? இனிமைக் கனி

கிடப்ப, இன்னாக் காயைக் கவர்வோன் கள்வரினும் அறிவில்லாக் கயவனே யாவன்.

மக்கள் இன்சொல் வழங்கிப் பேறுபெறவே படைக்கப்பட்டார்கள். அவர்கள், படைப்பு நோக்கின் இயற்கைக்கு மாறுபட்டு இன்னாச் சொல் வழங்கலாகாது; வழங்குவார்களாயின், அவர்கள் இயற்கைத் தொடர்பினின்று வழுக்கிய பாவிகளாவார்கள். அவர்களைக் கள்வர்கள் என்று கூறுவது நியாயம். நெறியல்லா நெறியில் செல்வோரெல்லாம் கள்வரே யாவர்.

மேற்பாட்டின் விளக்கமே இப்பாட்டு. "இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ - வன்சொல் வழங்குவது" என்ற பாட்டு, "இனிய உளவாக இன்னாத கூறல் - கனியிருப்பக் காய்கவர்ந் தற்று" என்று விரிந்து விளக்கம் பெற்றிருத்தல் காண்க. (௧௦)

திருக்குறள் - அறத்துப்பால் - இல்வாழ்க்கை இயல் - மூலமும்

திரு. வி. க. இயற்றிய விரிவுரையும் முற்றுப்பெற்றன.

# பாட்டு முதற்குறிப்பு